ஸ்ரீ:.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



ஆழ்வார்கள் தஞ்செயலை விஞ்சிநிற்குந் தன்மையளாய்ப்
பிஞ்சாய்ப்பழுத்த, சுரும்பார்குழற் கோதை யென்னும்
ஆண்டாள் அருளிச்செய்த

# நாச்சியார் திருமொழி.




பெருமாள்கோயில் உபயவேதாந்த வித்வான்
பிரதிவாதிபயங்கரம்
**அண்ணங்கராசாரியரால்**


எல்லார் நாவுக்கும் இன்பம் பயக்குமாறு எளியநடையில் தெளிய எழுதப்பட்ட
திவ்யார்த்த தீபிகை என்னும் உரையுடன் கூடியது.




மதராஸ்.

1936




இதன் விலை ரூபா 2—0—0] [வி. பி. தபால் சார்ஜ் தனி.

# ஸ்ரீகாஞ்சி அண்ணங்கராசாரியர் இயற்றிய நூல்கள்.



திருப்பல்லாண்டு உரை
பெரியாழ்வார் திருமொழி உரை
திருப்பாவை உரை
நாச்சியார் திருமொழி உரை
பெருமாள் திருமொழி உரை
திருச்சந்தவிருத்தம் உரை
திருமாலை உரை
திருப்பள்ளி யெழுச்சி உரை
அமலனாதிபிரான் உரை
கண்ணி நுண்சிறுத்தாம்பு உரை
பெரிய திருமொழி உரை
திருக்குறுந்தாண்டகம் உரை
திருநெடுந்தாண்டகம் உரை
நான்கு திருவந்தாதிகளின் உரை
திருவிருத்தம் உரை
திருவாசிரியம் உரை
பெரிய திருவந்தாதி உரை
திருவெழுகூற்றிருக்கை உரை
சிறிய திருமடல் உரை
பெரிய திருமடல் உரை
இராமாநுச நூற்றந்தாதி உரை
திருவாய்மொழி உரை
திருவாய்மொழி நூற்றந்தாதி உரை
த்ரமிடோபநிஷத் ஸங்கதி உரை
த்ரமிடோபநிஷத்தாத்பர்யரத்நாவளி உரை
த்ரமிடோபநிஷத் ஸாரம் உரை
ஆயிரம் பாசுரங்களுக்கு ஸம்ஸ்க்ருத
ச்லோக-தண்டக-மொழிபெயர்ப்பு
நித்யாநு ஸந்தான வுரை.
முகுந்தமாலை வியாக்கியானம்
ஸ்தோத்ர ரத்நம் ஷை
ஸுதர்சந சதகம் ஷை
ஸ்ரீரங்கராஜஸ்தவம் ஷை
வரதராஜஸ்தவம் விரிவுரை
ஸ்ரீஸ்தவம் விரிவுரை
அதிமாநுஸ்தவம் விரிவுரை
ஸ்ரீவைகுண்டஸ்தவம் விரிவுரை
ஸுந்தரபாஹுஸ்தவம் விரிவுரை
கத்யத்ரயம் விரிவுரை
ஸ்ரீகுணரத்நகோசம் விரிவுரை
வரவரமுநிசதகம் விரிவுரை
வைராக்யபஞ்சகம் விரிவுரை
தேசிகமங்களம் விரிவுரை
சேஷாவதாரச் சிறப்பு

நமஸ்காரதத்வம்-ஷை விஜயத்வஜம்
ப்ரணவாதிகார தத்வம்
ஸ்தோத்ரவ்யாக்யாந சோதநம்
வாத்ஸல்யார்த்த விவரணம்
சேட்லூரார் மாயாபக்கம்
விதவாவபந வித்வம்ஸநம்
பாதுகா ஸஹஸ்ராவதார தத்வம்
வாத்ஸல்ய விஜயத்வஜம்
பரதூஷிக்கநூக்ஷித்வ பரமார்த்தரக்ஷா
வ்யாமோஹப்ரசமௌஷதம்
திருப்புட்குழிஸ்வாமி வைபவம்
அத்யமேச்லோகார்த்த தத்வம்
உபதேச ரஸாயனம்-ஷை ஸாரம்
கூரத்தாழ்வான் வைபவம்
அண்ணாவைபவச்சுருக்கம்
ஸத்ஸம்ப்ரதாயப்படி
பகவத் கதையமுதம்
வாதிபீகரவிஜயம்
ஸத்யநாராயணஸ்த்ரம்
ஸத்யநாராயணஸ்தர ஸத்யப்ரதாபம்
பிழைதிருத்தப் பேரின்பம்
ஸ்ரீவசனபூஷண ஸாரம்
ஆசார்யஹ்ருதய ஸாரம்
திவ்யப்ரபந்த வைபவவிவேக:
உபந்யாஸ ரத்நமாலா
தர்க்க சாஸ்த்ர ஸர்வஸ்வம்
ரஸிக புதரஞ்சனம்
காஞ்சீ ஹஸ்திகிரி வைபவம்
பரிபந்திபஞ்சபங்கி
ரக்ஷாவிமோசந பாவ ப்ரகாசிகா
யாத்ரா ஸ்தோத்ராம்ருதம்
ஸ்ரீராமாயண தண்டகம்
பிள்ளையந்தாதி உரை
வேதாத்யயந ஸர்வஸ்வம்
சாஸ்த்ரஜ்ஞாந சாணபலகம்
பரமார்த்த பரித்ராணம்.
அம்ருத லஹரீ
ஜகத்ருஸ்துதி ரத்நம் 6.
ஹயக்ரீவ சதகம், கருடவிம்சதி கோபால
பஞ்சசத் முதலிய ஸ்தோத்ரங்கள் 21.
உபாக்யாந ரத்நமாலா 16.
பாலபோத ரஸாயநம்.
அத்யமே ச்லோகார்த்த தத்வப்ரதிஷ்டா
சாரீரக ஸர்வஸ்வம்.

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# பொதுத் தனியன்கள்.

அழகியமணவாளன் அருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶 𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍 |
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰 𑌪𑍍𑌰𑌣𑌵𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾 𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ||

கூரத்தாழ்வான் அருளிச்செய்தவை.

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥 𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨 𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌮𑍍 |
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌮𑍍 ||
𑌯𑍋 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤 𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜 𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿 𑌤𑍃𑌣𑌾𑌯 𑌮𑍇𑌨𑍇 |
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯 𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋𑌃
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯 𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 ||

ஆளவந்தார் அருளிச்செய்தது.

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 |
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌳𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌳𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ||

பட்டர் அருளிச்செய்தது.

𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯 𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰 𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍 |
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁 𑌪𑌰𑌕𑌾𑌲 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ||



சூடிக்கொடுத்த நாச்சியார் அருளிச்செய்த

# நாச்சியார் திருமொழியின் தனியன் உரை.

திருக்கண்ணமங்கையாண்டான் அருளிச்செய்த தனியன்.

(இருவிகற்ப நேரிசை வெண்பா.)

அல்லிநாட் டாமரைமே லாரணங்கி னின்றுணைவி
மல்லிநாடாண்ட மடமயில் — மெல்லியலாள்
ஆயர் குலவேந்த னாகத்தாள் தென்புதுவை
வேயர் பயந்த விளக்கு.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| அல்லி நாள் தாமரை மேல் | இதழ்களையுடைய அப்போதலர்ந்த தாமரைப் பூவில் | ஆயர் குலம் வேந்தன் | இடைக்குலத்திற்குத் தலைவனான கண்ணபிரானுடைய |
| ஆர் | பொருந்தியிராநின்ற | ஆகத்தாள் | திருமேனியிற் பொருந்த முடையளாயும் |
| அணங்கின் | தெய்வப் பெண்ணான பெரியபிராட்டியார்க்கு | | |
| இன் துணைவி | இஷ்டஸகியாயும், | தென் புதுவை வேயர் | அழகிய ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு (த்தலைவரா ய்) [வேயர்குலத்துதித்தவரான பெரியாழ்வாராலே] |
| மல்லிநாடு | திருமல்லிநாட்டை | | |
| ஆண்ட | (குணத்தாலே ஈடுபடுத்தி) ஆளாநின்ற | | |
| மடமயில் | அழகிய மயில்போன்றவளாயும் | | |
| மெல் இயலாள் | மென்மைத்தன்மையுடையளாயுமிருக்கின்ற ஆண்டாள் | பயந்த | பெறப்பட்ட |
| | | விளக்கு | விளக்காயுமிராநின்றாள் |

இத்தனியனில், ஆண்டாளுடைய ஐச்வரியம், ஆபிஜாத்யம் முதலிய வைபவங்கள் கூறப்படுகின்றன. ஆண்டாள் பெரியபிராட்டியார்க்கு உயிர்த்தோழி என்கிறது—முதலடி. "மண்மகளும் திருவும் நிழற்போல்வனர்" என்ற திருவிருத்தமும், "ஸாயாவிவா[illegible]" என்ற ஸ்ரீரங்கராஜ

ஸ்தமுமம் அறியத்தக்கன. ஸ்ரீபிராட்டியின் அம்சமாகவன்றே ஆண்டாள் கூறப்படுவது.

மல்லிநாடு — ஸ்ரீ வில்லிபுத்தூர்க்கு அடுத்த நாடு. அதனை ஆண்டாள் ஆளுகையாவது — அங்குள்ளாரைத் தனது குணங்களால் தன்னிடத்து ஈடுபடுத்துகை.

மடமயில்—மயில் ஒருவருடைய அபிமானத்தில் ஒதுங்கி வளருவதுபோல ஆண்டாள் "விட்டு சித்தர் தங்கள் தேவரை வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" என்னும்படி பெரியாழ்வாருடைய அபிமானத்தில் வளர்ந்தமையால் மயிலாகக் கூறப்பட்டனளென்க. முற்றுவமம்.

மெல்லியலாள் — "கொங்கைமேற் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள், தங்குமேல் என் ஆவி தங்கும்" என்னும்படி க்ஷணகாலமும் பிரிவைப் பொறுக்கமாட்டாத ஸௌகுமார்யமுடைய ளென்கை.

ஆயர்குலவேந்தனுகத்தாள் — கீழ்ச்சொன்ன ஸௌகுமார்யத்தாற் பிரிவாற்றமாட்டாமல், "என்னுகத்திளங்கொங்கை விரும்பித்தான் நாடோறும், பொன்னுகம் புல்குதற்கென் புரிவுடைமை செப்புமினே" என்னும்படி கண்ணபிரானுடைய திருமேனியிற் பொருத்தமுற்றிருக்குமவளென்கை.

இனி, ஆபிஜாத்யத்தாலும் இவள் கண்ணபிரானுக்கு ஏற்றவளென்கிறது கடையடியால். * ஆயர்குலத்தினிற்றோன்றுமணிவிளக்குக்கு, * வேயர்பயந்த விளக்கு அநுரூபமாயிருக்குமென்க. வேயர் — * வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன்' என்றபடி. திருவரங்கத்தமுதனுருடைய குடி 'மூங்கிற்குடி' எனப்படுவதுபோல், பெரியாழ்வார் குடி 'வேயர்குடி' எனப்படுமென்ப. .... (*)

---

(மற்றொரு தனியன்.)

(கட்டளைக் கலித்துறை.)

கோலச்சுரிசங்கை மாயன் செவ்வாயின் குணம் வினவும்
சீலத்தினள் தென்திருமல்லிநாடி செழுங்குழல்மேல்
மாலைத்தொடை தென்னரங்கருக் கீயு மதிப்புடைய
சோலைக்கிளியவள் தூயநற்பாதந் துணைநமக்கே.

கோலம் சுரி சங்கை — அழகையும் சுரியையுமுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை நோக்கி
மாயன் — கண்ணபிரானுடைய
செம் வாயின் குணம் — சிவந்த திருவதரத்தின் அதிசயத்தை
வினவும் சீலத்தினள் — கேட்குந்தன்மையுடையவளும்
தென் — தென்திசையிலுள்ள
திருமல்லி நாடி — திருமல்லிநாட்டிற்குத் தலைவியும்
செழும் — செழுமைதங்கிய
குழல் மேல் — (தனது) திருக்குழற்கற்றையில் சூட்டப்பெற்ற
மாலைத்தொடை — கலம்பகன் மாலையை
தென் அரங்கருக்கு — அழகிய மணவாளனுக்கு

| | | | |
|---|---|---|---|
| ஈயும் மதிப்பு உடைய | ஸமர்ப்பிக்கும்படியான மேன்மையுடையவளும் | தூய நல் பாதம் | பாவநமும்போக்யமுமான திருவடிகள் |
| சோலை கிளி அவள் | சோலையில் வளருங்கிளி போல் இனியமொழியை யுடையளுமான அவ்வாண்டாளுடைய | நமக்கு | நமக்கு |
| | | துணை | தஞ்சம். |
| | | | (ஏ-ஈற்றசை) |

இத்தனியன் பல திருப்பதிகளில் வழங்கப்பெறுவதில்லை. நாச்சியார் திருமொழியில் ஏழாந் திருமொழியாகிய "கருப்பூரம் நாறுமோ" என்னுந் திருமொழியிலுள்ள அர்த்தம் இதில் முதலடியிற் கூறப்பெற்றது. கண்ணபிரான், தனது திருப்பவளத்தில் வைத்து ஊதும் ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை நோக்கி, 'சங்கே! எம்பெருமானுடைய திருப்பவளச் செவ்வாய் கருப்பூரம்போல் நாறுமோ? அல்லது கமலப்பூப்போல் நாறுமோ? சொல்லாய்' என்று அதன் குணத்தை வினவுகின்றமை உணரத்தக்கது.

பெரியாழ்வார், ஆண்டாளுக்குச் "சூடிக்கொடுத்த நாச்சியார்" என்று பெயரிட்டதற்கு அடியான ஐதிஹ்யங் கூறப்படுகின்றது, "செழுங்குழன்மேல்" என்று தொடங்கி.

அவ்வரலாறு வருமாறு — ஆண்டாள் இளமைதொடங்கி எம்பெருமானிடத்திலே பக்திப்பெருங்காதல் கொண்டு அப்பெருமானையே தான் மணஞ்செய்துகொள்ளக்கருதி, தனது தந்தையரான பெரியாழ்வார் வடபெருங்கோயிலுடையானுக்குச் சாத்தும் பொருட்டுக் கட்டிவைத்த திருமாலையை அவரில்லாத ஸமயம்பார்த்து எடுத்துத் தன் கூந்தலில் தரித்துக்கொண்டு, 'அப்பெருமானுக்கு நான் நேரொத்திருக்கின்றேனே இல்லையோ?' என்று தன் செயற்கையழகைக் கண்ணாடியிலே கண்டு தந்தையார் வருவதற்குமுன் அம்மலர் மாலையைக் களைந்து முன்போலவே நலங்காமல் வைத்துவந்தாள்; இச்செய்தியை உணராமல் ஆழ்வார் அம்மாலையைக் கொண்டுபோய் ஸ்வாமிக்குச் சாத்திவர, பெருமானும் ப்ரீதியோடு ஏற்றருளினான்; இங்ஙனம் பலநாள் கழிந்தபின் ஒருநாள், வெளியிற்சென்ற ஆழ்வார் விரைவில்மீண்டு வந்தபொழுது, பூமாலையைத் தமது மகள் சூடி இருப்பதைப்பார்த்து, கோபித்து அவளைக் கண்டித்துப் புத்திசொல்லிவிட்டு, அன்று எம்பெருமானுக்கு மாலைசாத்தாமல் நின்றார்; அன்றையிரவில் திருமால் ஆழ்வாரது கனவில் தோன்றி 'உமது மகள் சூடிக்கொடுத்தமாலையே நமது உள்ளத்திற்கு மிகவும் உகப்பாவது' என்று அருளிச்செய்ய, அதனால் ஆழ்வார் தம் மகளைத் திருமகளென்றே கருதி, யாவர்க்குந் தலைவியென்ற காரணத்தால் 'ஆண்டாள்' என்றும், மலர்மாலையைத் தான் சூடிக்கொண்டபின்பு பெருமானுக்குக் கொடுத்ததனால் 'சூடிக் கொடுத்தாள்' என்றும் பெயரிட்டு வளர்த்து வந்தனரென்பதாம். "பாட்டுக்கு முத்தமிழ் வில்லிபுத்தூர் வரும் பாவைகுழற், சூட்டுக்கு நல்லவர் தென்னரங்கேசர்" என்பது திருவரங்கத்து மாலை. .... .... .... .... .... (*)

தனியன் உரை முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

# நாச்சியார் திருமொழி.

இஃது ஆண்டாள் அருளிச்செய்த பிரபந்தங்களிரண்டினுள், பிந்திய பிரபந்தம்.

வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் நாதமுனிகளென்னும் பூர்வாசாரியரால் வகுக்கப்பட்டதான தமிழ் வேதமாகிய நாலாயிர திவ்யப்பிரபந்தத்துள் முதலாயிரத்தில் நான்காவது பிரபந்தமாகச் சேர்க்கப்பட்டது இந்த நாச்சியார் திருமொழி. திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி என அடைவுகாண்க.

'நாய்ச்சியார்' எனினும் 'நாச்சியார்' எனினும் ஒக்கும். 'தலைவன்' என்னும் பொருளதான '**நாயக:**' என்ற வடசொல், தமிழில் 'நாயன்' எனச் சிதைந்தும்; பெண்பாலைக் குறிக்குமிடத்து, 'நாய்ச்சி' என்றாகும். [இடையன் - இடைச்சி, ஆயன் - ஆய்ச்சி, பேயன் - பேய்ச்சி.] 'நாய்ச்சி' என்ற சொல்லின் மேலுள்ள ஆர் விகுதி-உயர்வு குறித்தற்பொருட்டு வந்தது. ஆகவே, நாச்சியார் என்ற பெயர், எவ்வுலகங்கட்கும் தலைவியாய், ஸர்வேச்வரனுக்குத் தேவியானவளை உணர்த்தும்; ப்ரகரணபலத்தினால் இங்கு, * பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளையாகிய ஆண்டாளை உணர்த்துகின்றது.

இனி, நாய்ச்சியார் திருமொழி என்ற தொடர் ஆண்டாளுடைய சிறந்த வார்த்தையெனப் பொருள்படும். ஆண்டாள் திருவாய்மலர்ந்தருளிய திவ்யப்ரபந்தமென்பது கருத்து. திருமொழி என்பது மேன்மையான சொற்களினாலாகிய நூலைக் குறித்தலால், அடையடுத்த கருவியாகு பெயராம். 'நாய்ச்சியார் திருமொழி' என்ற தொடர் ஆறும் வேற்றுமைத்தொகையும், திருமொழி என்பது பண்புத்தொகையுமாம். 'பெரியாழ்வார் திருமொழி' 'பெருமாள் திருமொழி' என்ற இடங்களிற்போல, 'நாய்ச்சியார் திருமொழி' என்ற பெயரிலும் தொக்கு நின்ற ஆறும் வேற்றுமை யுருபு - செய்யுட்கிழமைப் பொருளதென அறிக. திருமொழி என்பதை, மேன்மையையுடையசொல் என இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும் தொக்க தொகையாகவுங் கொள்ளலாம். 'நாய்ச்சியார் திருமொழி' என்றவிடத்து, நிலைமொழி உயர்திணைப்பெயராதலால், அதன்முன் வருமொழி முதல்வலி இயல்பாயிற்று. 'பொதுப் பெயருயர்திணைப் பெயர்கள் ளீற்று மெய்வலிவரின் இயல்பாம் ஆவியரமுன் வன்மைமிகா' என்ற நன்னூல் விதி உணரத்தக்கது. நிற்க,

இப் பிரபந்தத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த மணிப்ரவாள வியாக்யானத்தைத் தழுவி எளியதெளிய நடையில் இவ்வுரை எழுதப்படுகின்றது.

இப்பிரபந்தத்தில் ஆழ்ந்த கருத்துகள் பல அமைந்துள்ளதனால், இதற்கு உண்மையான உரை ஒருவாக்கும் எழுதவெளிதன்று; ஸாதாரணமாக ஒருவாறு பாட்டின் பொருளுரைக்குமத்தனை. .... .... .... (*)



ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# நாச்சியார் திருமொழி உரை அவதாரிகை.

கீழ்ப் ப்ரபந்தமாகிய திருப்பாவையில், "உன்றன்னைப் பிறவிபெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்" என்று ஸித்தஸாதநஸ்வீகாரமும், "எற்றைக்கு மேழேழ் பிறவிக்கு முன்றன்னோடுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம்" என்று ப்ராப்ய நிஷ்கர்ஷமும் செய்யப்பட்டன. பேற்றுக்கு உறுப்பாக இவ்வளவு ப்ரதிபத்தி இவ்வாண்டாளுக்குப் பிறந்தவளவிலும், கண்ணபிரான் இவளுடைய அபிநிவேசாதிசயத்திற்குத் தக்கவாறு வந்து கலவிசெய்து நிற்கக்காணாமையாலே, ஆண்டாள் யுக்தாயுக்த நிரூபணம் பண்ணமாட்டாதபடி கலங்கி, அபிமதவிஷயத்தைப் பிரிந்தவர்கள் மீண்டுங் கூடுதற்கு மடலெடுப்பது போல, பிரிந்தவர்களைக் கூட்டுகையையே இயல்பாகவுடைய காமன் காலிலே விழத்தொடங்குகிறாள் - இப்ப்ரபந்தத்தின் முதற்றிருமொழியில்.

ஸாத்விகர் தலைவரான பெரியாழ்வாருடைய திருமகளாய்ப் பிறந்த இவள் * மறந்தும் புறந்தொழா திருக்கவேண்டியிருக்க, ஸ்வரூபவிருத்தமாக தேவதாந்தரத்தின் காலில் விழுகையென்பது பொருந்துமோ? எனின்; பொருந்தும்; எங்ஙனேயென்னில்; "காமதேவா!......உன்னையு மும்பியையுந் தொழுதேன்" "பேசுவதொன்றுண்டிங் கெம்பெருமான்" என்று காமன் பக்கலில் தேவதா புத்திபண்ணி அவனை ஆராதித்தல்-ப்ராப்யவஸ்துவில் ப்ராவண்யாதிசயத்தினால் உண்டாகின்றதேயன்றி, தேவதாந்தரத்தினிடத்து ஸ்வதந்திரமாகப் பரத்வபுத்தி பண்ணுவதனாலன்று; ப்ரேமபரவசர்க்கு இது அவத்யத்தை விளைக்கக்கூடியதன்று. ஆனால், இது கலக்கத்தினால்செய்யுஞ்செயலன்றோ? அஜ்ஞாநமூலமாக வருமவையொன்றும் ஆதரிக்கத் தக்கதன்றேயெனின்; "ஞானங்கனிந்த நலம்" என்கிறபடியே ஞானபரிபாகரூபமான பக்தியின்காரியமாக ஸம்பவிக்கின்ற ப்ராப்தாப்ராப்த விவேக சூந்யதையினால்வரும் ப்ரவ்ருத்தி விசேஷங்களெல்லாம் மிகவும் புகழத்தக்கனவேயாம்: கருமமடியான அஜ்ஞாநத்தினால் வருமவையே ஹேயம் என்று கொள்ளக்கடவது. ஆனாலும், சேதநனிடத்து ஒருவகையான ப்ரவ்ருத்தியையும் ஸஹியாத ஸித்தோபாயத்தின் கார்யகரத்வத்திற்கு இந்த அதிப்ரவ்ருத்தி ப்ரதிபந்தகமாகமாட்டாதோ? என்னில்; இந்த அதிப்ரவ்ருத்தியும் ஸித்தோபாயமான எம்பெருமான் பண்ணின திருவருளின்பயனெனக் கருதத்தக்கதாம். "மயர்வறமதிநல மருளினன்" "பேரமர்காதல் கடல்புரைய விளைவித்த காரமர்மேனிநங்கண்ணன்" என்று—இப்படிப்பட்ட ப்ரவ்ருத்திக்கு ஹேதுவான பக்தியைப் பிறப்பிக்குமவனும் வளரச்செய்பவனும் அவ்வெம்பெருமானாகவேயிறே சொல்லப்பட்டது. ஆகையாலே பக்திபாரவச்ய நிபந்தனமான இந்த ப்ரவ்ருத்தியை உபாயபலமென்று பூர்வாசாரியர்கள் ஸித்தாந்தீகரித்தனர். அன்றியும், ப்ராப்யத்தைக் கடுகப்பெறவேணுமென்ற விரைவின் மிகுதியினால் கண்ணுஞ்சுழலையிட்டு இத்தலைபடுகிற அலமாப்பெல்லாம் "நம்மை ஆசைப்பட்டு இப்படி படப்பெறுவதே" என்று அவன் முகம் மலருகைக்கு

உடையபாகையாலே, படலெடுக்கை, நோன்புநோற்கை முதலான இந்த ப்ரவ்ருத்திகள்யாவும் அவனுடைய முகமலர்த்திக்காகப்பண்ணும் கைங்கர்யத்தோடொத்து உபேயத்தில் அந்தர்ப்பூதமாய்விடும். ஆகையால், நாய்ச்சியாருடைய காம ஸமாச்ரயணம் ஸ்வரூபவிருத்தமென்ன வழியில்லை.

இனி, பரமதபங்கமென்னும் ரஹஸ்யத்தில் இருபத்தோராவது அதிகாரத்தில்—"நாராயணனே நமக்கேபறைதருவான்" "எற்றைக்குமேழேழ் பிறவிக்கு முன்றன்னோடுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம் மற்றை நம்காமங்கள் மாற்று' என்ற நாய்ச்சியார் க்ருஷ்ணனைப் பெறுகைக்காகப் பண்ணின காம தேவார்ச்சநம் ஸூ ம ஜ ர ஸ ஜாய ஒ ஜ ண க்ருஷ்ண ஒவா ஜ விஷயம்." என்று நம் தூப்புல்பிள்ளை அருளிச்செய்ததென்? எனில்; தேசிகன் திருவுள்ளம் அங்ஙனேயென்று கொள்ளக்கடவதத்தனை.

இங்ஙனே ஆண்டாளைப்போலே ஜ்ஞானவிபாக கார்யமான பக்திக்குப் பரவசப்பட்டு தேவதாந்தரத்தைத் தொழுதார் ஆரேனுமுண்டோ? எனின்; உண்டு; சக்ரவர்த்தித்திருமகனை யல்லது அறியாத அயோத்தியிலுள்ளார் அவற்கு நன்மையை விரும்பி ஸகல தேவதைகளின் காலிலும் விழுந்தார்களாக ஸ்ரீ ராமாயணத்தில் சொல்லப்பட்டது. "ஸவ்வாந் தேவாந நமஸ்யந்தி ராமஸ்யாத்தெ = ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே" என்றது காண்க. அன்றியும், ராமபக்தரில் தலைவரான திருவடி, கடலைக்கடக்கும்போது "நமோ ஸ்து வாசஸ்பதயெ" என்றார். இங்ஙனமெடுத்துக்காட்டப் பல உதாரணங்களுண்டு.

ஆக இவ்வளவாலும், 'வழியல்லாவழியே முயற்சி செய்தாகிலும் கண்ணபிரானோடு கலக்கப்பெறவேணும்' என்ற அளவற்ற அபிநிவேசம் ஆண்டாளுக்குப் பிறந்தமை இப்பிரபந்தத்தால் வெளியாகிறதென்றதாயிற்று. இவ்வளவு அபிநிவேசமுடையளான ஆண்டாளுடைய மநோரதத்தைக் கண்ணபிரான் சடக்கெனத் தலைக்கட்டுவியாதொழிவானென்? எனில்; குழந்தைகட்கு ஆழமற்றுப் பசிக்குந்தனையுஞ் சோறிடாத தாயைப்போலே இவனும் ஆண்டாளுக்கு ஆசை கடல்போலப் பெருகிவரவேணுமென்று தாழ்க்கின்றானென்க. .... (*)

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

அவதாரிகை முற்றிற்று.



ஸ்ரீ:.

சூடிக்கொடுத்த நாச்சியார் அருளிச்செய்த

# நாச்சியார் திருமொழி.



## முதல் திருமொழி — தையொருதிங்கள்.

கண்ணபிரானைப் பெறுகைக்காக மார்கழித்திங்கள் முழுதும் நோன்பு நோற்ற ஆண்டாள் அவன் கலவியை எதிர்பார்த்தும் அவன்வந்து கலக்கக்காணாமையாலே தரித்திருக்கமாட்டாமல், பிரிந்திருப்பவர்களைக் கூட்டிவிடவல்ல காமனைநோக்கி 'உன்னையும் உன் தம்பியையுந் தொழுகிறேன், நீ என்னைக் கண்ணபிரானோடு கூட்டிவிடவேணும்' என்று அவன் காலில் விழுந்து இரக்கும்படியைக் கூறும், இத்திருமொழி.

தையொருதிங்களுந்தரைவிளக்கித்தண்மண்டலமிட்டு மாசிமுன்னாள் *
ஐயநுண்மணற்கொண்டுதெருவணிந்து அழகினுக்கலங்கரித்தனங்கதேவா *
உய்யவுமாங்கொலோவென்றுசொல்லி உன்னையுமும்பியையுந்தொழுதேன் *
வெய்யதோர்தழலுமிழ்சக்கரக்கை வேங்கடவற்கென்னை விதிக்கிற்றியே. (க)

பதவுரை.

| | |
|---|---|
| அனங்கதேவா | காமதேவனே! |
| தைஒருதிங்களும் | தைமாதம் முழுதும் |
| தரை விளக்கி | நீ எழுந்தருளவேண்டிய இடத்தைச் சோதித்து (மண்டல பூஜைக்காக |
| தண் மண்டலம் இட்டு | குளிர்ந்த (அழகிய) மண்டலாகாரத்தை இட்டு |
| மாசி முன் நாள் | மாசிமாதத்தின் முதற் பக்ஷத்தில் |
| ஐய நுண் மணல் கொண்டு | அழகிய சிறிய மணல்களினால் |
| தெரு | (நீ எழுந்தருளும்) வீதிகளை |
| அழகினுக்கு அணிந்து அலங்கரித்து | அழகுண்டாவதற்காக நன்றாய் அலங்கரித்து |
| உய்யவும் ஆம் கொலோ என்று சொல்லி | (காமனைத் தொழுதால் நாம்) உஜ்ஜீவிக்கலாகுமோ? எனக்கருதி |
| உன்னையும் | (காமனாகிய) உன்னையும் |
| உம்பியையும் | உன் தம்பியான சாமனையும் |
| தொழுதேன் | வணங்காநின்றேன்; |
| வெய்யது | (ப்ரதிகூலர் பக்கலில்) உக்கிரமானதும் |
| தழல் உமிழ் | நெருப்புப்பொறிகளை உமிழா நிற்பதுமான |
| ஓர் சக்கரம் | ஒப்பற்ற திருவாழியாழ்வானை |
| கை | திருக்கையில் அணிந்துள்ள |
| வேங்கடவற்கு | திருவேங்கடமுடையானுக்கு |
| என்னை | என்னை |
| விதிக்கிற்றி | (கைங்கரியம்பண்ணும்படி கல்பிக்கவேணும்; |

(ஏ-ஈற்றசை.)

* * * — கண்ணபிரானோட்டைக் கலவியைக் கணிசித்துத் திருப்பாவையில் நோன்புநோற்ற ஆண்டாள் அவ்வளவிலும் அவன் வந்து கலக்கக்காணாமை

பாலை ஆற்றாமை மிகப்பெற்று, 'இனி நாம் வெறுமனிருந்தாலாகாது; பிரிந்தாரைச் சேர்ப்பிக்கவல்லவன் மன்மதனென்று கேளாநின்றோம்; அவனது காலில் விழுந்தாவது கண்ணபிரானோடு கூடப்பெறுவோம்' எனக்கருதி, அங்ஙனமே அந்த மன்மதனைத் தன் காரியஞ்செய்யும்படிக்கு ஈடாக ஆராதிக்க நினைத்து, அவன் வரவேண்டிய இடங்களையும் தெருக்களையும் பரிஷ்கரித்து அழகிய நுண்மணல்களால் அலங்கரித்து அழகுபெறுவித்து (மண்டலபூஜைக்காக) மண்டலாகாரமான மேடையிட்டு அவனையும் அவன் தம்பியையும் வணங்குவதாகக் கூறும் பாசுரம், இது.

''உய்யவுமாங்கொலோ!'' என்று ஐயப்படுவதற்குக் காரணம் யாதெனில், ஸ்வரூபநாசத்தை விளைவிக்கவல்ல தேவதையைப் பற்றினமையால் இப்பற்று உஜ்ஜீவந ஹேதுவாமோ? அன்றி, கீழ்விழுகைக்கு ஹேதுவாமோ? என்று நெஞ்சு தளும்புகிறபடி.

திங்கள்—சந்திரன்; அமாவாஸ்யைக்கு அமாவாஸ்யை ஒருமாதமெனக்கொண்டு சந்திர ஸம்பந்தத்தால் காலத்தை வரையறுக்கும் சாந்திரமானரீதிபற்றி, 'திங்கள்' என்று மாதத்திற்குப் பெயர் வழங்கலாயிற்று: மதி என்பதும் இது; இலக்கணை.

தரை—பூமிக்குவாசகமான 'தரா' என்ற வடசொல் தரையெனத்திரியும். விளக்கி—விளங்கச்செய்து என்றபடி. மண்டலமிடுகையாவது மண்டல பூஜை யென்கிற ஒரு ஆராதனத்தைச் செய்வதற்காக மண்டலவடிவமான மேடை அமைத்தல். ஐயநுண்மணல்—மன்மதன் தனது ஸுகுமாரமான காலைக்கொண்டு நடக்குமிடத்தில் பெரிய மணல்களிருந்தால் காலில் உறுத்துமென்று நொய் மணல்களாக ஆராய்ந்து அலங்கரித்தபடி.

அணிந்து—என்று சொல்லிவைத்து, மீண்டும் ''அழகினுக்கு அலங்கரித்து'' என்றது புநருக்தமாகாதோ எனில்: ஆகாது; ''தெருவை அலங்கரித்து' என்றவாறே வேறொரு பிரயோஜனத்தை உத்தேசித்து அலங்கரித்த படியோ, அழகு பெறுவித்தலையே ப்ரயோஜனமாகக்கொண்டு அலங்கரித்த படியோ? என்று சங்கையை ஏறிட்டுக்கொண்டு, 'அழகினுக்கலங்கரித்து' என்றதென்க. மீமிசைச் சொல்லுமாம்; 'தொழுதிறைஞ்சி, ஏத்தித்துதித்து' என்பனபோல.

அனங்கதேவா!—இது வடமொழிவிளி. அனங்கன்—உடம்பில்லாதவன்; காமன் உடலிழந்தவரலாறு:— முன்னொருகாலத்திற் கைலாஸமலையிற் பரமசிவன், ஸநகர் முதலிய நால்வர்க்கு யோகநிலையை உணர்த்துதற்காகத் தான் யோகஞ்செய்து கொண்டிருக்கையில், பிரமனது ஏவலால் மலரம்புகளை எய்து தனது தவத்தைக்கெடுக்கலுற்ற மன்மதனைச் சினந்து நெற்றிக்கண்ணைவிழித்து அதன்நெருப்புக்கு இரையாய் உடலெரிந்து சாம்பலாய்ப் போம்படி செய்தனனென்பதாம். மன்மதனுக்குப் பல பெயர்களிருக்க, அவற்றைவிட்டு 'அனங்க தேவா!' என்றழைத்தமையால், 'நீ உன் உடம்பை இழந்தும் பிரிந்தாரைக் கூட்டுமவனல்லையோ' என்னும் கருத்துத் தோற்றுமாறு காண்க.

"என்று சொல்லி" என்றவிது — வார்த்தைப்பாடு; 'என்று நினைத்து' என்பது அதன் பொருள். 'நீ இங்கிருப்பாயென்று சொல்லி நான் வந்தேன்' என்றால், 'நீ இங்கிருப்பாயென்று நினைத்து நான் வந்தேன்' எனப் பொருளாகக் கடவதிறே.

[உன்னையும் இத்யாதி.] மன்மதனை மாத்திரம் தொழுதாற் போராதோ? கூட அவன் தம்பிக்கும் வந்த வாழ்வு என்? எனில்; ஆண்டாள் திருப்பாவையில் கண்ணபிரானைப் பற்றும்போது நம்பிமூத்தபிரான்முன்னாகப் பற்றினளாதலால், அந்த வாஸனையாலே இங்கும் மன்மதனை உடன் பிறந்தானோடு கூட உபாஸிக்கிறபடி. "நமோ ப்ரஹ்மண்யதேவாய பலபத்ராய ஸுஷ்ணாய" என்றதுங் காண்க.

உம்பி—'உன்தம்பி' என்பதன் மரூஉ. "காமன்தம்பி சாமன்" என்று பெரியவாச்சான்பிள்ளை உரைத்தருளினர்; அதன் விவரணம்; கண்ணபிரானுக்குத் தேவிமார் பலர் உளரென்றும், அவர்களுள் ருக்மிணிப்பிராட்டியிடத்தில் மன்மதாம்சமாக ப்ரத்யும்நன் பிறந்தனன் என்றும், ஜாம்பவதி தேவியினிடத்தில் 'ஸாம்பன்' என்பவன் பிறந்தனன்என்றும் ஸ்ரீபாகவதத்திற் கூறியுள்ளதனாலும், இங்குச் சாமன் என்பது ஸாம்பனேயாகையாலும் காமனுக்குச் சாமன் தம்பியாயினனென்க. (வேற்று வயிற்றுத்தம்பி.)

மன்மதனைத் தொழுகைக்கு ப்ரயோஜநஞ் சொல்லுகிறது-நான்காமடி. ஸ்ரீவைகுண்டத்தில் அயர்வறுமமரர்கட்குக் காட்சிகொடுத்துத் தன் செருக்குத் தோற்ற வீற்றிருக்குமவன் 'ஸம்ஸாரிகளும் இப்பேற்றைப்பெற்று வாழவேணும்' என்று அங்குநின்றும் போந்து முதற்பயணமெடுத்துவிட்டு, அடியாருடைய விரோதிகளை ஒழிக்குமியல்வினனான திருவாழியாழ்வானைக் கையிலுடையனாய்க் கொண்டு திருமலையில்வந்து நிற்கிறவனோடே என்னைக்கூட்டவேணுமென்கிறாள்.

[விதிக்கிற்றி] விதிக்க + கிற்றி, விதிக்கிற்றி; விகாரப்புணர்ச்சி. இனி, 'கிற்றியே' என்றவிடத்துள்ள ஏ என்பதை அசையாகக்கொள்ளாமல் வினாக்குறிப்பாகக்கொண்டு, எம்பெருமானோடு என்னை நீ கூட்டவல்லையோ? என வினவியதாகவும் உரைப்பர். .... .... .... .... (க)

வெள்ளைநுண்மணற்கொண்டுதெருவணிந்து வெள்வரைப்பதன்முன்னந்துறை
[படிந்து *
முள்ளுமில்லாச்சுள்ளியெரிமடுத்து முயன்றுன்னை நோற்கின்றேன்காமதேவா *
கள்ளவிழ்பூங்கணைதொடுத்துக்கொண்டு கடல்வண்ணனென்பதோர் பேரெழுதி*
புள்ளினைவாய்பிளந்தானென்பதோர் இலக்கினிற்புகவென்னை யெய்கிற்றியே.

காமதேவா — மன்மததேவனே!

வெள்ளை நுண் மணல் கொண்டு — வெளுத்த சிறிய மணல்களைக்கொண்டு

தெரு அணிந்து — வீதிகளை அலங்கரித்து,

வெள்வரைப்பதன்முன்னம் — கிழக்கு வெளுப்பதற்கு முன்னமே

துறை படிந்து — நீர்த்துறைகளில்முழுகி

முள்ளும் இல்லா சுள்ளி — (எறும்பு முதலியவை இல்லாதவளவேயன்றியே) முள்ளுமில்லாத சுள்ளிகளை
எரி மடுத்து — நெருப்பிலிட்டு
முயன்று — (இவ்வாறான) ப்ரயத்நங்களைச்செய்து
உன்னை — உன்னைக்குறித்து
நோற்கின்றேன் — நோன்பு நோற்கா நின்றேன்;
(ஆனபின்பு,)
கள் அவிழ் — தேன் பெருகாநின்றுள்ள
பூ — புஷ்பங்களாகிற
கணை — அம்புகளை
தொடுத்துக் கொண்டு — (வில்லில்) தொடுத்துக்கொண்டு
கடல் வண்ணன் என்பது ஓர் பேர் எழுதி — கண்ணபிரானுடைய கடல்வண்ணனென்கிற ஒரு திருநாமத்தை (அம்பிலே) எழுதிக்கொண்டு
புள்ளினை வாய் பிளந்தான் என்பது ஓர் இலக்கினில் — 'பகாஸுரனுடைய வாயைக் கீண்டெறிந்தவன்' என்னும் ஓர் குறியாகிற அக்கடல்வண்ணன்பக்கலில்
புக — (நான்)சென்று சேரும்படி
என்னை — என்னை
எய்கிற்றி — (நீ)சேர்ப்பிக்கவேணும்.

* * * — சிறிய வெண்மணல்களைக் கொண்டு வீதிகளை அலங்கரித்தலும், நாட்காலே நீராடுதலும், ஸமித்துக்களை நெருப்பிலிட்டுத் தீவளர்த்தலும் இங்குக் காமநோன்புக்கு உறுப்பாகச் செய்யுமவை யென்க. சுள்ளி = இள விறகு. முயன்று = எம்பெருமான்றானே வந்து நம்மை ஸ்வீகரிக்க நிற்றல் ஸ்வரூபாநுரூபம் என்று அறுதியிட்டு நிற்கக் கடவளான நான், இப்போது அவனைப் பெறுகைக்குச் செய்யும் முயற்சி இது காணாய் என்கை.

இம் முயற்சிக்கு ப்ரயோஜநங் கூறுவன, பின்னடிகள். கள்ளவிழ்பூங்கணை — அரவிந்தம், அசோகம், மா, நவமல்லிகை, கருநெய்தல் ஆகிய இவ்வைந்து மலர்களும் மன்மதனுக்கு அம்புகளாம். (கடல்வண்ணன் இத்யாதி.) 'எழுதி' என்றது — அம்பிலே எழுதி என்றவாறுமாம்; நெஞ்சிலே எழுதிக்கொண்டு என்றவாறுமாம்; 'அம்பிலே எழுதிக்கொண்டு' என்ற பக்ஷத்தில் 'ச்ரமஹரமான வடிவையுடைய உன்னை ஆண்டாள் ஆசைப்பட்டாள்' என்று அம்பிலே எழுதி எய்து அவ்வழியாலே அவனுக்கு என்மீது ஆசையை உண்டாக்கிப் பின்னை அவனோடு என்னைச் சேர்க்கவேணுமென வேண்டுவதாகக் கருத்து உரைத்தக்கது; இனி 'நெஞ்சிலே எழுதிக்கொண்டு' என்ற பக்ஷத்தில், இன்னானோடு இவளைச் சேர்ப்பிக்கவேணுமென்று ஸங்கல்பித்துக்கொண்டு என்றபடி.

"வெள்வரைப்பதன் முன்னம்" என்றது. 'வரைவெளுப்பதன் முன்னம்' என்றபடியாய், உதயகிரி வெளுப்பதற்கு முன்னே எனப் பொருள்படுமென்பர்.

புள்ளினைவாய் பிளந்த வரலாறு:— ஒரு காலத்தில் கண்ணபிரான் பலராமனோடும் இடைப்பிள்ளைகளோடுங் கன்றுகளை மேய்த்துக்கொண்டு யமுநாநதியைச் சேர்ந்து, யாவருங் கட்டுச்சோறு தின்று யமுனையிலிறங்கி நீர்குடித்துக் கன்றுகளையும் நீரூட்டிக் கரையேறுகையில், தன்னை நலிவதற்காகக் கம்ஸனால் ஏவப்பட்டுக் கொக்கின் வடிவங்கொண்டுவந்த பகாஸுரனைக் கண்டு பலராமன் முதலியோர் கூப்பாடுபோட, அதுகண்டு ஸ்ரீகிருஷ்ணன், இது வெறும் பட்சியே யென்று ஸாமாந்யமாக நினைப்பவன்போலப் புன்முறுவல் செய்துநிற்க, அப்

போது அவ்வசுரன் கண்ணனை விழுங்கிவிட, பலராமன் முதலியோர் சொல்ல முடியாத வளவு துக்கத்தையடைந்து கதற, அவ்வசுரனுடைய நெஞ்சில் ஸ்ரீ கிருஷ்ணன் நெருப்புப்போல எரிக்கவே, அவன் பொறுக்கமுடியாமல் கண்ணனை வெளியே உமிழ்ந்து மூக்கினுல்குத்த நினைக்கையில், கண்ணபிரான் அவனது வாயலகுகளைத் தனது இருகைகளினுலும் பற்றி விரைவாகக் கிழித்திட்டனன் என்பதாம். இலக்கு — ஆண்டாள் தன்னுடைய ஆசை சென்று சேரும்படியான குறிப்பிடம். எய்கிற்றியே ?—சேர்ப்பிக்கவல்லையே ? என்றுமாம். என்னை என்பதை உருபுமயக்கமாகக்கொண்டு, 'எனக்காக' எனப் பொருள்கொண்டு, எய்கிற்றி — புஷ்பபாணங்களைக் கண்ணபிரான்மீது பிரயோகிக்கவேணும் என்ற வாறுகவு முரைக்க இடமுண்டு.

(உ)

மத்தநன்னறுமலர்முருக்கமலர்கொண்டு முப்போதுமுன் னடிவணங்கி *
தத்துவமிலியென்றுநெஞ்செரிந்து வாசகத்தழித்துன்னைவைதிடாமே *
கொத்தலர்பூங்கணைதொடுத்துக்கொண்டு கோவிந்தனென்பதோர்பேரெழுதி *
வித்தகன்வேங்கடவாணனென்னும் விளக்கினிற்புகவென்னை விதிக்கிற்றியே.

(க்ரமதேவா !;)

| | |
|---|---|
| நல் நறு மத்தமலர் | நல்லமணமிக்கஊமத்த மலர்களையும் |
| முருக்கமலர் கொண்டு | முருக்க மலர்களையுங் கொண்டு |
| முப் போதும் | மூன்றுகாலங்களிலும் |
| உன் அடி வணங்கி | உன் அடியைவணங்கி |
| தத்துவம் இலி என்று நெஞ்சு எரிந்துவாசகத்து அழித்து உன்னை வைதிடாமே | 'இவன் பொய்யான் தெய்வம்,' என்று சொல்லிமனங் கொதித்து உன்கவுரவத்தை அழித்து வாய்கொண்டு உன்னை நிந்திக்கவேண்டாதபடி, |

| | |
|---|---|
| கொத்து அலர் பூ கணைதொடுத்துக் கொண்டு | கொத்துக்கொத்தாக விகஸியாநின்ற புஷ்பங்களாகிற அம்புகளை வில்லில் தொடுத்துக்கொண்டு |
| கோவிந்தன் என்பது ஓர் பேர் எழுதி | கோவிந்த நாமத்தை (நெஞ்சில்) [தரித்துக்கொண்டு |
| வித்தகன் | அற்புதனை |
| வேங்கடம் வாணன் என்னும் | திருவேங்கடமுடையான் என்கிற |
| விளக்கினில் | விளக்கிலே |
| புக | (நான்) சேரும்படி |
| என்னை விதிக்கிற்றி | என்னை நீ செய்ய [வேணும். |

* * * —. மன்மதன் ரஜோகுண ப்ரசுரனுதலால் மதகரமான மலர்கள் அவனுக்கு இடத்தக்கவையென்று கொண்டு ஊமத்தை மலர்களையும் முருக்க மலர்களையுமிடுகிறபடி. முப்போது - இரண்டு சந்தியும் ஒரு உச்சிப்போதும்.

இரண்டாமடியின் கருத்து:— நான் உன் அடிபணிவதற்குப் பலனுக என் மநோரதத்தை நீ நிறைவேற்றுதொழியில், எனது நெஞ்சானது மிகவுங் கொதிப்படைந்து, 'மன்மதன் மெய்யே பலன்தருந் தெய்வமல்லன்; இவன் பொய்த் தெய்வம்' என்று நாடெங்குமறியும்படி நான் உன் மஹிமையை அழித்து நிந்திக்க நேரிடும்; அப்படிப்பட்ட பரிபவத்தை நீ அடையாது தப்பாமல் பேறு பெறுவிக்கப் பாராய் என்கை. தத்துவம் - உண்மை; இலி - இல்லாதவன். வாசகத்து என்றது - நெஞ்சில் நினைக்குமளவே யன்றியே வெளிப்படையாகக்

கூறுதலைக் கூறியவாறு. [கோவிந்தனென்பதோர் பேரெழுதி] கீழ்ப்பாட்டில் "[illegible] என்பதோர் பேரெழுதி" என்றவிடத்து உரைத்தவையெல்லாம் இங்குக் கொள்ளத்தக்கன.

வித்தகன் — ஆச்சரியப்படத்தகுந்த குணசேஷ்டிதங்களை யுடையவன் என்றபடி. வாணன் என்பது, 'வாழ்நன்' என்பதன் மரூஉ. திருவேங்கடமுடையானை விளக்கென்றது,—அவன் தன்னுடைய குணங்களெல்லாம் திருமலையில் நன்குவிளங்குமாறு நிற்றல்பற்றி யென்க. "வேடார் திருவேங்கடம் மேய விளக்கு" என்றார் திருமங்கையாழ்வாரும். .... .... .... (ந)

சுவரிற்புராணநின்பேரெழுதிச் சுறவநற்கொடிக்களுந்துரங்கங்களும் *
கவரிப்பிணாக்களுங்கருப்புவில்லுங் காட்டித்தந்தேன்கண்டாய்காமதேவா *
அவரைப்பிராயந்தொடங்கி என்றுமாதரித்தெழுந்தவென்தடமுலைகள் *
துவரைப்பிரானுக்கேசங்கற்பித்துத் தொழுதுவைத்தேனொல்லைவிதிக்கிற்றியே.

| | |
|---|---|
| புராணை | [illegible] எனக்கு உபகரிக்குமவனே ! |
| காமதேவா | மன்மதனே ! |
| சுவரில் | சுவரிலே |
| நின் பேர் | உனது பெயர்களை |
| எழுதி | எழுதி |
| சுறவம் நற் கொடிக்களும் | மீன்களாகிற நல்ல த்வஜங்களையும் |
| துரங்கங்களும் | குதிரைகளையும் |
| கவரி பிணாக்களும் | சாமரம் வீசுகின்ற பெண்களையும் |
| கரும்பு வில்லும் | கரும்பாகிற தநுஸ்ஸையும் |
| காட்டித்தந்தேன் கண்டாய் | உனக்கு உரியனதாகக் காட்டிக்கொடுத்தேன் ; |
| அவரைப் பிராயம் தொடங்கி | இளம்பருவமே தொடங்கி |
| என்றும் ஆதரித்து | (அக்கண்ணபிரானையே) எப்போதும் விரும்பி |
| எழுந்த | கிளர்ந்த |
| என் தடம் முலைகள் | எனது பருத்த முலைகளை |
| துவரைப் பிரானுக்கே | த்வாரகைக்குத் தலைவனான அக்கண்ணபிரானுக்கே |
| சங்கற்பித்து | (அநுபவிக்கத்தக்கவை என்று) ஸங்கல்பித்து |
| தொழுது வைத்தேன் | (உன்னை) தண்டனிடாநின்றேன்; |
| | (இந்த மனோரதத்தை) |
| ஒல்லை விதிக்கிற்றி | (நீ) சீக்கிரமாகத் தலைக்கட்டுவிக்கவேணும். |

* * * — கண்ணபிரானைக் காணவேணுமென்ற ஆவலுடைய ஆண்டாள் அவனைக் கண்டால் பின்பு காமதேவனை மறக்கக்கூடுமாதலால், அங்ஙனம் மறதி நேரிடாமைக்காக, அந்த மன்மதனைப் பரிஜந பரிவாரங்களுடன் சுவரில் எழுதி வைக்கும்படியைக் கூறுவன, முன்னடிகள். புராண - பிரிந்தவர்களைக்கூட்ட வல்லவனைப் புராணங்களில் கூறப்பட்டுள்ளவனே ! என்றுங் கூறுவர். சுறவம் - மத்ஸ்யவிசேஷம். காமன் மீனைக்கொடியாகவுடையவனுதல் அறிக. துரங்கம் வடசொல். கவரி - சுமரீ என்ற வடசொல் விகாரம். பிணா - பெண்பொதுப் பெயர்; கரும்பு + வில், கருப்புவில்; காமனுக்கு 'இக்ஷுதந்வா' என்று வடமொழியிற் பெயர் வழங்குமாறறிக.

பின்னடிகளில், கண்ணபிரானை யன்றி மற்றொருதேவதையை அநுபவிக்கத் தனக்கு ருசியில்லாமையும், அந்த ருசியைப் பயன்பெறுவிக்கவேண்டுமென்பதையும் கூறுகின்றனள்.

[அவரைப் பிராயம் இத்யாதி,] "பிராயந்தொடங்கி அவரை ஆதரித்து" என்று உரைப்பார் உளரேனும் அது இகழத்தக்க உரையாம்; 'அவர' என்ற வடசொல் இங்கு அவரை என்று திரிந்ததென்னலாம்.

துவரை — 'த்வாரகா' என்ற வடசொற்சிதைவு. ஆண்டாளுடைய கொங்கைகளோடே ஆடல்கொடுக்கைக்குப் பதினாறாயிரம் பெண்களுக்கும் முன்னோட்டுக் கொடுத்த கண்ணபிரான் வேணுமாய்த்து என்று ரஸோக்தியாக உரைப்பர்.

[தொழுது வைத்தேன்] இத்தொழுகையைக் காமனிடத்து அந்வயிப்பியாமல் முலைகளிடத்தே அந்வயிப்பித்துப் பொருள் கொள்ளுதலும் மிகச் சிறக்கும். அதாவது — கண்ணபிரானிடத்தில் ஆதரமே எருவாக வளர்ந்த இம்முலைகள் அவனுக்கே யென்று ஸங்கல்பித்துக்கொண்டு, இம்முலைகளைத் தொழாநின்றேனென்கை; அவற்றைத் தொழுவானேன் எனில்; எம்பெருமானுடைய விபூதிகளையெல்லாம் வணங்குங் குடியிலே பிறந்தவளாதலால், அவனுக்கென்று ஸங்கல்பிக்கப்பட்ட தன் முலைகளையும் பகவத்விபூதித்வ ப்ரதிபத்தியாலே தொழுகையிறே. "அவனுக்கென்று ஸங்கல்பித்தால் பின்னை அவன் குணங்களோபாதி உபாஸ்யமாமித்தனையிறே" என்பது பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செயல்.

ஒல்லை — இம் முலைகளின் செவ்வி அழிவதற்கு முன்னமே என்று கருத்து. .... .... .... .... .... .... (௪)

வானிடைவாழுமவ்வானவர்க்கு மறையவர்வேள்வியில்வகுத்தஅவி *
கானிடைத்திரிவதோர்நரிபுகுந்து கடப்பதும்மோப்பதும்செய்வதொப்ப *
ஊனிடையாழிசங்குத்தமற்கென்று உன்னித்தெழுந்தவென்தடமுலைகள் *
மானிடவர்க்கென்றுபேச்சுப்படில் வாழகில்லேன்கண்டாய்மன்மதனே. (௫)

மன்மதனே !—;

| | |
|---|---|
| வானிடை | ஸ்வர்க்கலோகத்தில் |
| வாழும் | வாழ்கின்ற |
| அ வானவர்க்கு | விலக்ஷணரான தேவர்களுக்கென்று |
| மறையவர் | ப்ராஹ்மணர் |
| வேள்வியில் | யாகத்தில் |
| வகுத்த அவி | கொடுத்த ஹவிஸ்ஸை |
| கானிடை திரிவது ஓர் நரி புகுந்து | காட்டிலே திரிகின்ற ஒரு நரியானது வந்து |
| கடப்பதும் மோப்பதும் செய்வது ஒப்ப | கடந்தும் மோந்துபார்த்தும் கெடுப்பது போல |
| ஊனிடை | (தனது) திருமேனியில் |
| ஆழி சங்கு | திருவாழியையும் திருச்சங்கையும் (அணிந்துள்ள) |
| உத்தமற்கு என்று | புருஷோத்தமனுக்காக |
| உன்னித்து எழுந்த | ஆதரவுடன் கிளர்ந்த |

என் தடம் முலைகள் } எனது பருத்த முலைகளானவை

மானிடவர்க்கு என்று பேச்சு படில் } (அப்புருஷோத்தமனை யொழியச் [சில] மநுஷ்யர்களுக்கு(உரியவை) என்கிற பேச்சு (நாட்டில்) உண்டாகுமேயானல்

வாழகில்லேன் } உயிர்வாழ்ந்திருக்க மாட்டேன்;

(கண்டாய் - முன்னிலையசை.)

* * * — இந்நிலையில் அந்தணர்கள் அநுஷ்டிக்கும் யாகங்களில் 'ஐந்த்ராய ஸ்வாஹா' 'ஸுபதயே ஸ்வாஹா' என்று இந்திரன் முதலிய தேவர்கட்குவகுக்கும் புரோடாசத்தை, மிகவும் அற்பஜந்துவாகிய ஒரு காட்டுநரி கிட்டி அந்த ஹவிஸ்ஸைக் காலால் கடந்தும் மூக்கால் மோந்தும் நஷ்டமாக்குவதுபோல், கண்ணபிரானுக்காகக் கிளர்ந்தெழுந்த என் கொங்கைகளை மானிடர்க்கு உரியனவாகப் பேசும்பேச்சொன்று இப்பூமண்டலத்தில் கிளம்புமேயாகில்எனது உயிர் உடனே மாய்ந்துவிடும், அப்பேச்சுத்தானே எனக்கு விஷமாகுமென்று காமனை நோக்கிக் கூறுகின்றாள். இதனால் மநுஷ்யனாய்ப்பிறந்த ஒரு பிள்ளைக்கு ஆண்டாளைத் தாரை வார்த்துத் தரலாமென்ற ஒரு பேச்சு ஒரு காபுருஷன் வாயில்வந்தாலும் அது தனக்கு அஸஹ்யமெனக்கூறும் முகத்தால் 'கண்ணபிரானொருவனையே தான் பதியாகப்பெற விரும்புமாற்றைக் கூறியவாறு. 'அங்கைத்தலத்திடையாழி கொண்டானவன் முகத்தன்றிவிழியேனென்று செங்கச்சுக் கொண்டு கண்ணாடைபார்த்துச் சிறுமானிடவரைக் காணில்நாணும், கொங்கைத்தலமிவை நோக்கிக் காணீர் கோவிந்தனுக் கல்லால் வாயில் போகா'' என்று மேலும் கூறுவள். தேவர்களுக்கு இட்ட புரோடாசத்தை நரி கெடுக்குமாபோல — என்ற இவ்வுவமையினால் 'இவளுடைய கொங்கை மானிடர்க்கு உரியன என்னும் பேச்சு உண்டானால் பின்பு அம்முலைகள் எம்பெருமானுக்கு ஹேயமா மென்னுமிடம் தோற்றுவிக்கப்படும். அவி—ஹவிஸ் என்ற வடசொல் விகாரம். (ரு)

உருவுடையாரிளையார்கள்நல்லார் ஓத்து வல்லார்களைக்கொண்டு * வைகல்
தெருவிடையெதிர்கொண்டு பங்குனிநாள்திருந்தவேநோற்கின்றேன்காமதேவா *
கருவுடைமுகில்வண்ணன்காயாவண்ணன் கருவிளைபோல்வண்ணன்கமல [வண்ணத்
திருவுடைமுகத்தினில்திருக்கண்களால் திருந்தவேநோக்கெனக்கருள்கண்டாய்.

காமதேவா மன்மதனே!

உரு உடையார் } அழகிய வடிவையுடையராயும்

இளையார்கள் } யௌவன பருவமுடையராயும்

நல்லார் } காமதந்திரத்திற் சொன்ன ஆசாரங்களை யுடையராயும்

ஓத்து வல்லார்களை கொண்டு } காமஸூத்ரத்தில் வல்லமை யுடையராயுள்ளவர்களை முன்னிட்டுக்கொண்டு

வைகல் நாள்தோறும்

தெருவிடை, நீ வரும் வழியிலே

எதிர்கொண்டு எதிரேசென்று

| | |
|---|---|
| பங்குனி நாள் | பங்குனிமாதத்துப் பெரிய திருநாளில் |
| திருந்தவே நோற்கின்றேன் | நல்ல அறிவுடனே (உன்னைக்குறித்து) நோன்பு நோற்கானின்றேன்; |
| கரு உடை முகில் வண்ணன் | (நீரைக்) கருவிலேயுடைய மேகம்போன்ற திருநிறமுடையவனும் |
| காயா வண்ணன் | காயாம்பூப்போன்ற திருநிறத்தை யுடையவனும் |
| கருவிளை போல் வண்ணன் | காக்கணம் பூப்போல் பளபளப்பையுடையனுமான கண்ணபிரான் |
| கமலம் வண்ணம் திரு உடை முகத்தினில் திருகண்களால் | செந்தாமரை மலரின் நிறம்போன்றகாந்தியையுடைய திருமுகமண்டலத்திலுண்டான திருக்கண்களினால் |
| எனக்கு | என் விஷயத்தில் |
| திருந்தவே நோக்க | விசேஷ கடாக்ஷம் செய்தருளும்படி |
| அருள் | நீ கிருபைபண்ணவேணும். |

* * * — எம்பெருமானை அடிபணியவேண்டுவோர் "வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்றபடி வேதநிஷ்டர்களான வைதிகரை முன்னிட்டுப் பணிவதுபோல், ராஜஸதேவதையான காமனைக் குறித்து நோன்பு நோற்கைக்கு ஆண்டாள் சில அதிகாரிகளை முன்னிட்டுக்கொண்டு இழியுமாறுகூறுவன, முன்னடிகள். ஓத்து—ஓதப்படுவது; ப்ரகரணபலத்தினால் காமஸூத்ரமாகிற வேதத்தை இங்குக்கூறும்; அதாவது - வாத்ஸ்யாயந சாஸ்த்ரம்.

தெருவிடை எதிர்கொள்ளுகை - ஆதராதிசயத்தின்காரியம். திருந்தவே நோற்கின்றேன் என்றது-காமனைத்தொழுகை ஸ்வரூபநாசக மன்றோவென்று இருப்பக்காமல் நோற்கின்றேன் என்றவாறு.

கருவுடைமுகில் — நீர்கொண்டெழுந்த காளமேகம். நோக்க + எனக்கு, நோக்கெனக்கு; தொகுத்தல் விகாரம். (௬)

காயுடைநெல்லொடுகரும்பமைத்துக் கட்டியரிசியவலமைத்து *
வாயுடைமறையவர்மந்திரத்தால் மன்மதனேயுன்னைவணங்குகின்றேன் *
தேசமுன்னளந்தவன்திரிவிக்கிரமன் திருக்கைகளாலென்னைத்தீண்டும்வண்ணம்
சாயுடைவயிறுமென்தடமுலையும் தரணியில்தலைப்புகழ்தரக்கிற்றியே.

| | |
|---|---|
| மன்மதனே | மன்மதனே! |
| காய் உடை நெல்லொடு | பசுங்காய்நெல்லும் |
| கரும்பு | கரும்பும் |
| அமைத்து | சமைத்து (அதனோடுகூட) |
| கட்டி | கருப்புக்கட்டியும் |
| அரிசி | பச்சரிசியும் |
| அவல் | அவலும் (ஆகிய இவற்றையும்) |
| அமைத்து | சமைத்து |
| வாய் உடை | நல்ல ஸ்வரத்தையுடையராயும் |
| மறையவர் | காமசாஸ்திரத்தில் வல்லவர்களாயுமிருப்பவர்களுடைய |
| மந்திரத்தால் | மந்திரத்தினால் |
| | உன்னை வணங்குகின்றேன்—; |
| முன் | மூவுலகும் மாவலியால் அபஹரிக்கப்பட்ட காலத்தில் |
| தேசம் | ஸகல லோகங்களையும் |

| | |
|---|---|
| அளந்தவன் | (திருவடிகளால்) அளந்தருளினவனும் |
| திரிவிக்கிரமன் | த்ரிவிக்ரமனென்னும் திருநாமமுடையவனுமான எம்பெருமான் |
| என்னை | என்னுடைய |
| சாய் உடை | ஒளியையுடைய |
| வயிறும் | வயிற்றையும் |
| மென் தடம் முலையும் | மென்மையும் பருமையும் பொருந்தியமுலைகளையும் |
| திருக்கைகளால் | (அவனது) திருக்கைகளினால் |
| தீண்டும் வண்ணம் | ஸ்பர்சிக்கும்படி பண்ணி |
| தரணியில் | (இப்) பூமண்டலத்தில் |
| தலைப்புகழ் | நிலைநின்ற கீர்த்தியை |
| தரகிற்றி | (நான்பெறும்படி) தந்தருளவேணும். |

* * * — பால்மாறாத பசுங்காய் நெல்லும், கரும்பும், கருப்புக்கட்டியும், பச்சரிசியும், அவலுமாகிய இவை ரஜோகுண ப்ரசுரனான காமதேவனுக்கு ஆமவை யென்க. "வாயுடைமறையவர் மந்திரத்தால்" என்றது--காமசாஸ்த்ரமாகிய வாத்ஸ்யாயநத்திற் கூறியமுறை வழுவாமல் என்றபடி.

தேசமுன்னளந்த வரலாறு:—மஹாபலி என்னும் அஸுரராஜன் தன் வல்லமையினால் இந்திரன் முதலிய யாவரையும்வென்று மூவுலகங்களையும் தன் வசப்படுத்தி அரசாண்டு செருக்குக் கொண்டிருந்த பொழுது அரசிழந்த தேவர்கள் திருமாலைச் சரணமடைந்துவேண்ட, அப்பெருமான் குள்ளவடிவான வாமநாவதாரங்கொண்டு அந்தமாவலியினிடஞ்சென்று தன்காலடியால்மூவடிமண்வேண்டி அதுகொடுத்தற்கு அவன் இசைந்தவுடனே திரிவிக்கிரமனாகி ஆகாயத்தை அளாவிவளர்ந்து ஓரடியாற் பூலோகத்தையும் மற்றோரடியால் மேலுலகத்தையும் அளந்து மூன்றாம் அடிக்காக அவன் முடியிற் காலைவைத்து அவனைப் பாதாளத்திலழுத்தி அடக்கினான் என்பதாம். ஆண்டாள் இங்கு இவ்விருதாந்தத்தைக் கூறியது - 'என்னைத் தீண்டவேணும்' என்று ஒருவரும் விரும்பாதிருக்கத் தானே உலகங்களையெல்லாம் தீண்டியருளினவன் தீண்டு தீண்டென்று வைகலும் வாய்வெருவுகின்ற என்னைத்தீண்டினால் வரும் பாவமென்னோ? என்று வருந்துகின்றமையைக் காட்டுதற்கென்க. என்னை-உருபுமயக்கம். சாய்-஛ாயா' என்கிற வடசொற்சிதைவு. முலைக்கு மென்மையாவது - காதலனுடைய பிரிவைக் கணப்பொழுதும் பொறுக்ககில்லாமை. தரணி-தாரணீ. தலைப்புகழ்-தலையான புகழ்; சிறந்தபுகழ் என்கை: 'எம்பெருமானாலே தீண்டப்பெற்றவள் இவள்' என்று அனைவராலுங் கொண்டாடப்பெறுகை. கிற்றி-கில் என்னும் வினைப்பகுதியடியாப்பிறந்த முன்னிலை யொருமை வினைமுற்று. .... .... .... (எ)

மாசுடையுடம்போடுதலையுலறி வாய்ப்புறம்வெளுத்தொருபோதுமுண்டு *
தேசுடைத்திறலுடைக்காமதேவா நோற்கின்றநோன்பினைக்குறிக்கொள்கண்டாய்
பேசுவதொன்றுண்டிங்கெம்பெருமான் பெண்மையைத்தலையுடைத்தாக்கும் [வண்ணம் *
கேசவநம்பியைக்கால்பிடிப்பாளென்னும் இப்பேறெனக்கருள்கண்டாய். (அ)

| | |
|---|---|
| தேசு உடை | (பிரிந்தாரைக் கூட்டுகையால்வந்த) புகரையுடையவனும் |
| திறல் உடை | மிடுக்கையுடையவனும் |
| எம் பெருமான் | எமக்கு ஸ்வாமியுமான |
| காமதேவா | மன்மதனே! |
| மாசு உடை | அழுக்குப்படிந்த |
| உடம்பொடு | உடம்போடே கூட |
| தலை | தலைமயிரை |
| உலறி | விரித்துக்கொண்டு |
| வாய்ப்புறம் வெளுத்து | (தாம்பூல சர்வணமில்லாமையால்) உதடுகள் வெளுப்பாகப்பெற்று |
| ஒரு போது உண்டு | ஒருவேளை புஜித்து |
| (இப்படிப்பட்ட வருத்தத்துடன்) | |
| நோற்கின்ற நோன்பினை | (நான்) நோற்கின்ற நோன்பை |

| | |
|---|---|
| குறிக்கொள் | (நீ எப்பொழுதும்) ஞாபகத்தில் வைக்கவேணும்; |
| இங்கு | இப்போது |
| பேசுவது ஒன்று உண்டு | சொல்லவேண்டுவது ஒன்று உளது; |
| (அதைச்சொல்லுகிறேன் கேள்;) | |
| பெண்மையை | (என்னுடைய) ஸத்தையை |
| தலையுடைத்தாக்கும் வண்ணம் | ஜீவித்திருக்கும்படி செய்வதற்குறுப்பாக |
| கேசவன் நம்பியை கால்பிடிப்பாள் என்னும் | 'கண்ணபிரானுக்குக் கால்பிடிப்பவள் இவள்' என்கிற |
| இ பேறு | இப்புருஷார்த்தத்தை |
| எனக்கு அருள் | எனக்கு அருளவேணும். |
| (கண்டாய் - முன்னிலையசை.) | |

மாசுடை உடம்பொடு-உடம்பில் அழுக்கேறும்படி முழுகாமலிருந்து என்றபடி. கண்ணபிரானோடு கலக்கப்பெறாத சோகத்தினால் உடம்பழுக்குப் போகக் குளிக்கமாட்டிற்றிலளென்க. தலைஉலறி = குழலில் பூக்களை அணிந்து கொள்ளாமலிருக்கையைக் கூறியவாறு. வாய்ப்புறம் வெளுத்து—வெற்றிலை தின்கைக்கு ப்ரஸக்தியுமில்லாமையால் அதரம் வெளுக்கவேணுமத்தனையிறே. 'ஒருபோதும் என்றவிடத்து உம்மை—இழிவுசிறப்பென்னலாம். 'என்றைக்காவது ஒருநாள் கண்ணபிரான் வந்து கூடுவன் கொல்'! என்னும் நசையினால் ஒருவேளை உண்டு உயிரைக் காக்கின்றாள் போலும். குறிக்கோள் = 'ஆண்டாள் இவ்வளவு வருந்தப்பட்டு ஒரு நோன்பை நோற்றாளே!' என்று உன் நெஞ்சில் எப்போதும் பட்டிருக்கவேண்டு மென்றபடி.

கண்ணபிரானுக்குத் திருவடி வருடும்படியான பாக்கியம் எனக்கு வாய்த்தாலன்றி என் ஸத்தை ஜீவியாதென்கை பின்னடிகளின் கருத்து. அவனோடு கூடியாலணைக்க வேண்டுகின்றவள் கால்பிடிக்க வேணுமென்பானென்? எனில்; காலைப் பிடித்துக்கொண்டால் அதுதானேயமையுமன்றோ வென்று இருந்தாள் போலும். "[illegible]".

கேசவன் — பிரம ருத்திரர்கட்குத் தலைவன்; கேசியைக் கொன்றவனென்றுமாம். .... .... .... .... .... (அ)

தொழுதுமுப்போதுமுன்னடிவணங்கித் தூமலர்தூய்த்தொழுதேத்துகின்றேன் *
பழுதின்றிப்பார்க்கடல்வண்ணனுக்கே பணிசெய்துவாழப்பெறுவிடில்நான் *
அழுதழுதலமந்தம்மாவழங்க ஆற்றவுமதுவுனக்குறைக்குங்கண்டாய் *
உழுவதோரெருத்தினைநுகங்கோடுபாய்ந்து ஊட்டமின்றித்துரந்தாலொக்குமே.

| | |
|---|---|
| முப் போதும் | (இரண்டு சந்தி, உச்சிப் போது ஒன்று ஆகிய) மூன்று காலங்களிலும் |
| தொழுது வணங்கி | ப்ரணாமபூர்வகமாக (உன்னை) ஆச்ரயித்து |
| உன் அடி | உன் பாதங்களில் |
| தூ மலர் தூய் | பரிசுத்தமான புஷ்பங்களைப் பணிமாறி |
| தொழுது | ஸேவித்து |
| ஏத்துகின்றேன் நான் | ஸ்தோத்திரம் பண்ணுகின்ற நான் |
| பார் கடல் வண்ணனுக்கே | பூமியைச்சூழ்ந்த கடல் போன்ற திருநிறத்தையுடைய கண்ணபிரானுக்கே |
| பழுது இன்றி | குற்றமொன்றுமில்லாமல் |
| பணிசெய்து | கைங்கரியம் பண்ணி |
| வாழப் பெறாவிடில் | உஜ்ஜீவியா தொழிவேனாகில் |
| அழுது அழுது | (பின்பு நான்) பலகாலும் அழுது |
| அலமந்து | தடுமாறி |
| அம்மா வழங்க | 'அம்மா!' என்று கதறிக்கொண்டு திரிய |
| அது | அப்படி என்னைத் துடிக்கவிடுவது |
| ஆற்றவும் | மிகவும் |
| உனக்கு உறைக்கும் | உன்தலைமேல் ஏறும்; (அன்றியும், என்னை உபேக்ஷிப்பது) வேறுதொழிவதானது |
| உழுவது ஓர் எருத்தினை | ஏருழுகின்ற ஒரு எருதை |
| நுகம் கொடு பாய்ந்து | நுகத்தடியால் தள்ளி |
| ஊட்டம் இன்றி | தீனியில்லாமல் |
| துரந்தால் ஒக்கும் | ஓட்டிவிடுவதைப் போலாம். |

* * * — ஸாத்விகராயிருப்பார் பகவதாராதநம் பண்ணித்தலைக் கட்டினபிறகு திருவடிகளிலே விழுந்து 'நான் தொடங்கின திருவாராதநத்தைத் தலைக்கட்டினேன், திருவுள்ளத்திற்குப் பாங்கானபடியே போது போக்கியருளவேணும்' என்று ஸ்தோத்ர ரூபமானவற்றை விண்ணப்பஞ் செய்வதுபோல், இவள் மன்மதனிடத்திற் சில விண்ணப்பஞ் செய்கிறாள். "தூமலர்தூவி" என்ற பாடம் மறுக்கத் தக்கது. "ஏத்துகின்றேன்' என்பதை, வினைமுற்றாகவும், வினையாலணையும் பெயராகவும் கொள்ளலாம்.

[பழுதின்றி] பணிசெய்கையில் பழுதில்லாமையாவது—ஸ்வப்ரயோஜநத்வ புத்தி கலசாமல் கைங்கரியம் பண்ணுகை; "மற்றைநங் காமங்கள்மாற்று" என்றாரிறே. "வழுவிலா அடிமைசெய்யவேண்டும்" என்றார் ஆழ்வாரும்.

நான் இந்நிலைமையிலும் செய்து உன்னடி பணியச் செய்தேயும் நீ உபேக்ஷித்து என்னைக் கண்ணபிரானோடே கூட்டாதொழிவையாகில், நான் துக்கம்பொறுக்கமாட்டாமல் மிகவும் அழுது அம்மா! என்று கதறித் திரியும்படி நேரிடும்; அந்தப் பாதகம் உன்தலைமேலேறுமாதலால் நீ என்னை உபேக்ஷியா தொழியவேணுமென்பது மூன்றாமடியின் கருத்து.

பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானம்:— [ஸுஹ்ருதஸ் ஸாதுக்ருதம் த்விஷந்த: பாபக்ருத்யம்] சரணாகதனை நோக்காவிட்டால் இவனுடைய பாபபலத்

தை அவன் அநுபவித்து அவனுடைய ஸுக்ருதபலம் இவன்பக்கலிலே வருவதாகச் சொல்லாநின்றதிறே; அப்படியே உன்னைக்குறித்து நான் பண்ணின ஆச்ரயணத்துக்கு ஒருபலமின்றிக்கே யொழியுமாகில் அது உனக்குப்பொல்லாதாங்கிடாய்.'' என்பதாம்.

கடையடியின் கருத்து:—நான் உனக்கு இன்றளவுஞ் செய்த பணிவிடைகளை நீ ஏற்றுக்கொண்டு என் காரியத்தைச்செய்து முடிக்காமற் போவது—ஒருவன் தன் ஜீவநத்துக்காக எருதினிடத்தில் பூர்ணமாக வேலையைவாங்கிக்கொண்டு, பின்பு அதற்குத் தீனி இடாமல் நுகத்தடியால் அடித்துத் தள்ளி ஓட்டுவது போலாம். கோடு—கொண்டு என்பதன் சிதைவு. .... .... (௬)

கருப்புவில்மலர்க்கணைக்காமவேளைக் கழலிணைபணிந்தங்கோர்கரியலற *
மருப்பினையொசித்துப்புள்வாய்பிளந்த மணிவண்ணற்கென்னைவகுத்திடென்று *
பொருப்பன்னமாடம்பொலிந்துதோன்றும் புதுவையர்கோன்விட்டுசித்தன்கோதை
விருப்புடையின்றமிழ்மாலைவல்லார் விண்ணவர்கோனடிநண்ணுவரே. *

| | | | |
|---|---|---|---|
| கரும்பு வில் மலர் கணை காமன் வேளை | கரும்பாகிற வில்லையும் புஷ்பங்களாகிற அம்புகளையுமுடைய மன்மதனுடைய | மாடம் | மாடங்கள் |
| கழல் இணை பணிந்து | இரண்டு பாதங்களையும் வணங்கி | பொலிந்து தோன்றும் | மிகவும் விளங்காநிற்கப்பெற்ற |
| அங்கு ஓர் கரி அலற மருப்பினை ஒசித்து புள் வாய் பிளந்த மணி வண்ணற்கு என்னை வகுத்திடு என்று | கம்ஸன் மாளிகை வாசலில் (குவலயாபீடமென்ற) ஒரு யானை யானது விரிடும்படியாக (அதன்) கொம்புகளை முறித்தவனும் பகாஸுரனுடைய வாயைக் கீண்டெறிந்தவனும், நீலமணி போன்ற நிறத்தானுமான கண்ணபிரானுக்கு என்னை அடிமைப்படுத்தவேணும் என்று | புதுவையர் | ஸ்ரீவில்லிபுத்தூரில் உள்ளவர்கட்கு |
| | | கோன் | ஸ்வாமியான |
| | | விட்டுசித்தன் | பெரியாழ்வாருடைய (மகளாகிற) |
| | | கோதை | ஆண்டாள் (அருளிச்செய்த) |
| | | விருப்புடை | விருப்பமடியாகப் பிறந்த |
| | | இன் தமிழ் மாலை | இனிய தமிழ்மாலையாகிய இப்பாசுரங்களை |
| | | வல்லார் | ஓதவல்லவர்கள் |
| | | விண்ணவர் கோன் | நித்யஸூரிகளுக்குத் தலைவனான எம்பெருமானுடைய |
| | | அடி | திருவடிகளை |
| பொருப்பு அன்ன | மலைபோன்ற | நண்ணுவர் | கிட்டப்பெறுவர். |

* * * — இத்திருமொழி கற்றார் பெறும் பேறு கூறுமிப்பாசுரம் திருநாமப்பாட்டென்றும் பலச்ருதியென்றும் வழங்கப்பெறும்.

கரியலற மருப்பினை யொசித்தவரலாறு:—வில்விழா என்கிற வியாஜத்தினால் அத்துக் கம்ஸனால் வரவழைக்கப்பட்டு ஸ்ரீகிருஷ்ண பலராமர்கள் கம்ஸனரண்மனை

ரைநோக்கிச் செல்லுமளவில், அவ்வரண்மனை வாசல்வழியில் நம்மைக் கொல்லும் பொருட்டு அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயா பீடமென்னும் மதயானை மீறிவர அப்பொழுதவன் அதனை எதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை எடுப்பது போல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுதமாகக் கொண்டு அடித்து அவ்வானையை உயிர் தொலைத்து விட்டு உள்ளே போயின னென்பதாம். புள்வாய் பிளந்த வரலாற்றை, கீழ் இரண்டாம் பாட்டினுரையிற் காண்க.

விட்டுசித்தன்="வேயர் தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் மனத்தே,-கோயில் கொண்ட கோவலன்" என்றபடி-பெரியாழ்வார் எம்பெருமானுக்குத் தம் திருவுள்ளத்தையே கோயிலாக அமைத்தருளினமையால் விஷ்ணுசித்தரெனக் காரணப் பெயர் பெற்றனரென்க. "விருப்புடன்" என்றபாடத்தில், 'விருப்புடன் வல்லார்' என இயையும்.

வியாக்கியானம்:—"(விண்ணவர் இத்யாதி.) ஸாத்விகாக்ரேஸரரான பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்துவைத்து பகவல்லாபத்துக்காக மடலெடுப்பாரோபாதி காமன் காலிலே விழவேண்டும்படியான இவளைப் போலன்றிக்கே இப்ரபந்தம் கற்றவர்கள் ஸம்ஸாரத்தை விட்டு, நித்யாநுபவம் பண்ணுகிற நித்யஸூரிகளோடே ஒரு கோவையாய் அநுபவிக்கப் பெறுவர்கள்." .... (கo)

அடிவரவு—தை வெள்ளை மத்தம் சுவர் வான் உரு காய் மாசு தொழுது கருப்பு நாமம்.

முதல் திருமொழி உரை

முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

## இரண்டாந் திருமொழி — நாமமாயிரம்.

# அவதாரிகை.



கீழ்த் திருமொழியில் ஆண்டாள் பண்ணின காமஸமாச்ரயணம், ஆய்ச்சிகள் பண்ணின காமஸமாச்ரயணத்தின் அநுகாரமாகும் திருப்பாவையிற்போல் — என்பது ஞாபகத்திற் கொள்ளத்தக்கது. அவ்வாறே இத்திருமொழியும் வேறொரு அநுகாரவகையாற் செல்லுகின்றது. அதாவது :—

ஆய்ச்சிகள் பண்ணின காமஸமாச்ரயணத்தை உணர்ந்த கண்ணபிரான், "இவர்களுடன் கூடுவதற்கு நாம் வருந்தவேண்டியிருக்க, நம்மைப்பெறுதற்கு இவர்கள் வருந்துகையாவதென்!, அன்றியும், இவர்கள் நம்மைப்பெறுகைக்கு நம்காலில் விழாதே ஒரு தேவதாந்தரத்தின் காலைக்கட்டிக்கொண்டு அவரும்படி நாம் பார்த்துக் கொண்டிருக்கையாவதென்? இவ்வாய்ப்பாடியில் ஆயர்கள் கூடி வர்ஷார்த்தமாக இந்திரனுக்குச் சோறு கொண்டுபோய் இடுவதைக்கண்டு, 'நாம் பிறந்து வளருகிற ஊரில் சிலர் ஒன்றைத் தேவதாந்தரத்திற்கு ஆக்குகை கூடுமோ?' என்று அதுவும் பொறுக்கமாட்டாமல் அந்தச் சோற்றைக் கோவர்த்தனமலைக்கு இடுவித்து, கோவர்த்தனமாயிருந்து அவற்றை யடங்கலும் உண்ட நாம், நமக்கு அஸாதாரணைகளான இவர்கள் தேவதாந்தரத்தின் காலில் விழப்பார்த்திருக்கை நமக்கு மிகவும் பொல்லாங்கு' என்று திருவுள்ளம் நொந்து தளும்பி முன் மடுவின்கரையில் ஆனைக்குவந்து உதவினாற்போலே கடுகவந்து ஆய்ச்சிகட்கு முகங்காட்ட, அவர்களும் இவனைக் காணாதவர்கள்போலே அந்யபராயிருக்கையைக்காட்டிச் சிற்றிலிழைக்க, அந்தச்செயலும் காமஸமாச்ரயணம்போல இவனுக்கு அநிஷ்டமாதலால், அவர்கள் இழைக்குஞ் சிற்றிலை இவன் அழிப்பதாக முயற்சிசெய்ய, அதனை அவர்கள் வேண்டாவென்ன, இவன் வேணுமென்ன, இப்படியாக நடுவே ஒரு மஹாபாரதம் நடந்தது. பிறகு புணர்ச்சி நேர்ந்து அதுதானும் பிரிவில் தலைக்கட்டி நின்றவாற்றை ஆண்டாள் அநுகரித்து அருளிச்செய்யும் திருமொழி இது. (ஒன்பதாம்பாட்டில், "எம்மைப் பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால்" என்றதனால் புணர்ச்சிநேர்ந்தபடி தோற்றும்; "கோழியழைப்பதன்முன்னம்" என்ற அடுத்த திருமொழியின் அவதாரிகையை நோக்கப்படுமிடத்து, பிரிவில் தலைக்கட்டினபடி தோற்றுமென்க.) .... (*)



நாமமாயிரமேத்தநின்ற நாராயணாநரனே * உன்னை
மாமிதன்மகனாகப்பெற்றால் எமக்குவாதைதவிருமே *
காமன்போதருகாலமென்று பங்குனிநாள்கடைபாரித்தோம் *
தீமைசெய்யும்சிரீதரா எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (க)

| | |
|---|---|
| நாமம் ஆயிரம் | ஸஹஸ்ரநாமத்தினால் |
| ஏத்த நின்ற | (நித்யஸூரிகள்) துதிக்கும்படி நின்ற |
| நாராயணா | நாராயணனே! |
| நரனே | (சக்ரவர்த்தித் திருமகனாய்ப்பிறந்து) மனித உடல் கொண்டவனே! |
| உன்னை | (ஏற்கனவே தீம்பனான) உன்னை |
| மாமிதன் மகன் ஆக பெற்றால் | பர்த்தாவாகவும் பெற்றால் |
| எமக்கு வாதை தவிருமே | நாங்கள் நலிவுபடாதிருக்க முடியுமோ?; |
| காமன் போதரு காலம் என்று | மன்மதன் வருங்காலமென்று |
| பங்குனி நாள் | பங்குனி மாதத்தில் |
| கடை | (அவன் வரும்) வழியை |
| பாரித்தோம் | கோடித்தோம்; |
| தீமை செய்யும் | தீம்புகளைச் செய்கின்ற |
| சிரீதரா | ச்ரியபதியான கண்ணபிரானே! |
| எங்கள் சிற்றில் | நாங்களிழைக்கின்ற மணற் கொட்டகங்களை |
| வந்து | (நாங்கள் விளையாடுமிடத்தில்) வந்து |
| சிதையேல் | நீ அழிக்கவேண்டா. |

* * * — "நாராயணாநரனே!" என்றது-வதரியாச்ரமத்தில் நரநாராயணரூபமாய் அவதரித்ததாற்றைக் கூறியவாறுமாம். மாமிதன் மகன்=கணவன்; மாமியாருடைய பிள்ளை தனக்குக் கணவனிறே. வடமொழியில், கணவனை "ஆர்யபுத்ர:" என்ற சொல்லால் வழங்குமாறறிக; ஆர்யனென்று மாமனாரைச் சொல்லிற்றாய், அவருடைய மகனென்று கணவனைச் சொல்லுகிறது. வாதை—'பாதா' என்ற வடசொல் விகாரம். உலகில் எல்லார்க்குந் தீம்பு செய்கின்ற புருடன் தனது மனைவியிடத்து வந்தால் பொறுக்கவொண்ணாத தீம்பு செய்வனென்பது ப்ரஸித்தமாதலால், அதனை உணர்ந்த இவர்கள், 'ஏற்கனவே தீம்பனான நீ எமக்குக் கணவனாகவும் வாய்த்தால் எங்களால் துன்பம் அநுபவித்து முடியுமோ' என்கிறார்கள்.

இதுகேட்ட கண்ணபிரான், 'பெண்காள்! நானோ தீம்பு செய்பவன்? உங்களை நான் நெஞ்சிலும் நினையாதிருக்க, என் வரவை எதிர்பார்த்துச் சிற்றிலிழைக்கிறீர்கள் நீங்களன்றோ?' என்ன; அதுகேட்ட ஆய்ச்சிகள், 'அப்பனே! நீ அங்ஙனம் நினைக்கவேண்டா, நாங்கள் உனக்காகச் சிற்றிலிழைக்கின்றோமல்லோம்; நிகழ்வது பங்குனிமாதமாதலால் காமதேவன் வீதிவலம் வரக்கூடுமென்று அவன் வரும்வீதியிற் சிற்றிலிழைத்து அலங்கரிக்கிறோமித்தனையொழிய உன்னைக் குறித்து ஒன்றுஞ் செய்கின்றிலோம்' என்ன; அதுகேட்ட கண்ணபிரான் 'நீங்கள் சிற்றிலிழைப்பது அந்யார்த்தமாகில், அதனை நான் அழிப்பதும் அந்யார்த்தந்தான்' என்று சொல்லிச் சிற்றிலை அழிக்கப்புக, ஆய்ச்சிகள் 'அழிக்கவேண்டா' என்று விலக்குகின்றனர். சிரீதரன்—ஸ்ரீதர:. சிறு + இல், சிற்றில். (க)

இன்றுமுற்றுமுதுகுநோவ இருந்திழைத்தவிச்சிற்றிலை *
நன்றுங்கண்ணுறநோக்கி நாங்கொளுமார்வந்தன்னைத்தணிகிடாய் *
அன்றுபாலகனாகி ஆலிலைமேற்றுயின்றவெம்மாதியாய் *
என்றுமுன்றனக்கெங்கள்மேல் இரக்கமெழாததெம்பாவமே. (௨)

| | | | |
|---|---|---|---|
| இன்று முற்றும் | இன்றையதினம் முழுவதும் | பாலகன் ஆகி | சிசுவடிவு கொண்டு |
| முதுகு நோவ | முதுகு நோம்படி | ஆல் இலை மேல் | ஆலந்தளிரின்மேல் |
| இருந்து | உட்கார்ந்துகொண்டு | துயின்ற | கண்வளர்ந்தருளினவனும் |
| இழைத்த | ஸ்ருஷ்டித்த | எம் ஆதியாய் | எமக்குத் தலைவனுமான கண்ணபிரானே! |
| இச்சிற்றிலை | இந்தச் சிற்றிலை | என்றும் | எக்காலத்திலும் |
| நன்றும் | நன்றாக | உன் தனக்கு | உனக்கு |
| கண் உற நோக்கி | (நீ) கண் பொருந்தும்படி பார்த்து, | எங்கள் மேல் | எம்மிடத்தில் |
| நாம் கொளும் ஆர்வம் தன்னை தணிகிடாய் | நாங்கள் கொண்டிருக்கிற அபிநிவேசத்தைத் தணியச் செய்கிடாய்; | இரக்கம் எழாதது | தயவு பிறவாமலிருப்பது |
| அன்று | மஹாப்ரளயம் வந்த காலத்தில் | எம் பாவமே | நாங்கள் பண்ணின பாவத்தின் பயனேயாம். |

* * * —கண்ணபிரானே! நீ ஸர்வசக்தியுக்தனாதலால் எப்படிப்பட்ட அரிய காரியங்களையும் ஒரு ஸங்கல்பமாத்திரத்தினால் வருத்தமறப் படைக்கவல்லை; நாங்கள் * அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்திற் பிறந்த அபலைகளாகையாலே இச்சிற்றிலை இழைக்கப்பட்ட பாடு * பன்னியுரைக்குங்கால் பாரதமாம்; இப்படி வருத்தப்பட்டுச் செய்த இச்சிற்றிலை நீ நன்றாகக் கண்ணை ஊன்றவைத்துக் கண்டாயாகில் எங்களுடைய ஆசை ஒருவாறு தணியும் என்று ஆய்ச்சிகள் சொல்லச் செய்தேயும், கண்ணபிரான் அதனைக் கேளாமல் சிற்றிலை அழிப்பதாக முயல, அது கண்ட ஆய்ச்சிகள், 'நாயகனே! பண்டு இப்பாரெல்லாம் நெடுங்கடலேயான காலத்தில் உலகத்தை யெல்லாம் வயிற்றிலே வைத்து நோக்கிப் பாலகனாய் ஆலிலையில் பள்ளிகொண்ட பரமகாருணிகனான நீ மிகவும் எளியரான எங்கள் திறத்தில் ஒரு நாளும் அருள்புரியாதொழிவது நாங்கள் பண்ணின பாபத்தின் பலனே காணென்று உள் வெதும்புகின்றனர்.

"இன்றுமுற்று முதுகு நோவ என்பதற்குக் கருத்து-எங்கள் முதுகைநோவு தீரச்சற்றுப் பிடிக்கலாகாதோ? என்பதாம்.

[நாம் கொளும் ஆர்வந்தன்னைத் தணி.] விஷயம் ஸித்தித்தால் ஆசை நிவர்த்திக்குமாதலால், 'நாம் இழைக்குஞ் சிற்றிலைக் கண்ணபிரான் கடாக்ஷிக்க வேணும்' என்று ஆசைப்பட்டு இவர்களிழைக்குஞ் சிற்றிலில் அவனுடைய கடாக்ஷம் விழுந்தால் இவர்களுடைய ஆசை தீருமென்க. கொளும்—'கொள்ளும்' என்பதன் விகாரம்.

"நாங்களு மார்வந்தன்னை" என்ற பாடமும் வியாக்யானத்திற்கு ஒக்கும். அப்பாடத்தில், நாங்களும் என்பது, நோக்கி என்ற வினையெச்சத்தில் இயையும்.

அதன் கருத்து; நாங்கள் இச்சிற்றிலை இழைக்கும்போது இதனைத் தனித்தனி அவயவமாகக் கண்டோமத்தனை யொழிய; ஒரு அவயவியாகக் காணப் பெற்றிலோம்; ஆதலால் எங்களுடைய ஆசை தீரவில்லை; அப்படியிருக்க இதனை நீ அழித்தாயாகில் எங்களுக்குப் பெருத்த குறையாம்; இது ஒரு அவயவியான பின்பு இதனை நாங்கள் நன்றாகக் கண்டு மகிழ்ந்து ஆசை தீரும்படி நீ செய்ய வேணுமென்பதாம். இப்பாட்டிற் காட்டிலும் "நாங் கொளும்" என்ற பாடமே பலவகைகளிலுஞ் சிறக்குமென்பது கற்றுணர்ந்த பெரியோர்களின் கொள்கை. கிடாய்—முன்னிலை அசைச்சொல். பாலகன்-பாலகன். அன்றி, பாலனென்றும், அனைவரையுங் காத்தருள்பவன் என்று முரைக்கலாம்.

எம்பாவமே — "மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்" என்று பரதாழ்வான் கதறினாற்போலே கதறுகிறார்கள். .... .... .... (உ)

குண்டுநீருறைகோளரீ ! மதயானைகோள்விடுத்தாய் * உன்னைக்
கண்டுமாலுறுவோங்களைக் கடைக்கண்களாலிட்டுவாதியேல் *
வண்டல்நுண்மணல்தெள்ளி யாம்வளைக்கைகளாற்சிரமப்பட்டோம் *
தெண்திரைக்கடற்பள்ளியாய் எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (ங)

| | |
|---|---|
| குண்டு | மிக்க ஆழத்தையுடைத்தான |
| நீர் | கடலிலே |
| உறை | சாய்ந்தருள்பவனும் |
| கோள் அரீ ! | மிடுக்கையுடைய சிங்கம் போன்றவனும், |
| மதம் யானை கோள் விடுத்தாய் | மதம் மிக்க கஜேந்திராழ்வானுக்கு (முதலையால் நேர்ந்த) துன்பத்தைத் தொலைத்தருளினவனுமான கண்ணபிரானே ! |
| உன்னை | (அடியார் துயரைத் தீர்க்கவல்ல) உன்னை |
| கண்டு | பார்த்து |
| மால் உறுவோங்களை | ஆசைப்படுகின்ற எங்களை |
| கடைக் கண்களால் இட்டு | கடைக்கண்களால் பார்த்து |
| வாதியேல் | ஹிம்ஸிக்கவேண்டா; |
| யாம் | நாங்கள் |
| வண்டல் | வண்டலிலுள்ள |
| நுண் மணல் | சிறிய மணல்களை |
| வளை கைகளால் | வளையல்கள் அணிந்த கைகளினால் |
| தெள்ளி | புடைத்து |
| சிரமப்பட்டோம் | மிகவும் கஷ்டப்பட்டோம்; |
| தெண் திரை | தெளிந்த அலைகளையுடைய |
| கடல் | திருப்பாற்கடலை |
| பள்ளியாய் | படுக்கையாகவுடையவனே ! எங்கள் சிற்றில் வந்து சிதையேல்—. |

* * * —[குண்டுநீர்.] ப்ரளயகாலத்தில் உலகமெல்லாம் ஜலமயமாய் ஏகார்ணவமான நிலைமை; "பனிப்பரவைத் திரைததும்பப் பாரெல்லாம் நெடுங்கடலேயானகாலம்" என்றது காண்க. ஸ்ருஷ்டிக்கு உறுப்பாக எம்பெருமான் அந்த ஏகார்ணவத்தில் சாய்ந்தருளினமை அறிக. ["கடைக் கண்களாலிட்டு வாதியேல்."] முழுநோக்குப் பெறவேணுமென்று ஆசைப்பட்டிருக்குமவர்கட்குக் கடாக்ஷவீக்ஷணம் [-கடைக்கண் பார்வை.] ஹிம்ஸகமிறே. அணையவேணுமென்று விரும்பப்பட்ட வ்யக்தியை தூரத்தில் நின்று காண்கைக்கு மேற்பட்ட ஹிம்ஸை இல்லாதாப் போலே.

யானை கோள்விடுத்த வரலாறு:— இந்த்ரத்யும்நனென்னும் அரசன் மிக்க விஷ்ணுபக்தியுடையவனாய் ஒரு நாள் விஷ்ணுபூஜை செய்கையில் அகஸ்திய மஹாமுனிவன் அவனிடம் எழுந்தருள, அப்பொழுது அவ்வரசன் தன் கருத்து முழுவதையும் திருமாலைப் பூசிப்பதிற் செலுத்தியிருந்ததனால் அவ்விருடியின் வரவை அறிந்திடானாய் அவனுக்கு உபசாரமொன்றுஞ் செய்யாதிருக்க, அம்முனிவன், தன்னை அரசன் அலட்சியஞ் செய்தானென்று மாறாகக் கருதிக் கோபித்து 'நீ யானைபோலச் செருக்குற்றிருந்ததனால் யானையாகக் கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் ஒரு காட்டில் யானையாகத் தோன்றினானாயினும், முன் செய்த விஷ்ணுபக்தியின் மஹிமையால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந் தாமரைமலர்களைக் கொண்டு திருமாலை அருச்சித்துப் பூசித்து வருகையில் ஒரு நாள் பெரியதொரு தாமரைத் தடாகத்தில் அர்ச்சனைக்காகப் பூபறித்தற்குப் போய் இறங்கியபொழுது, அங்கே முன்பு நீர் நிலையில் நின்றுத் தவஞ் செய்துகொண்டிருந்த தேவலனென்னும் முனிவனது காலைப்பற்றி யிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தாற் பெரிய முதலையாய்க் கிடந்த ஹூஹூ என்னுங் கந்தருவன் அவ்யானையின் காலைக் கௌவிக்கொள்ள அதனைக் விடுவித்துக்கொள்ள முடியாமல் கஜேந்திரன் 'ஆதிமூலமே!' என்று கூவி யழைக்க, உடனே திருமால் கருடன் மீதேறி அங்கு எழுந்தருளித் தனது சக்கராயுதத்தைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன் வாயினின்று விடுவித்து இறுதியில் அதற்கு முத்தியை அருளினன் என்பதாம்.

மதயானை=யானைக்கு மதமுடைமை சாதி யியல்பு. கோள்—முதனிலை திரிந்த தொழிற்பெயர். சிரமம்—ச்ரமம்.

பெய்யுமாமுகில்போல்வண்ணா உன்தன்பேச்சுஞ்செய்கையும்*எங்களை
மையலேற்றிமயக்க உன்முகம்மாயமந்திரந்தான்கொலோ *
நோய்யர்பிள்ளைகளென்பதற்கு உன்னைநோவநாங்களுரைக்கிலோம் *
செய்யதாமரைக்கண்ணினாய் எங்கள்சிற்றில்வந்துசிதையேலே (௮)

| | |
|---|---|
| பெய்யும் | வர்ஷியாநின்றுள்ள |
| மா முகில் போல் வண்ணா | காளமேகம் போன்ற திருநிறத்தையுடையவனே! |
| உன் தன் | உன்னுடைய |
| பேச்சும் செய்கையும் | (தாழ்ந்த) வார்த்தைகளும், (தாழ்ந்த) வியாபாரங்களும் |
| எங்களை | எங்களை |
| மையல் ஏற்றி | பிச்சேறப்பண்ணி |
| மயக்க | அறிவுகெடுக்கைக்கு |
| உன் முகம் | உன்னுடைய முகமானது |
| மாயம் மந்திரம் தான்கொலோ | சொக்குப்பொடியோ? |
| நொய்யர் பிள்ளைகள் என்பதற்கு | 'அற்பத்தனமுடைய சிறுமியர் இவர்கள்' என்று நீ சொல்லுவாய் என்று பயப்பட்டு |
| நாங்கள் | நாங்கள் |
| உன்னை | உன்னைக்குறித்து |
| நோவ உரைக்கிலோம் | நெஞ்சு புண்படும்படி (ஒன்றும்) சொல்லுகிறோமில்லை; |
| செய்ய தாமரை கண்ணினாய் | புண்டரீகாக்ஷனே! |

எங்கள் சிற்றில் வந்து சிதையேல்.

* * * — பிரானே! நீ எங்கள் திறத்தில் 'அடியேன், குடியேன்' என்றாற்போலே சொல்லும் அதிவினய வார்த்தைகளும் கள்ளக்குழைச்சல்களும் எங்களை மிகவும் மயக்குகின்றனவே; இதற்கெல்லாம் அடி உன் திருமுகமண்டலமிறே; இப்படிப்பட்ட மயக்கத்தை உண்டுபண்ணுகைக்கு உன் முகம் அம்மான் பொடியோ? என்கிறார்கள் முன்னடிகளால். மாயமந்திரம் - [illegible]. மந்த்ர முறை உணர்ந்தவர்கள் ஒரு பொடியை மந்திரித்து ஒருவன்மேல் தூவினால் அப்பொடி அவனை மயக்கிவிடுதல்போல, கண்ணபிரானது திருமுகம் இவர்களை மயக்கிவிட்டதென்க. .... .... .... .... .... (ச)

வெள்ளைநுண்மணற்கொண்டு சிற்றில்விசித்திரப்பட * வீதிவாய்த்
தெள்ளிநாங்களிழைத்தகோலம் அழித்தியாகிலும் உன்றன்மேல் *
உள்ளமோடியுருகலல்லால் உரோடமொன்றுமிலோங்கண்டாய் *
கள்ளமாதவா கேசவா உன்முகத்தனகண்களல்லவே. (ரு)

| | |
|---|---|
| கள்ளம் | கபடச்செய்கைகளையுடைய |
| மாதவா | கண்ணபிரானே! |
| கேசவா | கேசவனே! |
| | நாங்கள் —; |
| வெள்ளை நுண் மணல் கொண்டு | வெளுத்துச் சிறுத்த மணல்களைக் கொண்டு |
| வீதி வாய் | தெருவிலே |
| விசித்திரப்பட | (அனைவரும் கண்டு) ஆச்சரியப்படும்படி |
| தெள்ளி இழைத்த | தெளிந்து கட்டின |
| சிற்றில் | சிற்றிலாகிற |
| கோலம் | கோலத்தை |
| அழித்தி ஆகிலும் | நீ அழித்தாயாகிலும், (அதற்காக) |
| உள்ளம் | (எங்களுடைய) நெஞ்சானது |
| ஓடி | உடைந்து |
| உருகல் அல்லால் | உருகுமத்தனையொழிய |
| உன்தன்மேல் | உன்மேலே |
| உரோடம் ஒன்றும் இலோம் | துளியும் கோபமுடையோமல்லோம்; |
| உன் முகத்தன | உன் முகத்திலுள்ளவை |
| கண்கள் அல்லவே | கண்களன்றோ! |

* * * — மன்மதன் இஷ்டகுலதேவதை யாகையாலே அவனுக்கு இறையும் நெஞ்சு கோணவொண்ணாதென்று அவன் வரும் வீதியைப் பாங்காக அலங்கரிக்கும் பொருட்டு சிலர்போல் வெளுத்த மணல்களைக் கொணர்ந்து, அவற்றைப் பெருமணற் கற்களின் கலப்பில்லாமல் புடைத்து நாங்களிழைத்த இக்கோலத்தை நீ அழித்தபோதிலும், ஸர்வஸ்மாத்பரனானவன் இப்படியெல்லாம் செய்யப் பெறுவதே! ஈதென்ன ஸௌசீல்யம்!' என்று நெஞ்சு உருகி நீராய்ப் பிரமித்தலையொழிய, ரோஷமென்று பேர்படும்படி ஒரு விகாரம் பெற்றோமாகோம்; ஆகிலும், உன்முகத்திலுள்ளவை மெய்யே கண்களாகில் நீ இச்சிற்றிலைச் சிதைக்க ஒருப்படமாட்டாய்; இச்சிற்றிலை அன்புடன் நோக்குகையன்றோ கண்படைத்ததற்குப் பிரயோஜனம் என்கிறார்கள்.

"வீதிவாய்"=வாய் — ஏழனுருபு. அழித்தி - முன்னிலை யொருமை வினைமுற்று. "உருகிலல்லால்" என்றும் ஓதுவர். உரோடம்-ரோஷம். (ரு)

முற்றிலாதபிள்ளைகளோம் முலைபோந்திலாதோமை * நாடோறும்
சிற்றில்மேலிட்டுக்கொண்டு நீசிறிதுண்டுதிண்ணெனநாமது
கற்றிலோம் * கடலையடைத்தரக்கர்குலங்களை முற்றவுஞ்
செற்று * இலங்கையைப்பூசலாக்கியசேவகா எம்மைவாதியேல். (சு)

| | |
|---|---|
| கடலை அடைத்து | ஸேதுபந்தம்பண்ணி |
| அரக்கர் குலங்களை முற்றவும் | ராக்ஷஸருடைய குலங்களை முழுதும் |
| செற்று | களைந்தொழித்து |
| இலங்கையை | லங்கையை |
| பூசல் ஆக்கிய | அமர்க்களப்படுத்தின |
| சேவகா | வீரப்பாடு உடையவனே! |
| முற்றிலாத பிள்ளைகளோம் | முற்றாத இளம் பிள்ளைகளாய் |
| முலை போந்திலாதோமை | முலையும் கிளரப்பெறாத வெங்களை |
| நாள் தொறும் | நாள்தோறும் |
| சிற்றில் மேல் இட்டுக் கொண்டு | சிற்றில் விஷயமாக ஒரு வியாஜத்தை வைத்துக்கொண்டு |
| நீ சிறிது உண்டு | நீ செய்யுஞ் செய்திகள் சில உள; |
| அது இன்னது என்ன நாம் கற்றிலோம் | அவற்றை நாங்கள் அறிதாக அப்யஸித்தோமல்லோம்; |
| எம்மை வாதியேல் | எங்களை (நீ) துன்பப்படுத்தவேண்டா. |

* * * — 'கண்ணபிரான் இன்னது செய்தான்' என்று பிறர்க்குச் சொல்லமுடியாதபடி அவன் சில குறும்புகளைச் செய்ய, அது கண்ட ஆய்ச்சிகள், 'அப்பா! நெஞ்சில் நினைத்தபடி சில செய்யுமவ்வளவேயோ வேண்டுவது? எங்கள் பருவத்தைச் சிறிது ஆராயவேண்டாவோ? ("முலையோ முழுமுற்றும் போந்தில" என்றபடி) *கொங்கை இன்னுங் குவிந்தெழுந்திலாத எங்கள் திறத்து நீ செய்யும் குறும்புகளுக்கு நாங்கள் கருத்து அறியும்படி குருகுலவாஸம் பண்ணி ஒன்றுங் கற்றிலோம்; நீயோ ஒரு பெண்பெண்டாட்டிக்காக வானரப்படை திரட்டிக் கடலில் அணைகட்டி அரக்கர் குலங்களை வேரற வொழித்த மஹாவீரனுமிரா நின்றாய்; அபலைகளான நாங்கள் உன்னுடைய பலத்திற்கு ஈடுகொடுக்கவல்லோமல்லோம்; ஆகையால், பிரானே! எம்மை நீ நலியாதே கடக்கப்போகவேணு மென்கிறார்கள்.

வாதியேல்—வாயிமேல். .... .... .... .... (௬)

பேதநன்கறிவார்களோடு இவைபேசினல்பெரிதின்சுவை *
யாதுமொன்றறியாதபிள்ளைகளோமை நீநலிந்தென்பயன் *
ஓதமாகடல்வண்ணா உன்மணவாட்டிமாரோடுசூழறாம் *
சேதுபந்தந்திருத்தினாய் எங்கள் சிற்றில்வந்துசிதையேலே. (எ)

| | |
|---|---|
| பேதம் | (உன் பேச்சின்) வாசியை |
| நன்கு அறிவார்களோடு | நன்றாக அறிய வல்லவரோடு |
| இவை | இப்பேச்சுக்களை |
| பேசினால் | பேசினால் |
| பெரிது இன் சுவை | மிகவும் போக்யமாயிருக்கும்; |
| யாது ஒன்றும் அறியாத | எவ்வகையான பாவத்தையு மறியமாட்டாத |
| பிள்ளைகளோமை | சிறுப் பெண்களான எங்களை |
| நீ நலிந்து என் பயன் | நீ வருத்தமுறுத்துவதனால் என்ன பயன்? |
| ஓதம் | திரைக்கிளப்பத்தையுடைய |
| மா கடல் | பெரிய கடலையொத்த |
| வண்ணா | திருநிறத்தையுடைய கண்ணபிரானே! |
| சேது பந்தம் திருத்தினாய் | திருவணை கட்டினவனே! |
| உன் மணவாட்டிமாரொடு சூழறும் | உன்னுடைய பத்நிகளின்மேல் ஆணை; |
| எங்கள் சிற்றில் வந்து சிதையேல் — | |

* * * —கண்ணபிரான் ஆய்ச்சிகளை நோக்கிக் குறும்பாகச் சில வார்த்தைகளைச் சொல்லிச் சிற்றிலழித்து நலிய, அதுகண்ட அவர்கள், 'அப்பனே! வார்த்தைகளின் வாசியை அறியாத வெள்ளைகளிடத்தில் இக்குறும்பு வார்த்தைகளைச் சொன்னால், நீ ஒன்று சொல்ல, அவர்கள் ஒன்று சொல்ல, மேன்மேல் வார்த்தைகள் பெருகிப் பரம்பரையாய்ச் செல்லும்; கபடமற்ற வார்த்தைகளின் கருத்தையுமறியமாட்டாத எங்கள் திறத்தில் அப்பேச்சுக்களைப் பேசி நலிவதனால் உனக்கு என்ன பயனுண்டு?' என்று சொல்லச் செய்தேயும் அவன் தவிராமல் மேன்மேலுஞ் சிற்றிலைச் சிதைக்கப் புக, 'உன் பெண்டாட்டிகளின்மேலாணை, எம்மை நீ நலியலாகாது' என்கிறார்கள்.

(''யாதுமொன்றறியாத'' இத்யாதி.) 'தண்ணீர்' என்றால் தண்ணீரே கொண்டுவரும்படி பாலைகளாயிருக்கிற எங்களை நெருக்கினால் உனக்கு என்ன பலமுண்டு?'' என்ற பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தின் வீறு காண்க. 'தண்ணீர் கொண்டுவா' என்றால், 'கலவி செய்ய வா' என்று விளிக்கிறானென்று உணருமவையே அறிவின் பயன்போலும்.

'உன் மணவாட்டியோடு'' என்று ஒருமையாகச் சொல்லாமல், ''மணவாட்டிமாரொடு'' என்று பன்மையாகக் கூறியது—மருமத்திற்படப் பேசும் பேச்சாம்; ஏகதாரவ்ரதனா யிருக்கிறவனை நோக்கி, 'எங்களை யொழிய உனக்கு எத்தனை பேருண்டு' என்கை மர்மஸ்பர்சியிறே.

சேதுபந்தம் — ஸேதுபந்தஃ. .... .... .... (எ)

வட்டவாய்ச்சிறுதூதையோடு சிறுசுளகும்மணலுங்கொண்டு *
இட்டமாவிளையாடுவோங்களைச் சிற்றிலீடழித்தென்பயன்? *
தொட்டுதைத்துநலியேல்கண்டாய் சுடர்ச்சக்கரங்கையிலேந்தினாய் *
கட்டியுங்கைத்தாலின்னாமை அறிதியேகடல்வண்ணனே. (அ)

| | |
|---|---|
| சுடர் சக்கரம் | ஒளிபொருந்திய ஸுதர்சநாழ்வானை |
| கையில் ஏந்தினாய் | திருக்கையில் தரித்திரா நின்றுள்ள கண்ணபிரானே! |
| | கடல்வண்ணனே !—; |
| வட்டம் வாய் | வட்டவடிவமான வாயையுடைய |
| சிறு தூதையோடு | சிறிய பானையோடு |
| சிறு சுளகும் | சிறிய முச்சிலையும் |
| மணலும் கொண்டு | மணலையும் கொண்டுவந்து |
| இட்டமா | இஷ்டப்படி |
| விளையாடுவோங்களை | விளையாடுகிற எங்களுடைய |
| சிற்றில் | சிற்றிலை |
| ஈடழித்து | மறுபடியும் உபயோகப்படாதபடி அழிப்பதனால் |
| | என் பயன்? —; |
| தொட்டு | கையால் தொட்டும் |
| உதைத்து | காலால் உதைத்தும் |
| நலியேல் கண்டாய் | ஹிம்ஸியாதொழிடாய்; |
| கைத்தால் | நெஞ்சு கசத்துப்போனால் |
| கட்டியும் | கருப்புக்கட்டியும் |
| இன்னாமை | ருசியாது என்பதை |
| அறிதியே | அறிவாயன்றோ ?. |

* * * — சிற்றிலிழைப்பதற்குச் சிறு பானையும் முச்சிலும் மணலும் உபகரணங்களென்க. இவற்றைக் கொண்டு விளையாடுகிற வெங்களுடைய சிற்றிலைச் சிதைப்பதனால் உனக்கு என்ன பயன்? என்றதைக் கேட்ட கண்ணபிரான், 'ஆய்ச்சிகாள்! இச்சிற்றிலை நான் காலாலும் கையாலும் உதைத்துச் சிதைப்பதினால் எனக்கு ஒரு பயனுமில்லை யென்பது மெய்யே; உங்களைத் தீண்டுவதன்றோ. எனக்குப் பிரயோஜனம்' என்று அவர்களைத் தீண்ட; அது கண்டு ஆய்ச்சிகள், 'ஹரி, ஹரி! நீ எத்தனை தூரஸ்த்ரீகளோடு கலந்துவந்தாயோ தெரியாது, எங்கள்மேல் தீண்டாதே கடக்க நில்' என்ன; அதுகேட்ட கண்ணன் 'நான் ஸர்வேச்வரனல்லேனோ? என்னுடைய ஸ்பர்சம் உங்களுக்கு நலிவாய் விட்டதோ? நான் ஈச்வரனென்பதில் உங்களுக்கு ஸம்சயமுண்டாகில் என் திவ்யாயுதங்களைப் பாருங்கள்'' என்று திருக்கையிற் சக்கரந் தோற்ற நின்றான்; அதுகண்ட ஆய்ச்சிகள் 'நீ மெய்யே ஈச்வரனாங்கிடாய்; இப்போது எங்கள் நெஞ்சு உன்மேல் வெறுப்புண்டிருப்பதால் உன்மீது எமக்கு போக்யதை தோற்றவில்லை; நாக்கு கசத்துப்போனால் கருப்பஞ்சாறும் இனிதாகாதென்னுமிடம் உனக்குத் தெரியுமன்றோ? என்கிறார்கள்.

"கடல்வண்ணனே'' என விளித்தற்குக் கருத்து:—கண்டுவிடு மதற்கு மேற்படச் செய்யலாவதில்லை, ஒருகை யள்ளி முகத்தைக் கழுவுதல் குடித்தல் செய்யவொண்ணாதே கடலில் நீர்; அப்படியே யன்றோ நீயும் என்கை.

[வட்டவாய்,] வட்டம்—வ்ருத்தம் என்ற வடசொல் விகாரம், இட்டம் இஷ்டம். கட்டி—இக்ஷுவண்ணம். அறிதி-முன்னிலை யொருமை வினைமுற்று. (௮)

முற்றத்தூடேபுகுந்து நின்முகங்காட்டிப்புன்முறுவல்செய்து *
சிற்றிலோடெங்கள்சிந்தையும் சிதைக்கக்கடவையோகோவிந்தா ? *
முற்றமண்ணிடந்தாவி விண்ணுறநீண்டளந்துகொண்டாய் * எம்மைப்
பற்றிமெய்ப்பிணக்கிட்டக்கால் இந்தப்பக்கம்நின்றவரென்சொல்லார். (௯)

| | |
|---|---|
| கோவிந்தா | கண்ணபிரானே ! |
| முற்ற மண் இடம் தாவி | (ஒரு திருவடியினால்) பூமண்டலம் முழுவதையும் தாவி யளந்து |
| விண் உற நீண்டு | பரமபதத்தளவு ஓங்கி |
| அளந்து கொண்டாய் | (மற்றொரு திருவடியினால் மேலுலகங்களை) அளந்துகொண்டவனே ! |
| முற்றத்தூடே | (நாங்கள் ஏகாந்தமாக விளையாடுகிற) முற்றத்திலே |
| புகுந்து | நுழைந்து |
| நின் முகம் காட்டி | உனது திருமுகத்தை (எங்களுக்குக்) காண்பித்து |
| புன் முறுவல் செய்து | புன் சிரிப்புச் சிரித்து |
| சிற்றிலோடு எங்கள் சிந்தையும் | எங்கள் சிற்றிலையும் நெஞ்சையும் |
| சிதைக்க கடவையோ | அழிக்கக் கடவாயோ ? |
| | (அவ்வளவோடும் நில்லாமல்) |
| எம்மைப்பற்றி | எங்களோடே |
| மெய் பிணக்கு இட்டக்கால் | கலவியும் ப்ராங்ருத்தமானால் |
| இந்த பக்கம் நின்றவர் | அருகில் நிற்பவர்கள் |
| என் சொல்லார் | என்ன சொல்லமாட்டார்கள் ? |

கண்ணபிரானுடைய கண்வட்டத்திலே நின்றால் அவன் பொறுக்கொணாத் தீம்புகளைச் செய்கின்றனென்றஞ்சி அவனுக்குத் தெரியாதபடி ஒருவரொருவராகப்போய் ஒரு முற்றத்திற் புகுந்து கதவுகளை அடைத்துக் கணையங்களையும் போட்டு இவனுக்குப் புகுரவழியில்லாதபடி பண்ணி விளையாடா நின்றார்கள் ஆய்ச்சிகள்; அம்முற்றத்திலே தங்கள் திரளின் நடுவே கண்ணபிரான் வந்து நிற்கக் கண்டார்கள்; 'நாம் இவனுக்குத் தெரியாமல் வந்தோமென்று நினைத்திராநின்றோம்; அழகிதாயிருந்தது; இவன் நமக்கும் முற்பட்டுவந்து நின்றான்; என்செய்தோமானோம்! இவன்கையிலே அகப்பட்டோமே! இனி இவனுக்குத் தென்பட்டோமாகாமல் கழியும்விரகு ஏதோ!' என்று சிந்தித்து ஒருபோக்குக் காணாமல் வெள்கிக் கவிழ்தலையிட்டு நின்றார்கள்.

[நின்முகங்காட்டி.] இவன் தனித்தனியே ஒவ்வொரு ஆய்ச்சியிடத்துஞ் சென்று, 'நங்காய்! எங்ஙனே இங்குவந்தாய்? கால்கள் நோகின்றனவோ? நாங்களும் கலந்துவரப் பெற்றிலோமே!' என்றாற்போலே சிலவற்றைச் சொல்லி முகத்தை விளங்கக்காட்டினனென்க. அங்ஙனஞ் சொல்லக்கேட்ட ஆய்ச்சிகள் 'நமது எண்ணம் வீணாயொழிந்ததே!' என்று தங்கள் தோல்வியை நினைத்து லஜ்ஜிக்க, இவன் புன்முறுவல்செய்தான்.

'நாம் இவனுக்குத்தோற்று வெட்கமடைகின்றமையை இவன் அறியலாகாது; அந்யபரதையைக் காட்டுவோம்' என்று அங்கேயிருந்து சிற்றிலிழைக்கப் புக்கார்கள். அதுகண்ட கண்ணபிரான் 'இங்கே நம் கண்வட்டத்திலே இவர்கள் அந்யபரராவதென்!' என்று சிவிட்கென்று, நினைக்கைக்கு நெஞ்சுங் கூடாதே வியாபரிக்கைக்குக் கையுங்கூடாதபடியாகச் சிலவற்றைச் செய்தான்; [சிற்றிலோடு இத்யாதி.] உனக்குப் பசுமேய்க்கையன்றோ தொழில்; பெண்களை அலைக்கப் பணியோ? என்கிறார்கள். 'கோவிந்தா!' என்ற விளியில்நோக்கு.

'இனிக் கேட்கவேண்டிய பழியொன்றுமில்லை; எல்லாங் கேட்டாயிற்று; ஆனது ஆயிடுக' என்று பெண்களின் பரியட்டங்களைக்கிழித்து, அவர்கள் உடம்புகொண்டு தாய்மார்முன்பு நிற்கவொண்ணாதபடி பண்ணினான்; "எம்மைப்பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால் இந்தப்பக்கம் நின்றவர் என் சொல்லார்" என்கிறார்கள்.

'என்னோடே அணைகை உங்களுக்கு அஸஹ்யமாயிருந்ததோ? யோகிகளும் நம் உடம்புடனே அணையவன்றோ ஆசைப்படுவது' என்று கண்ணபிரான்கூற, 'உன்னோடு ஸம்ச்லேஷிக்கை எங்களுக்கு மிகவும் அழகிதே; ஆனாலும் அருகிலுள்ளார்க்கு அஞ்சவேண்டுமே' என்கிறார்கள். "இத்தால் ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமானபடி சொல்லுகிறது" என்பர் பெரியவாச்சான்பிள்ளை.

ஆழ்வார்கள் ஆண்களாயிருந்துவைத்துப் பெண்ணுடை உடுத்து "மின்னிடைமடவார்" முதலிய திருவாய்மொழிகளில், "என்னுடைய பந்துங்கழலும் தந்துபோகு நம்பி!" "ஒருநான்று தடிபிணக்கே" என்றாற்போலச் சொல்லும்

பாசுரங்கள்போலன்றியே, பெண்பிள்ளை தனக்கே அதுக்குமேலே ஒருமேன்மை பிறந்து வார்த்தைசொல்லும் விறுபாடு என்னே' என்று நம்பிள்ளை ஈடுபட்டு உருகுவராம். .... .... .... .... (௯)

சீதைவாயமுதமுண்டாய் எங்கள்சிற்றில்நீசிதையேலென்று *
வீதிவாய்விளையாடும் ஆயர்சிறுமியர்மழலைச்சொல்லை *
வேதவாய்த்தொழிலார்கள்வாழ் வில்லிபுத்தூர்மன்விட்டுசித்தன்றன் *
கோதைவாய்த்தமிழ்வல்லவர் குறைவின்றிவைகுந்தஞ்சேர்வரே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| சீதை | பிராட்டியினுடைய | தொழிலார்கள் | வைதிகத் தொழில்களைச் செய்பவருமான [பரமைகாந்திகள் |
| வாய் அமுதம் | அதராம்ருதத்தை | வாழ் | வாழுமிடமான |
| உண்டாய் | பருகினவனே! | வில்லிபுத்தூர் | ஸ்ரீவில்லிபுத்தூருக்கு |
| எங்கள் சிற்றில் நீ சிதையேல் என்று | நாங்கள் இழைக்குஞ் சிற்றிலை நீ அழிக்காதொழியவேணும் என்று | மன் | தலைவரான |
| வீதிவாய் | வீதியிலே | விட்டுசித்தன் தன் | பெரியாழ்வாருடைய திருமகளான |
| விளையாடும் | விளையாடாநின்ற | கோதை | ஆண்டாளுடைய |
| ஆயர்சிறுமியர் | இடைப் பெண்களுடைய | வாய் | வாக்கில் நின்று அவதரித்த |
| மழலைச் சொல்லை | இளம் பருவத்துக்குரிய மெல்லிய சொல்லை, உட்கொண்டு | தமிழ் | தமிழ்ப்பாசுரங்களை |
| வேதம் வாய் | வேதத்தை உச்சரிக்கின்ற வாயையுடைய [வர்களும் | வல்லவர் | ஓதவல்லவர்கள் |
| | | குறைவு இன்றி | குறைவில்லாமல் |
| | | வைகுந்தம் சேர்வர் | பரமபதஞ் சேரப்பெறுவர். |

* * * — இத்திருமொழியை ஓதவல்லவர் பெறும் பேற்றைக் கூறும் பாசுரம் இது; "சீதைவாயமுதமுண்டாய்" என்ற விளியும், "ஆயர் சிறுமியர் மழலைச்சொல்லை" என்பதும் நோக்கத்தக்கனவாம். பருவம் நிரம்பினவளோடே ரஸாநுபவம் பண்ணுமவன், எல்லாரும் [illegible] மறைக்கவேண்டுமவற்றை மறைக்கவறியாமல் தோற்றினபடி. விளையாடுகிற பருவம் நிரம்பாத பெண்களுடன் போராடுகை விருப்பமென்று உணர்த்தியவாறு போதருமென்க. சீதை-ஸீதா. அமுதம்-அம்ருதம். மழலைச்சொல்-பிள்ளைத்தனம் சொட்டும்படியான பேச்சு. .... .... (௧௦)

அடிவரவு:—நாமம் இன்று குண்டு பெய் வெள்ளை முற்றில் பேதம் மட்டு முற்றச் சீதை கோழி.

இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

## மூன்றாந் திருமொழி — கோழியழைப்பதன்முன்னம்.

# அவதாரிகை.



"கோட்டிளைத்து நலியேல் கண்டாய்" என்னும்படியாகக் கண்ணபிரான் ஆய்ச்சிகளின்மேல் வந்துநின்று, "எம்மைப்பற்றி மெய்ப்பிணக்கிட்டக்கால்" என்னும்படியே தனித்தனி உடம்பாயிருக்கையன்றியே ஒருடம்பென்றே நினைக்கலாம்படி கலவி நேர்பட, இரும்பு காய்ந்து பொருந்துவதுபோல், பிரிந்து கூடாவிடில் இரண்டிடமும் அழியுமென்று பந்துவர்க்கங்கள் நினைத்து, 'சிறுப்பெண்களை இழக்கவொண்ணாது, இங்ஙனேயானாலின்பு இனி போக்கடி என்!' என்று பார்த்து இவர்களைக் கொண்டுபோய் நிலவறைகளில் அடைக்க, அவர்களும் பிரிவாற்றமாட்டாமல் வருந்த, கண்ணபிரானும் அவர்களினும்மேலாக வருந்திக் கிடக்க, பெண்களுடைய நிலைமையை ஆராய்ந்த தாய்தந்தையர் 'இவர்களை நாம் மூடிவைத்திருக்கில் இப்பெண்களை அநியாயமாக இழந்துவிடுவோம்; நாமே சேர்த்துவிட்டோமாகவும் ஒண்ணாது; இனி இங்ஙனே ஒரு வழியிடுவோம்;— "'பெண்கள் ஸௌபாக்யத்தின்பொருட்டுப் பனிநீராடுகை' என்றொரு செய்தி உண்டு; அதனை இவர்கள் செய்யக்கடவர்கள்; தங்கள் நினைவிலே அதுவும்பலிக்கிறது, நாம் இதுகளை அறிந்தோமாகாதொழிகிறோம்" என்று இவர்கள் தாங்கள் தங்களிலே நிர்ணயம்பண்ணியிருக்க,

கண்ணபிரானும் பிரிந்தபோதே தொடங்கி வரில் விசேஷங்களை ஆராயுமவனாகையாலே பந்துவர்க்கக் குடிப்பெண்களுக்கும் தனித்தனியே ஆளிட்டு, நடந்தவற்றையும் நடக்கின்றவற்றையும், நடக்கப்போகின்றவற்றையும் ஆராய்ந்தறிந்து, பனிநீராடப் போகப்போகிற ஆய்ச்சிகளின்பின்னே தானும் போவதாகக் கணிசித்திருக்க;

ஆய்ச்சிகளும், 'கண்ணபிரானோடு ஸம்ச்லேஷம் பொறுக்க முடியாது; அதுக்குமேலே விச்லேஷ வ்யஸநம் மிகவும் அஸஹ்யம்; ஸம்ச்லேஷமோ விச்லேஷாந்தமாயல்லது இராது; ஆனபின்பு, அவனோடு ஸம்ச்லேஷித்துப் பிறகு வருந்தப்படுவதிற்காட்டிலும் முந்துற முன்னமே விரஹதாபத்திற்குப் பரிஹாரமாக நீரிலே போய்ப் படிந்துமுழுகி ஆச்வஸித்திருக்க வடுக்கும்; அங்ஙன் செய்யுமளவில், நாமும் அவனுமாய் முன்புகுளிக்கும் பொய்கைகளிற் புகுந்தால் அவனறிந்துவரும்; அவனறியாததொரு பொய்கைதேடிப் போகவேணும்; அங்ஙன் போமளவில் எல்லாரும் திரண்டுபோகில் அவன் வழி அறிவன்; ஆனபின்பு ஒருவரொருவராகப் போவோம்; போமிடத்தும் வழிதெரியாதபடி இட்ட அடியை அழித்துக்கொண்டு போவோம்' என்று ஸங்கேதித்துக்கொண்டு எல்லாரும் போனார்கள்.

கண்ணபிரான் * இருளன்ன மாமேனியனாகையாலே அவர்கள் நிழலைப்பற்றிக்கொண்டுபோய் அவர்களுக்கு முன்னமே பொய்கைக்கரைபோய்ச் சேர்ந்தான். இவர்கள் அவன் வந்தமை அறிந்திலர். இடைப்பெண்களாகையாலே பரியட்டங்களையும் ஆபரணங்களையுமெல்லாம் களைந்து கரையில் வைத்துவிட்டு நீரிலே அவகாஹித்தார்கள். அவ்வளவிலே கண்ணபிரான் இவற்றையெல்லாம் வாரியெடுத்துக்கொண்டு மிகவிரைந்து குருந்தின் மேலேறி மறைய நின்றான்.

பிறகு ஆய்ச்சிகள் கரையேறிக் கண்டவளவில் அவை காணாமையாலே 'இஃது இருந்தபடியென்!' என்று துணுக்கென்று, 'நம்முடன் கூடவந்தார் பிறர் ஆருமில்லையே!, இவற்றை ஆகாயங்கொண்டதோ? திசைகள் கொண்டனவோ? இக்குளங்கொண்டதோ? கிருஷ்ணன் கொண்டானோ? என்று இங்ஙனே கலங்கிப் பலவகைகளாகச் சங்கித்து, எங்கும் 'பருகுபருகெ'ன்று பார்த்துக்கொண்டு வாராநிற்க, கண்ணபிரானைக் குருந்தமரத்திற் கண்டார்கள்.

கண்டபின்பு, 'இவன் நம்மடிபிடித்துவந்தான், நாமும் இவனை மடிபிடித்து வாங்கினோமாகவேணும்' என்றெண்ணி, இவனை இரப்பார், ஏத்துவார், வாழ்த்துவார், தாழ்த்துவார், சீறுவாராய், 'இவனை இப்படி தீம்புசெய்யும்படி பெற்றுவிட்ட தாயுமொருத்தியே!' என்று அவனை வெறுப்பாருமாய், தங்களாற்றாமையை அறிவிக்க, அவனும் பரியட்டங்கள் கொடுத்துப் புணர்ந்தானைத் தலைக்கட்டுகிறது—இத்திருமொழி.

[ஒருவனுக்கு ஒருகால் ஸம்ஸாரத்தில் மிகவருத்தந்தோற்றி ஒன்றுஞ் செய்ய மாட்டாமல் மோஹம் பிறக்குமளவில், இத்திருமொழிக்குப் பெரியவாச்சான் பிள்ளை இட்டருளின அவதாரிகையை ஸேவித்தால் ஸகலதாபங்களும் நீங்கி நற்றெளிவு பிறக்குமென்பது அநுபவஸித்தம்.]

கோழியழைப்பதன்முன்னங் குடைந்துநீராடுவான்போந்தோம் *
ஆழியன்செல்வனெழுந்தான் அரவணைமேற்பள்ளிகொண்டாய் *
ஏழைமையாற்றவும்பட்டோம் இனியென்றும்பொய்கைக்குவாரோம் *
தோழியும்நானுந்தொழுதோம் துகிலைப்பணித்தருளாயே. (க)

| | |
|---|---|
| அரவு அணை மேல் | திருவனந்தாழ்வானாகிற படுக்கையின் மேலே |
| பள்ளி கொண்டாய் | திருக்கண் வளர்ந்தருளுமவனே! |
| குடைந்து | (குளத்தில்) அவகாஹித்து |
| நீர் ஆடுவான் | நீராடுவதற்காக |
| கோழி அழைப்பதன் முன்னம் | கோழி கூவுதற்கு முன்னம் |
| போந்தோம் | (இவ்விடம்) வந்தோம்; (இப்போதோவென்றால்,) |
| செல்வன் | (ஸ்ரீமந்நாராயணன் தன்னிடத்து நித்யவாஸம் பண்ணப்பெறுகையாகிற) செல்வத்தையுடையனான |
| ஆழியன் | ஸூர்யன் |
| எழுந்தான் | உதித்தான்; |
| ஆற்றவும் ஏழைமை பட்டோம் | (நாங்கள் உன்னாலே) மிகவும் இளிம்புபட்டோம்; |
| இனி | இனிமேல் |
| என்றும் | என்றைக்கும் |

| | | | |
|---|---|---|---|
| பொய்கைக்கு வந்தோம் | குளத்திற்கு நாங்கள் வருவதில்லை; | துகிலை | (எங்களுடைய) சேலைகளை |
| தோழியும் நானும் தொழுதோம் | தோழியும் நானுமாக (உன்னை) ஸேவியாநின்றோம்; | பணித்தருளாய் | தந்தருளவேணும். |

* * *—கண்ணபிரான் இரவின் முற்கூறெல்லாம் பெண்களோடே புணர்ந்து கிடந்து பிற்கூற்றில் உறங்குபவனாதலால், ஸூர்யோதயமளவும் அவன் கண் விழியான் என்று நினைத்து இவ்வாய்ச்சிகள் கோழிகூவுவதற்கு முன்னமே குளத்தில் நீராடி மீள்வதாக வந்தார்கள்; இவர்கள் நினைத்தது ஒன்றாய், முடிந்தது வேறாய்த் தலைக்கட்டிற்று. இவர்கட்குந் தெரியாமல் கண்ணன் அங்கு வந்து சேர்ந்தவனாதலால் அவனுடனே நாங்கள் மிகவும் ஏழைமைப்பட்டு ஸூர்யோதயமாகியும் நாங்கள் வந்தகாரியம் தலைக்கட்டப் பெறாமையைக்கண்டு வருந்திக் கூறுகின்றனர். 'அப்பா! இன்று நாங்கள் குளத்திற்குவந்து பட்டபாடு போதும்; இனி ஏழேழ்பிறவிக்கும் இக்குளத்தின்முகத்திலும் நாங்கள் விழிப்பதில்லை' என்கிறார்கள்.

இவர்கள் 'குடைந்து நீராடுவான் போந்தோம்' என்றவாறே, தமிழர் கலவியைச் சுனையாடலாகச் சொல்லும் முறைமையை உணர்ந்த கண்ணபிரான் தானும் நெஞ்சில் ஒன்றை நினைத்து 'அங்ஙனே நீராடுகைக்குத் தடை என்?' என்ன; அவனதுகருத்தை அறிந்த ஆய்ச்சிகள், 'பிரானே! அந்த ஆசைக்கு இடமறும்படி பாழுஞ்சூரியன்வந்து தோன்றிவிட்டனனே!' என்றனரென்க. செல்வன் என்றதை விபரீதலக்ஷணையாகக் கொள்வது பொருந்தும். எனவே, "ஆழியஞ்செல்வன்" என்றது — பாழுஞ்சூரியன் என்றபடி. சுனையாடலுக்கு விரோதியாக வந்து தோன்றினபடியால் வசைவுக்கு உடலாமத்தனையிறே.

[ஏழைமை ஆற்றவும் பட்டோம்] நீ நெடுநாள் எங்கள் கையில்பட்டதெல்லாம் ஒருக்ஷணத்தில் நாங்கள் உன்கையிலே பட்டோமென்கிறார்கள். இங்ஙனே இவர்கள் பரிதாபந்தோற்றச் சொல்லச்செய்தேயும், அவன் 'இன்று நீங்கள் என்னை வஞ்சித்துவந்த குற்றந்தீர ஒரு அஞ்ஜலிபண்ணுங்கள்' என்றான்; ஒரு கையாலே தொழுதார்கள். 'ஏகஹஸ்தப்ரணாமம் மஹாபசாரகோடியில் கணக்கிடப்பட்டுள்ளது; இரண்டுகையாலும் தொழுமின்' என்றான். இவர்கள் தாம் துகிலிழந்திருப்பதனால் அங்ஙன் செய்யமாட்டாதே இருவரிருவராய்ச் சேர்ந்து தொழுகிறார்கள்—"தோழியும்நானுந் தொழுதோம்" என்கிறார்கள். .... (க)

இதுவென்புகுந்ததிங்கந்தோ இப்பொய்கைக்கெவ்வாறுவந்தாய் *
மதுவின்துழாய்முடிமாலே மாயனேயெங்களமுதே *
விதியின்மையாலதுமாட்டோம் வித்தகப்பிள்ளாய்விரையேல் *
குதிகொண்டரவினடித்தாய் குருந்திடைக்கூறைபணியாய். (உ)

| | |
|---|---|
| இங்கு | இங்கே |
| புகுந்தது இது என் | (நீ)வந்து சேர்ந்தவிதற்குக் காரணமென்ன ? |
| இ பொய்கைக்கு | இக்குளத்திற்கு |
| எவ்வாறு வந்தாய் | எவ்வழியாலே வந்தாய்? |
| மது இன் துழாய் முடி மாலே | தேன்மாறாத இனிய திருத்துழாய் மாலை சூடிய திருவபிஷேகத்தையுடைய பெரியோனே ! |
| மாயனே | ஆச்சரிய சக்தியுடையவனே ! |
| எங்கள் அமுதே | எங்களுக்கு அம்ருதம் போல் இனியவனானவனே ! |
| விதி இன்மையால் | விதியில்லாமையாலே |
| அது மாட்டோம் | ஸம்ச்லேஷத்திற்கு இசையமாட்டோம்; |
| வித்தகப் பிள்ளாய் | ஆச்சரியசேஷ்டைகளையுடைய பிள்ளாய்! |
| விரையேல் | அவஸரப்படவேண்டா; |
| அரவில் | காளிய நாகத்தின்மேல் |
| குதிகொண்டு | குதித்துக்கொண்டு |
| நடித்தாய் | நர்த்தனஞ்செய்தவனே! |
| குருந்திடைக் கூறை | (அக்) குருந்தமரத்தின் மேல் வைத்திருக்கிற சேலைகளை |
| பணியாய் | கொடுத்தருள். |

* * *— "இவர்கள் தங்களுடைய காரியத்தைப் பார்த்துக் கொண்டுபோக நினைக்கின்றனரேயன்றி, நம் அபிமதந் தலைக்கட்ட நினைக்கிறிலர் ; இதற்கு என் செய்வது !" என்று சிந்தித்துக் கண்ணபிரான் சடக்கெனக் குருந்த மரத்தில் நின்றுமிழிந்து கீழே கிடந்திருந்த ஒன்றிரண்டு பரிவட்டங்களையும் வாரிக் கொண்டு சுழல்காற்றுப்போலே எங்கும் வியாபரித்து, 'இன்னதுசெய்தான்' என்று இவர்கள் அறுதியிடவொண்ணாதபடி, சேலைகளைப்போலே இவர்களது நெஞ்சையுங் கவர்ந்துகொண்டுபோய்க் குருந்தின்மேலேறி மறைந்திருந்தான் ; இவர்கள் கரையேறி ஒன்றுங்காணாமையாலே திகைத்திட்டு, "இது என் புகுந்தது?" என்கிறார்கள், மின்னலின்றியே இடியிறுந்தாற்போலென்கை.

இப்பொய்கைக்கு = வழக்கமாக நீயும் நாமும் ஜலக்ரீடைபண்ணும் பொய்கையன்றே இது ; இதறிந்தாய் நீ வந்தபடி என் ? என்கிறார்கள்.

'நான் எப்படிவந்தாலென்ன? வந்தாயிற்று, இனி நீங்களும்நானும் ஸத்தை பெறும்படி அநுபவிக்குமத்தனையன்றோ' என்றான் கண்ணன் ; அதுகேட்ட ஆய்ச்சிகள், 'நீ ஆசைப்படுவது அழகியதே; ஆகிலும் எங்களுடைய தௌர்ப் பாக்கியத்தினால் நாங்கள் அதற்கு இசைந்து வரமாட்டுகிறிலோம், என்கிறார்கள், அது என்பதற்கு ஸம்ச்லேஷம் அர்த்தமானபடி என்னென்னில் ; கண்ணபிரான் தன்னுடைய ஸம்ச்லேஷ விருப்பத்தை ஸூசனையாகக் காட்டினனாதலால், அதனை உணர்ந்த இவர்கள் அது என்று ஸம்ச்லேஷத்தைச் சுட்டுகிறார்கள் என்க. நெஞ்சறிசுட்டு.

இப்படி இவர்கள் சொல்லச்செய்தேயும் அவன்தன் ஆற்றாமையாலே பதறி மேல்விழப்புக்கான் ;' பிரானே ! உன் ஸாமர்த்தியம் நாம் அறிவோம், அவரப் படாதே கடக்கநில்' என்கிறார்கள்.

[விதியின்மையால்.] விதி - பாக்யம், வடசொல்; - "தைவம் திஷ்டம் பாகதேயம் பாக்யம் ஸ்த்ரீ நியதிர் விதி:" என்பது நிகண்டு.

"குதிகொண்டு" என்றவிடத்து, குதி என்பது—முதனிலைத் தொழிற் பெயர். .... .... .... .... .... (உ)

எல்லேயீதென்னவிளமை யெம்மனைமார்காணிலொட்டார் *
பொல்லாங்கீதென்றுகருதாய் பூங்குருந்தேறியிருத்தி *
வில்லாலிலங்கையழித்தாய் நீவேண்டியதெல்லாந்தருவோம் *
பல்லாருங்காணாமேபோவோம் பட்டைப்பணித்தருளாயே. (௫)

| | |
|---|---|
| வில்லால் | வில்லாலே |
| இலங்கை | லங்கையை |
| அழித்தாய் | நாசஞ் செய்தருளினவனே! |
| எல்லே | என்னே! |
| ஈது என்ன இளமை | இது என்ன பிள்ளைத்தனம்! |
| எம் அனைமார் | எங்களுடைய தாய்மார்கள் |
| காணில் | கண்டால் |
| ஒட்டார் | (இப்படியும் எங்களை வீட்டின்வழிவர) ஒட்டார்கள்; (நீயோவென்றால்) |
| ஈது | கண்டார் அடங்கலும் ஏசும்படி எங்களை அம்மணமாக்கி நிறுத்தியிருக்கிற இது |
| பொல்லாங்கு என்று | பொல்லாத காரியமென்று |
| கருதாய் | நினைக்கிறாயில்லை; |
| பூ குருந்து | புஷ்பித்திராநின்ற குருந்த மரத்தின்மேல் |
| ஏறி இருத்தி | ஏறியிராநின்றாய்; |
| நீ வேண்டியது எல்லாம் | நீ அபேக்ஷிக்குமவற்றையடங்கலும் |
| தருவோம் | கொடுக்கிறோம்; |
| பல்லாரும் | (ஊரிலுள்ள) பலரும் |
| காணாமே | காணாதபடி |
| போவோம் | போகிறோம்; |
| பட்டை | (எங்களுடைய) பட்டுச் சேலைகளை |
| பணித்தருளாய் | தந்தருளவேணும். |

* * * — ஆய்ச்சிகள் நெடுங்காலம் நீரிலே நின்று வருந்தச் செய்தேயும் கண்ணபிரான் அவர்கள் சேலைகளைக் குருந்த மரக்கிளையிலேயே இட்டுவைக்க, 'நாங்கள் நீரிலே நெடும்போதாக நின்று வருந்த, நீ பேசாதிருக்கிறதென்; சேலைகளைத் தா' என்று இவர்கள் கேட்க; 'நீரை விட்டுக் கரைமேல் ஏறுங்கள், சேலைகளைத் தருகிறேன்' என்றான்; அதுவும் மெய்தானென்று சிலர் நம்பிக் கரையிலேறினர். ஏறினவர்களுடைய அங்கப்ரத்யங்கங்களை உற்றுநோக்கிப் புன்முறுவல் செய்து சில விலாஸ சேஷ்டைகளைப் பண்ணினான்; "எல்லே! ஈதென்ன இளமை" என்றார்கள். 'நான் இளைஞனும்படி நீங்கள் தாம் முலை பெருத்த முதுமையரோ? வயஸ்ஸில் பார்த்தால் என்னோடு உங்களோடு ஒரு வாசி இல்லை; இரண்டு திறத்தாரும் ஒத்த பருவமானபின்பு பருவத்துக் கீடாகப் பரிமாற நீங்கள் உடன்பட வேண்டாவோ?' என்றான்; "எம்மனைமார் காணில் ஒட்டார்" என்கிறார்கள், நாங்கள் உடன்படாமையில்லை, எங்கள் சுற்றத்தார் கண்டால் சீறுவர் என்ற அச்சத்தினால் மறுக்காநின்றோமென்கை.

அது கேட்ட கண்ணபிரான், 'பெண்காள்! அழகாகச் சொன்னீர்கள்; உங்களுக்கு மாத்திரந்தானோ சுற்றத்தாருள்ளது? எனக்கும் ஒரு தாயும் தகப்பனும் உறவு முறையாருமில்லையோ! நான் ஏதேனும் காம்பற்று வானத்தினின்றும் விண்டு விழுந்தேனோ? சுற்றத்தார் பலரும் இருக்கவன்றோ நானும் இங்ஙனே பேசுகிறது; உங்களுக்குமாத்திரம் வந்த அச்சமென்?' என்ன; அது கேட்ட ஆய்ச்சிகள், 'உன்னைப்போலேயோ நாங்கள், எங்களைப் போலேயோ நீ? நாங்கள் பழிக்கு அஞ்சுவோம், நீ பழியென்றால் உடம்பு பெருக்கிறாயன்றோ' என்கிறார்கள்—"பொல்லாங்கீதென்று கருதாய்."

'நான் அஞ்சேனாகிலும் உங்களுக்கு இவை தரவேண்டியதில்லையே' என்று குருந்தின்மேலே பூப்பொருந்தினாற்போலே பொருந்தி, கீழ்இறங்கக் கருத்தின்றியே இருந்தான்; "பூங்குருந்தேறியிருத்தி' என்கிறார்கள்.

[வில்லால் இத்யாதி] ப்ரஹ்மாதிதேவர்களுடைய அஸ்த்ரங்களுக்கும் அழியாதபடி வரபலத்தாலே சேமிக்கப்பட்டிருந்த இலங்கையை, ஒரு பிராட்டிக்காக நாசஞ்செய்தருளின நீ இன்று எம்மை இங்ஙன் வருத்துவது என்னோ? என்றவாறு. ஸாபிப்ராயஸம்போதநம்.

இதுகேட்ட கண்ணபிரான், 'ஆம், நான் பிராட்டிக்காக அங்ஙனே அளவற்ற பாடுகள் பட்டதுண்டு, என் நினைவுக்கு அவள் ஒத்திருந்தபடியாலே அவளுக்காகக் காரியஞ் செய்தேன்; அப்படியே நீங்களும் என் நினைவுக்கீடாக வந்தாலன்றோ நான் உங்கள் காரியஞ் செய்வது' என்றான்; "அதிலும் ஒரு குறையுமில்லை; நீ அபேக்ஷிக்குமதெல்லாம் செய்யக்கடவோம்'' என்கிறார்கள்—"நீ வேண்டியதெல்லாம் தருவோம்.''

'அப்படியாகில் ஸம்போக பிக்ஷை கொடுங்கள்' என்று மடியை ஏற்றான்; 'இந்த பிக்ஷை ஸதஸ்யமாகக் கொடுக்கக் கூடியதோ? ரஹஸ்யமன்றோ? ஒருவருங் காணாதவிடம் தேடிப்போவோமென்கிறார்கள்—"யல்லாரும் காணாமே போவோம்.''

'ஆகில் புறப்படுங்கள் போகலாம்' என்றான்; அரையில் சேலையின்றிப் புறப்பட மாட்டாமையாலே "பட்டைப் பணித்தருளாய்'' என்கிறார்கள். (௩)

பரக்கவிழித்தெங்கும்நோக்கிப் பலர்குடைந்தாடுஞ்சுனையில் *
அரக்கநில்லாக்கண்ணநீர்கள் அலமருகின்றவாபாராய் *
இரக்கமேலொன்றுமிலாதாய் இலங்கையழித்தபிரானே *
குரக்கரசாவதறிந்தோங் குருந்திடைக்கூறைபணியாய். (௪)

| | |
|---|---|
| இலங்கை அழித்த பிரானே! —; | |
| பலர் குடைந்து ஆடும் சுனையில் | பல பெண்கள் படிந்து நீராடும்இப்பொய்கையின் கரையில் |
| கண்ண நீர்கள் | கண்ணீர்த்தாரைகள் |
| அரக்க நில்லா | அடக்கினாலும் நிற்கமாட்டாதவைகளாய் |
| அலமருகின்ற ஆ | தளும்புகிறபடியை |
| எங்கும் | நாற்புறத்திலும் |
| பரக்க விழித்து | நன்றாக விழித்து |
| நோக்கி பாராய் | உற்றுநோக்கு; |
| ஒன்றும் இரக்கம் இலாதாய் | கொஞ்சங்கூட தயவு இல்லாதவனே! |
| குரங்கு அரசு ஆவது அறிந்தோம் | நீமரமேறவல்லார்க்குள் தலைவன் என்பதை அறிந்துகொண்டோம்; (ஆனபின்பு,) |
| குருந்திடை கூறை | குருந்தின் மேலுள்ள (எங்கள்) சேலைகளை |
| பணியாய் | கொடுத்தருளவேணும். |

* * * — 'இப்பெண்களும் நாம் சொன்னதுக்கெல்லாம் மறுமொழி சொல்லாநின்றார்கள்; இவர்களுக்குச் செய்யவேண்டிய வழி இது என்று, அச்சமுறுத்திக் காரியங் கொள்ளவேணும்' என்றெண்ணி, சிலர் வருவதாகக் கொண்டு சுற்றும் பார்த்து உடம்பை ஒடுக்குவது, மறுபடியுஞ் சிலர் வருவதாகக் கொண்டு கூசினவன்போல் அத்திக்கிலே சில தழைகளை இட்டு மறைப்பது. இப்படி ஆய்ச்சிகள் அஞ்சும்படியான சில வியாபாரங்களைச் செய்தான்; இவன்

செய்கிற இச்செயல்களுக்கெல்லாம் ஸம்பாவனையுள்ளவிடமா யிருந்தது அவ்விடம் - அது பலரும் வரக்கூடிய சுனையாகையாலே, இவனுடைய பயங்கரமான செயல்களாலும், நாங்களிருக்குமிடம் அனைவர்க்கும் பொதுவானதென்னுமதனாலும் இவ்வாய்ச்சிகளுக்குத் துணுக்கென்று கண்ணீர் பெருகத் தொடங்கிற்று; அக் கண்ணீர்ப் பெருக்கை இவர்கள் தாம் மிகவருந்தி அடக்கப் பார்த்தவிடத்தும் அஃது அடங்காதொழிந்தது. பிறகு சடக்கென யார் வருவரோ! என்கிற அச்சத்தினாலும் கண்ணீர் நில்லாமையாலும், 'நம் கதி இவவாறாயிற்றே' என்று கிடந்து துடியா நின்றார்களாய், 'பிரானே! நீ எமக்குச் சேலை தாராதொழியினும் ஒழிக; நாங்கள் படுகிற அலமாப்பைக் கண்கொண்டு பார்த்தாயாகில் போதுமித்தனை' என்றார்கள்.

இங்ஙனே இவர்கள் வேண்டச் செய்தேயும் கண்ணபிரான் கண்ணற்றவன் போலே பாராதே யிருந்தான்; "இரக்கமேலொன்றுமிலாதாய்" என்று நெஞ்சில் உறுத்தும்படி விளிக்கின்றனர். ["இலங்கையழித்தபிரானே!"] இஃது இங்ஙனே எம்மை வருத்துகின்ற நீ முன்பு ஒரு பிராட்டிக்காக உண்ணாது உறங்காது ஒலிகடலை யூடறுத்துப் படாதன பட்டாய் என்று புராணங்களில் எழுதி வைத்திருப்பது பரமஸத்யமே, அது தான் யார் சமைத்த அபத்த பஞ்சாங்கமோ! என்று உபாலம்பந்தோற்றக் கூறுகிறபடி.

இதுகேட்ட கண்ணபிரான், 'பெண்காள்! என்னை இரக்கமற்றவனாகவன்றோ நீங்கள் சொல்லாநின்றீர்கள்; மிக நன்று; உங்கள் கருத்தின்படியே நான் இரக்கமற்றவனாகவே ஆகிறேன் காண்மின்' என்று சேலைகளுடனே ஒரு கொம்பிலே தாவினான். அதனைக்கண்டு "குரக்கரசாவதறிந்தோம்" என்கிறார்கள். மரமேற வல்லவர்கட்கு நீ முதலியென்னுமிடம் நாங்களறிந்தோமென்கை. குரங்கு + அரசு, குரக்கரசு. .... .... .... .... .... (௪)

காலைக்கதுவிடுகின்ற கயலொடுவாளைவிரவி *
வேலைப்பிடித்தென்னைமார்களோட்டில் என்னவிளையாட்டோ *
கோலச்சிற்றாடைபலவுங்கொண்டு நீயேறியிராதே *
கோலங்கரியபிரானே குருந்திடைக்கூறைபணியாய். (௫)

| | |
|---|---|
| கரிய | கறுத்த |
| கோலம் | திருமேனியையுடைய |
| பிரானே | கண்ணபிரானே! |
| கயலொடு | கயல் மீன்களும் |
| வாளை | வாளை மீன்களும் |
| விரவி | ஒன்றாய்க்கூடி |
| காலை | (எமது) கால்களை |
| கதுவிடுகின்ற | கடியாநின்றன; |
| | (இப்படி நீ எங்களை வருத்தப்படுத்து வதைக்கேள்விப்பட்டு) |
| என்னைமார்கள் | எங்கள் தமையன்மார்கள் |
| வேலை பிடித்து | வேலைப்பிடித்துக் கொண்டு |
| ஓட்டில் | (உன்னைத்) துரத்தி விட்டால் |
| என்ன விளையாட்டு | (அதுபின்னை) என்ன விளையாட்டாய் முடியும்? |
| நீ | நீ |
| கோலம் | அழகிய |
| சிற்றாடை பலவும் கொண்டு | சிற்றாடைகளை யெல்லாம் வாரிக்கொண்டு |
| ஏறி இராதே | (மரத்தின்மேல்) ஏறியிராமல் |
| குருந்திடை | குருந்த மரத்தின்மேலுள்ள |
| கூறை | (எங்கள்) சேலைகளை |
| பணியாய் | தந்தருள். |

* * * — கண்ணபிரானே! நீ செய்யும் தீம்புகளால் நாங்கள் படும் வருத்தம் எவ்வளவாயிருந்தது பாராய்; நீயோ எங்களை நீர் நிலையை விட்டு வெளிவர வொட்டாமல் சேலைகளைப் பறித்துக் கூத்தாட்டங் காணுகின்றாய்; அல்குல் மறையுமாறு நீரினுள்ளே நிற்கின்ற எங்களுடைய காலைக் கயல்மீன்களும் வாளை மீன்களும் கவ்விக் கடித்துத் துடிக்கச் செய்யாநின்றன. இவ்வாறு நீ எங்கள் திறத்தில் செய்யுந் தீமைகளை எமது தமையன்மார்கள் கேள்விப்படுவரேல் சீறிச் சடக்கென ஓடிவந்து உன்னை வேலால் உதைத்துத் தூரத்துவர்கள்; ஆனபின்பு விபரீதமாகத் தலைக்கட்டவல்ல விளையாட்டு உனக்கு என்? என்று ஆய்ச்சிகள் அச்சமுறுத்த, அதுகேட்ட கண்ணபிரான், 'பெண்காள்! பிறகு வருவதுவருக; அதைப்பற்றி நான் இப்போது சிந்திப்பேனல்லேன்; இப்போது என் கையில் அகப்பட்டுக்கொண்ட இச் சேலைகளை உங்களுக்குக் கொடுப்பதென்கிற சங்கதி இல்லை' என்று — அரையிலே ஒன்றைச் சாத்துவது, தலையிலே ஒன்றைக் கட்டுவது, உத்தரீயமாக ஒன்றை அணிவதாக, இப்படித் தன் திருமேனிக்குப் பரபாகமாம்படி நாநாவர்ணமான சேலைகளாலே அலங்கரித்து மிகுந்தவற்றைக் குருந்தமரத்தின் மேலேயிட்டு வைத்து, 'பெண்காள்! அணிந்த இவை நமக்குத் தகுதியா யிருந்தபடி கண்டீர்களா? என் அலங்காரத்தை அழித்தோ நீங்கள் இவற்றை வேண்டுவது?' என்றான்; 'பிரானே! உன் திருமேனியை அழகு பெறுத்துஞ் சேலைகளை நாங்கள் வேண்டுகின்றிலோம்; குருந்தில் கிடக்கிறவற்றைத் தாராய்' என்கிறார்கள். .... .... .... .... (ரு)

தடத்தவிழ்தாமரைப்பொய்கைத் தாள்களெங்காலைக்கதுவ *
விடத்தேளெறிந்தாலேபோல வேதனையாற்றவும்பட்டோம் *
குடத்தையெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே *
படிற்றையெல்லாந்தவிர்ந்து எங்கள்பட்டைப்பணித்தருளாயே. (சா)

| | |
|---|---|
| தடம் | விசாலமாயும் |
| அவிழ் தாமரை | மலர்ந்த தாமரைகளை யுடையவுமான |
| பொய்கை | தடாகத்திலே |
| தாள்கள் | தாமரைத் தண்டுகளானவை |
| எம் காலை | எங்கள் கால்களை |
| கதுவ | கடிக்க, |
| விடம் தேள் எறிந்தால் போல | விஷத்தையுடைய தேள் கொட்டினாற் போலே |
| ஆற்றவும் | மிகவும் |
| வேதனை பட்டோம் | வருத்தப்பட்டோம்; |
| குடத்தை | குடங்களை |
| எடுத்து | தூக்கி |
| ஏற விட்டு | உயரவெறிந்து [இப்படி] |
| கூத்து ஆட | குடக்கூத்தை ஆடுவதற்கு |
| வல்ல | ஸாமர்த்தியமுள்ள |
| எம் கோவே | எம்முடையதலைவனே! |
| படிற்றை எல்லாம் தவிர்ந்து | (நீ செய்கிற) தீம்புகளையெல்லாம் விட்டு |
| எங்கள் பட்டை பணித்தருளாய்— | |

* * * — கீழ்ப்பாட்டில், கயல்களுக்கும் வாளைகளுக்கும் வருந்தி முறையிட்ட ஆய்ச்சிகளை நோக்கிக் கண்ணபிரான், 'பெண்காள்! கயலும் வாளையும் உங்களை

வருந்தா நின்றனவாகில் அவற்றை ஓட்டுதற்கு ஒருபாயஞ் சொல்லுகிறேன் கேண்மின்; "பெடையோடன்னம் பெய்வளையார்தம் பின்சென்று, நடையோடியலி நாணியொளிக்கும் நறையூரே" [திருமொழி, சு-ரு-ரு.] என்று திருநறையூரில் மாதர்களின் நடையழகைக் கண்ட அன்னங்கள் வெள்கி ஒளித்துக் கொள்ளாநின்றன வென்று ப்ரஸித்தமாயிருக்கிறதிறே; அப்படியே இக்கயல் வாளைகளும் உங்கள் கண்ணழகைக் கண்டால் நாணியொளிக்கத் தட்டில்லையே; ஆகையாலே அவை மறைந்தொழியும்படி உங்கள் கண்ணழகை அவற்றுக்குக் காட்டுங்கள், என்றாற்போலே சில நர்மோக்திகளைச் சொல்ல, அவற்றைக் கேட்க வற்ற ஆய்ச்சிகள், 'பிரானே! மீன்களுக்கு மாத்திரமேயோ நாங்கள் வருந்துவது; இத்தடாகத்திலுள்ள தாமரைத் தாள்களுமன்றோ எமது காலைக் கதுவி வேதனைப்படுத்தா நின்றன; இவற்றுக்குத் தப்பிப்பிழைக்கும் வழிசொல்லாய்' என்ன; அதுகேட்ட கண்ணபிரான், 'இப்பெண்கள் மீன்களுக்கும் தாமரைத் தாள்களுக்கும் வருந்தாநின்றார்களே யன்றி நம்முடைய தீம்புகளை ஒருபொருளாக மதிக்கின்றிலர், இன்னுஞ் சில பொறுக்கொணாத் தீம்புகளைச் செய்வோம்' என்றெண்ணி, இன்னது செய்தானென்று பிறர்க்குப் பாசுரமிட்டுச் சொல்லவொண்ணாதபடி. சிலவற்றைச் செய்யத் தொடங்கினான்; 'பிரானே! இந்த விஷமங்களைத் தவிர்ந்து பட்டைப் பணித்தருளாய்'' என்கிறார்கள்.

[குடந்தையெடுத்து இத்யாதி.] குடக்கூத்தென்பது - பிராமணர்க்குச் செல்வம் மிஞ்சினால் யாகஞ் செய்வதுபோல, இடையர்க்குச் செல்வம் மிஞ்சினால் அதனாலுண்டாகும் செருக்குக்குப் போக்குவீடாக அவர் ஆடுவதொரு கூத்து; இதனை 'தலையிலே அடுக்குங் குடமிருக்க, இரு தோள்களிலும் இரு குடங்களிருக்க, இருகைகளிலும் குடங்களை யேந்தி ஆகாசத்திலே யெறிந்து ஆடுவதொரு கூத்து' என்பர்; இதனைப் பதினோராடலி லொன்று என்றும், அறுவகைக் கூத்தில் ஒன்று என்றுங்கூறி, "குடத்தாடல் குன்றெடுத்தோனாடல் அதனுள், கடைக்குடமைந்தூறப்பாய்ந்து" என்று மேற்கோளுங் காட்டினர் சிலப்பதிகார வுரையில் அடியார்க்கு நல்லார். .... .... .... (சு)

நீரிலேநின்றயர்க்கின்றோம் நீதியல்லாதனசெய்தாய் *
ஊரகஞ்சாலவுஞ்சேய்த்தால் ஊழியெல்லாமுணர்வானே *
ஆர்வமுனக்கேயுடையோம் அம்மனைமார்காணிலொட்டார் *
போரவிடாயெங்கள்பட்டைப் பூங்குருந்தேறியிராதே. (எ)

ஊழி எல்லாம் } கற்பாந்தகாலத்திலெல்லாம்
உணர்வானே } (ஜகத்ரக்ஷணசிந்தையுடன்) உணர்ந்திருப்பவனே!
நீரிலே நின்று ஜலத்தில்நின்றுகொண்டு
அயர்க்கின்றோம் } வருந்தப்படாநின்றோம்;
நீதி அல்லாதன அநீதியான செயல்களை
செய்தாய் செய்யாநின்றாய்;
(உன் விஷமங்களுக்குத் தப்பி ஓடிப் பிழைக்கப் பார்ப்போமென்றால்)
ஊர் } எங்கள் ஊராகிய ஆய்ப்பாடியும்
அகம் மாளிகைகளும்
சாலவும் மிகவும்
சேய்த்து தூரத்திலிராநின்றன;

| | |
|---|---|
| ஆல் | ஐயோ!; (இப்படி நீ எங்களை வருத்தச்செய்தேயும்) |
| உனக்கே | உன்விஷயத்திலேயே |
| ஆர்வம் உடையோம் | நாங்கள் அன்புள்ளவர்களாயிரா நின்றோம்; |
| அம்மனைமார் | எங்கள் தாய்மார் |
| காணில் | (நீ பண்ணும் லீலைகளுக்கு நாங்கள் இணங்கி நிற்பதைக்) கண்டால் |
| ஒட்டார் | இசையமாட்டார்கள்; |
| எங்கள் பட்டை | எங்களுடையசேலைகளை |
| போர விடாய் | தந்தருளாய், |
| பூ குருந்து | பூத்திராநின்ற குருந்தமரத்தின்மேல் |
| ஏறி இராதே | ஏறிக்கொண்டு தீமைகளைச் செய்யாதே. |

* * * — பிரானே! கோழி கூவுதற்கு முன்னே, நீ உணர்ந்து வருவதற்கு முன்னேபிடித்து வந்து நாங்கள் நீரிலே தோய்ந்து அத்தாலே அறிவுகலங்கிப் படுகிற க்லேசங்களைப்பாராய் என்று ஆய்ச்சிகள் கூறியதைக் கேட்ட கண்ணபிரான் 'நீங்கள் நீரிலே நின்று வருந்துவதற்கு மேலாக நான் நெடும்போதாக மரத்திலே நின்று பூச்சிகளுக்கும் புழுக்களுக்கும் இரையாகிப் படுகிற க்லேசத்தைக் கண்டீர்களில்லையோ? உங்களாலேயன்றோ எனக்கு இக்கஷ்டம் நேர்ந்தது' என்று சேலைகளையுங் கொடாதே சில விலாஸ சேஷ்டிதங்களைப்பண்ண, 'அப்பா! இப்படியும் எம்மை நீ அநியாயஞ் செய்வாயோ?' என்று ஆய்ச்சியர் முறையிட, 'நான் செய்வது அநியாயமாகில் நீங்கள் ஊரிலேபோய் முறையிட்டுக்கொள்ளுங்கள்' என்று கண்ணன் கூற, நாயனே! ஊரும் மாளிகைகளும் கிட்டவிருந்தனவாகில் அது செய்யலாமாயிருந்தது, நாங்கள் உன்னுடன் கண்டுபிடிக்க வொண்ணாதபடி வரவேணுமென்று, நெடுந்தூரம் வந்தோமே 'என்செய்வோம்' என்று ஆய்ச்சிகள் அலமர; அதுகண்ட கண்ணன் 'பெண்காள்! நானோ பிறக்குப் பண்ணுகின்றேன், ஊரோ தூரமாயிராநின்றது; இனி நீங்கள் போக்கடியாக நினைத்திருப்பதென்?' என்று வினவ, "ஊழியெல்லா முணர்வானே!" என்கிறார்கள். ஜகத்துக்களை யடங்க ப்ரளயம் வந்து விழுங்கியவன்று எல்லாப் பொருள்கட்கும் போக்கடியைச் சிந்தித்து ஜாகரூகனாயிருந்த நின்னையன்றி வேறுயாரைப் போக்கடியாக நினைக்கவல்லோமென்கை. ("ஸதேவ - ஸோம்ய") என்னும்படியான வன்று ("வெஹுஸ்ருஜ் - பஹுஸ்யாம்") என்று போக்கடி பார்க்கவல்ல நீ பார்க்கு மித்தனையன்றோ" என்ற வியாக்யானஸூக்தி அறிக.

இங்ஙனம் தன்னையே போக்கடியாக நினைத்துப் பேசின ஆய்ச்சிகளை நோக்கிக் கண்ணபிரான் - 'நான் ப்ரளயங்கதமான ஜகத்துக்குப் போக்கடி பார்ப்பது உண்மையே, அந்த ஜகத்துக்களுக்கு அப்ரதிஷேதம் - [விலக்காமை] என்கிற பெருத்த குணமொன்று இருந்தபடியாலே நான் அது செய்யலாய்த்து; உங்கள் திறத்து அஃது இல்லையே' என்ன; 'பிரானே! அப்ரதிஷேதத்துக்கும் மேற்பட ஆநுகூல்யமு முடையவர்களா யிராநின்றோமே நாங்கள், எம்மை நீ இப்படி பேசலாமோ!' என்று பெண்கள் சொல்ல; அதுகேட்ட கண்ணபிரான், 'நீங்கள் "ஆர்வமுனக்கே யுடையோம்" என்று வாயாலே சொன்னால் அதை நம்புவாருண்டோ? அது கார்ய பர்யவஸாயியாக வேண்டாவோ, ஆர்வத்தைச் சற்று வெளிக்காட்டுங்கள் பார்ப்போம்,' என்று சில அங்க ஸம்ஜ்ஞைகளைப் பண்ண,

ஆய்ச்சிகள் 'அப்பனே! அப்பேச்சு தவிர்க; - இதையெல்லாம் எங்கள் தாய்மார் கண்டாரேல் அடிப்பர்களே; இப்போது இவ்வளவிலே அருள்புரிந்து எங்கள் பட்டாடைகளை அளித்தருளாய்' என்கிறார்கள்.

[போர விடாய்] சேலையை எங்கள் கைக்கு எட்டிற்று எட்டாதாக விடாமலன்று, முழுச் சேலையும் எங்கள் கையில் வந்து விழும்படி விட்டருளாய் என்கை. .... .... .... .... .... .... (எ)

மாமிமார்மக்களேயல்லோம் மற்றுமிங்கெல்லாரும் போந்தார் *
தூமலர்க்கண்கள்வளரத் தொல்லையிராத்துயில்வானே *
சேமமேலன்றிதுசாலச் சிக்கனநாமிதுசொன்னோம் *
கோமளவாயர்கொழுந்தே குருந்திடைக்கூறைபணியாய். (அ)

| | |
|---|---|
| தொல்லை இரா | பழையராத்ரிகளில் |
| தூ மலர் கண்கள் வளர | பரிசுத்தமான மலர் போன்ற கண்கள் நித்ரா பரவசமாம்படி |
| துயில்வானே | பள்ளி கொள்பவனே! |
| (இப்பொய்கைக்கரையிலே நிற்குமவர்கள்) | |
| மாமியார் மக்களே அல்லோம் | உனக்குத் தேவிமாராகும் முறையிலுள்ளார் மாத்திரமல்லோம்; |
| மற்றும் எல்லோரும் | மற்றுள்ள மாமிமார், அவர்கள் தாய்மார் முதலியவர்களும் |
| இங்கு | இவ்விடத்தில் |
| போந்தார் | வந்திருக்கின்றார்கள்; |

| | |
|---|---|
| இது | நீ செய்கிற இத்தீம்பானது |
| சால | மிகவும் |
| சேமம் அன்று | தகுதியானதன்று; |
| இது | இவ்வார்த்தையை |
| நாம் | நாங்கள் |
| சிக்கன | திண்ணிதாக |
| சொன்னோம் | சொல்லுகின்றோம்; |
| ஆயர் | இடையர்களுக்கு |
| கோமளக் கொழுந்தே | இளங்கொழுந்து போன்றவனே! |
| குருந்திடை கூறை பணியாய். | |

* * * — கண்ணபிரான் கூணர்தோறும் தீமைகளை மிகமிகச் செய்யப் புக்கவாறே, 'இவன் ஊரில் இவ்வளவு செய்யாமல் இங்கே இவை செய்வதனால் 'தனியிடத்திலே செய்வதற்கு ஆராய்ச்சியில்லை' என்று இவன் நினைத்திருக்கக்கூடுமெனக்கருதி, 'பிரானே! தனியிடத்திலே இவை செய்கிறோமென்று நினையாதே கொள்; இவை ஊரிலும் போய்ப்பரவிப் பெருத்த பழியாய் முடியும்' என்று ஆய்ச்சிகள் சொல்ல, 'ஊரிற் பழியாவதென்? ஊரிலிருந்து நீங்களன்றோ இங்கே வந்தீர்கள், நான் பெரிய தீம்பனென்பது உங்கட்குத் தெரியுமே' என்று கண்ணபிரான் கூற, 'நீ இவ்வாறு தீம்புசெய்தற்குக் காரணமென்?' என்று ஆய்ச்சிகள் கேட்க; 'இங்குள்ளாரனைவரும் எனக்கு மைத்துனமை முறையுடையார்களானதுபற்றிச் செய்கிறேன், என்ன; அது கேட்ட ஆய்ச்சிகள், 'அப்படியா? இங்குள்ளாரெல்லாரும் உன்னோடு மைத்துனமை முறையுடையாரல்லர்; மாமிமார்மக்கள் சிலர், மாமிமார் சிலர், மாமிமார்களின் தாய்மார் சிலர் என்றிப்படி பலவகைப்பட்ட உறவுமுறையார் இங்குண்டு காண்; ஆகையாலே இத்தீமைகளைத் தவிராய்' என்கிறார்கள்.

மாமிமார் மக்கள் — பத்நிகள் என்றபடி; வடமொழியில், நாயகனை 'ஆர்ய புத்ரர்' என வழங்குவதோடு ஒக்கும் இவ்வழக்கு. கீழ் "மாமிதன் மகனைப் பெற்றால்" என்றதுங் காண்க. .... .... .... .... (அ)

கஞ்சன்வலைவைத்தவன்று காரிருளெல்லிற்பிழைத்து *
நெஞ்சுதுக்கஞ்செய்யப்போந்தாய் நின்றவிக்கன்னியரோமை *
அஞ்சவுரப்பாளசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும் *
வஞ்சகப்பேய்ச்சிபாலுண்ட மசுமையிலீகூறைதாராய். (கூ)

| | |
|---|---|
| கஞ்சன் | கம்ஸனானவன் |
| வலை வைத்த அன்று | உன்னை அழிப்பதாக நினைத்தகாலத்தில் |
| கார் இருள் | மிக்க இருளையுடைத்தான |
| எல்லில் | இரவில் |
| பிழைத்து | பிழைத்து, |
| நின்ற | (அம்மணமாக) நிற்கின்ற |
| இக் கன்னியரோமை | இளம் பெண்களான எங்களுக்கு |
| நெஞ்சு துக்கம் செய்ய | மனத்துன்பத்தை உண்டாக்குவதற்காக |
| போந்தாய் | வந்துபிறந்தாய்; |
| அசோதை | யசோதைப் பிராட்டியோவென்றால் |
| அஞ்ச | நீ பயப்படும்படி |
| உரப்பாள் | உன்னை அதட்டமாட்டாள்; |
| ஆணாட விட்டிட்டிருக்கும் | தீம்பிலே கைவளரும்படி உன்னை விட்டிரா நின்றாள்; |
| வஞ்சகம் | வஞ்சனையையுடைய |
| பேய்ச்சி | பூதனையினுடைய |
| பால் | முலைப்பாலை |
| உண்ட | (அவளுயிரோடேகூட) உறிஞ்சியுண்ட |
| மசுமை இலீ | லஜ்ஜையில்லாதவனே ! |
| கூறை தாராய் | சேலைகளைத் தந்தருள். |

* * — வஸுதேவதேவியான தேவகியின் எட்டாவது கருவில் திருமால் கண்ணனாய் அவதரிக்க, அப்போதே வஸுதேவ தேவகிகளின் கால் விலங்கு இற்று முறிந்துவிழ, அக்குழந்தையைக் கம்ஸன் கொல்லக்கூடுமென்ற அச்சத்தினால், தாய்தந்தையர் அத்தெய்வக் குழவியின் அநுமதிபெற்று அந்தச் சிசுவை அது பிறந்த நடுராத்திரியிலேயே திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்க்கெல்லாம் தலைவரான நந்தகோபரது திருமாளிகையிலே ரஹஸ்யமாகக் கொண்டு சேர்த்து விட்டு, அங்கு அப்பொழுது அவர் மனைவியான யசோதைக்கு மாயையின் அம்சமாகப் பிறந்திருந்ததொரு பெண் குழந்தையை எடுத்துக்கொண்டு வந்து விட, அது முதற் கம்ஸனைக் கொல்லுகிறவரையிற் கண்ணபிரான் அக் கோகுலத்திலேயே நந்தகோப குமாரனாய் யசோதை வளர்க்க வளர்ந்தருளின னென்ற வரலாறு அறிக.

பிரானே ! நீ கஞ்சனுக்குத் தப்பிப்பிழைத்தது எங்களை யெல்லாம் வாழ்விப்பதற்காக வென்று நினைத்திருந்தோம்; இன்று நீ செய்யும் படிகளைப் பார்த்தால் எங்களைத் துக்கப்படுத்துவதற்காகவே நீ தப்பிப் பிழைத்தாய் என்று நினைக்கலாய்த் தென்கிறார்கள்.

[அஞ்ச உரைப்பாள் இத்யாதி.] கண்ணன் செய்யுந் தீம்புகளை யசோதையிடஞ் சென்று யாரேனும் முறையிட்டால், அவள் பரிவின் மிகுதியாலே அவனை

அநட்டமாட்டாமல் "இடைப்பெண்கள் திறத்தில் நீ இப்படிதானா தீம்பு செய்கிறாய்" என்றாற்போலச் சில வார்த்தைகள் சொல்லி மேன்மேலு மவனைத் தீம்பிலே கைவளரவிடுவள் என்க.

"ஆனாடஇட்டிட்டிருக்கும்" என்றும் பிரிக்கலாம்; இட்டிடுகை - உபேக்ஷித்திருக்கை. "[இருக்கும்.] தான் கண்டபடி இவனைத் தீம்பு செய்ய விட்டு 'நம் மகன் இப்படி பருவம் நிரம்பித் தீமை செய்யப் பெற்றோம்' என்னுமதனாலே 'தொல்லையின்பத்திறுதிகண்டாள்' என்கிறபடியே ஆநந்த நிர்ப்பரையாய் க்ருதக்ருத்யை யாயிருக்கும்" என்ற வியாக்கியானஸூக்தி அறிக.

[மசுமையிலீ!] பிறர் நோவு படுவதைக் கண்டால் ஹ்ரீரோஷாஹிஸோதாலா "ஹ்ரீரோஷாஹிமமாஅலா" என்று லஜ்ஜைப்படும் சக்ரவர்த்தித் திருமகனைப் போலன்றியே வெட்கங்கெட்டிருக்கிற பிழைப்பிறே உன்னது என்கை.(௯)

கன்னியரோடெங்கள்நம்பி கரியபிரான்விளையாட்டை *
பொன்னியமாடங்கள்சூழ்ந்த புதுவையர்கோன்பட்டன்கோதை *
இன்னிசையாற்சொன்னமாலை யீரைந்தும்வல்லவர்தாம்போய் *
மன்னியமாதவனோடு வைகுந்தம்புக்கிருப்பாரே. (௧௦)

| | |
|---|---|
| எங்கள் நம்பி | எமக்கு ஸ்வாமியாய் |
| கரிய | கார் கலந்த மேனியனான |
| பிரான் | கண்ண பிரான் |
| கன்னியரோடு | ஆயர்சிறுமியரோடே செய்த |
| விளையாட்டை | இவ்வலீலைகளைக் குறித்து |
| பொன் இயல் | ஸ்வர்ணமயமான |
| மாடங்கள் சூழ்ந்த | மாடங்களால் சூழப்பட்ட |
| புதுவையர் கோன் | ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்குத் தலைவரான |
| பட்டன் கோதை | பெரியாழ்வார்க்குத் திருமகளான ஆண்டாள் |
| இன் இசையால் | இனிய இசையாலே |

| | |
|---|---|
| சொன்ன | அருளிச்செய்த |
| மாலை | சொல்மாலையாகிய |
| ஈர் ஐந்தும் | இப்பத்துப்பாட்டுக்களையும் |
| வல்லவர் தாம் | கற்கவல்லவர்கள் |
| போய் | (அர்ச்சிராதிமார்க்கமாகப்) போய் |
| வைகுந்தம் புக்கு | பரமபதத்தையடைந்து [அவ்விடத்திலே] |
| மன்னிய | நித்யவாஸம் செய்தருளுகிற |
| மாதவனோடு | திருமாலோடுகூடி |
| இருப்பார் | நித்யாநுபவம்பண்ணிக்கொண்டு வாழ்ந்திருக்கப் பெறுவர். |

* * * — கண்ணபிரானுக்கும் இளவாயர்மகளிர்க்கும் பொய்கைக் கரையிலே நடந்த லீலாரஸத்தைக்குறித்து ஆண்டாள் பரமபோக்யமாக அருளிச்செய்த இத்திருமொழியை ஓதவல்லவர்கள், பரமபதம் சென்று புக்குப் பரவாஸுதேவனுடைய பாதாரவிந்தங்களின்கீழ் வாழப்பெறுவர் என்று - இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டியவாறு. ஈற்றடியில் "மன்னிய" என்பதை வைகுந்தத்துக்கு அடைமொழியாக்குதலும் ஒன்று.

அடிவரவு :— கோழி இது எல்லே பரக்க காலை தடத்து நீர் மாமி கஞ்சன் கன்னி தெள்ளியார். .... .... .... .... (௧௦)

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.





ஸ்ரீ:.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

நான்காந் திருமொழி — தெள்ளியார்.

# அவதாரிகை.

கீழ்த் திருமொழியிலே, தங்களுடைய பரிவட்டங்களையெல்லாம் வாரிக்கொண்டுபோய்க் குருந்தமரத்தின்மேலேறிக் குறும்புசெய்யாநின்ற. கண்ணபிரானை நோக்கி ஆயர்மாதர் பலவகையான வார்த்தைகளைச்சொல்லி, "கூறை தாராய், துகிலைப் பணித்தருளாய்" என்று ஒருகாலுக்கு ஒன்பதின்காலாகப் பிரார்த்தித்துக் கடைசியாக "நெஞ்சுதுக்கஞ் செய்யப்போந்தாய் நின்றவிக் கன்னியரோமை" என்று சாலவும் நெஞ்சுநொந்து சொன்னவாறே "ஶுவஹா ஷிபூ ஊத்ருஶ்ஶ்ரநவியொ வஞீக்ஷுவஜ்விஷொ: - ஆபந்நார்த்தி ப்ரஶமநவ்ரததா பத்தரீக்ஷஸ்ய விஷ்ணோ:" என்றபடி அடியவர் துயரை அடியறுக்குமவனான கண்ணபிரான் திருவுள்ளமிரங்கித் திருப்பரிவட்டங்களைத் தந்தருள, இவர்களும் அவற்றைப் பெற்றார்களாய் ஸம்ச்லேஷமும் நடந்தேறியதாகக் கொள்க.

ஸம்ஶ்லேஷம் நடைபெற்றாலும் "ஸம்யோகா விப்ரயோகாந்தா: - ஸம்யோகா விப்ரயோகாந்தா:" [அதாவது - கலவியுண்டானால் அது மீண்டும் பிரிவோடே தலைக்கட்டியல்லது நில்லாது] என்பது முறைமையாகையாலே உடனே விச்லேஷமுண்டாக, மீண்டும் கூடுவதற்காகக் கூடலிழைத்தல் என்ற ஒரு சகுந நிரீக்ஷண ப்ரவ்ருத்தியை அவ்வாயர் மாதர் செய்தபடியை அருளிச்செய்வதாய்த்து — இத்திருமொழி.

கூடலிழைத்தலாவது — வட்டமாகக் கோடுகீறி அதற்குள்ளே சுழி சுழியாகச் சுற்றும் சுழித்து இரண்டிரண்டு சுழியாகக் கூட்டிப்பார்க்கும்போது இரட்டைக்கணக்காக முடிவுபெற்றால் கூடுகை, ஒற்றைக்கணக்காக முடிவுபெற்றால் கூடாமை என்று ஒரு ஸங்கேதம் ஏற்படுத்திக்கொண்டு குறிபார்க்கையாம். இந்த சகுநாவலோகநம் - கூடல், கூடலிழைத்தல், கூடல்வளைத்தல் கூடற்குறி இத்யாதி நாமங்களால் வழங்கப்பெறுமென்ப.

திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியில் "அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண இழைப்பன் திருக்கூடல்கூட" என்றருளிச்செய்தன்னதுங்காண்க. பகவத் ஸம்ச்லேஷத்திலே ஆவலுள்ளபடியைக் கூறும் முறைகளிலே இதுவொருமுறை என்னுமிவ்வளவே இங்கு உணரத்தக்கது.

தெள்ளியார்பலர் கைதொழுந்தேவனார் *
வள்ளல் மாலிருஞ்சோலைமணாளனார் *
பள்ளிகொள்ளுமிடத்து அடிவொட்டிட *
கொள்ளுமாகில்கூடிடு கூடலே. (க)

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| கூடலே | கூடல்தெய்வமே!, | பள்ளிகொள்ளும் இடத்து | பள்ளி கொண்டருளுமிடத்திலே |
| தெள்ளியார் பலர் | தெளிவுடைய பக்தர்கள் பலர் | அடி தொட்டிட | (அவனுடைய) திருவடிகளை நான் பிடிக்கும்படியாக |
| கை தொழும் | கைகளாரவணங்கப் பெற்ற | கொள்ளும் ஆகில் | (அவன்) திருவுள்ளம் பற்றுவனாகில் |
| தேவனார் | ஸ்வாமியாய் | நீ கூடிடு | நீ கூடவேணும். |
| வள்ளல் | பரமோதாரனாய் | | |
| மாலிருஞ்சோலை மணாளனார் | திருமாலிருஞ்சோலையிலே எழுந்தருளியிருக்கிற மணவாளப்பிள்ளையாகிப் பரமபுருஷன் | | |

* * * — க்ஷணகாலமும் பிரியமாட்டாமல் நித்யாநுபவம் பண்ணிக்கொண்டு மங்களாசாஸநபரராயிருக்கும் பலபல நித்யஸூரிகள் கைதொழப் பெற்றவனாய், அந்த நித்யஸூரிகள் அநுபவிக்கும் அந்த அநுபவத்தை ஸம்ஸாரிகட்கும் அருள்புரியத் திருவுள்ளம்பற்றித் திருமாலிருஞ்சோலைமலையிலே வந்து ஸந்நிஹிதனாய் எழுந்தருளியிருக்கிற எம்பெருமான் * குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம்நீட்டி வடதிசை பின்புகாட்டித் தென்திசை இலங்கை நோக்கித் துயிலுமிடமாகிய திருவரங்கம் பெரியகோயிலிலே சென்று புக்கு அப்பெருமானுக்குத் திருவடிவருடும்படியான பாக்கியம் இன்று நமக்கு வாய்க்குமாகில், கூடல்தெய்வமே! நீ கூடக்கடவை என்கிறாள். எம்பெருமானுடைய ஸந்நிதியிலே போய் அத்தாணிச்சேவகம் பண்ணும்படியாக விதிவாய்க்கவேணுமென்கிற ப்ரார்த்தனையைக் கூடிடுகூடலே! என்னும் வாய்பாட்டினால் அருளிச்செய்வதாகக் கொள்க. "கூடிடு கூடலே!" என்றவிடத்துக்குச் சொல்லவேண்டுமவற்றை அவதாரிகையிலே சொன்னோமாகையாலே அங்குக் காண்க.

[தேள்ளியார் பலர்.] தெள்ளியாரென்றது - தெளிவுள்ளவர்களென்றபடி; தெளிவாவது 'உபாயோபேயங்களிரண்டும் அப்பெருமானே' என்ற அத்யவஸாயம், அஃது உடையவர்கள் "கலக்கமில்லா நல்தவ முனிவர் கரைகண்டோர், துளக்கமில்லா வானவர்" என்றபடி ஆத்மஸ்வரூபம் கைவந்திருக்கும் ஸநகாதி மஹர்ஷிகளும், முக்தரும், நித்யஸூரிகளும். [தேவனார்.] திவ: - தேவ: என்கிற வடசொல் "திவு" [திவு] என்னும் தாதுவினடியாகப் பிறந்ததாதலால் அந்தத் தாதுவுக்குள்ள பத்துப்பொருள்களும் தேவபதத்திற்கு உண்டு, இங்கு 'உஜ்வலன்' என்ற பொருள் கொள்ளத்தகும். நித்ய முக்தர்கள் தாங்கள் எம்பெருமானைத் தொழுது தங்கள் ஸ்வரூபத்தை நிறம்பெறுவித்துக்கொள்ள, எம்பெருமான் அவர்களைத் தொழுவித்துக்கொண்டு உஜ்வலனாகிறான் என்க.

வள்ளல்:— மிக்க ஔதார்யகுணமுள்ளவன். "வள்ளல்" என்றவுடனே 'மாலிருஞ்சோலைமணாளனார்' என்கையாலே, நித்தியவிபூதியிலே நித்யாநுபவம் பண்ணுவார் அநந்தகோடிநித்யஸூரிகள் உண்டாயிருக்கச் செய்தேயும் அவர்களுடன் கூடிவாழ்ந்திருக்குமிருப்பு உண்டது உருக்காட்டாதே இங்குள்ள ஸம்ஸாரி

களின் இழவை அநுஸந்தித்து உடம்புவெளுத்து, அங்குள்ள நித்யாநுபவத்தை இங்குள்ளார்க்கும் தந்தருளவேணுமென்னும் நசையாலே திருமாலிருஞ்சோலை மலையளவும் வந்து தன்னை அநுபவிப்பிக்கைக்கு ஸாயம் எதிர்பார்த்துக்கொண்டு நிற்கும்படியைச் சொல்லிற்றாகிறது. "வள்ளல்" என்று உதாரகுணத்தைத் திருமாலிருஞ்சோலைமலையிலே விளங்கக் காட்டுகிறபடி.

மணாளர்:— 'மணவாளனார்' என்பது மருவிற்று. மணாளன் - மணக்கோலத்தோடு வந்திருப்பவன். ஆச்ரிதர்களை அடிமைகொள்வதற்குக் குதூஹலமாக நிற்கும்நிலையைச் சொல்லுகிறது. அப்படிப்பட்ட எம்பெருமான் பள்ளிகொள்ளுமிடத்திலே யென்றது —— திருவரங்கம் பெரியகோயிலிலே யென்றபடி. "பள்ளிகொள்ளுமிடமாகிறது — கோயில்" என்று பட்டருளிச் செய்ய நான் கேட்டேன் என்று பிள்ளையழகிய மணவாளவரையர் பணிப்பர்— என்ற வ்யாக்யாநஸ்ரீஸூக்தியை அநுஸந்திக்க.

அடிகொட்டிடக் கொள்ளுமாகில்:— "அன்றிவ்வுலகமளந்த வசவேகொல்" என்றும், "நடந்தகால்கள் நொந்தவோ" என்றும், "அடியாரல்லல் தவிர்த்த அசவோ அன்றேலிப்படிதான் நீண்டு தாவியவசவோ" என்றுமித்யாதி பாசுரங்களைப் பகர்ந்துகொண்டு திருவடிபிடிக்கும்படியாக அவ்வெம்பெருமான் என்னைத் திருவுள்ளம் பற்றுவானாகில் என்கை. ஆண்டாள், பெண்பிள்ளையான வாசிக்கு "முலையாலணைக்கப்பெறவேணுகில்" என்று சொல்லவேண்டுமிடத்தும் "அடிகொட்டிடக்கொள்ளுமாகில்" என்கையாலே ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியிலே அந்வயிக்க ஆசைப்பட்டமை தோற்றும். கைங்கர்யமேயிறே ப்ராப்திபலம். கொள்ளுமாகில் என்று அவ்வெம்பெருமானுடைய திருவருளை எதிர்பார்க்கின்றமை தோற்ற அருளிச்செய்கையாலே "ப்ராப்திக்கு உபாயம் அவன் நினைவு" என்ற ஸத்ஸம்ப்ரதாயார்த்தம் விளங்கும். நாம் எத்தனைப்ரவ்ருத்திகள் செய்தபோதிலும் அவை கைங்கர்ய மாத்ரமேயாய் "உன்மனத்தால் என்னினைந்திருந்தாய்" என்றபடி அவனுடைய நினைவே உபாயமென்று திண்ணிதாகக் கொள்க.

கூடிடுகூடலே:— "'அவனாலே பேறு' என்றிருக்கச் செய்தேயும் அசேதநமான கூடலிழைத்தலிலே விழும்படியிருக்கிறதிறே ப்ராப்யத்வரை" என்ற வ்யாக்யாநஸ்ரீஸூக்தி காண்க. ஸ்ரீவசநபூஷணம் முதல் ப்ரகரணத்தில் —— "அப்ராப்தவிஷயங்களிலே ஸக்தனானவன் அதை லபிக்கவேணுமென்றிரா நின்றால் ப்ராப்தவிஷயப்ரவணனுக்குச் சொல்லவேண்டாவிறே, அநுஷ்டாநமும் உபாயகோடியில் அந்வயியாது." அநந்யோபாயத்வமும் அநந்யோபேயத்வமும், அநந்யதைவத்வமும் குலையும்படியான ப்ரவ்ருத்திகளாநின்றுமிறே. ஜ்ஞாநவிபாககார்யமான அஜ்ஞாநத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்; உபாயபலமாய் உபேயாந்தர்ப்பூதமாயிருக்குமது உபாயப்ரதிபந்தகமாகாது" என்றருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளும் அவற்றின் வியாக்யான ஸ்ரீஸூக்திகளும் இங்கே நோக்கத்தக்கும். .... .... .... . .... (௬)

காட்டில் வேங்கடம் கண்ணபுரநகர்*
வாட்ட மின்றி மகிழ்ந்துறை வாமனன்*
ஓட்டராவந்தென் கைபற்றி* தன்னொடும்
கூட்டு மாகில்நீ கூடிடு கூடலே.

பதவுரை.

கூடலே!—;

| | | | |
|---|---|---|---|
| காட்டில் வேங்கடம் | காட்டிலுள்ள திருவேங்கடமலையிலும் | வாமனன் | வாமநாவதாரம் செய்தருளிய எம்பெருமான் |
| நகர் கண்ணபுரம் | நகரமாகிய திருக்கண்ண புரத்திலும் | ஓட்டரா வந்து | ஓடிவந்து |
| வாட்டம் இன்றி | மனக்குறையில்லாமல் | என்கை பற்றி | என்னுடைய கையைப்பிடித்து |
| மகிழ்ந்து | திருவுள்ளமுகந்து | தன்னொடும் | தன்னோடு |
| உறை | நித்யவாஸம் செய்தருளுகிற | கூட்டும் ஆகில் | அணைத்துக்கொள்வனாகில் |
| | | நீ கூடிடு | நீ கூடவேணும். |

* * * எம்பெருமான் என்னோடே ஸம்ச்லேஷிக்கவேணுமென்று திருவேங்கடமலை, திருக்கண்ணபுரம் முதலிய திருப்பதிகளிலே வந்து நிற்கிறான்; எனக்கு இசைவு உண்டோ இல்லையோவென்று சங்கித்துத் தாமஸித்து நிற்கின்றான்போலும்; அப்பெருமான் என்னுடைய ஆதரத்தை நன்கறிந்து கடுக்கென ஓடிவந்து என்னைத் தன்னோடே அணைந்துக் கொள்ளுமாறு விதி வாய்க்கவேணுமென்று மநோரதிக்கிறாள்.

காட்டில் வேங்கடம்:—ஸ்ரீதண்டகாரண்யத்தில் ரிஷிகளோடே கூடியிருந்து வநவாஸரஸம் அநுபவித்தபடிக்கு ஒப்பாகும்—திருமலையில் வாழ்ச்சி. கண்ணபுரநகர்—பிறகு திருவயோத்தியிலே அனைவருடனும் கூடியிருந்து நகரவாஸரஸம் அநுபவித்தபடிக்கு ஒப்பாகும்—திருக்கண்ணபுரத்தில் வாழ்ச்சி. திருமலையை விருந்தாவனத்தோடொத்ததாகவும் திருக்கண்ண புரத்தைத் திருவாய்ப்பாடியோடொத்ததாகவும் நிர்வஹிக்கவுமாம். நகரவாஸத்தோடு வநவாஸத்தோடு வாசியற இரண்டையும் இனிதாகக் கொள்ளும் மனமாண்பு விபவாவதாரத்தில் இருந்தது போலவே அர்ச்சாவதாரத்திலும் உள்ளபடியை இத்தால் காட்டிற்றாகிறது.

வாட்டமின்றி மகிழ்ந்துஉறை:—'குழுமித்தேவர் குழாங்கள்... கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு" என்னும்படி நித்யஸூரிகளுடைய பரிஷத்தின் நடுவே அத்யுஜ்வலனாய் எழுந்தருளியிருக்குமிருப்பை விட்டு மநுஷ்யநாற்றம்நாறுகிற இந்த ஸம்ஸாரநிலத்திலே வந்து * கானமும் வானரமும் வேடுமானவற்றுக்கு முகங்கொடுத்துக்கொண்டு நிற்கவேண்டிற்றே! என்று திருவுள்ளத்தில் வெறுப்பு இல்லாமல், இருட்டறையில் விளக்குப்போலே நம்முடைய கல்யாண குணங்களெல்லாம் நன்கு விளங்குமாறு இங்கு வரப் பெற்றோமே! என்ற அளவற்ற மகிழ்ச்சியோடே எழுந்தருளியிருக்கிறபடி.

உறை—ராமக்ருஷ்ணாத்யவதாரங்கள் ஒருகாலத்தளவிலேயாய்ப் பின்னானார் வணங்குஞ்சோதியாகாமல், தீர்த்தம்ப்ரஸாதித்துவிட்டுத் தன்னுடைச்

சோதிக்கெழுந்தருளினுப் போலன்றிக்கே நித்யவாஸம் செய்தருளுகிறவிடமாய்த்து அர்ச்சாவதாரத் திருப்பதிகள்.

எம்பெருமானை அடிபணிந்து பேறுபெறவேண்டியதன்மை சேதநர்களுடையதாகையாலே அவ்வெம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடத்தைத்தேடிக் கொண்டு செல்லவேண்டியவர்கள் சேதநர்களாயிருக்க; இவர்களிடத்தை நோக்கி அவ்வெம்பெருமான் புறப்பட்டுவரும்படியான ஸந்தர்ப்பமென்? என்று சங்கை பிறக்கக்கூடுமாதலால் அந்த சங்கைக்குப்பரிஹாரமாக வாமனன் என்கிறுள்; தன் உடைமையைப் பெறுகைக்குத் தான் இரப்பாளனுப் அவதரித்தபடியிறே வாமநாவதாரம், இதனுல் சேதநலாபம் ஈச்வரனுக்குப் புருஷார்த்தமேயன்றி ஈச்வரலாபம் சேதனனுக்குப் புருஷார்த்தமன்று என்னும் ஸத்ஸம்ப்ர தாயார்த்தம் விளங்கும்.

ஓட்டராவந்து:—ஓடிவந்து என்றபடி. 'ஓட்டம் தரா' என்ற விரண்டு பதங்கள் 'ஓட்டரா' எனச் சிதைந்து புணர்ந்தன.

"வாமனன் ஓட்டராவந்து" என்று வாக்யஸந்தர்ப்ப ஸ்வாரஸ்யத்தால் பெரியவாச்சான் பிள்ளை அருளிச் செய்கிறுர் காண்மின்—"ஓரடி மண்ணுக்குப் பதறுமவன் இவளைப் பெறும்போதைக்கு ஆறியிரானிறே; ஆஸாரப்ரக்ருதியான மஹாபலிமுன்னே கழஞ்சமண்ணுக்குப் பதறிநட்க்குமவன், இவளொரு தலையானல் ஆறியிரானிறே; * காற்றில் முன்னங்கடுகி ஓடிவரக்கடவனிறே."

"ஓட்டராவந்து என்னை பற்றுவானுகில்" என்ருவது, "ஓட்டராவந்து என்னைத் தன்னெடுங் கூட்டுமாகில்" என்ருவது அருளிச்செய்யாதே "என்கை பற்றித் தன்னெடுங் கூட்டுமாகில்" என்றதற்குக் கருத்து :—"அங்கண்ணனுண்ட வென்னுருயிர்க் கோதிது" என்னுமாபோலே பிடித்தபிடியிலே [அநந்யார்ஹையாம்படி பிடிக்கவேணும்; அந்த ஹஸ்தஸ்பர்சத்தாலே] நான் தவண்டுபோய் ஸ்தப்தையாய் நிற்கையில் என்னை இழுத்தணைத்துத் தன்திருமார்பிலே எறிட்டுக்கொள்ள வேணும் என்கை.

"கூட்டுமாகில் நீகூடிடு கூடலே!" என்றது—"அவன் எழுந்தருளி என்னைக் கூட்டிக் கொள்ளும் படியாக நீ அநுகூலிக்கவேணும்" என்றபடி. ... (உ)

பூமகன் புகழ் வானவர் போற்றுதம்
காமகன்* அணி வாணுதல் தேவகி
மாமகன்* மிகுசீர் வசுதேவர்தம்*
கோமகன் வரில் கூடிடு கூடலே. (ந.)

| | | | |
|---|---|---|---|
| பூ மகன் வானவர் புகழ் போற்றுதற்கு | பூவிற்பிறந்தபிரமனும் நித்யஸூரிகளும் கீர்த்தியைப் பாடித் துதிப்பதற்கு | மிகு சீர் வசுதேவர் தம் | மிகுந்த நற்குணங்களையுடையரான வசுதேவருடைய |
| ஆம் மகன் | தகுந்த புருஷோத்தமனாய், | கோ மகன் | மாட்சிமைதங்கிய புத்திரனான கண்ணபிரான் |
| அணி வாள் நுதல் தேவகி | மிகவும் அழகிய நெற்றியையுடைய தேவகியினுடைய | வரில் | (என்னை அணைக்க) வருவானாகில் |
| மா மகன் | சிறந்த புத்திரனாய், | கூடலே! கூடிடு — | |

* * * — நான்முகனும் நித்யஸூரிகளும் போற்றும்படியாக அங்கே எழுந்தருளியிருந்து, பின்பு தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி* மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரையிலே வந்து தேவகிக்கும் வஸுதேவர்க்கும் புதல்வனாய்த் திருவவதரித்தருளின எம்பெருமான் இன்று என் துயர்தீர இங்கே எழுந்தருளக் கூடுமோ என்று மநோரதிக்கிறாள்.

“பூமகன் வானவர் (இவர்களெல்லாரும்) புகழ்போற்றுதற்கு ஆம் மகன்” என இயைத்து உரைக்கப்பட்டது. அன்றியே, புகழ் என்பதை வானவர்க்கு விசேஷணமாக்கி, “𑌤𑌦𑍍𑌵𑌿𑌪𑍍𑌰𑌾𑌸𑍋 𑌵𑌿𑌪𑌨𑍍𑌯𑌵𑍋 𑌜𑌾𑌗𑍃𑌵𑌾𑌂𑌸𑌃 𑌸𑌮𑌿𑌨𑍍𑌧𑌤𑍇” ['தத் விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸஸ் ஸமிந்ததே'] என்றும், “𑌯𑌤𑍍𑌰𑌰𑍍𑌷𑌯𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌜𑌾 𑌯𑍇 𑌪𑍁𑌰𑌾𑌣𑌾𑌃” ['யத்ரர்ஷய: ப்ரதமஜா யே புராணா:'] என்றுமித்யாதி ச்ருதிவாக்யங்களாலே புகழப்பட்ட வானவர்கள்—என்று பொருள் கொள்ளலுமாம்; பூமகன் என்றது உபலக்ஷணமாகி இந்தவிபூதியைச் சொல்லிற்றாய், வானவர் என்றது அந்த விபூதியைச் சொல்லிற்றாய்க் கொண்டு, ஓர் ஆற்றின் நடுவே போகிற ஓடத்தை இருகரையிலுள்ளாரும் அழைக்குமாபோலே இரண்டு விபூதியிலுள்ளாராலும் போற்றப்பட்டவன் என்க. “𑌨𑌾𑌵𑍇𑌵 𑌯𑌾𑌨𑍍𑌤𑌮𑍁𑌭𑌯𑍇 𑌹𑌵𑌨𑍍𑌤𑍇” ['நாவேவ யாந்தமுபயே ஹவந்தே'] என்ற வேதவாக்கியம் இங்கே ஸ்மரிக்கத்தகும். “போற்றுதற்காமவன்” என்று ப்ராசீநபாடமென்பர். ஆமவன்—தகுதியானவன் என்கை. இவ்விடத்தில் வியாக்கியானத்தால் பாட நிர்த்தாரணம் அசக்யம்; அரும்பதவுரைகாரர் மாத்திரம் “ஆம்மகன்” என்று கொண்டு விவரிக்கிறார் ஆயினும் “ஆமவன்” என்ற பாடமே சிறக்குமென்று அஸ்மதாசார்யர் அருளிச்செய்யும்படி. இப்பாடத்தில் எதுகைநயமும் குன்றாது.

அணிவாள் நுதல் தேவகி—ஸாக்ஷாத் பரமபுருஷன் வந்து பிள்ளையாகப் பிறந்தமையாலுண்டான ஸந்தோஷமிகுதியால் தேவகியின் முகம் மிக்கவொளி பெற்று விளங்கியவாறு. “தேவகிமகன்” என்னாதே “தேவகி மா மகன்” என்கையாலே—கண்ணபிரானுடைய திருவளர்த்தியைக் கண்டவர்கள் 'இவன் தேவகியின் புத்திரனல்லன், உடன்பிறந்தவனாக இருக்கக்கூடும்' என்று சங்கிக்கும்படியிருந்தமையால் அப்படிப்பட்ட திருவளர்த்தியுண்டாகும்படி அவளால் வளர்க்கப்பெற்றவன் என்ற கருத்துத் தோற்றுமென்ப.

மிகுசீர் வசுதேவர்தம் கோமகன்—இங்கே வ்யாக்யாநஸ்ரீஸூக்தி:—["கோமகன்] கோவான மகன்; சக்ரவர்த்திக்குப்போலே நியாம்யனல்லன்; இவர் தம்மையும் நியமிக்கும் மகன். அவரை நியமிக்கையாவது—கம்ஸபயத்தாலே 'இவனுக்கு என் வருகிறதோ' என்று அவர் வயிறுபிடித்தால் 'அப்பரே! நீர் என் பயப்படுகிறீர்? அஞ்சாதே நான் சொல்வதைக்கேட்டு ஸுகமேயிரும்' என்றும் போலே நியமிக்கை." கோ—ஸ்வாமி; நியாமகன்.

கோமகன் வரில் கூடிடு கூடலே!—அப்படிப்பட்ட கண்ணபிரான் என்னிடம் வரும்படியான பாக்கியம் வாய்க்கவேணுமென்ற மநோரதம் உள்ளுறை. வரில் என்கையாலே வரும்போதை நடையழகு காண்கையிலே அபிநிவேசமுற்றதென்ப. ["கூடிடு கூடலே!] நீகூடி என்னையுமவனையுங்கூட்டு" என்பது வ்யாக்யாநஸ்ரீஸூக்தி. .... .... .... .... .... .... (௩.]

ஆய்ச்சி மார்களு மாயரு மஞ்சிட*
பூத்த நீள்கடம் பேறிப் புகப்பாய்ந்து*
வாய்த்த காளியன் மேல் நடமாடிய*
கூத்தனார் வரில் கூடிடு கூடலே.

= பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| ஆய்ச்சிமார்களும் | இடைச்சிகளும் | வாய்த்த காளியன் மேல் நடம் ஆடிய | பாக்கியசாலியான காளியநாகத்தின் மேல் நர்த்தனஞ் செய்த |
| ஆயரும் | இடையரும் | கூத்தனார் வரில் | நாட்ய சாஸ்த்ர நிபுணனான கண்ணபிரான் வரக்கூடுமாகில் |
| அஞ்சிட | பயப்படும்படியாக, | கூடலே! கூடிடு—. | |
| பூத்த நீள் கடம்பு ஏறி | புஷ்பித்ததாய் உயர்ந்திருந்த கடப்ப மரத்தின் மேல் ஏறி | | |
| புகப்பாய்ந்து | (அங்கு நின்றும்) எழும்பிக்குதித்து | | |

* * * — காளியநாகத்தின் கொழுப்படக்கின அபதாநத்திலே ஈடுபட்டுப் பேசுகிறாள். ஒரு நாள் க்ருஷ்ணன் கன்றுகளை ஓட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போகத்தொடங்க, மற்ற இடைப்பிள்ளைகள் அழைத்து 'க்ருஷ்ணா! அவ்வழி போகவேண்டா; அவ்வழியிற் சென்றால் யமுநாநதியில் மடுவில் இருந்து கொண்டு அம்மடுமுழுவதையும் தன்விஷாக்நியினாற் கொதிப்பண்ணித் தீருள்ளதாய்ப் பாநத்துக்கு அநர்ஹமாம்படி செய்த காளிய னென்னும் கொடிய ஐந்தலைநாகம் குடும்பத்தோடு வாஸஞ்செய்து கொண்டு அணுகினவர்களனைவரையும் பிணமாக்கிவிடுகலால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன; அதைக்கேட்ட கண்ணபிரான் உடனே அக்காளியநாகத்தைத் தண்டிக்கவேணுமென்ற திருவுள்ளங் கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்ப மரத்தின் மேலேறி அம்மடுவிற் குதித்து, அந்நாகத்தின் படங்களின்மேல் ஏறித் துவைத்து நர்த்தநஞ் செய்து நசுக்கி வலியடக்குகையில், மாங்கல்யபிக்ஷையிட்டருளவேண்டுமென்று தன்னை வணங்கிப் ப்ரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற்சென்று வாழும்படி விட்டருளினன் என்றவரலாறு இங்கு அறியத்தக்கது.

"ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிட நடமாடிய" என இயையும். "அஞ்சிடக் கடம்பேறிப் புகப்பாய்ந்து" என்று இயைக்கவுமாம். வாய்த்தகாளியன்=கண்ணபிரான் தன்முடியிலே நடமாடவேணுமென்று இவள் விரும்புமதை அக்காளியன் தலையிலே பெற்றமைக்கு உகந்து, வாய்த்த என்கிறாள்; பெண்ணாய்ப் பிறவாதே காளியனாய்ப் பிறந்தேனாகில் இந்த பாக்கியம் பெறலாமே; அம்ருதம் பொதிந்த முலைகள் பெறாத பாக்கியத்தை விஷம் பொதிந்த வன்தலை பெற்றதே! இதென்ன பாக்கியம்! என்று உள்குழைகின்றமை "வாய்த்த" என்ற சொல் நயத்திலே தெரியும். 'காளியஸ்ய பணாக்ராம் சிரஸ்ஸு மே ஸக்ததம்ப சிகாத்வ மேவவா-அத்ய. ஜ்யேஷ்ட வாசஸ ஸுந்தர! த்வத் பதாப்ஜயுக மர்ப்பிதம் யயோ:' என்று ஸுந்தரபாஹு ஸ்தவத்திலே ஆழ்வானருளிச்செய்த ச்லோகம் இங்கே ஸ்மரிக்கத் தக்கது. (கண்ணபிரானுடைய திருவடியின் ஸ்பர்சம் பெறும்படியான பாக்கியம் பெற்ற காளியன் தலையாகவாவது, கடம்பமரத்தின் உச்சியாகவாவது என் தலை பெறுக்க விரும்புகின்ற தென்பது இந்த ச்லோகத்தின் தாத்பர்ய ஸங்க்ரஹம்.) நடம்—நடநம் என்ற வடசொல்லின் கடைக்குறை.

கூத்தனார் வரில்=அக்காளியன் தலையிலே நடமாடின ச்ரமத்தோடே தன் பக்கல் வந்தணையவேணுமென்று விருப்பம்போலும்.... ... ... (௪)

மாடமாளிகை சூழ் மதுரைப்பதி
நாடி* நந்தெருவின் நடுவே வந்திட்டு*
ஓடை மாமதயானை யுதைத்தவன்*
கூடுமாகில் நீ கூடிடு கூடலே. (௫)

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| ஓடை | நெற்றிப் பட்டத்தை யுடைத்தாய் | நாடி | (நம்வீட்டைத்) தேடிக்கொண்டு |
| மா மதம் | மிக்க மதத்தையுடைத்தான | | |
| யானை | (குவலயா பீடமென்னும்) யானையை | நம் தெருவின் நடுவே வந்திட்டு | நம்முடைய வீதியின் நடுவிலே வந்து |
| உதைத்தவன் | உதைத்து முடித்த கண்ணபிரான் | கூடும் ஆகில் | (என்னோடு) கூடுவானாகில் |
| மாடம் மாளிகை சூழ் மதுரை பதி | மாடங்களையுடைய மாளிகைகளாலே சூழப்பட்ட மதுரை மாநகரிலே | கூடலே நீ கூடிடு— | |

குவலயாபீடமென்னும் மதயானையை முடித்தருளின அபதானத்திலே ஈடுபட்டுப் பேசுகிறாள்.—வில்விழாவென்ற வ்யாஜம் வைத்துக் கம்ஸனால் வரவழைக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ண பலராமர்கள் கம்ஸனுடைய அரண்மனையை நோக்கிச் செல்லுகையில், அவ்வரண்மனைவாசல்வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவிநிறுத்தப்பட்ட குவலயாபீட மென்னும் மதயானை கோபித்துவர, அவ்யாதவவீரர் அதனை எதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை யெடுப்பதுபோல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அடித்து

அவ்யானையை உயிர்கொலைத்துவிட்டு உள்ளே போயினர் என்றவரலாறு இங்குணரத்தக்கது.

இரண்டாமடியின் இறுதியிலுள்ள வந்திட்டு என்ற வினையெச்சம்—உதைத்தவன் என்பதிலே அர்வயிப்பதல்ல; கூடுமாகில் என்பதிலே அந்வயிக்கக்கடவது. இப்போது, கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் இருப்பதாகவும், இவ்வாண்டாள் தான் வடமதுரையிலே யிருப்பதாகவும் பாவநாப்ரகர்ஷம் செல்லுகிறபடி. மதுரைப்பதிக்கு "மாடமாளிகைசூழ்" என்று விசேஷணமிட்ட ஸ்வாரஸ்யத்தைக் கண்டறிக. பெரியவாச்சான்பிள்ளை ரஸோக்தியாக அருளிச்செய்கிற ஸ்ரீஸூக்திகளைக்காணீர்—"அவன் வில்விழவுக்கென்று கோடித்தான்; இவள் இவன் வரவுக்கென்றிருக்கிறாள்".

"மதுரைப்பதியிலே நந்தெருவின்நடுவே வந்திட்டு" என்னுமளவே போதுமாயிருக்க, நாடி என்று விசேஷித்து அருளிச்செய்கையாலே, கண்ணபிரான் நேரேவந்து என் வீட்டில் புகுரலாகாது; நாச்சியார் திருமாளிகை எது? நாச்சியார் திருமாளிகை எது?" என்று ஊரெங்கும் விசாரித்துக்கொண்டு தேடிவரவேணுமென்னும் ஆவல் தோற்றும்.

"நம் தெருவின் நடுவே" என்றவிடத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்கிறார்—"திருவாய்ப்பாடியடையத் தன்னதானாப்போலே இங்கும் ஒருதிருமாளிகையுண்டு; உகந்தருளின விடமெங்கும் 'தேவக்வே தேவதேஹயம் மநுஷ்யத்வேச மாநுஷீ' என்கிறபடியே ஓரோ திருமாளிகை யுண்டு" என்று.—மதுரைப் பதியிலே ஆண்டாளுக்கென்று ஒரு தெருவும் திருமாளிகையுமுண்டோ? என்று பிறக்கும் சங்கைக்குப் பரிஹாரமாக இஃது அருளிச்செய்தபடி. ஆனால், பலச்ருதி சொல்லும் ஈற்றுப்பாட்டில் "ஆய்ச்சியர் கூடலைக் குழற்கோதை முன்கூறிய" என்றருளிச்செய்திருத்தலால் இத்திருமொழி முழுதும் ஆய்ச்சியர் பாசுரமேயொழிய ஆண்டாள் பாசுரமன்றென்றும், அநுகாரமாத்ரமே என்றும், ஆகவே நம்தெரு என்றவிடத்து நம் என்றது ஆய்ச்சியரையே யன்றி ஆண்டாளை யன்று என்றும் கொள்ளவேண்டுகையாலே பெரியவாச்சான் பிள்ளை அங்ஙனே அருளிச்செய்கைக்கு ப்ரஸக்தி? என்று சிலர் சங்கிக்கக்கூடும்; வஸ்துத: ஆய்ச்சியர் கூடலைக் குழற்கோதை அநுகரித்துக் கூறினாளாயினும்; கோதையாயிருக்குந்தன்மையும் கூடவே அநுஸந்தேயம். அப்படியல்லாவிடில் ஆண்டாளுக்குக் கவனசாதுரியம் மாத்திரம் ஏற்பட்டதாகுமே யொழிய (ஸாவஷ்டி) பாவவ்ருத்தியில் பரிபாகமென்பது சிறிதும் ஏற்படாமற்போகும். பாவநாப்ரகர்ஷத்தாலே அநுகாரம் முற்றிற்றென்னு தானான தன்மையோலிக்க மாட்டாதென்க. இனி நம் என்பதற்கு ஆய்ச்சியரையே பொருளாகக்கொண்டாலும் அவர்கட்குத்தான் மதுரைப்பதியில் வீதியுண்டோவென்றுஆராய்க.

ஓடை என்று யானையின் நெற்றிப்பட்டத்துக்குப் பெயர் ... ... (ரு)

அற்றவன் மருதமுறியநடை
கற்றவன்* கஞ்சனை வஞ்சனையிற்
செற்றவன்* திகழும் மதுரைப்பதி*
கோற்றவன்வரில் கூடிடுகூடலே,

| | | | |
|---|---|---|---|
| அற்றவன் | (ஏற்கனவே எனக்கு) அற்றுத் தீர்ந்தவனாய | வஞ்சனையில் | வஞ்சனையினாலே |
| மருதம் முறிய | (யமளார்ஜுந மென்னும்) மருத மரங்களானவை முறிந்து விழும்படியாக | செற்றவன் | கொன்று முடித்தவனாய் |
| நடை கற்றவன் | தவழ் நடை நடக்கக் கற்றவனாய் | திகழும் மதுரைப் பதி கொற்றவன் | விளங்குகின்ற மதுரைமாநகர்க்கு அரசனான கண்ணபிரான் |
| கஞ்சனை | கம்சனை | வரில் | வந்திடுவானாகில் |
| | | கூடலே! கூடிடு— | |

கண்ணபிரான் இரட்டை மருதமரங்களிடையே தவழ்ந்து சென்றதோர் அபதானத்தையும் கஞ்சனைக் கொன்றவாற்றையும் நினைத்து அவற்றிலே ஈடுபட்டுப் பேசுகிறாள்.

மருத முறிய நடைகற்ற வரலாறு வருமாறு—கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை க்ருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினாற்கட்டி ஒருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலையிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருத மரத்தின் நடுவே எழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்துவிழுந்தவளவில் முன் நாரதர் சாபத்தால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்ரீவன் என்னும் குபேரபுத்திரர் இருவரும் சாபந்தீர்ந்து சென்றனர். இந்த குபேரபுத்திரர்கள் முன்பு ஒருகாலத்தில் பல அப்ஸரஸ் ஸ்த்ரீகளுடனே ஆடையில்லாமல் ஜலக்ரீடை செய்து கொண்டிருக்கையில் நாரதமா முனிவர் அங்கு எழுந்தருள மங்கையர் அனைவரும் நாணங்கொண்டு ஆடையெடுத்து உடுத்துநிற்க, இந்த மைந்தர் மாத்திரம் மதுபானமயக்கத்தினால் வஸ்த்ரமில்லாமலேயிருக்க நாரதர் கண்டுகோபங்கொண்டு 'மரங்கள்போலிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபிக்க, உடனே அவர்கள் வேண்டிக்கொண்டதற்கு இரங்கி 'நெடுங்காலஞ்சென்றபின்பு திருமால் உங்களருகே நெருங்குஞ் சமயத்தில் இவ்வடிவமொழிந்து முன்னையவடிவம்பெற்றுமீள்வீர்' என்று சாபவிடை கூறிப்போயினர். இப்படி சாபத்தினால் மரங்களான இவற்றில், கம்ஸனால் ஏவப்பட்ட இரண்டு அஸுரர்களும் ஆவேசித்துக்கிடந்தனர் என்று கொள்ளல்வேண்டும்; "ஒருங்கொத்த இணை மருதம்உன்னியவந்தவரை" என்றும் "பொய்ம்மாயமருதான வசுரரை" என்றும் பெரியாழ்வார் அருளிச்செய்திருத்தலால்.

அற்றவன்—ஏற்கனவே "ஆண்டாளுக்கானவன் இவன்" என்னும்படி அற்றுத்தீர்ந்தவன். "பரித்ராணாய ஸாதூநாம்—ஸம்பவாமி யுகேயுகே" என்றிறே திருமுகப்பாசுரம்.

"அற்ற வல் மருதம் முறிய"—தன்னைக் கொல்லுவதாக நிச்சயித்தவந்த வலிய மருதமரங்கள் முறியும்படியாக என்று பொருள் கொள்ளக்கூடுமாயினும் ஸ்வரஸமன்று; வியாக்கியானத்திலுமில்லை.

கஞ்சனை வஞ்சனையிற் செற்ற வரலாறு—தன்னைக் கொல்லப்பிறந்த தேவகி புத்திரன் யசோதையினிடம் ஒளித்துவளர்தல்முதலிய வரலாறுகளை நாரதர் சொல்லக் கேட்டுக் கம்ஸன் அதிககோபங்கொண்டு க்ருஷ்ணனைக் கொல்ல நிச்சயித்து வில்விழாவென்கிற வியாஜம்வைத்துக் கண்ணனை மதுரைக்கு வரவழைத்துப்பலவகையில் வதைக்க வழிதேடுகையில் கம்ஸஸபையிலே கண்ணபிரான் வேகமாக எழும்பிக் கஞ்சனது மஞ்சத்தின்மேலேறி அவனது கிரீடம் கழன்று கீழேவிழும்படி அவனைத் தலைமயிர்பிடித்துத் தரையில் தள்ளி அவன் மேல் தான் விழுந்து அவனைக் கொன்றிட்டான் என்பதாம்.

வஞ்சனையில் என்ற விடத்துக்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்கிறார்—"தர்மயுத்தமே வேணுமென்று பெருமானைப் போலே யிருந்தானாகில் அவன்வஞ்சநமே தலைக்கட்டுமே; அவன்நினைத்த வஞ்சநத்தை அவன்றன்னோடே போக்கினபடி."

கண்ணபிரான் கம்ஸனைக் கொன்றபின்பு, மகனிழந்தவனும் தன் மாதாமஹனுமாகிய உக்ரஸேந மஹாராஜனைத் தளையினின்றும் விடுவித்து வடமதுரையிற் பட்டாபிஷேகம் செய்துவைத்தானாகையாலே * "திகழும்மதுரைப்பதிக் கொற்றவன்" உக்ரஸேநனேயாகிலும் கண்ணபிரானே ராஜா என்பது ஆண்டாளுடைய பக்ஷமாம். "नहि पालनसामर्थ्यमृते सर्वेश्वरं हरिम्" [நஹி பாலந ஸாமர்த்ய ம்ருதே ஸர்வேச்வரம் ஹரிம்] என்றிறே ப்ரமாணப்ரஸித்தியும். "வாசுதேவன் மதுரை மன்னன்" என்றார் பெரியாழ்வாரும். (சு)

அன்றின்னாதனசெய் சிசுபாலனும் *
நின்றநீள்மருதும் எருதும்புள்ளும் *
வென்றிவேல்விறற் கஞ்சனும்வீழ * முன்
கொன்றவன்வரில் கூடிடுகூடலே.

| | | | |
|---|---|---|---|
| அன்று | முற்காலத்தில் | வென்றி வேல் விறல்கஞ்சனும் | வெற்றியை விளைக்க வல்ல வேலாயுதமென்ன (அதைப் பிடிக்கத்தக்க) மிடுக்கென்ன இவற்றையுடையனான கம்சனும் |
| இன்னாதனசெய் சிசுபாலனும் | வெறுக்கக் கூடிய கெட்ட காரியங்களையே செய்துவந்த சிசுபாலனும் | வீழ | முடிந்து விழும்படியாக |
| நின்ற நீள் மருதும் | வழியிடையே நின்ற பெரிய இரட்டை மருதமரங்களும் | முன் | எல்லார் கண்ணெதிரிலும் |
| எருதும் | எழுரிஷபங்களும் | கொன்றவன் | கொன்றொழித்த கண்ணபிரான் |
| புள்ளும் | பகாஸுரனும் | வரில் | வரக்கூடுமாகில் |
| | | கூடலே! கூடிடு—. | |

சிசுபாலவதம் முதலிய ஐந்தாறு சரித்திரங்களிலே ஈடுபட்டுப் பேசுகிறாள். சிசுபாலன் வரலாறு:—விதர்ப்பதேசத்தில் குண்டினமென்கிற பட்டணத்தில் பீஷ்மகனென்கிற அரசனுக்கு ருக்மி என்கிற பிள்ளையும் ருக்மிணி என்கிற

பெண்ணாயிருந்தனள். அந்த ருக்மிணியானவள் ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அவதாரம். அவளுக்கு யௌவனம் வந்தவுடன் க்ருஷ்ணன் சென்று இப்பெண்ணை எனக்கு விவாஹஞ்செய்து கொடுக்கவேணுமென்று கேட்க, ருக்மியென்பவன் அவளைச் சேதிதேசத்தரசனான சிசுபாலனுக்குக் கொடுக்க விரும்பியவனாதலால் க்ருஷ்ணனுடைய விருப்பத்திற்கு உடன்படாதொழிந்தான். சில நாள் கழிந்தபின் அந்த ருக்மிணியின் கல்யாணத்துக்காக ஸ்வயம்வரங் கோடித்து ஸகல தேசத்து அரசர்களையும் ருக்மி வரவழைத்தான். அவர்கள் வந்துசேர்ந்தவுடனே க்ருஷ்ணனும் பல ராமாதிகளைக் கூட்டிக்கொண்டு அப்பட்டணத்துக்குப் போய்க் கல்யாணத்துக்கு முதல்நாள் அந்த ருக்மிணியை மாயமாய் அபஹரித்துக்கொண்டு வந்துவிட்டான். பின்பு அங்குள்ள தந்தவக்த்ரன் முதலிய பல அரசர்கள் போர் செய்ய எதிர்த்துவர, அவர்களைப் பலராமனும் கண்ணபிரானும் முதுகுகாட்டி ஓடும்படி செய்துவிட்டனர். பிறகு ருக்மிணிப் பிராட்டியின் தமையனான ருக்மியானவன் 'இப்படி செய்கையாவது என்?' என்று எதிர் பொருது மீட்பதாக நினைத்துவந்து கண்ணனைத் தகைய, அப்போது ஸ்ரீ க்ருஷ்ணன் 'இவனைக்கொன்றால் ருக்மிணி மனம் வருந்துவாள்' என்று அவனைப்பிடித்துத் தனது தேர்க்காலிலே கட்டி அப்பாலே அவனது தலையைச் சிரைத்திட்டு மானபங்கஞ் செய்துவிட்டுப் பின்பு ருக்மிணியை விதி பூர்வகமாகக் கல்யாணஞ் செய்துகொண்டான். இஃது இப்படி நிற்க:—சிசுபாலன் பிறந்தபொழுது, நான்கு கைகளையும் மூன்று கண்களையு முடையனாயிருந்தான். அப்பொழுது அனைவரும் இது என்னவென்று வியக்கும்போது ஆகாயவாணி யார் இவனைத் தொடுகையில் இவனது கைகளிரண்டும் மூன்றாம் விழியும் மறையுமோ, அவனால் இவனுக்கு மரணம் என்று கூறிற்று; அவ்வாறே பலரும் தொடுகையில் மறைபடாத கைகளும் கண்ணும் கண்ணபிரான் தொட்டவளவிலே மறைபட்டன, அதனால் 'இவனைக்கொல்பவன் கண்ணனே' என்றறிந்த சிசுபாலன் தாய் யாதுசெய்யினும் என்மகனைக் கொல்லலாகாது' என்று கண்ணனை வேண்ட, அந்த அத்தையின் நன்மொழிக்கு ஒருசார் இணங்கிய கண்ணன் 'இவன் எனக்கு நூறுபிழைசெய்யுமளவும் இவன் பிழையை நான் பொறுப்பேன் என்று கூறியருளினன். பின்பு சிசுபாலன், தனக்குக் கண்ணன் சத்ருவென்பதை இளமையிலேயே அறிந்து அதனாலும் பூர்வஜந்ம வாஸனையாலும் வளர்ந்த மிக்க பகைமையைப் பாராட்டி, எப்பொழும் அப்பெருமானுடைய குணங்களையும் திவ்யசேஷ்டிதங்களையும் நிந்திப்பதே தொழிலாக இருந்தான். இவனுக்கு மணஞ்செய்து கொடுப்பதென்று நிச்சயித்துவைத்திருந்த ருக்மிணியைக் கண்ணன் வலியக் கவர்ந்து மணஞ்செய்துகொண்டதுமுதல் இவன் கண்ணனிடத்து மிக்க வைரங் கொண்டனன். பின்பு இந்த்ரப்ரஸ்த நகரத்தில் நடந்த ராஜஸூய யாகத்தில் தர்மபுத்திரனால் கண்ணபிரானுக்கு அக்ரபூஜைசெய்யப்பட்டதைக் கண்டு அளவிறந்த வசைச்சொற்களைப் பிதற்றி அதுபற்றிக் கண்ணபிரானுடைய

திருவாழியினால் தலைதுணிக்கப்பட்டு இறந்து தேஜோமயமான திவ்யசரீரம் பெற்று எம்பெருமானது திருவடியை அடைந்தனன்.

இன்னாதன்—இனியவையல்லாதவை; அனைவராலும் இகழத்தக்கவை என்றபடி. "பலபல்நாழஞ் சொல்லிப் பழித்த சிசுபாலன்" என்றும், "கேட்பார் செவிசுடு கீழ்மைவசவுகளே வையும், சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன்" என்றும் அருளிச் செய்துள்ளமை காண்க.

எருதும்=கும்பனென்னும் இடையர் தலைவனது மகளாயும் நீளாதேவியின் அம்சமாகப் பிறந்ததனால் நீளா என்ற பெயரால் வழங்கப்பட்டு வருபவளுமான நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்து கொள்ளுதற்காக அவளது தந்தை கந்யாசுல்கமாகக் குறித்தபடி யாவர்க்கும் அடங்காத அஸுராவேசம் பெற்ற ஏழு எருதுகளையும் கண்ணபிரான் ஏழுதிருவுருக் கொண்டுசென்று வலியடக்கி அப்பிராட்டியை மணஞ்செய்துகொண்ட வரலாறு அறிக. அன்றியே, இங்கு எருதும் என்றது அரிஷ்டாஸுரனைச் சொல்லிற்றாகவுமாம். கம்ஸனால் ஏவப்பட்ட அசுரர்களில் அரிஷ்டனென்பவன் எருதுவடிவங்கொண்டு பசுக்களையெல்லாம் முட்டி இடைச்சேரியைப் பயப்படுத்திக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ணனது திருவயிற்றின் மேல் கண்வைத்துக்கொம்புகளை நீட்டிப் பாய்ந்துவர, கண்ணபிரான் அவனைக் கொம்புகளிற் பிடித்து அசைய வொட்டாமற் செய்து தன்காலினால் அவன் வயிற்றில் ஓங்கி இடித்து அவன் கழுத்தைப் பிடித்துக்கசக்கி அவனுடைய கொம்புகளில் ஒன்றைப் பறித்து அதனாலேயே அவனையடித்துக் கொன்றனன் என்ற கதை அறியத்தக்கது.

புள்ளும்=பகன் என்னும் ஓரஸுரன் கொக்குவடிவங்கொண்டு கண்ணபிரானைக் கொல்வதாக நெருங்கிவர, அப்பொழுது கண்ணன் அப்பறவையின் வாயலகுகளை இருகையாலும் பிடித்துக் கிழித்து அதனை அழித்தனன் என்றுணர்க. .... .... .... .... .... .... .... .... (எ)

ஆவலன்புடையார்தம் மனத்தன்றி
மேவலன் * விரை சூழ்துவராபதிக்
காவலன் * கன்றுமேய்த்து விளையாடும் *
கோவலன்வரில் கூடிடுகூடலே.

| | | | |
|---|---|---|---|
| ஆவல் அன்பு உடையார்தம் | ஆவலையும் அன்பையும் உடையவர்களுடைய | கன்று மேய்த்து விளையாடும் கோவலன் | கன்றுகளைமேய்த்து விளையாடும் கோபாலனுமாகிய கண்ணபிரான் |
| மனத்து அன்றி மேவலன் | நெஞ்சுதவிரமற்றோரிடத்திலும் பொருந்தாதவனும் | வரில் | வரக்கூடுமாகில் |
| விரை சூழ் துவராபதி காவலன் | நல்ல வாஸனை சூழ்ந்த த்வாரகாபுரிக்கு நிர்வாஹகனும் | கூடலே! கூடிடு— | |

ஆவல் அன்புடையார்தம் = ஆவல் என்றும் அன்பு என்றும் பொதுப் படையாக ப்ரேமத்தைச் சொல்லுமாகிலும், கோபம் ரோஷம் இத்யாதிபதங் களின் அர்த்தத்திலே நுட்பமான பேதம் இருக்கிறாப்போலே இங்கும் சிறிது பேதம் உண்டு; 'எம்பெருமானே உபாயோபேயங்கள்' என்கிற அத்யவஸாயம் கிடக்கச்செய்தேயும் நோன்பு நோற்பது, காமன்காலிலே விழுவது, சிற்றிலைப் பது பனிநீராடுவது, கூடலிழைப்பது இவைபோல்வன அதிப்ரவ்ருத்திகளில் துணிவைப் பிறப்பிக்கும் ப்ரேமம் ஆவலெனப்படும். "மல்லாண்டதிண்டோள் மணிவண்ணா!" என்று எம்பெருமானுடைய மிடுக்கின் மிகுதியை அறிந்திருக்கச் செய்தேயும் அவனை ரக்ஷ்யனாகவும் தன்னை ரக்ஷகனாகவும் நினைத்துப் பல்லாண்டு பாடுகையிலே ஒருப்படுத்தும் ப்ரேமம் அன்பு எனப்படும் என்று கொள்க. ஆவல்— ஆண்டாளுடைய படி; அன்பு—இவளுடைய திருத்தகப்பனாரான பெரியாழ்வாரு டையபடி. ஆக இவ்விரண்டையும் சொன்னவித்தால் தங்கள் குடியிலுள்ளார் மனத்தோடல்லது வேறொருவர்மனத்தோடு பொருந்தமாட்டான் எம்பெருமான் என்றுரைத்தது. மேவலன் = விரும்பாதவன் என்றபடி; "நம்பும் மேவும் நசையா குமே." என்பது தொல்காப்பியம்.

துவராபதிக்காவலன் = 'காலயவநன்' என்பானொருவன் செருக்கித் திரிந்து கொண்டிருக்கையில் ஒரு நாள் நாரதரைப் பார்த்து 'இவ்வுலகினில் சூரரானவர் யாராவது உண்டா? என்று கேட்க; மதுரையில் யாதவர்கள் இருக்கிறார்கள், அவர்கள் மிக்க பராக்ரமசாலிகள்' என்று நாரதர் சொல்ல, அதைக்கேட்டவுடனே அவன் அங்கிருந்து புறப்பட்டு மதுரைக்கு வந்து யாதவர்களுடன் போர்செய்யத் தொடங்க, அப்பொழுது கண்ணபிரான் இதையறிந்து மேற்கடலுக்குச் சென்று அங்கு ஸமுத்ரராஜனை யாசித்துப் பன்னிரண்டு யோஜனை விஸ்தீர்ணமுள்ள இடத்தைவாங்கி அங்கு த்வாரகை என்றொரு பட்டணம் அமைத்து மதுரையி லுள்ள யாதவர்களை அங்கு அழைத்துக்கொண்டு போய் வைத்துக் காலயவநனு டைய பயத்தில் நின்றும் விடுவித்த வரலாறு அறிக.

துவராவதி = [த்வாரவதி] என்ற வடசொல் திரிபு. விரைசூழ் என்று த்வா ரகைக்கு விசேஷணமிட்டது-"மட்டேறு கற்பகத்தை மாதர்க்காய் வண்துவரை நட்டானை" என்ற அருளிச்செயலில் அமைந்த கதையைத் திருவுள்ளம்பற்றி என்னலாம். கண்ணபிரான் ஸத்யபாமையினுடைய வேண்டுகோளுக் கிணங்கி இந்திரன் காவினிலிருந்த பாரிஜாத தருவை த்வாரகையிலே கொணர்ந்து நாட் டினதனால் விரைசூழப் பெற்றதென்க.

[காவலன் கோவலன்] பரத்வம் ஒருபக்கத்திலே, ஸௌலப்யம் ஒருபக்கத் திலே, [illegible] வாலேள வத்ஸவாலேள [illegible]; ['ஸர்வஸ்[illegible]ஜகத: பாலோ வத்ஸபாலோ பபூவ ஹ:'] என்ற [illegible]ப்போலே அதிசயப்படுகிறு ளாய்த்து. .... ... ... .... ... .... .... ....

கொண்டகோலக் குறளுருவாய்ச்சென்று*
பண்டுமாவலிதன் பெருவேள்வியில்*
அண்டமும்நிலனும் அடியொன்றினால்*
கொண்டவன்வரில் கூடிடுகூடலே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| பண்டு | முற்காலத்திலே | அண்டமும் | மேலுலகங்களையும் |
| கோலம் கொண்ட குறள் உரு ஆய் | (முப்புரி நூலும் க்ருஷ்ணாஜிநமும் முஞ்ஜியும் பவித்ரமும் தண்டமான) கோலம் பூண்ட வாமந ரூபியாய் | நிலனும் | கீழுலகங்களையும் |
| | | அடி ஒன்றினால் | ஒவ்வோரடியாலே |
| | | கொண்டவன் | அளந்து கொண்ட த்ரிவிக்ரமன் |
| மாவலி தன் பெரு வேள்வியில் | மஹாபலியினுடைய சிறந்த யாகபூமியிலே | வரில் | வருவானாகில் |
| சென்று | எழுந்தருளி | கூடலே! கூடிடு—. | |

வாமநாவதாரத்திலும் த்ரிவிக்ரமாவதாரத்திலும் ஈடுபட்டுப் பேசுகிறாள். இவ்வவதார சரித்திரம் ப்ரஸித்தம். இயற்கையான அழகுக்குமேலே யஜ்ஞோபவீத, க்ருஷ்ணாஜிந, பவித்ர, தண்ட, மௌஞ்ஜீ முதலியவற்றை யணிந்துகொண்டதனாலே யுண்டான செயற்கை யழகு வீறு பெற்றிருந்தமையினால் கொண்டகோலம் எனப்பட்டது. [பெரு வேள்வியில்.] எம்பெருமானைக் காண்பதற்கு நான் இப்பாடுபடுகிறேன்; பகவத்விபூதிதஸ்கரர்களில் தலைவனான மஹாபலி ஒரு ச்ரமமுமில்லாமல் அப்பெருமானை யஜ்ஞவாடத்திலே கையிலங்கு நெல்லிக்கனியாகக் காணப்பெற்றானே!, அவ்வேள்வியின் பெருமை என்னே! என்று கொண்டாடுகின்றமை தோன்ற "வேள்வியில்" என்னாதே "பெரு வேள்வியில்" என்கிறாள்.

"அடி யொன்றினால்" என்றது "அடி ஒவ் வொன்றினால்" என்றபடி (கூ)

பழகுநான்மறையின்பொருளாய்* மத
மொழுகுவாரண முய்யவளித்த* எம்
அழகனாரணியாய்ச்சியர் சிந்தையுள்*
குழகனார்வரில் கூடிடுகூடலே. (௧0)

| | | | |
|---|---|---|---|
| பழகு நால்மறையின் பொருள் ஆய் | அநாதியான சதுர்வேதங்களின் உட்பொருளாயிருக்குமவனாய் | எம் அழகனார் | எம்மை ஈடுபடுத்தவல்ல அழகையுடையனாய் |
| மதம் ஒழுகு வாரணம் உய்ய அளித்த | மத ஜலம் பெருகா நின்ற கஜேந்த்ராழ்வான் (துயர் நீங்கி) வாழும்படி க்ருபை செய்தருளினவனாய் | அணி ஆய்ச்சியர் சிந்தையுள் குழகனார் | அழகிய கோபிமார்களின் நெஞ்சினுள்ளே குழைந்திருக்குமவனான கண்ணபிரான் |
| | | வரில் | வரக்கூடுமாகில் |
| | | கூடலே! கூடலே—. | |

முதலை கோள்விடுத்து கஜேந்த்ராழ்வானைக் காத்தருளிய அபதானத்திலே; ஈடுபட்டுப் பேசுகிறாள். "வெதைஃ ஸவைஃ ரஹமேவ வெத்யஃ" [வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:] இத்யாதி ப்ரமாணங்களையுட்கொண்டு "பழகு நான் மறையின் பொருளாய்" என்றாள். அக்கினி, இந்திரன், வாயு முதலிய தேவதை களைப் பற்றியும் வேதங்களில் கர்மகாண்டங்களிலே பாக்கப் புகழ்ந்து பேசப் பட்டிருப்பினும் '[அங்காந்யந்யா தேவதா:'] என்று அந்த வேதந்தானே அந்த தேவதைகளை எம்பெருமானுக்கு அவயவபூதங்களாகச் சொல்லி வைக்கை யாலே அவயவங்களைப் புகழ்ந்து சொல்வதும் அவயவிக்கே அதிசயமாக முடிகை யாலே தேவதாந்தர ப்ரசம்ஸாபரமான கர்மகாண்டமும் பகவத்பரமேயாகக் குறையில்லை யென்க. 'வேததாத்பர்ய ஸர்வஸ்வம்' என்னும் நூலிலே இவ்விஷயத் தைப் பரக்கப்பேசியுள்ளோம்; அங்கே விரியக் கண்டு கொள்க.

வாரணம்—தற்சமவடசொல். "வாரணமுய்ய வளித்த வெம்மழகனார்" என்று சேர்க்கையின்பம் நோக்கி ஒரு கருத்துங் கூறலாம்; அதாவது—கஜேந்த் ராழ்வானுடைய கூக்குரலைக் கேட்டவுடனே எம்பெருமான் அரைகுலையத் தலை குலைய விரைந்தோடுங்கால் ஸ்ரக்பூஷாம்பராதீநி ... [ஸ்ரக்பூஷாம் பராயதாயதாம் ததாந:—ஸ்ரீரங்கராஜஸ் தவம் உத்தரசதகம்] என்றபடி ஆடை யாபரணம் அலங்கல் முதலியவற்றை ஜல்லாரிபில்லாரியாக அணிந்து கொண்டு புறப்பட்ட அழகு ஆண்டாள் நெஞ்சிலே ஊற்றிருந்து ஈடுபடுத்துகிறபடி.

அணியாய்ச்சியர் சிந்தையுள் குழகனார்—"கொங்கைமேற் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேல் என்னாவி தங்கும்" என்னும்படியான காதல் விளர்ந்துள்ளவர்களுக்கு இவன் அப்போதே சென்று முகங்காட்டாவிடில் அவர்கள் மிகவும் மனம் நொந்து ப்ரணயரோஷம் தலையெடுக்கப் பெற்று "அந்த க்ருஷ்ணன் இனி என்றைக்கும் நம்மருகே வாராமலேயா போகப் போகிறான்! என்றைக்காவது ஒருநாள் அகஸ்மாத்தியாய்வந்து நிற்பனன்றோ; அப்போது நாம் அவனுக்கு முகங்கொடுக்கக் கடவோமல்லோம்" என்று திண்ணிதாக ஸங்கல்பம் செய்து கொண்டவர்களுங்கூட மறம்தீர்ந்து மேல்விழுந்தணையும்படி அவர்களைப் பிச்சேற்றவல்ல நல்விரகுகள் அறியுமவன் கண்ணபிரான் என்க.

வரில் கூடிடு கூடலே;—'அடியேனை நணியேன்' என்றாற்போலே தாழ்வு களுஞ் சொல்லி அவர்களை ஊடல் தீர்த்து அவர் களோடே ஒருநீராகக் கலந்து அவர்களுடைய மனநோயைத் தீர்ப்பதுபோல எனது மனநோயையும் தீர்க்க என்னோடும் ஒருகால் வந்து கூடவேண்டாவா? ...... (கம)

ஊடல்கூட லுணர்தல் புணர்தலை*
நீடுநின்ற நிறைபுகழாய்ச்சியர்*
கூடலைக் குழற்கோதைமுன்கூறிய*
பாடல் பத்தும்வல்லார்க்கில்லை பாவமே. (கக)

| | | | |
|---|---|---|---|
| ஊடல்கூடல் | ஊடலோடே கூடியிருக்கையென்ன, (அதாவது - ப்ரணயரோஷலக்ஷிதைகளாயிருக்கை யென்ன) | நிறை புகழ் ஆய்ச்சியர்கூடலை | நிறைந்த புகழையுடைய ஆய்ப்பெண்கள் (இழைத்த) கூடலைப் பற்றி |
| உணர்தல் | குறைகளை உணர்த்துகை யென்ன | குழல் கோதை | அழகியமயிர்முடியையுடையளான ஆண்டாள் |
| புணர்தல் | (பிறகு) ஸம்ச்லேஷிக்கையென்ன (இப்படிப்பட்ட காரியங்களிலே) | கூறிய | அருளிச்செய்த |
| | | பாடல் பத்தும் | பத்துப் பாட்டுக்களையும் |
| | | வல்லார்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| நீடு | அநாதிகாலமாக. | | |
| நின்ற | நீடித்துப் பொருந்தி நின்ற | பாவம் இல்லை | (எம்பெருமானைப் பிரிந்து துக்கிக்கும்படியான) பாவம் இல்லையாம். |

இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லி முடிக்கிறது இப்பாட்டு. "ஊடல்கூடல்" என்றது—ஊடலென்ன கூடலென்ன என்று இரண்டாகச் சொல்வதல்ல; ஊடலோடு கூடுகை யென்றாய் ஊடுகையை மாத்திரம் சொல்லிற்றாகக் கொள்க. ஊடலாவது ப்ரணய கலஹம்; ஊடல்கூடலாவது அதை உடைத்தாயிருக்கை; ப்ரணயரோஷவிசிஷ்டத்வம். "போதுமறித்துப் புறமே வந்து நின்றீர், ஏதுக்கிதுவென் இதுவென் இதுவென்னோ?" என்றும் "என்னுக்கு அவளை விட்டிங்கு வந்தாய் இன்னம் அங்கே நட நம்பி! நீயே" என்றும், "உன்னுடைய சுண்டாயம் நானறிவன் இனியது கொண்டு செய்வதென், என்னுடைய பந்துங்கழலும் தந்து போகு நம்பி!" என்றும் இப்படிகளிலே சொல்லி எம்பெருமானைக் கிட்டவொட்டாமல் தகவடைத்துத் தள்ளுகை ஊடல் எனப்படும்.

உணர்தல் = "உணர்த்தல்" என்று பிறவினையாயிருக்க வேண்டுவது ஓசையின்பம்நோக்கி 'உணர்தல்' என்று பிரயோகிக்கப் பட்டிருக்கிறதென்று ஒருபெருங்கல்வியாளர் சொல்லுவர். ஸம்ச்லேஷம் பெறாமல் தாங்கள் துடிக்கிறபடியை எம்பெருமானுக்கு நேரிலும் தூதுமூலமாகவும் தெரிவித்தல். உணர்தல் என்றதற்கு இங்கு இதுவே பொருள் என்பர். இனி, புணர்தலாவது இவர்களுடைய துடிப்பை எம்பெருமான் நன்கு அறிந்து "உங்களை விட்டால் எனக்கு வேறு புகலுண்டோ? என்னை வேறாக நினைக்கலாமோ? அடியேனல்லேனோ?" என்றாற்போலே ஆற்றாமை மீதூர்ந்தமை தோற்றப் பலபாசுரங்களைச் சொல்லிக்கொண்டு இவர்களின் புறமே வந்து நிற்பதும் முற்றம் புகுந்து முறுவல் செய்து நிற்பதாய் நெருங்கினவாறே இவர்கள் பரவசைகளாய் அவனோடு கலந்து பரிமாறுகை. ஆக, ப்ரணய ரோஷந் தோற்றப் பேசுகையென்ன, தங்கள் வருத்தம் அவன் திருவுள்ளத்திலே படும்படி உணர்த்துவதென்ன, பின்பு இஷ்டப்படி ஸம்ச்லேஷிக்கை யென்ன ஆகிய இப்படிப்பட்ட காரியங்களே யாத்திரையாயிருப்பவர்கள் ஆய்ச்சிகள் என்றவாறு.

இப்பாட்டின் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் "உணர்தல் புணர்தலை" என்றவிடத்திற்கு "இவன்றன் குறைகளை அவர்கள் உணர்த்தும்படியும் அவன் பின்பு க்ஷாமணம் பண்ணிப் புணரும்" என்ற வாக்கியம் அச்சுப்பிரதிகள் எல்லாவற்றிலுங் காணப்படுகிறது. இது அசங்கித

வாக்யம்; (அச்சுப்பிழை.) தாளகோசங்களில் சுத்தபாடம் காணத்தக்கது. திருவாய்மொழியில் [கூ-க-டு.) "உணர்த்தலூட லுணர்ந்து" என்ற பாட்டின் ஈட்டிலே; போக(ஸம்போக)ப்ரகாரந்தான் மூன்றுவகைப்பட்டாயிற்றிருப்பது; அவையாவன:- 'ஊடலுணர்தல் புணர்தலிவை மூன்றும் - காமத்தாற் பெற்றபயன்' (திருவள்ளுவர் குறள்.) என்று மூன்றையும் ப்ரயோஜநமாகச் சொன்னார்கள் தமிழர்; இதிலே ஊடலாவது - எதிர்த்தலையோடே கூடினால் அஹேதுகமாக விளைவதொன்று: அதுதான் -'என்னையொழியக் குளித்தாய், என்னையொழியப் பூவைப்பார்த்தாய், உன் உடம்பு பூநாறிற்று' என்றாற்போலே வருமவை. உணர்த்தலாவது - 'உனக்கென்று குளித்தேன்;' என்கையும் 'உனக்கு ஆம்' என்று பார்த்தேனென்கையும், 'உன்வரவுக்கு ஒப்பித்தேன்' என்றாற்போலே சொல்லுமிவை; இவையிரண்டின் அநந்தரத்தே வருவது கலவி." என்றருளிச் செய்யப்பட்டிருப்பது நோக்கத்தக்கது. மேல் உதாஹரிக்கப்பட்ட குறளின் உரையும் காணத்தக்கது. "ஊடலுணர்தல் புணர்தலிவை காமங்கூடியார் பெற்றபயன்" என்று குறளின் பாடங் காண்கிறது. [புணர்ச்சிமகிழ்தல் என்ற அதிகாரத்தில் ஒன்பதாவது குறள் இது.]. உணர்தல் என்பதற்கு - 'தலைமகன் தன்னுடைய தவறில்லாமையைச்சொல்லி நாயகியினுடைய ஊடலை நீக்குதல்' என்று பொருளுரைக்கப் பட்டிருக்கின்றது.

"புணர்தலை" என்ற விடத்துள்ள ஐகாரம் சாரியை. நீநேன்ற-கண்ணபிரானோடே சிலகாலம் ப்ரணயகலஹமாய்ப் போதுபோக்குவதும், சிலகாலம் ஸம்ச்லேஷரஸமாய்ப் போதுபோக்குவதுமாகிய இக்காரியங்களையே அநாதிகாலமாய்த்தொழிலாகக் கொண்டவர்கள் ஆய்ச்சிகள் என்க.

நிறை புகழ் ஆய்ச்சியர் - நம்மைப்போலே * உண்டியே உடையே உகந்தோடித் திரிந்து பழுதேபலபகலும் போக்காமல் முச்சந்தியும் பகவத்விஷய சிந்தனையேயாய்ப் போது போக்குகிறார்கள் ஆய்ச்சிகள் என்ற காரணத்தினால் அவர்கட்குப் புகழ்நிறைந்திருக்குமென்று ஸாமாந்யமாகச் சிலர் அர்த்தம் கொள்ளக்கூடும். இவ்விடத்திற்கு எம்பார் ஒரு விசேஷார்த்தம் அருளிச் செய்வராம்; (அதாவது) "ஆய்ச்சியர்க்கு நிறைபுகழாவது, க்ருஷ்ணனை இன்னாள் நாலுபட்டினி கொண்டாள் இன்னாள் பத்துப்பட்டினி கொண்டாள் என்னும் புகழ்காணும்" என்பராம். இதன்கருத்தென்னென்னில்; "கூர்மழைபோல் பனிக்கூதலெய்திக் கூசிநடுங்கி யமுனையாற்றில், வார்மணற்குன்றில் புலர நின்றேன் வாசுதேவா! உன்வரவுபார்த்தே" இத்யாதிப்படியே கண்ணபிரானுடைய வரவை எதிர்பார்த்திருப்பவர்கள் பல மாதர்; இவன் இப்படி பலபேர்களை எதிர்பார்த்திருக்கும்படி செய்துவிட்டுத் தன்மனத்துக்கினியாளான ஒருத்தியோடே கலந்திருந்து போதுபோக்கும்; அப்போது, எதிர்பார்த்திருந்த மாதர்கள் "இன்னமென் கையகத்து ஈங்கொருநாள் வருதியேல் என்சினம் தீர்வன்நானே" என்றபடி "இனி அந்தக் கண்ணபிரான் இங்கே வருவானாகில் முகங்கொடுத்து ஒரு வார்த்தையும் சொல்லக்கடவோமல்லோம்" என்று ஸங்கல்பம் செய்துகொண்டு

அளிவற்று ரோஷத்துடனிருப்பர்கள். பிறகு தனக்கு ஒழிந்தபோது ஒருநாள் கண்ணபிரான் அளவிறந்த அன்புபூண்டவன்போல ஆடிப்பாடிக்கொண்டு அவர்கள் முன்னே வந்துநிற்பன்; அப்போது அவர்கள் தாங்கள் முன்பு செய்துகொண்ட ஸங்கல்பத்தின்படியே முகங்கொடாமலே யிருப்பர்கள். அப்போது இவன் கண்ணீர்விட்டழுவதும் காலில் கும்பிடுவதுமாய் ஊணுமுறக்கமுமில்லாமல் பல நாட்கள்ளவும் அவர்கள் வீட்டைவிட்டுப் போராதே இடைகழித் திண்ணையிலே கிடந்துபடுவன். இப்படி நாலுநாள் பட்டினிகிடந்தபிறகு ஒருத்தி மனமிரங்கி முகங்கொடுப்பள்; மற்றொருத்தி அவ்வளவிலும் மறம்மாறாதே இவன் எட்டுநாள் பட்டினி கிடந்தபின்பு முகங்கொடுப்பள், மற்றுமொருத்தி அவ்வளவிலும் ஊடல்தீராதே இவன் பத்துநாள் பட்டினி கிடந்தபின்பு முகங்கொடுப்பள். இப்படி பலபலநாள் பட்டினிகிடந்தாகிலும் அவ்வாய்ச்சிகள் பக்கலிலே இவன் முகம்பெற நினைப்பது-அவர்களிடத்துள்ள தேஹகுணம் ஆத்மகுணம் முதலியவற்றாலான வைலக்ஷண்யத்தைப் பற்றியிறே. இதனால் அவர்களுடைய புகழ் விளங்குமாய்த்து.

"கோதை கூறிய" என்னாதே "குழற் கோதை கூறிய" என்கையாலே "இவள் தன்மயிர் முடியாலே அவனைக் கூடலிழைப்பிக்கவல்லவள்" என்று நிர்வாகமாக அருளிச்செய்வர் பெரியவாச்சான்பிள்ளை. இப்பத்துப்பாட்டையும் ஓதவல்லவர்களுக்குப் பாவம் இல்லை என்றது-பகவத்ஸம்ச்லேஷத்துக்காகக் கூடலிழைத்து வருந்தவேண்டும்படியான பாவமில்லை யென்றபடி. இவ்வருளிச்செயலை ஓதவே அநாயாஸமாக பகவத்ஸம்ச்லேஷம் வாய்க்கு மென்று கருத்து. .... .... .... .... .... .... .... (கக).

அடிவரவு:—தெள்ளி காட்டில் பூமகன் ஆய்ச்சி மாடம் அற்றவன் அன்று ஆவல் கொண்ட பழகு ஊடல் மன்னு.

நாச்சியார் திருமொழி உரை முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# ஐந்தாந் திருமொழி - மன்னுபெரும்புகழ்

## உரையவதாரிகை.



கீழ்த்திருமொழியில் "நீ கூடிடு கூடலே;, நீ கூடிடுகூடலே!" என்று பலகால் சொன்னவளவிலும் கூடுவேன் என்றாவது கூடேன் என்றாவது ஒருவிதமான மறுமொழியும் அது சொல்லவில்லை. இது அசேதநமாகையாலே சொல்லமாட்டாது என்றறிந்தாள். பிறகு, அருகேயிருந்த ஒரு குயிலை நோக்கினாள். அக்கண்ணபிரானும் தானுமாய்க் கூடியிருக்குங் காலங்களில் அக்குயில் அணுகியிருந்து வார்த்தை சொல்லிக் கொண்டிருந்த பழக்கத்தால் "ஓ குயிலே! என்னையும் அவனையும் நீ கூட்டக்கடவையோ? எப்படியாவது அவன் என்னிடம் வந்துகூடும்படி கூவாய் பார்ப்போம்" என்று பலகாலுஞ் சொல்லி அக்குயிலின் காலிலே விழுந்து வேண்டுகிறாளாய்த்து - இத்திருமொழியில். .... .... ....

மன்னுபெரும்புகழ்மாதவன் மாமணிவண்ணன்மணிமுடிமைந்தன்
தன்னை * உகந்துகாரணமாக என்சங்கிழக்கும்வழக்குண்டே *
புன்னைகுருக்கத்திநாழல்செருந்திப் பொதும்பினில்வாழுங்குயிலே *
பன்னியெப்போதுமிருந்துவிரைந்தென் பவளவாயன்வரக்கூவாய். (க)

புன்னை - புன்னைமரங்களும்
குருக்கத்தி - குருக்கத்திமரங்களும்
நாழல் - கோங்குமரங்களும்
செருந்தி - சுரபுன்னைமரங்களும் (இவை முதலிய பல மரங்கள் நிறைந்த)
பொதும்பினில் - சோலையிலே
வாழும்-வாழுகின்ற
குயிலே! - கோகிலமே!
மன்னு பெரும் புகழ் } நித்யமாய் அளவில்லாத புகழையுடையவனாய்
மாதவன் - ச்ரிய: பதியாய்
மா மணி வண்ணன் - நீலமணி போன்ற நிறத்தை யுடையனாய்
மணி முடி-நவமணிகள் அழுத்திச் சமைத்த திருவபிஷேகத்தையுடையனாய்
மைந்தன் தன்னை-மிடுக்கை யுடையனான எம்பெருமானை

உகந்து காரணம்ஆக } ஆசைப்பட்டதுவே ஹேதுவாக
என் சங்கு இழக்கும் வழக்கு } என்னுடைய வளைகள் கழன்றொழியும்படியான நியாயம்
உண்டே? -(உலகத்தில்)உண்டோ;(இது வெகு அநியாயமாயிருக்கிறது)
(இதற்கு நான் என்செய்வேன் என்கிறாயோ)
என் பவளம் வாயன் } பவளம் போற் பழுத்த திருவதரத்தை யுடையனான எனது நாயகன்
வர-(என்னிடம்) வந்து சேரும்படி
எப்போதும் - இரவும் பகலும்
பன்னி இருந்து - (அவனது திருநாமங்களைச்) சுத்திக் கொண்டிருந்து
விரைந்து கூவாய் - சீக்கிரமாகக் கூவவேணும்.

* * * * — உலகத்தில் அனைவராலும் பழிக்கப்பட்டவனும் பிச்சைக் காரனும் கண்கொண்டு காணவொண்ணாத விகாரமான ரூபத்தையுடையனும் அனைவர்க்கும் கீழ்ப்பட்டவனுயுமுள்ள ஒரு காபுருஷனை நான் ஆசைப்பட்டேனாகில் எக்கேடுகெட்டாலும் பாதகமில்லை; நான்கு திசைகளிலும் ப்ரஸித்தியகீர்த்தியையுடையவனாய் ஸாக்ஷாத் திருமாமகள் கொழுநனாய் கண்டார்கண்களைக் கவரும்படியான நீலமணிபோன்ற நிறத்தையுடையனாய் 'அனைவரையும் ரக்ஷித்தருள்க்கடவேன்' என்று முடிகவித்துக்கொண்டிருப்பவனாய் நினைத்தபடிசெய்து முடிக்கவல்ல வலிவுபடைத்தவனான எம்பெருமானை நான் ஆசைப்பட்டு இக்கேடு கெடுகிறேனே! இது நியாயந்தானோ? இங்ஙனேயோ உலகநீதியிருக்கும்படி! என்கிறாள் முன்னடிகளில். [என்சங்கு இழக்கும் வழக்கு உண்டே?] சங்கு இழத்தலாவது - கைவளை கழன்றொழிகை; தலைமகனைப்பிரிந்து வருந்துவதனால் உடம்பானது ஈர்க்குப்போல க்ருசமாய்ப்போக 'கைகளிற் பொருத்தமாக அணியப்பட்ட வளைகளும் அவலிலையாகக் கழன்றுவிழும்: "யாஸ்ரீ நயாமீதி ப்ரியே வததி வாஸாக்ஷணே நஷ்டம் ஸ்ரோ: | ஸவிதாநி வாலாவளயாநி க்ஷவராணி வாநஷ்டெயவ தவிதாநி ||-யாமி நயாமீதி தவே வததி புரஸ்தாத் க்ஷணேந தந்வங்க்யா: - தளிதாநி புரோவலயாநி அபராணி புநஸ்தநைவ தளிதாநி."] என்ற ச்லோகத்தின் தாற்பரியம் இங்கே நினைக்கத்தகும். அதாவது - தலைமகன் தலைமகளை நோக்கி, 'என் கண்மணி! நான் உன்னைப்பிரிந்து ஓர் ஊர்க்குச் செல்கின்றேன்' என்று சொன்ன நொடிப்பொழுதிலேயே அவளுடைய கையில் அணியப்பட்டுள்ள வளைகளில் முன்னேயிருந்த வளைகள் கழன்று கீழே வீழ்ந்தன; அதனைக்கண்ட தலைமகன் 'இவள் நமது விரஹத்தைப் பொறுத்திருக்க வல்லளல்லளாகையாலே இவளைப்பிரிந்து நாம் வெளியேறலாகாது' என்று நினைத்து உடனே 'நான் போகவில்லை' என்று சொல்லவே அச்சொல் செவிப்பட்ட நொடிப்பொழுதிலேயே கையில் நின்றும் கழன்றவைபோக நின்ற வளைகள் படீல் என்று வெடித்துத் துகளாய் விழுந்தன - என்பது மேற்காட்டிய ச்லோகத்தின் கருத்து. நாயகனுடைய விரஹம் ப்ரஸ்தாவத்தில் வந்தமாத்திரத்திலேயே நாயகியினது உடல் மிகவும் மெலிந்து போம் என்பதும், அந்த விச்லேஷ வார்த்தை மாறினவாறே உடம்பு பூரிக்கு மென்பதும் இதன் உள்ளுறை. ஆகவே, இங்கு "என்சங்கிழக்கும் வழக்குண்டே" என்றது - எம்பெருமானை நான் நித்யமாக ஸம்ச்லேஷித்து உடம்பு பூரித்துக்கிடக்க ப்ராப்தமாயிருக்க, இப்படி பிரிந்து மெலிந்து வருந்துகை தகுதிதானோ? என்றவாறு.

அவன் என்னை ஆசைப்பட்டுஇப்பாடுகள் படவேண்டியிருக்க, நான் அவனையாசைப்பட்டுவருந்த வேண்டும்படி விதிவகை விபரீதமாயிற்றே! என்று வருந்துகிறாள் எனினுமாம். அவனது திருவடித் தாமரைகளிலே தலைசாய்த்த பின்பு அவ்வடியார்க்கு நேரும் துயரங்களை அவ்வெம்பெருமான்றானே அநுபவிக்கக் கடவனாயிருக்க அதுவிபரீதமாய் நானேதுயர்படக்கடவேன் என்கிறாள் என்றலுமாம். பாரதயுத்தத்தில் அர்ஜுநன் மேலே விழவந்த அம்பைக் கண்ணபிரான் அவனைத்தள்ளித் தான் ஏற்றுக் கொண்டான் என்று ப்ரஸித்தமிறே. "வாயு-

ஸம்ஶ்ரயோ - உரஸா ப்ரதிஜக்ராஹ — பார்த்தம் ஸஞ்சாத்ய மாதவ: — உரஸா ப்ரதிஜக்ராஹ'' என்றதிறே.

வழக்குண்டே? — வழக்காவது-நியாயம் "அறிவினுல் குறைவில்லா அகல் ஞாலத்தவரறிய, நெறி யெல்லாமெடுத்துரைத்த நிறை ஞானத்தொருமூர்த்தி" என்றபடி நியாயங்களை யெல்லாம் ஓதிவைத்த அவனே இப்படி அநியாயஞ்செய்யத்தலைப்படுவது தகுதிதானே? 'தன்னையாசைப் பட்டவர்களுக்கு வளையிழந்து நிற்கைதான் பலன்'.என்று இப்படி ஒரு நியாயம் அவன் தந்த சாஸ்திரங்களிலே உண்டோ? என்கிறாள். நவாஸுதேவபக்தாநாம் அஶுபம் வித்யதே க்வசித் ['நவாஸுதேவ பக்தாநாம் அசுபம் வித்யதே க்வசித்'] என்றும், "கௌந்தேய ப்ரதிஜாநீஹி நமே பக்த: ப்ரணஶ்யதி" ['கௌந்தேய! ப்ரதிஜாநீஹி நமே பக்த: ப்ரணச்யதி'] என்றும் அவன் தந்த சாஸ்த்ரங்களிலே கேட்டுப் போருகிறோமத்தனை யொழிய, "வைகுந்த னடிபணிந்தார் வளையிழந்து வருந்துவரே" என்பதாக ஓரிடத்திலும் கேட்டதில்லையே இன்றளவும் — என்கிறாள் போலும்.

இனி மூன்றாமடி கோகில ஸம்போதநம். குயிலே! நான் இப்பாடு பட்டுக் கிடக்க என்னைப்போலே நீயும் வருந்துவதோ அல்லது என்வருத்தத்தைப் பரிஹரிப்பதோ செய்யவேண்டியிருக்க, புன்னையும்குருக்கத்தியும் ஞாழலும் செருந்தியுமாய் அமைந்த படுக்கையிலே இனிதாக வாழ்கின்றாயே! இதுதகுதிதானே? *மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாலோ என்றிருக்கிற என் முன்னேயோ நீ இப்படி களித்துவாழ்வது! என்ற உபாலம்பம் தோற்ற ஸம்போதிக்கிறாள். ஞாழல்-ஞாழல்; (போலி.) இது வடமொழியில் ப்ரியங்கு: [ப்ரியங்கு:]. என்றும் பலிநீ [பலிநீ] என்றும் வ்யவஹரிக்கப்படும்: (கோங்குமாம்,) போதும்பு — பொந்து.

அக்குயில் செய்யவேண்டியதை நியமிக்கிறாள் ஈற்றடியில். ஒருகால் சொல்லி ஓய்ந்து விடாமல் அவன் திருவுள்ளத்திலே படும்படி பலகாலும் சொல்லி, ஆனை யிடர்ப்பட்ட மடுவின்கரையிலே அரைகுலையத் தலைகுலைய வந்துவிழுந்தாப்போலே விரைந்தோடிவந்து என்னோடே ஸம்ச்லேஷிக்கும் படியாக அவனைக் கூவவேணு மென்று வேண்டுகிறாள். "என்பற்பநாபன் வரக்கூவாய்', என்றாவது "என்பரம்புருடன் வரக்கூவாய்" என்றாவது மற்று முள்ள திருநாமங்களையிட்டாவது சொல்லாமல் 'என் பவளவாயன்" என்ற ஸ்வாரஸ்யத்தைநோக்கிப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச் செய்கிறார் என்னோடே கலந்து போகிற ஸமயத்தில் அணைத்து ஸ்மிதம்பண்ணி, வருமளவும் ஜீவித்திருக்கும்படி விளைநீரடைத்துப் போனபோதைச் செவ்வியோடும் அதரத்தில் பழுப்போடும் வந்தணைக்கும்படியாகக் கூவப்பாரா யென்கிறாள்" என்று; .... .... .... (க)

—ooo—

வெள்ளைவிளிசங்கிடங்கையிற்கொண்ட விமலனெனக்குருக்காட்டான் *
உள்ளம்புகுந்தென்னைநைவித்து நாளுமுயிர்ப்பெய்துகூத்தாட்டுக்காணும் *
கள்ளவிழ்செண்பகப்பூமலர்கோதிக் களித்திசைபாடும்குயிலே *
மெள்ளவிருந்துமிழற்றிமிழற்றாதென் வேங்கடவன்வரக்கூவாய். (உ)

கள் அவிழ் - தேன் பெருகா நின்றுள்ள
செண்பகம் பூ - செண்பகப் பூவிலே
மலர் கோதி - (அஸாரமான அம்சத்தைத் தள்ளி) ஸாரமான அம்சத்தை அநுபவித்து
களித்து - (அதனால்) ஆநந்தமடைந்து
இசை பாடும் குயிலே - (அந்த ஆநந்தத்திற்குப் போக்குவீடாக) இசைகளைப்பாடா நின்றுள்ள கோகிலமே!
வெள்ளை விளி சங்கு இடங்கையில் கொண்ட - சுத்தஸ்வபாவமாய் (கைங்கர்யருசியுடையாரை) அழைக்குமதான ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை இடக்கையிலே ஏந்திக்கொண்டிருக்கிற
விமலன் - பவித்ரனான பரமபுருஷன்
உரு - தனது திவ்யமங்கள விக்ரஹத்தை
எனக்கு காட்டான் - எனக்கு ஸேவை ஸாதிப்பிக்கமாட்டேனென்கிறான்;
(அதுவுமல்லாமல்)

உள்ளம் - என்னுடைய ஹ்ருதயத்திலுள்ளே
புகுந்து - வந்து புகுந்து
என்னை நைவித்து - என்னை நைந்துபோம்படி பண்ணி
(அவ்வளவிலே நான் முடிந்து போவதாயிருந்தால் இன்னமும் என்னை ஹிம்ஸிப்பதற்காக முடியவொட்டாமல்)
நாளும் உயிர் பெய்து - நாள்தோறும் பிராணனைப் பெருக்கடித்து
கூத்தாட்டு காணும் - என்னைத் தத்தளிக்கச்செய்து வேடிக்கை பாரா நின்றான்;
(நீ செய்ய வேண்டியதென்னவென்றால்)
இருந்து - என் அருகில் இருந்துகொண்டு;
மெள்ள மிழற்றி மிழற்றாது - உன் மழலைச்சொற்களைச் சொல்லி விலாஸ சேஷ்டிதங்களைப் பண்ணாமல்
என் வேங்கடவன் வர - எனக்காகத் திருவேங்கடமலையிலே வந்துநிற்கிற எம்பெருமான் (இங்கே) வரும்படியாக
கூவாய் - கூப்பிடவேணும்.

* * * — தன்னை எம்பெருமான் நோவு படுத்துகிறபடியை முன்னடிகளில் அருளிச்செய்கிறாள். கார்முகில் போன்ற கரியதிருமேனிக்குப் பரபாகமான வெண்மையை யுடைத்தாய், 'என்னைப் போலே நீங்களும் கைங்கர்யம் பண்ண வாருங்கள்' என்று அழைப்பது போன்ற முழக்கத்தை யுடைத்தான ஸ்ரீ பாஞ்சஜந்யத்தை இடத்திருக்கையிலே ஏந்தியிரா நின்றுள்ள எம்பெருமான் தன்னைக் காண்கையிலே மிக்க ஆசையுள்ள எனக்குத் தன் திருவுருவத்தைக் காட்டாதே மறைத்திடாநின்றான்; அவன் இப்படி உபேக்ஷிக்கையாலே அவ்வுருவத்தை மறந்து பிழைப்போம் என்று பார்த்தாலோ, அது செய்யவும் ஒட்டுகிறிலன்; என்னுடைய ஹ்ருதயத்திலுள்ளே வந்துபுகுந்து நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துருகும்" என்கிறபடியே சைதில்யத்தையுண்டாக்கி அந்தத் தளர்த்தியாலே உயிர்மாயுமளவான நிலைமை நேர்ந்தவாறே "இவ்வளவோடு இவளை முடிந்து பிழைக்க வொட்டலாமா? இன்னும் நெடுநாளைக்குத் துன்பப்படுத்தவேண்டாவோ?" என்றெண்ணி மறுபடியும் உயிரைச் சிறிது தலையெடுக்கச் செய்து பழையபடியே ஹிம்ஸிப்பதாய் இப்படி துடிக்கவிட்டு இதுவே போதுபோக்காயிரா நின்றான்; ஓ குயிலே! நான் இப்படி நோவுபடா நிற்க, நீ ஆநந்தமயமாக இசைபாடிக்கொண்டு போது போக்குவது நியாயந்தானோ? தேன் பெருகா நின்றுள்ள செண்பகப்பூவில் அஸாரமான அம்சத்தைக்கழித்து ஸாரமான பாகத்தை அநுபவித்து அவ்வநுபவத்தாலுண்டான களிப்பு உள்ளடங்காமல் அதற்குப் போக்குவிட்டு இசைபாடிக் கொண்டிருக்கிறாயே, இதுவோ

நன்மை? நான்படும் துயரத்தைப் பரிஹரித்த பின்பன்றோ நீகளிக்கவேணும் உனக்காக நான் செய்யத்தக்கது என்ன?'' என்று கேட்கிறாயோ, எப்போதும் என்னருகேயிருந்துகொண்டு அவ்யக்த மதுரமாக மென்சொற்களைச் சொல்லுவதும் விலாஸ சேஷ்டிதங்களைப் பண்ணுவதுமா யிருக்கிறாயே இந்த இருப்பைத் தவிர்ந்து, பிராட்டியைக் கைப்பிடிப்பதற்காக ஸ்ரீமிதிலையில் புறச்சோலையிலே வந்து தங்கியிருந்தாப்போலே எனக்காகத் திருமலையிலே வந்திராநின்ற பெருமானை இங்ஙனே நாலடி நடந்து வரும்படியாக நீ கூவவேணும் என்று வேண்டுகிறாள்.

முதலடியில், விமலன் என்றது "நதேரூபம் நசாகாரோ நாயுதாநி நசாஸ்பதம்| ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே|| ['நதேரூபம் நசாகாரோ நாயுதாநி நசாஸ்பதம், ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே'] என்றபடி திவ்யாயுதங்கள் முதலியவற்றை அடியார்கட்காகவே ஏந்தியிராநின்றோம் என்று நினைத்திருக்கையாகிற ஹ்ருதயசுத்தியையுடையவன் என்கை. "எனக்கு உருக்காட்டான்" என்கையாலே, மீனுக்குத் தண்ணீர் வார்ப்பாரைப் போலே நித்யஸூரிகளுக்குக் காட்டுவான் என்ற உபாலம்பம் தோற்றும். வடிவின் வாசியறியாத ஸம்ஸாரிகளுக்குக் காட்டவிருக்கிறானோ? என்றுமாம். உள்ளம்புகுந்து நைவிக்கிறபடி எங்ஙனேயென்னில்; இங்கே பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்கிறபடி பாரீர்-"நெஞ்சிலே புகுந்து மறக்கவொண்ணாதபடி பண்ணும்; ஸந்நிஹிதரைப்போலே ப்ரகாசித்தவாறே அணைக்கக் கைநீட்ட, கைக்குள் அகப்படாமையாலே நோவுபட்டு, பின்னையும் முடிந்து பிழைக்கவும் பெறாதே க்ஷுலிகபதார்த்தம் போலே முடிவது ஜீவிப்பதாய்க் கொண்டு உருவநோவுபட்டுச் செல்லாநிற்குமாய்த்து; இப்படி துடிக்கவிட்டு இதுதானே போது போக்காயிராநின்றான்." என்று.

நாளும் உயிர் பெய்து=முக்கோணங்கட்டிக் குற்றவாளிகளை யடிக்கும்போது உயிர்போகும் தருணமானவாறே சேவகர்கள் அவனுக்குத் தண்ணீர் வார்த்துத் தேறுதலையுண்டாக்கிக் கொஞ்சம் ஸாதாரித்தவாறே மறுபடியும் கட்டியடிப்பர்கள்; மீண்டும் உயிர் போகுந்தருணமானவாறே பழையபடியே தண்ணீரைக் கொடுத்துத் தேற்றுவித்து அடிப்பர்கள்; அதுபோல முடியப்போகிற உயிரை மறுபடியும் உண்டாக்கி வருத்துகிறான் என்று அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்யும்படி.

செண்பகப்பூ மலர் கோதி=இங்கு, பூ என்றது ஸாமாந்ய சப்தம்; ஸாரமும் அஸாரமுமான ஸமுதாயம். அதிலே மலர் என்றது ஸாராம்சம். கோதுதல் கொந்துதல். .... .... .... .... .... .... .... (௬)

மாதலிதேர்முன்புகோல்கொள்ள மாயனிராவணன்மேல் * சரமாரி
தாய்தலையற்றற்றுவீழத் தொடுத்ததலைவன்வரவெங்குங்காணேன் *
போதலர்காவில்புதுமணம்நாறப் பொறிவண்டின்காமரங்கேட்டு *
உன்காதலியோடுடன்வாழ்குயிலே யென்கருமாணிக்கம்வரக்கூவாய். (௭)

போது அலர் காவில் - சிறந்தபூக்கள் அலர்கின்ற சோலையிலே
புது மணம் - புதிதான பரிமளமானது
நாற - வீச
பொறி வண்டின் - அழகிய வண்டினுடைய
காமரம் - காமரம் என்கிற பண்ணை
கேட்டு - கேட்டுக் கொண்டு
உன்காதலியோடு உடன் வாழ் குயிலே - உன் பேடையோடு கூட வாழ்கிற குயிலே!
மாதலி - மாதலியானவன்
தேர் முன்பு - (இராவணனுடைய) தேரின் முன்னே
கோல் கொள்ள - கோலைக்கொண்டு தன் தேரை நடத்த,
மாயன் இராவணன் மேல் - மாயாவியான ராவணன் மேலே
சரம்மாரி - பாணவர்ஷத்தை
தாய்தலை அற்று அற்று வீழ தொடுத்த - (அவ்விராவணனுடைய ப்ரதானமான தலை (பலகால்) அற்று அற்று விழும்படிப்ரயோகித்த
தலைவன் - எம்பெருமானுடைய
வரவு - வரவை
எங்கும் - ஒருதிக்கிலும்
காணேன் - காண்கிறேனில்லை;
(ஆதலால்,)
என் - என்னுடைய அநுபவத்துக்கு யோக்யனாய்
கரு மாணிக்கம் - நீலரத்நம் போன்ற திருமேனியையுடையனான அவ்வெம்பெருமான்
வர - இங்கே வரும்படியாக
கூவாய் - நீ கூவவேணும்.

மாதலியென்பவன் தேவேந்திரனுடைய தேர்ப்பாகன்; எப்போதும் யுத்தக்களத்திலே இந்திரன் முதுகு காட்டியோடுவது தவிர ஒருநாளும் நிலைத்துநின்று போர் செய்தறியாமையாலே அவனுடைய ஸாரதியான இந்த மாதலி ஒருநாளும் போர்க்களத்திலே தேர்முன்னே நின்று பாகுசெய்தறியான்; அப்படிப்பட்டவன் இராமபிரானுடைய தேர்ப்பாகனாக அமைந்தபோது தான் முன்னின்று கோல்கொள்ளும்படியான பாக்கியம் பெற்றான். அப்படி அவன் தேர்முன் நின்று கோல் கொள்ள, க்ருத்ரிமயுத்தத்திலேயே கைதேர்ந்தவனான இராவணன் மேலே அம்புகளை மழைபொழிந்தாற் போலே பொழிந்து அவனுடைய தலைகளையெல்லாம் அறுத்தறுத்துத் தள்ளின இராமபிரான் திடீரென்று எந்தத் திசையிலாவது வந்து தோன்றுவனோ? என்று நான் சுற்றுங் காணநின்றாலும் அவன் ஒருதிக்கிலும் வந்து தோன்றுகின்றானில்லையே!; குயிலே நீயோ என் துயரை நோக்குகின்றாயில்லை; மலர்ந்த புஷ்பங்கள் நிறைந்த சோலையானது நமக்கு வாய்ப்பாகக் கிடைத்து விட்டதென்று இந்தச்சோலையிலே இருந்துகொண்டு சிறந்த புஷ்ப வாஸனையை அநுபவித்துக் கொண்டும், 'காமரம்' என்னும் பண்ணைப் பாடித்திரிகிற வண்டுகளின் ஸங்கீத ஸாரஸ்யத்தை அநுபவித்துக் கொண்டும் பேடையைவிட்டு ஒரு க்ஷணகாலமும் பிரியாமல் நித்யஸம்ச்லேஷமாய் இதுவே ஆநந்தமாக என்னைப்பற்றிச் சிறிதும் கவலையின்றியே கிடக்கிறாயே! இதுவோ தகுதி? அவ்வெம்பெருமான் இங்கே வரும்படி ஒருவிசை கூவினால் உன் வாய்முத்து உதிருமோ? என்செல்வமே! அப்படி ஒருகால் கூவித்தான் என்று வேண்டுகிறாளாய்த்து.

மாதலி—வடசொல். கோல்-குதிரைகளை நடத்துங் கருவி. மாயனிராவணன்—மாயாமிருகத்தை (மாரீசனை)ப் போகவிட்டுப் பிரித்தும், [illegible]

காடலைக்கியாசி வேஷம் பூண்டு போய்ப் பிராட்டியைக் கவர்வதுமான பல வஞ்சகச் செயல்களிலே வல்லவன். சரம்—பாணம்; தற்சமவடசொல். "தாய்தலை" என்பதற்கு "ப்ரதானமான தலை" என்று பெரியவாச்சான் பிள்ளை கூறியிருத்தலால், "தாய்த்தலை" என்று தகரம் மிகாதொழிந்தது எதுகையின்பம் நோக்கியாமென்று கொள்க. அற்றற்றுவீழ="இருச்சரங்கள் பண்ணின பாக்யத்தாலே (தலை) அறுக்கவறுக்க முளைத்ததாய்த்து; பின்னை அதுதானே போதுபோக்காக நின்று கொண்டுனுய்த்து. அப்படி முளைத்ததில்லையாகில், இருச்சரங்களின் வரவு இவனால் அடக்கப்போகாதே." என்பது வியாக்கியான ஸூக்தி. "வரவெங்கும்" என்றவிடத்து வர என்றும் பதம்பிரிக்கலாம்—எங்கும் வரக்காணேன்.... (ஙூ)

என்புருகியினவேல்நெடுங்கண்க ளிமைபொருந்தபலநாளும்*
துன்பக்கடற்புக்குவைகுந்தனென்பதோர் தோணிபெறாதுழல்கின்றேன்*
அன்புடையாரைப்பிரிவுறுநோயது நீயுமறிதிகுயிலே*
பொன்புரைமேனிக்கருளக்கொடியுடைப் புண்ணியனைவரக்கூவாய். (ச)

| | | | |
|---|---|---|---|
| குயிலே! | ஓ குயிலே! | உழல்கின்றேன் | அக்கடலுக்குள்ளேயே தட்டித்தடுமாறிக் கொண்டிராகின்றேன்; |
| என்பு உருகி | எலும்புகள் உருகிப் போனது மல்லாமல் | அன்பு உடையாரை பிரிவுறும் நோய் அது | அன்பர்களைப் பிரிவதனாலுண்டாகும் துக்கத்தை |
| இனம் வேல் நெடு கண்கள் இமை பொருந்தா | சிறந்த வேல் போன்ற விசாலமான கண்களும் மூடிக்கிடக்கின்றன வில்லை; | நீயும் அறிதி | நீயும் அறிவாயன்றோ? |
| பல நாளும் | நெடுங்காலமாக | பொன் புரை மேனி | பொன்போன்ற மேனியையுடையனாய் |
| துன்பம் கடல் புக்கு | விச்லேஷவ்யஸநமாகிறகடலிலே அழுந்தி | கருளன் கொடி உடை | கருடனைக் கொடியாகவுடையவனை |
| வைகுந்தன் என்பது ஓர் தோணி பெறாது | ஸ்ரீவைகுண்டநாதன் என்கிற ஒரு தோணியை அடையப் பெறாமல் | புண்ணியனை | "தர்மமே வடிவெடுத்தவன்" என்னப்படுகிற கண்ணபிரானை |
| | | வர கூவாய் | இங்கே வரும்படி கூவு. |

குயிலே! எம்பெருமானைப் பிரிந்ததனாலே எனக்குண்டான க்லேசம் மேலெழுத்தோல்புரையே போமதன்று; எலும்புங் கூட உருகும்படியாயிராநின்றது; அவ்வளவேயோ, ஒருநொடிப் பொழுதும் கண் உறங்குவதுமில்லை. அநித்ரஸ்ஸததம் ராம: ['அநித்ரஸ் ஸததம் ராம:'] என்றும் "உண்ணாதுறங்காது" என்றும்—என்னைப்பிரிந்து அவன்படவேண்டியபாட்டை நானன்றோ இப்போது படாநின்றேன். இப்படிகழிவது ஒருநாளா இரண்டு நாளா? பலநாளாகவே பிரிவாற்றாமையாகிற துக்கசாகரத்திலே யழுந்தி அத்தஸாகரத்தைக் கடத்தவல்ல "விஷ்ணுபோதம்" என்று ப்ரஸித்தமானதொரு தோணியைப் பெறாது வருந்திக் கிடக்கின்றேன் காண். 'என்னதான் விச்லேஷம் நேர்ந்தாலும் இப்படிகூட நோவுபடலாமோ?' என்று நினைக்கிறாயோ, அப்படி நினையாதே கொள்; ஏதோ பாக்யத்தாலே

இன்று நீ, ஆவிரியமலருழக்கித் துணையோடும் பிரியாதேயிருந்தாயாகிலும் "ஸம்ச்லேஷா: விச்லேஷாந்தா:; விச்லேஷா: ஸம்ச்லேஷாந்தா:" என்ற கணக்கிலே இதற்கு முன்பு நீயும்பிரிந்து துன்பப்பட்டேயிருப்பாய்; இனிமேலும் என்றைக்காவது உனக்குப் பிரிவு நேராதிருக்கப் போகிறதில்லை; அப்போது நீ துன்பப்படாதிருக்கப் போகிறதில்லை; ஆகையாலே அன்பர்களைப்பிரிந்தால் துயரம் பொறுக்கமுடியாதது தான் என்னும் விஷயத்திலே உனக்கு ஏற்கனவே வ்யுத்பத்தியிருப்பதனாலே இப்போது நான் துன்பப்படுவதைப்பற்றி நீ அலக்ஷ்யமாக ஒன்றும் நினைக்கலாகாது; இத்துன்பத்தைத் தீர்க்குமுபாயமே நீ செய்ய வேண்டும்; அதாவது—பெரியதிருவடியை த்வஜமாகவுடையனான அப்பெருமான் இங்கே எழுந்தருளும்படி கூவக்கடவை என்கிறாள்.

"பொன்புரை மேனி" என்றதைக் கருடனுக்கு விசேஷணமாக்கத் தகுமாகிலும் புண்ணியனுக்கே விசேஷணமாக்குவதில் ஸ்வாரஸ்யம் மிகும்: "தன்னோடு கலந்தபோது பொன்போலே திகழ்கிறவடிவுடையனாக நின்றநிலை; பிரிந்தபோதும் வடிவு அப்படியேயிருக்குமென்றிருக்கிறாள்; பிரிந்தபோது அவனிருக்கும் படி தான் அறியாளே; நிறமற்றமையாலே நொந்து விவர்ணனாயிருந்தானாகில் குயிலின்கறியிலே விழுப்பார்த்திருக்குமோ? வாராதோ என்றிருக்கிறாள்." என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியின் இனிமையைக் காண்மின்.

"கண்ணனென்பதோர் தோணிபெறாது" என்னாமல் "வைகுந்தனென்பதோர் தோணிபெறாது" என்றதற்குக் கருத்தென்னெனில்: உகந்தருளின நிலங்களாகிய அர்ச்சாவதார ஸ்தலங்களிலேபோய் அநுபவிக்கப் பாரித்தேன்; அங்கு, அணைத்தல் வார்த்தை சொல்லுதல் ஒன்றுங் கிடையாமையாலே அப்படிப் பரிமாறின விபவாவதாரங்களிலே நெஞ்சைச்செலுத்தினேன்; அவை தீர்த்தம் ப்ரஸாதித்துவிட்டுக் கழிந்துபோனபடியாலே பரமபதநாதனளவிலே சென்றேன்—அவனாகிலும் கிடைக்கக் கூடுமோவென்றுபார்த்தேன்; அவனும் கிடைக்கப்பெற்றிலேன் என்கிறாள். ["நோய் — அது."] அது—முதல்வேற்றுமைச் சொல்லுருபு. கருளன் + கொடி; கருளக்கொடி.

புண்ணியனை = [illegible] ["ராமோ விக்ரஹவாந் தர்ம:"] என்றும் [illegible] ["க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்"] என்றும், "அனந்தன்மேற்கிடக்கும் எம்புண்ணியா!" என்றும் எம்பெருமானே ஸாக்ஷாத் புண்ணியமாகச் சொல்லப்பட்டிருப்பது காண்க. புண்ணியனை வரக்கூவாய் = "நான் பிறர்நோவுபடப் பொறுத்திருக்கமாட்டேன்; இதுவே நான் ஸாரமாகக் கொண்டிருக்கிற தர்மம்" என்று சொன்னவராயிற்று அவர்; அப்படி சொல்லியிருப்பதற்கும் இப்போது இப்படிச்செய்துபோருவதற்கும் சிறிதும் பொருத்தமில்லையென்று சொல்லிக் கூவாய் என்பதாகக் கருத்துரைப்பர். .... .... .... .... .... .... .... (4)

பதில் என்ன அருமை? காதமா இருகாதமா?; நாலடியளவிலேயிருக்கின்ற கோயிலினுள்ளே நினைத்தபோதெல்லாம் போய்ப்புகுந்து யதேஷ்டமாகப்பரிமாறலாமன்றோ? ஆயிருக்க, ஸ்ரீவில்லிபுத்தூரெம்பெருமானுடைய திருவடிகளை ஸேவிக்கப்பெறாமல் என்கண்கள் விடாய்த்துப்போயினவென்று இவள்சொல்லுவது எப்படிபொருந்தும்?" என்று நஞ்சீயர் ஸந்நிதியிலே நம்பிள்ளை விண்ணப்பஞ்செய்ய அதற்கு நஞ்சீயர் உத்தரம் அருளிச்செய்ததென்னெனில்; "நீர்கேட்டது அழகியதே; ஆண்டாள் ஸ்ரீவில்லிபுத்தூரிலேயே பிறந்தவளாகுமவளாயினும் வில்லிபுத்தூருறைவானுடைய ஸந்நிதியிலே சென்று புகுவது அவளுக்கு எளிதாகக் கைகூடுமதன்று; நாமெல்லாம் கோவிலுக்குப்போய்வந்தால் சித்தவிகாரமென்பது சிறிதுமில்லாமல் கல்போலவேபோய்க் கல்போலவே திரும்பிவருகிறோம்; குறிபழியமாட்டோம்; ஆண்டாளுடைய ப்ரக்ருதி அப்படிப்பட்டதல்லகாணும்; உள்ளே புகுந்தவாறே அவ்வெம்பெருமானுடைய சீலகுணத்தை அநுஸந்தித்து அதிலே ஆழங்காற்பட்டு பரதாழ்வானைப்போலே மோஹிப்பவளாய்த்து; இப்படிப்பட்ட ப்ரக்ருதியைத் தெரிந்துகொண்டிருக்கும் இவளது உறவினர் இவளைக் கோவில்வழிநடக்கவொட்டார்கள். 'குழையும்வாண்முகத்தேழையைத் தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்கு இழைகொள்சோதிச் செந்தாமரைக்கட்பிரானிருந்தமைகாட்டினீர்' என்றபாசுரம் உமக்குத் தெரியாததன்றே; இவளைக்கோவிலுக்கு அழைத்துக்கொண்டுபோய்ப் பெருமாளைஸேவிக்கச்செய்து அதனால்சித்தவிகாரத்தையுண்டாக்கி 'அநியாயமாகக் குழந்தையைக் கோவிலுக்கு அழைத்துக்கொண்டுபோய் வலையிலகப்படுத்தி இருந்தீர்களே!' என்று நாலுபேர்வசைகூறும்படியாவதிற் காட்டில் இவளைக் கோவில்வழி நோக்கவொட்டாமற்செய்வதே க்ஷேமமென்று நினைத்துத் தாய்தந்தையர் இவளை அகத்தினுள்ளேயே அடங்கி வைத்திருப்பார்களாகையாலே 'வில்லிபுத்தூருறைவான்றன் பொன்னடிகாண்பதோராசையினால் என்பொருகயற் கண்ணிணை துஞ்சா' என்று சொன்னது பொருத்தமுடையதுதான்" என்று அருளிச்செய்தாராம்.

வில்லிபுத்தூருறைவான்றன்பொன்னடி—பரமபதநாதனுடைய பொன்னடிகளை ஸேவிக்கப் பெறுமைபற்றி இவளுக்கு வருத்தமில்லை. அது தூரஸ்தானமாகையாலே கிடைக்கப்பெறவில்லையென்று ஆறியிருக்கலாம்; மீனுக்குத் தண்ணீர் வார்ப்பதுபோலல்லாமல் விடாய்த்தவர்கட்கெல்லாம் தண்ணீர்வார்ப்பதுபோல, காணவாசைப்பட்டவர்கட்கெல்லாம் காட்சி தருவதற்கென்றே வந்தருளினவிடத்தில் காணப்பெறுதொழிந்தால் பரிதாபம் பேச்சுக்குநிலமாகுமோ?.

இவள் இப்படிபரிதாபந்தோற்றச் சொன்னதைக்கேட்ட குயில் 'அம்மா! நீ பரிதபிப்பது உண்மைதான்; இதற்கு நான் என்னசெய்யக்கூடும்? உன்னை நான் கோவிலுக்கு அழைத்துக்கொண்டு போகக்கூடுமோ? என்னால் செய்யக்கூடியது ஏதேனுமுண்டாகில் சொல்லிக்காண்" என்ன; அவ்வெம்பெருமான் இங்கே எழுந்தருளும்படியாகக் கூவாய்என்கிறாள்; அதற்குக் குயில் சொல்லித்து-

| | | | |
|---|---|---|---|
| செய்ய வாயும் | சிவந்த அதரமும் | வரக் கூகிற்றி ஆகில் | இங்கே வரும்படி கூவவல்லையேயானால் |
| முலையும் | முலைகளும் (ஆகிய இவை | தலை அல்லால் | என் வாழ்நாள் உள்ளளவும் என் தலையை உன் காலிலே வைத்திருப்பது தவிர |
| அழகு அழிந்தேன் | அழகு அழிந்ததாம்படி விகாரப்பட்டேன்; | கைம்மாறு இலேன் | வேறொரு ப்ரத்யுபகாரம் செய்ய அறியேன். |
| என் தத்துவனை | நான் உயிர்தரித்திருப்பதற்கு மூலகாரணமான அவ்வெம்பெருமானை | | |

எந்தத்திசைநோக்கினாலும் ஒவ்வொரு திசைக்கும் நிர்வாஹகர்களான இந்திரன் வருணன் குபேரன் என்னும்படியான தேவர்கள் மார்பை நெறித்துக்கொண்டு 'எனக்குமேற்பட்ட தெய்வமில்லை, எனக்குமேற்பட்ட தெய்வமில்லை' என்றிருப்பார்கள்; அவர்கள் எம்பெருமானைக்கண்டவாறே "போற்றி-பல்லாண்டு-ஜிதந்தே" என்று பணிந்தேத்துவர்கள். அப்படிப்பட்ட தேவர்களும் அஹங்காரத்தை விட்டொழித்துப் பணிகைக்குக் காரணமென்னென்னில்; இருடீகேசனன்றோ இவன்; "இந்த்ரியாணாம் நியந்த்ருத்வாத் ஹ்ருஷீகேச: ப்ரகீர்த்தித:" என்றன்றோ நிருக்தியிருப்பது. எல்லாருடைய இந்திரியங்களையும் அடக்கி ஆளுமவன் இவனாகையாலே அவர்களுடைய துர்மாநத்தைத் தொலைத்து அவர்களால் புகழ்ப்பெற்றான்; அப்படி அவன் எல்லார்க்கும் ஸௌசீல்யமுடையனாயிருந்துவைத்துத் தன்னை எனக்குக் காட்டாமல் மிறுக்குகளைப் பண்ணுகிறானாகையாலே என் முறுவலும் நிறம்மாறி அதரமும் அழகழிந்து முலைகளும் கேடுபடும்படி சீர்குலைந்தேன் நான், என்கிறாள் முன்னடிகளில்.

இருடீகேசன்வலிசெய்ய = என் இந்திரியங்களெல்லாவற்றையுங் கொள்ளை கொண்டு என்னை எளிமைப்படுத்தி இவ்வளவிலே தனது ஸௌசீல்யகுணத்தையும் மறைத்திட்டு சத்ருக்களுடைய கோஷ்டியிலே காட்டவேண்டிய மிறுக்குகளைக் காட்டுகிறானென்னவுமாம். முறுவல் = பல்லுக்கும் சிரிப்புக்கும் பெயர்.

"என்னை மிறுக்குக்கள் பண்ணுகைக்காகத் தன்ஜீவநத்தையும் அழியாநின்றான்; —[illegible] வாஸஸ்தாநி" [ஈஷத்ஸங்கம்ய பாஸ்யாமி] என்பாள் இவனுடைய முறுவலும் செய்யவாயும் முலையும் அவனுக்கு ஜீவனமாகையாலே தன்ஜீவனத்தைக் கெடுத்துக்கொண்டும் தன்வலியைக்காட்டுவார் உலகிலுண்டோ? ஒரு கோபாவேசத்தாலே தீர்த்தகலசத்தை உடைத்து எறிந்துவிட்டால் பின்பு தாஹம்மேலிட்டவாறே அவனேயன்றோ வருந்தவேண்டும்; அதுபோல, இப்போது ஏதோ கோபத்தாலே அவ்வெம்பெருமான் தனக்குஜீவனமாவனவாகிய என் அவயவங்களை அழித்தானாகில் நாளைக்கே "ஈஷத்ஸங்கம்ய பாஸ்யாமி" என்று சொல்லிக்கொண்டு ஓடிவருவனே; அப்போது அடிக்கப்போகிறேனே! என்கிறாள் போலும்.

இப்படி எம்பெருமானுடைய செல்வம் அழிந்துபோகாமலிருக்க, நீ [illegible] மாய்க்கிடந்து உறங்குகிறாயே குயிலே!; உன் செருக்கை நான் என்சொல்வேன்?

என்கிறான் கோத்தலர்காவில் இத்யாதியால். கண்பாடு, கண்படுதல், கண்படை இவையெல்லாம் நித்திரைக்குப் பரியாயம்.

என்தத்துவன் என்பதற்கு 'என்னுடையஸத்தைக்கு ஹேதுவானவன்' என்றுபொருள் அருளிச்செய்யப்பட்டுள்ளது; தத்துவமென்று ஸ்வரூபமாய், ஸ்வரூபமாகிறது ஆத்மாவாய், ஆத்மாவாகிறான் ஸத்தாஹேதுபூதனாகையாலே அங்ஙன் அருளிச்செய்யப்பட்டதென்க. "இக்குயில் கூவியழைக்கவேண்டும்படி அவன் வரத்தாழ்க்கச்செய்தேயும் தன் ஸத்தை அவனென்றிருக்கிறான்காணும்" என்பது வியாக்கியானஸ்ரீஸூக்தி. இவ்விடத்தில் நஞ்சீயர்க்கும் நம்பிள்ளைக்கும் ஒருஸம்வாதமுண்டு; அதாவது-மாயாவியான ராவணன், 'இராமன் தலையறப் புண்டுதொலைந்தான்' என்று தோற்றும்படி ஒருமாயாசிரஸ்ஸைக் கொண்டுவந்து பிராட்டிக்குக் காட்டி 'இதோபார் வீதே! உன்கணவன் தலையறப்புண்டு ஒழிந்தான்' என்று சொன்னபோது, இக்காலத்துப் பெண்டிர்கள் தாந்தம் பர்த்தாக்களுடைய மரணத்தில் சற்றுக் கண்ணீரைப் பெருக்கிவிட்டுக் கிடப்பதுபோல அவளும் துக்கப்படுவதுபோலச் சிறிது துக்கப்பட்டு உயிர்தரித்திருந்தாளே யொழிய, பிராணன் படக்கென்று பட்டுப்போகப் பெற்றிலளே!; மெய்யான அன்பு இருக்குமாகில் அந்தஸமயத்திலும் கூடவா பிராணன்போகாமலிருக்கும்? பிராணநாதன் உயிரொழிந்தான் என்று மாயாசிரஸ்ஸைக்கண்டு நம்பினபிறகும் அவள் தரித்திருந்து பலாக்கனம்பாடியழுதாளென்று ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறதே!, அவள் இராமபிரான்மீது வைத்திருந்த ப்ரணயித்துக்கும் இப்படியிருந்ததற்கும் சேர்த்தியில்லைபோலிருக்கிறதே' என்று நஞ்சீயர்ஸந்நிதியிலே நம்பிள்ளை விண்ணப்பஞ்செய்ய, அதற்கு நஞ்சீயர் அருளிச்செய்த உத்தரமென் னெனில்;—"வாரீர்! நீர்கேட்டது அழகியதே; 'நாயகன் உயிரோடிருக்கிறான்' என்றுநினைத்துக்கொண்டால் உத்தமநாயகி உயிர்தரித்திருப்பாளென்றும், 'நாயகன் இறந்துபோனான்' என்று நினைத்துக்கொண்டால் அவள் உயிர் விடவேணுமென்றும் நீர் நினைத்திருக்கிறாப்போலிருக்கிறது; நாயகி உயிர்தரித்திருப்பதற்கும் உயிரை விடுவதற்கும் நாயகனுடைய ஜீவந மரணங்களைத்தெரிந்துகொள்வது காரணமென்றுநினைவோ; தேசாந்தரம்போன நாயகன் வழிநடுவே இறந்துபோனானாகில் இந்தச்செய்தியை வெளியுள்ளப்ராணநாயகி தெரிந்துகொள்ளமுடியாதாகையால் 'நமது நாயகன் ஜீவித்திருக்கிறான்' என்று ப்ரமித்திருக்குங்காலத்தில் அவள் ஸுகமாக ஜீவித்திருப்பதும்,—தேசாந்தரத்தில் நாயகன் ஸௌக்கியமாக வாழ்ந்திருக்கச் செய்தேயும் அவன் இறந்தானென்று வம்புகூறுமவர்களின் வாய்மொழியை நம்பி உயிரைவிடுவதும் உத்தமநாயகியின் காரியமென்று நினைக்கவேண்டா; பின்னையெங்ஙனேயென்னில்; நாயகன் தேசாந்தரஸ்தனாயிருந்தாலும் உண்மையில் அவன் ஜீவித்திருப்பானாகில் அது தானே காரணமாக நாயகியின் உயிர் நிலைத்திருக்கும்; இறந்தானென்று பிறர்பொய் சொன்னாலும் அச்சொல் காதில் விழும்போது ஏதோசிறிது வருத்தம் தோற்றுமேயன்றி உண்மையில் நாயகனுடைய ஸத்தைக்குக் குறையில்லாமையினால்

“ ஸுவ்ரீதி ஹ்ருதயம் ஹ்ருதா ” [ஆக்யாதி ஹ்ருதயம் ஹ்ருதா—(அவன் மநஸ்ஸூம் இவள் மநஸ்ஸூம் ஒன்றேடொன்று பேசிக்கொள்ளும்) என்றபடி. மநஸ்ஸுக்கு மநஸ்ஸே ஸாக்ஷியாக வர்த்தமானமான ஸங்கதி நெஞ்சிற் பதிந்துகிடக்குமாதலால் பிறர் பொய்யாகக் கூறுங் கூற்றானது பயன்படமாட்டாது. ப்ராணநாயகன் கடலிடைக்கிலே கிடந்தாலும் அவன் எந்தக்ஷணத்தில் உயிர்விடுகிறானே அந்தக்ஷணத்திலேயே காதலியின் உயிரும் தன்னையே விட்டு நீங்கும். நாயகன் இறந்தானென்று ஒருவரும் தெரிவிக்கவேண்டா; பிறர் தெரிவியாதிருந்தாலும் அல்லது மாறுபாடாக ‘உன்காதலன் ஸுகமாக வாழ்கிறான்’ என்று எவ்வளவு நம்பிக்கைதோன்றச் சொன்னாலும் இவளுடைய உயிர் க்ஷணகாலமும் நிற்கமாட்டாது. தம்பதிகளாகிய இருவருடைய நெஞ்சுக்கும் ஒருவிலக்ஷணமான ஸ்ப்போக்குவரத்து உண்டானமையாலே அந்தத் தந்தியைக்கொண்டே நாயகியுடைய அந்தக்ஷணத்திலேயே இவரென்று மாய்ந்துபோம். இப்படியே, அந்தக்ஷணத்தில் நாயகன் ஒருகுறையுமின்றி உயிர் வாழ்ந்திருக்கச் செய்தேயும் மாறுபாடாக யார் என்ன சொன்னாலும் எவ்வளவு க்ருத்ரிமங்கள் காட்டினாலும் கீழ்ச்சொன்ன மாநஸதந்தியானது உண்மையான ஸங்கதியை மநஸ்ஸுக்கு எட்டவைத்துக்கொண்டிருப்பதனால் அதுகொண்டு உயிர் மாயாமல் தரித்துநிற்கும். சிறந்த மெய்யன்பு பூண்டிருக்கும் நாயகநாயகிகளின் ரீதி இப்படிப்பட்டதேயாம். பிராட்டியும் அத்தகைய உத்தமநாயகியாதலால், ராவணன் மாயாசிரஸ்ஸைக் காட்டி எவ்வளவு வஞ்சிக்கப்போதிலும் உண்மையில் இராமபிரானுடைய ஸத்தைக்கு ஹாநியில்லாமலிருந்தமையால் அந்த அரக்கர்களுடைய மாயச்செயல் பயன் படாமல் அவளது மநஸ்ஸாக்ஷியமே விறுபெற உயிர்தரித்து நின்றது; ஆகையாலே பிராட்டியினுடைய ஸத்தைக்குப் பெருமாளுடைய ஸத்தை ஹேது என்று கொள்ளீர்—என்று உத்தரமருளிச்செய்தார். திருவாய்மொழியில் [௬—௮—௧௦] “ஏறு சேவகனார்க்கு என்னையு முளளென்மின்கள்” என்றவிடத்திற்கு எம்பெருமானார் பொருள் அருளிச்செய்யும்போது கீழ்விவரித்த அர்த்தத்தை எடுத்து விளக்கியருளினரென்பதை ஈடுமுப்பத்தாறாயிரப்படியில் காண்க.

இந்த ஸம்வாதமானது “என்தத்துவனை” என்ற இவ்விடத்திற்குப் பொருத்தமாக எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. அதற்குமிதற்கும் என்ன ஸம்பந்தமென்றால், கேண்மின்;—குயிலானது ஆண்டாளைநோக்கி, ‘மாதர் கொழுந்தே! இருடீகேசனை வரும்படி கூவச்சொல்லுகிறாய் நீ; அவன் உன்னோடு புணர்ந்தகாலத்தில் ‘உன்னைவிட்டுப் பிரியேன்; பிரிந்தால் தரியேன்’ [அதாவது—உயிர்தரித்து ஜீவிக்கமாட்டேன்] என்று சொன்னதை நான் கேட்டிருக்கிறேன்; உனக்கும் அது ஞாபகமிருக்குமே; ஆகையாலே உன்னைப் பிரிந்துபோய் இன்னும் வந்து சேராதிருக்கிற அவன் ஜீவித்திருப்பனென்று எனக்குத் தோன்றவில்லை; அவன் ஆற்றாமையினால் காலஞ்சென்றிருப்பான் என்றே நினைக்கிறேன்; ஆகையாலேநான் கூவுவது விறைகும்; உன்னைவிரைவு

கஷ்டப்படுத்தாதே போ' என்று சொல்கிறது; அதைக்கேட்ட ஆண்டாள், 'பேதாய்! அங்ஙனன்றுகாண்; நான் ஸத்தைகெடாமல் இருக்கின்றமையால் அவனும் ஸத்தைகெடாமல் இருப்பனென்[illegible] அவனுடைய ஸத்தைக்கு ஹாநியிருந்திருக்குமேயானால் அர்த்தக்ஷணத்திலேயே [illegible] குலைந்திருக்குமன்றோ? அவன் என்னுடைய ஸத்தைக்குக் காரணமாகையால் அவனுடைய ஸத்தை குறையற்றதென நிச்சயித்துக்கொள்' என்கிறாளென்க.

கூகிற்றி = கூவகிற்றி; 'கிற்றி' என்பது—கில் என்னும் வினைப்பகுதியடியாய்ப் பிறந்த நிகழ்காலமுன்னிலையொருமை வினைமுற்று; கூவக்கடவையாகில் என்கை.

தலையல்லால் கைம்மாறிலேன் = நீ எம்பெருமானை வரக்கூவினையாகில் அதற்கு மேலான மஹோபகாரம் ஒன்றில்லாமையால் அதற்குத் தக்க ப்ரத்யுபகாரம் என்னாற்செய்யலாவதில்லை; என் வாழ்நாளுள்ளவளவும் உன் காலிலே [illegible] என் தலையைச் சாய்த்திருப்பதே என்னாற் செய்யத்தக்க ப்ரத்யுபகாரமென்கிறாள்.

நஞ்சீயர் திருவடிகளில் ஆச்ரயித்து திவ்யப்ரபந்தங்களின் விசேஷார்த்தங்களைக் கேட்ட முதலிகளில் பெற்றி என்று ஒரு ஸ்வாமியுண்டு; அவர் திருவாய்மொழியின் விசேஷார்த்தங்களைப் பலதடவைகளில் கேட்டிருந்தாலும் நாச்சியார் திருமொழிக்கு மாத்திரம் நஞ்சீயர்ஸந்நிதியிலே அர்த்தங்கேட்க அவகாசம் பெற்றிலர். அந்த ஸ்வாமி ஒருஸமயம் திருவணையாத்திரையாகத் திழக்கே எழுந்தருளினபோது சில ஆஸ்திகர்கள் அவரிடம் வந்து "ஸ்வாமிந்! "தலையல்லாற் கைம்மாறிலேனே" என்றவிடத்திற்குக் கருத்து விளங்கவில்லை; ஸ்வாமி ஸாதிக்கவேணும்' என்று வேண்டினர்; 'குயிலே! எம்பெருமான் இங்கு வரும்படி நீ கூவவல்லையாகில் அதற்கு ப்ரத்யுபகாரமாக என்தலையை (அறுத்து) உனக்குத் தந்திடுவேன் என்கிறாள்' என்பதாக அவர்கட்குப் பொருள் சொல்லிவிட்டார். ஆனாலும் 'இதற்கு அர்த்தம் இவ்வளவேயாயிராது; நஞ்சீயர் ஸாதிப்பது என்னென்று தெரிந்துகொள்ளவேணும்' என்று அவர்க்கு ஆவல் இருந்தது. யாத்திரைமுடிந்து கோயிலுக்கு எழுந்தருளினபிறகு நம்பிள்ளையைச் சந்தித்தபோது 'ஸ்வாமிந்! அடியேன் ஜீயர் ஸந்நிதியிலே பதினொரு திருவாய்மொழிக்குப் பொருள்கேட்டேன்; நாச்சியார் திருமொழிக்குக் கேட்கப் பெற்றிலேன்; 'தலையல்லால் கைம்மாறிலேனே' என்றவிடத்திற்கு ஜீயர் அருளிச்செய்வது எங்ஙனே? என்று கேட்டார். "நீ பண்ணுமுபகாரத்துக்கு இத்தலையால் செய்வதொன்றுண்டோவென்று என் தலையை உனக்காக்கி, காலமெல்லாம் உன்காலிலே வணங்கியிருப்பேனென்கிறாள் என்று ஜீயருளிச்செய்யும்படி" என்று நம்பிள்ளை அருளிச் செய்யக்கேட்டு, பெற்றிஸ்வாமி இதற்கு மிகவும் கொண்டாடி 'ஸ்வாமிந்! அடியேனுக்கு அடிக்கடி யாத்திரைபோக நேருமாகையாலே ஸ்வாமிஸந்நிதியில் இடைவிடாது காத்துக்கொண்டிருந்து அருளிச்செயல்களின் ஸகலார்த்தங்களையும் கேட்க பாக்யமில்லாமையால் பல விசேஷார்த்தங்களை இழந்துபோகவேண்டி

கஷ்டப்படுத்தாதே போ' என்று சொல்லிற்று; அதைக்கேட்ட ஆண்டாள், 'பேதாய்! அங்ஙனன்றுகாண்; நான் ஸத்தைகெடாமல் இருக்கின்றமையால் அவனும் ஸத்தைகெடாமல் இருப்பனென்றே நினை; அவனுடைய ஸத்தைக்கு ஹாநிவிளைந்திருக்குமேயானால் அந்தக்ஷணத்திலேயே என்னுடைய ஸத்தையும் குலைந்திருக்குமன்றோ? அவன் என்னுடைய தத்துவன் காண்; ஆகையால் அவனுடைய ஸத்தை குறையற்றதென நிச்சயித்துக்கொள்'-என்கிறாள் என்க.

கூகிற்றி = கூவுகிற்றி; 'கிற்றி' என்பது—கில் என்னும் வினைப்பகுதியடியாப் பிறந்த நிகழ்காலமுன்னிலையொருமைவினைமுற்று; கூவக்கட்வையாகில் என்கை.

தலையல்லால் கைம்மாறிலேன் = நீ எம்பெருமானை வரக்கூவினையாகில் அதற்கு மேலான மஹோபகாரம் ஒன்றில்லாமையால் அதற்குத் தக்கப்ரத்யுபகாரம் என்னால்செய்யலாவதில்லை; என்வாழ்நாளுள்ளவளவும் உன்காலின்கீழே என் தலையைச் சாய்த்திருப்பதே என்னால் செய்யத்தக்க ப்ரத்யுபகாரமே-என்கிறாள்.

நஞ்சீயர் திருவடிகளில் ஆச்ரயித்து திவ்யப்ரபந்தங்களின் விசேஷார்த்தங்களைக் கேட்ட முதலிகளில் பெற்றி என்று ஒரு ஸ்வாமியுண்டு; அவர் திருவாய்மொழியின் விசேஷார்த்தங்களைப் பலதடவைகளில் கேட்டிருந்தாலும் நாச்சியார் திருமொழிக்கு மாத்திரம் நஞ்சீயர்ஸந்நிதியிலே அர்த்தங்கேட்க அவகாசம் பெற்றிலர். அந்த ஸ்வாமி ஒருஸமயம் திருவணையாத்திரையாகக் கிழக்கே எழுந்தருளினபோது சில ஆஸ்திகர்கள் அவரிடம் வந்து "ஸ்வாமிந்! "தலையல்லாற் கைம்மாறிலேனே" என்ற விடத்திற்குக் கருத்து விளங்கவில்லை; ஸ்வாமி ஸாதிக்கவேணும்' என்று வேண்டினர்; 'குயிலே! எம்பெருமான் இங்கு வரும்படி நீ கூவவல்லையாகில் அதற்கு ப்ரத்யுபகாரமாக என்தலையை (அறுத்து) உனக்குத் தந்திடுவேன் என்கிறாள்' என்பதாக அவர்கட்குப் பொருள் சொல்லிவிட்டார். ஆனாலும் 'இதற்கு அர்த்தம் இவ்வளவேயாயிராது; நஞ்சீயர் ஸாதிப்பது என்னென்று தெரிந்துகொள்ளவேணும்' என்று அவர்க்கு ஆவல் இருந்தது. யாத்திரைமுடிந்து கோயிலுக்கு எழுந்தருளினபிறகு நம்பிள்ளையைச் சந்தித்த போது 'ஸ்வாமிந்! அடியேன் ஜீயர் ஸந்நிதியிலே பதினொருதிருவாய்மொழிக்குப் பொருள்கேட்டேன்; நாச்சியார் திருமொழிக்குக் கேட்கப் பெற்றிலேன்; 'தலையல்லால் கைம்மாறிலேனே' என்றவிடத்திற்கு ஜீயர் அருளிச்செய்வது எங்ஙனே? என்று கேட்டார். "நீ பண்ணுமுபகாரத்துக்கு இத்தலையால் செய்வதொன்றுண்டோவென்று என்தலையை உனக்காக்கி, காலமெல்லாம் உன்காலிலே வணங்கி இருப்பேனென்கிறாள் என்று ஜீயரருளிச்செய்யும்படி" என்று நம்பிள்ளை அருளிச் செய்யக்கேட்டு, பெற்றிஸ்வாமி இதற்கு மிகவும் கொண்டாடி 'ஸ்வாமிந்! அடியேனுக்கு அடிக்கடி யாத்திரைபோக நேருமாகையாலே ஸ்வாமிஸந்நிதியில் இடைவிடாது காத்துக்கொண்டிருந்து அருளிச்செயல்களின் ஸகலார்த்தங்களையும் கேட்க பாக்யமில்லாமையால் பல விசேஷார்த்தங்களை இழந்துபோகவேண்டி

யிருக்கிறது; அடியேன் வெளியே போனால் 'இதற்கென்ன பொருள்? இதற்கென்ன பொருள்?' என்று பலர் என்னைக் கேட்கவருவர்கள்; அப்போது ஸ்வாமி அருளிச்செய்யும் அர்த்தவிசேஷமே என்நெஞ்சில் தோற்றும்படி அநுக்ரஹிக்க வேணுமென்று முன்னமே ஜீயர் ஸந்நிதியில் அடியேன் ப்ரார்த்தித்தேன்; அவரும் 'அப்படியே தோற்றுக' என்று அநுக்ரஹித்தருளினார்; ஆயினும் அடியேனுக்கு அந்த அநுக்ரஹம் பலிக்கக் காண்கிறிலேன்; ஜீயர் அருளிச் செய்யும் அர்த்தம் எனக்குத் தோற்றுகிறதில்லை; அருளிச்செயலின் அர்த்தங்கள் குருகுலவாஸம்பண்ணிக் குட்டுப்பட்டுக் கேட்டுத் தெரிந்துகொள்ளத் தக்கவையேயன்றி, வரம்பெற்று அறியப்போமோ? ஆகையால்தான் ஜீயர் அளித்த வரம் பாவியேனுக்குப் பலிக்கவில்லை' என்று சொல்லிப்போனார். (இந்த ஸம்வாதம் பெற்றிக்கும் நம்பிள்ளைக்கும் நிகழ்ந்தது.) .... .... .... .... .... (௬)

பொங்கியபாற்கடற்பள்ளிகொள்வானைப் புணர்வதோராசையினால் * என்
கொங்கைகிளர்ந்துகுமைத்துக்குதுகலித்து ஆவியை யாகுலஞ்செய்யும்
அங்குயிலே * உனக்கென்னமறைந்துறைவு ஆழியுஞ்சங்குமொண்தண்டும் *
தங்கியகையவனைவரக்கூவில்நீ சாலத்தருமம்பெறுதி. (௭)

| | | | |
|---|---|---|---|
| அம் குயிலே! | அழகியகுயிலே!, | மறைந்து உறைவு | என் கண்ணுக்குப் புலப்படாமல் நீ மறைந்திருப்பதனால் |
| பொங்கிய பால் கடல் | அலையெறிவையுடைய திருப்பாற்கடலில் | உனக்கு என்ன | உனக்கு என்ன புருஷார்த்தம்? |
| பள்ளி கொள்வானை | பள்ளிகொண்டருளும் எம்பெருமானோடே | ஒண் ஆழியும் சங்கும் தண்டும் தங்கிய கையவனை வர | திருவாழி திருச்சங்கும் ஸ்ரீகதையும் பொருந்திய திருக்கைகளையுடைய பெருமான் இங்கே வரும்படி |
| புணர்வது ஓர் ஆசையினால் | ஸம்ச்லேஷிக்க வேணுமென்று உண்டான ஆசையினால் | நீ கூவில் | நீ கூவுவாயாகில் |
| என் கொங்கை கிளர்ந்து | எனது முலைகள் பருத்து | சால | மிகவும் |
| குதுகலித்து | மிக்க உத்ஸாஹங்கொண்டு | தருமம் பெறுதி | தர்மம் செய்தாயாவாய். |
| ஆவியை | எனது உயிரை | | |
| குமைத்து ஆகுலம் செய்யும் | உருக்கி வியாகுலப்படுத்தா நின்றன; | | |

பரமபதத்தைவிட்டுத் திருப்பாற்கடலிலேவந்து பள்ளி கொண்டிரா நின்ற பெருமானைப் புணரவேணுமென்ற அபிநிவேசத்தினால் என் கொங்கைகளானவை காலவிளம்பம் பொறுத்திருக்கமாட்டாத தன்மையினால் விம்மிவளர்ந்து, அவ்வளவிலும் அவன் ஓடிவந்து அணைக்கக்காணாமையினாலே 'யாம் உன்மார்விலேவந்து முளைத்தபடியாலன்றோ எமக்கு இந்தக்கஷ்டம் விளைந்தது; உன்னுடைய தௌர்ப்பாக்யமானது எங்கள்மேலும் ஏறிப்பாய்ந்து எம்பெருமான் எங்களையும் உபேக்ஷிக்கும்படியாயிற்று' என்று சொல்லிக் கொண்டு அவை என்னைப்புடைக்கிற புடையை என்சொல்வேன்? என்று

ஆண்டாள் கூக்குரலிட்டுக் கூறியதைக்கேட்ட அச்சோலைக்குயிலானது 'இப்போது நாம் இவளுக்கு முகங்கொடுத்தால் நம்மை இவள் வெறுமனே விடமாட்டாள்; "என்செய்யதாமரைக்கட் பெருமானார்க்கென்தூதாய், என் செய்யுமுரைத்தக்கால் இனக்குயில்காள்!" (திருவாய்மொழி க-ச-உ.) என்றாற்போல இவளும் நம்மைத் தூதுபோகவேண்டிக் காலையொடிக்கக் கருதுவள்; இந்த வெய்யிலிலும் காவலிலும் ஓடுவதற்கு நம்மாலாகாது; அதுதன்னிலும் திருப்பாற்கடலெம்பெருமான்மீது இவளுக்கு ஆசையாம்; அங்கே ஓட ஆராலாகும்? ஆகையாலே இவளுக்கு நாம் முகங்காட்டாமல் தலைமறைந்திருப்பதே கருமம்' என்று நினைத்து முகத்தையுங்காட்டாமல் குரலையும் தெரிவியாமல் பதுங்கிக்கிடந்தது; அங்ஙனமிருந்த அக்குயிலின் கருத்தைத் தெரிந்துகொண்ட ஆண்டாள் "அம் குயிலே!" என்று விளித்தாள்; [அழகிய குயிலே! என்றபடி.] நீ மற்றகுயில்களைப் போலேயிருந்தாயாகில் உன்னைச்ரமப்படுத்த நினைத்தாலும் நினைப்பேன்; அழகியகுயிலன்றோ நீ; உன் அழகைக் கண்டிருக்கிறநான் அவ்வழகுக்கு ஒரு வாட்டம் பிறக்கும்படி உன்னைச்ரமப்படுத்த நினைப்பேனோ? நீ எங்கும் தூது செல்லவேண்டா; நீ இருந்த விடத்திலிருந்துகொண்டே, அப்பெருமான் இங்கேவரும்படி கூவினையாகில் இதுவே மஹோபகாரமாம்; எனக்குமாத்திரம் நன்மையன்று; நீயும் ஒருவாய்ச்சொல்லாலே பெரிய தருமம் நடத்தினையாவாய்; 'நாம் கூவினால் அவ்வெம்பெருமான் ஓடிவரக் காத்திருக்கிறானோ' என்று நினையாதே; "நம்மேல்வினைகடிவான்-எப்போதும் கைகழலாநேமியான்" என்றும் "[பாது ப்ரணதரக்ஷாயாம் விளம்பமஸஹந்நிவ, ஸதா பஞ்சாயுதீம் பிப்ரத் ஸந: ஸ்ரீரங்கநாயக: = ஸ்ரீரங்கராஜஸ்தவம்.]" என்றும் சொல்லியிருக்கிறபடி என்னைப்போன்ற ஆர்த்தர்கட்கு விரைவாகவந்து காரியஞ்செய்வதற்காக அவன் திவ்யாயுதங்களை க்ஷணகாலமும் கைவிடாமல் ஏந்திக்கொண்டிருப்பது உனக்குத்தெரியாதா? ஏற்கனவே இங்கு வந்து காரியஞ்செய்வதில் ஆதரமுடையவனான அப்பெருமான் உன் கூவுதல் கேட்டபின்பும் வாராதே நிற்பனோ? அரைகுலையத்தலைகுலைய ஆனைக்குவந்து உதவினாற்போலே எனக்கும் உதவ ஓடிவருவன்காண்; ஆகையாலே நீ கூவு என்கிறாள்.

பொங்கிய பாற்கடல் = பாற்கடலின் பொங்குதலுக்கு இரண்டு ஹேதுக்களை ரஸோக்தியாக அருளிச்செய்வர் பெரியவாச்சான்பிள்ளை; (க) ஸாமாந்யனான ஒருசந்திரனைக் கண்டாலே கடல் பொங்கக் காண்கிறோம்; சிறந்த சந்திரர்கள் பதின்மரைக் கண்டால் பொங்குதலுக்கு அளவுண்டோ? திருப்பாற்கடல் பத்து சந்திரர்களைக் கண்டதே யென்னில்; ஆம்; [த்வத்பாதாப்ஜே ப்ரியமக! நகச்சத்மநாச்ரித்ய நித்யம் ஸத்வ்ருத்தோபூத் ஸசதசகுண: புஷ்கலோ நிஷ்கலங்க: - வரதராஜஸ்தவம்.] என்று - 'எம்பெருமானுடைய திருவடிகளிலுள்ள

பத்துத்திருவிரல்களிலும் உருண்டை வடிவமாய் நகம்போல விளங்குகின்றவை நகங்களல்ல; சில குற்றங்குறைகளோடு கூடியிருந்த சந்திரன் பெருமாள் திருவடிகளை ஆச்ரயித்து அக்குற்றங்குறைகள் தீர்ந்து பத்து வடிவம்பெற்று அத்திருவடிகளை விடாதே கிடக்கிறான்; அவையே நகங்களாகத் தோற்றுகின்றன' என்று அருளிச்செய்திருக்கையாலே அந்தப் பத்து சந்திரர்களையும் பாற்கடல் கண்டால் பொங்காதிருக்குமோ?. (உ) பொங்குதலுக்கு மற்றொரு ஹேது என்னெனில், "चन्द्रमा मनसो जातः" [சந்த்ரமா மநஸோஜாத: - புருஷஸூக்தம்] என்றபடி சந்திரனென்பவன் எம்பெருமானுடைய மனஸ்ஸில் நின்றும் தோன்றியவன்; அச்சந்திரனுக்கு எம்பெருமான் தனது திருவுள்ளத்திலுள்ள தண்ணளியிலே ஸ்வல்பபாகத்தை ஊட்டினமாத்திரமேயுள்ளது; அப்படிப்பட்ட சந்திரனைக்கண்டே கடல் பொங்கிற்றாகில், ஸாக்ஷாத் அவ்வெம்பெருமான் தானே வந்துபடுகொடு கிடக்கக்கண்டால் பொங்குதலுக்கு அளவுண்டோ?

என்கொங்கை கிளர்ந்து = ஆசை அளவற்றிருக்கச்செய்தேயும் நானது பெண்மைக்குக் குறைபாடு நேரவொண்ணாதென்று நான் அடங்கியிருந்தாலும் என்கொங்கைக்கு அத்தகைய அடக்கம் இல்லையே! என்கிறாள் போலும். கொங்கை குதுகலித்துக் கிளர்ந்து = 'நம்முடைய கஷ்டதசையைக் கண்டறிந்து எம்பெருமான் பதறிவருகிறான்' என்றெண்ணிய கொங்கைகளானவை மஹாப்ரபுக்களை எதிர்கொள்ளப் புறப்படுவாரைப்போலே குதூஹலமாய்க் கிளர்கின்றமை காணீரென்கிறாள் போலும். குதுகலித்து "குதூஹலம்" என்ற வடசொல்லை ஒரு வினைப்பகுதியாகக்கொண்டு அதன்மேல் வினையெச்ச விகுதியையேற்றிக்கிடக்கிறதென்க. ஆகுலம் = வடசொல். ஆகுலஞ்செய்கையாவது - கலங்கப்பண்ணுகை, ஹிம்ஸிக்கை.

அம் குயிலே! = நான் இப்படி கஷ்டப்படாநிற்கவும் நீ பொன்மலர்ப் பள்ளியிலே நிழலாடக் கண்படைகொண்டு மறைந்துகிடப்பது வெளியில் தலை காட்டினால் நம் அழகுக்குக் குறைநேர்ந்துவிடுமென்ற கருத்தினாலன்றோ? என் கஷ்ட நிவாரணத்தை முக்கியமாகக் கொள்ளாமல் உன் அழகையே முக்கியமாகக்கொண்டு கிடக்கிறாயே! இதுவோ தகவு? என்ற உபாலம்பம் தோற்ற அழகிய குயிலே! என விளிக்கின்றாள் போலும்.

சாலத்தருமம் பெறுதி = பிராட்டி, திருவடியை நோக்கி "वाचा धर्ममवाप्नुहि" [வாசா தர்மமவாப்நுஹி] என்று அருளிச்செய்ததை ஆண்டாளும் அடியொற்றிக் கூறினளென்க. .... .... .... .... .... .... .... (எ)

சார்ங்கம்வளையவலிக்கும் தடக்கைச்சதுரன்பொருத்தமுடையன் ※
நாங்களெம்மிலிருந்தொட்டியகச்சங்கம் நானுமவனுமறிதும் ※
தேங்கனிமாம்பொழிற்செந்தளிர்கோதும் சிறுகுயிலே ※ திருமாலை
ஆங்குவிரைந்தொல்லைக்கூகிற்றியாகில் அவனைநான்செய்வனகாணே. (அ)

| | | | |
|---|---|---|---|
| தேம் கனி | இனிமையானபழங்களையுடைய | இருந்து | சேர்ந்திருந்து |
| மா பொழில் | மாந்தோப்பிலே | எம்மில் இட்டிய | எங்களுக்குள் ரஹஸ்யமாகச் செய்து கொண்ட |
| செம் தளிர் கோதும் | சிவந்த துளிர்களைவாயலகால் கொந்துகிற | சங்கம் | ஸங்கேதத்தை |
| சிறு குயிலே! | இளங்குயிலே!, | நானும் அவனும் அறிதும் | நாங்களிருவருமே அறிவோமேயன்றி வேறொருவரும் அறியார்; |
| சார்ங்கம் | தனது வில்லை | ஆங்கு திருமாலை | அங்கிருக்கிற ச்ரிய: பதியை |
| வளைய வலிக்கும் | வளைத்து வலிக்கும் சக்தியையுடைய | ஒல்லை விரைந்து | மிகவும் சீக்கிரமாக |
| தட கை | பெரியதிருக்கைகளையுடையனாய் | கூகிற்றி ஆகில் | நீ கூவவல்லையாகில் |
| சதுரன் | ஸகலவித ஸாமர்த்தியமுமுடையனான எம்பெருமான் | அவனை | (பிறகு அவன் இங்கு வந்த பிற்பாடு) அவன் விஷயத்தில் |
| பொருத்தம் உடையன் | ப்ரணயரீதியிலும் வல்லமை பெற்றவன்; | நான் செய்வன | நான் செய்யப் போகிற மிறுக்குக்களை |
| நாங்கள் | அவனும் நானும் ஆக இருவரும் | காண் | காணக்கடவை. |

முதலடியிலுள்ள இரண்டு விசேஷணங்களும் எம்பெருமானுடைய வீரத்தன்மையையும், அந்தரங்கர்பக்கல் அன்புடைமையையும் விளக்குவன. கண்டகாட்சியில்தானே எதிரிகள் வில்லைப் பொகட்டுவிட்டு முதுகுகாட்டி ஓடும்படி தனது ஸ்ரீசார்ங்கத்தை வளைக்கவல்ல வீரத்தனம் மிக்கவன் என்கிறது முதல்விசேஷணம். அந்தப்புரத்தில் ச்ருங்காரரஸங்கொண்டாடுகைக்குப்பாங்கான பாவாபிநவமு முடையவன் என்கிறது.— பொருத்த முடையன் என்று. இவ்விரண்டாலும் சொல்லிற்றுவது என்னென்னில்; அவ்வெம்பெருமான் என்னிடம் வருகினைத்தால் அதற்கு இடையூறாக எவ்வளவு விரோதங்கள் நேர்ந்தாலும் அவற்றைத் தொலைத்தருள்வதற்குத்தக்க வலிவுபடைத்தவன் என்பதும், ப்ரணயிநிகளுடன் கலக்குங் காலத்தில் 'வாத்ஸ்யாயநத்தில் கைதேர்ந்தவன்' என்னும்படியிருப்பன் என்பதும் கூறப்பட்டன.

அவ்வெம்பெருமானுடைய சித்தவ்ருத்தியும் என்னுடைய சித்தவ்ருத்தியும் எங்களிருவர்க்கும் தெரியுமேயொழிய வேறொருவர்க்கும் தெரியாதென்கிறாள் இரண்டாமடியில். இருவருமாய்க் கலக்கும்போது "நான் உன்னையொழிய ஜீவிக்கமாட்டேன்; நான் உன்னையொழிய ஜீவிக்கமாட்டேன்" என்றே இருவரும் சொல்லிக்கொள்வார்களாம். இதுவாய்த்து இருவரும் தம்மிலிருந்து இட்டியசங்கம். இந்தசங்கேதமானது கேவலம் வாய்ச்சொல்லாய்ப் போய்விடாமல் காரியத்திலும் பர்யவஸிக்கும்படி செய்யவேண்டியது (குயிலே!) உன்கடமைகாண் என்கை உள்ளுறை.

மூன்றாமடி கோபிலஸம்போதநம்; என்னுடைய ஆற்றாமை நீ உடனே எம்பெருமானும் நானும் கூடும்படி முயற்சிப்பண்ணவேண்டியது உன் காரியமாயிருக்க, அதில் நோக்கம்வைக்காமல் தன்வயிற்றை நிறைத்துக்கொள்வதையே ப்ரயோஜநமாகக்கருதிக் கிடக்கிறாயே!; இனிமையான கனிகள் நிறைந்த மாஞ்சோலையிலே செவ்விய தளிர்களை வாயலகால்கொத்திக்கொண்டு அதுவே தொழி

லாகக்கிடக்கிருயே !—என்று அக்குயிலின்காதில் கடுமையாகப் படும்படி சொல்லவே, அதைக்கேட்ட குயில், 'அம்மம்ம! உனக்கு வேண்டியதைச் செய்வதற்கு நான் ஸித்தனயிருக்கிறேன்; நான் என்னசெய்ய வேணும்? சொல்' என்றுகேட்க; 'கைகழிந்து போன எம்பெருமான் மீண்டு இங்கேவிரைந்து ஓடிவரும்படி கூவினுயாகில் இதுவே எனக்குநீசெய்யும் மஹோபகாரம்' என்று இவள்சொல்ல ; அதற்கு அக்குயில் 'அம்ம ? எம்பெருமானோடு உனக்கு ஸமாகமம் பண்ணிவைக்கும்படி நியமித்தாய்; இது லகுவானகாரிய மன்று; இத்தனை பெரியகாரியத்தை நான்ஸாதித்துத்தந்தால் எனக்கு என்ன ப்ரதிபலன் தருவதாக நீநினைத்திருக்கிருய்?' என்றுகேட்க; அதற்கு மறுமொழியாக "அவனைநான் செய்வன காணே" என்கிருள்! அதாவது - நீ கூவ, அவன் இவ்விடம் வந்து சேர்ந்தவாறே இத்தனை நாள் அவன் என்னைப் படுத்தினபாடெல்லாம் ஒரு க்ஷணத்திலே அவன் என்கண் வட்டத்திலே படும்படி செய்யப்போகிறேனே ; அந்த விநோதத்தைக் காண்கை உனக்குலகுவான லாபமோ? பரமப்ரயோஜநமன்றோ? அதுபோராதோ? என்கிருள்.

"அவனைநான் செய்வன" என்கிறவிவள் அவனை என்செய்வதாக நினைத்திருக்கிருள்? காலாலும் கையாலும் தகைப்பதாக நினைத்திருக்கிருளோ? நாயே பேயே என்று வைய நினைத்திருக்கிருளோ? கம்பத்தில் கட்டிப்புடைக்க நினைத்திருக்கிருளோ? என்னில்; இவையொன்றும் செய்ய நினைத்திலள்; அவன் வந்து நிற்க, அவனுக்கு முகங்கொடாதே முகத்தைத்திருப்பிக்கொண்டிருக்க வாய்த்து நினைத்திருக்கிருள். நெடுநாள் பட்டினிகிடந்தவன் முன்னேசோற்றை இட்டு வைத்து அதனை அவன்புஜிக்கவொட்டாமல் தகைந்தால் அந்தப்பசியன் எப்பாடுபடுவனே அப்பாடு படுவனிறே இச்செயலுக்கு எம்பெருமான். "பொய்யச்சங் காட்டி நீபோதியேலும் இன்னமென்கையகத்தே ஈங்கொருநாள் வருதியேல் என்சினம் தீர்வன்நானே" [பெருமாள் திருமொழி ௬ - அ.] என்றவிடத்துள்ள விசேஷார்த்தம் இங்கு அநுஸந்திக்கத் தக்கது. "வண்டார் பூ மாமலர் மங்கை மணநோக்கமுண்டானே." என்றபடி - நாயகியின் கடாக்ஷவீக்ஷணத்தையே ஊணாகக்கொண்டிருக்கிற எம்பெருமானுக்கு அந்த ஊண் கடைபட்டால் அதற்கு மேற்பட்ட துடிப்பு இல்லையாம். மற்றபடி காலாலுதைப்பதும் கையால் குத்துவதுமெல்லாம் [மமசிரஸி மண்டநம் கோபிகாதாடநம்] என்றிருக்கிற எம்பெருமானுக்குப் பரமபோக்யமேயாதலால் அவையெல்லாம் சிக்ஷையாகமாட்டாது; முகத்தை மாறவைப்பதே பெருத்த தண்டனையாம் என்க. இப்படிப்பட்ட சிக்ஷையை அவனுக்கு நான் செய்யும்போது அதை நீ காணப்போகிருயன்றோ? அந்தக்காட்சி எளிதில் கிடைக்கக்கூடியதோ? அந்த ப்ரமப்ரயோஜநத்திற்காகக் கூவாய் என்கிருளாய்த்து .... (அ)

பைங்கிளிவண்ணன்சிரீதரனென்பதோர் பாசத்தகப்பட்டிருந்தேன்*
பொங்கொளிவண்டிரைக்கும்பொழில்வாழ்குயிலே குறிக்கொண்டிதுநீகேள்*
சங்கொடுசக்கரத்தான்வரக்கூவுதல் பொன்வளைகொண்டுதருதல்*
இங்குள்ளகாவினில்வாழக்கருதில் இரண்டத்தொன்றேல்திண்ணம்வேண்டும்.

லாகக்கிடக்கிறாயே !—என்று அக்குயிலின்காதில் கடுமையாகப் படும்படி சொல்லவே, இதைக்கேட்ட குயில், 'அம்மம்ம! உனக்கு வேண்டியதைச் செய்வதற்கு நான் ஸித்தனாயிருக்கிறேன்; நான் என்னசெய்ய வேணும்? சொல்' என்றுகேட்க; 'கைகழிந்து போன எம்பெருமான் மீண்டு இங்கேவிரைந்து ஓடிவரும்படி கூவினாயாகில் இதுவே என்க்குநீசெய்யும் மஹோபகாரம்' என்று இவள்சொல்ல; அதற்கு அக்குயில் 'அம்ம! எம்பெருமானோடு உனக்கு ஸமாகமம் பண்ணிவைக்கும்படி நியமித்தாய்; இது லகுவான காரியமன்று; இத்தனை பெரிய்காரியத்தை நான் நிர்வஹித்துத்தந்தால் எனக்கு என்ன ப்ரதிபலன் தருவதாக நீநினைத்திருக்கிறாய்' என்றுகேட்க; அதற்கு மறுமொழியாக "அவனைநான் செய்வன காணே" என்கிறாள். அதாவது:- நீ கூவ, அவன் இவ்விடம் வந்து சேர்ந்தவாறே இத்தனை காலம் அவன் என்னைப்படுத்தினபாடெல்லாம் ஒரு க்ஷணத்திலே அவன் என்கண் வட்டத்திலே படும்படி செய்யப்போகிறேனே; அந்த விநோதத்தைக் காண்கை உனக்குலகுவான லாபமோ? பரம்ப்ரயோஜநமன்றோ? அதுபோராதோ? என்கிறாள்.

"அவனைநான் செய்வன" என்கிறவிவள் அவனை என்செய்வதாக நினைத்திருக்கிறாள்? காலாலும் கையாலும் துகைப்பதாக நினைத்திருக்கிறாளோ? நாயே பேயே என்று வைய நினைத்திருக்கிறாளோ? கம்பத்தில் கட்டிப்புடைக்க நினைத்திருக்கிறாளோ? என்னில்; இவையொன்றும் செய்ய நினைத்திலள்; அவன் வந்து நிற்க, அவனுக்கு முகங்கொடாதே முகத்தைத்திருப்பிக்கொண்டிருக்க வாய்த்து நினைத்திருக்கிறாள். நெடுநாள் பட்டினிகிடந்தவன் முன்னேசோற்றை இட்டு வைத்து அதனை அவன்புஜிக்கவொட்டாமல் தகைந்தால் அந்தப்பசியன் எப்பாடுபடுவனோ அப்பாடு படுவனிறே இச்செயலுக்கு எம்பெருமான். "பொய்யச்சங் காட்டி நீபோதியேலும் இன்னமென் கையகத்தீங்கொருநாள் வருதியேல் என்சினம் தீர்வன்நானே" [பெருமாள் திருமொழி ௬-அ.] என்றவிடத்துள்ள விசேஷார்த்தம் இங்கு அநுஸந்திக்கத் தக்கது. "வண்டார் பூ மாமலர் மங்கை மணநோக்கமுண்டானே." என்றபடி நாயகியின் கடாக்ஷவீக்ஷணத்தையே உணவாகக்கொண்டிருக்கிற எம்பெருமானுக்கு அந்த வீக்ஷணம் கிடைப்பட்டால் அதற்கு மேற்பட்ட துடிப்பு இல்லையாம். மற்றபடி காலால் உதைப்பதும் கையால் குத்துவதுமெல்லாம் [மாமிரவலி மண்டலம் கொண்டாடும்] என்றிருக்கிற எம்பெருமானுக்குப் பரமபோக்யமேயாதலால் அவையெல்லாம் சிக்ஷையாகமாட்டாது; முகத்தை மாறவைப்பதே பெருந்தண்டனையாம் என்க. இப்படிப்பட்ட சிக்ஷையை அவனுக்கு நான் செய்யும்போது அதை நீ காணப்போகிறாயன்றோ? அந்தக்காட்சி எளிதில் கிடைக்கக்கூடியதோ? அந்த பரமப்ரயோஜநத்திற்காகக் கூவாய் என்கிறாளாய்த்து .... (அ)

பைங்கிளிவண்ணன்சிரீதரனென்பதோர் பாசத்தகப்பட்டிருந்தேன் *
பொங்கொளிவண்டிரைக்கும்பொழில்வாழ்குயிலே குறிக்கொண்டிதுநீகேள் *
சங்கொடுசக்கரத்தான்வரக்கூவுதல் பொன்வளைகொண்டுதருதல் *
இங்குள்ளகாவினில்வாழக்கருதில் இரண்டத்தொன்றேல்திண்ணம்வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| பொங்கு ஒளி வண்டு | மிக்கவொளியையுடைய வண்டுகளானவை | அகப்பட்டு இருந்தேன் | சிக்கிக்கொண்டு கிடக்கிறேன்; |
| இரைக்கும் பொழில் | (மதுபானமயக்கத்தாலே) இசை பாடாநின்ற சோலையிலே | இங்கு உள்ள காவினில் | இந்தச்சோலையிலே |
| வாழ் குயிலே! | களித்துவிளையாடுகிற கோகிலமே!, | வாழ கருதில் | நீ வாழ நினைக்கிறாயாகில் |
| இது | நான் சொல்லுகிற இதனை | சங்கொடுசக்கரத்தான் வரகூவுதல் | திருவாழி திருச்சங்குடையனான எம்பெருமான் (இங்கே) வரும்படி கூவுவதென்ன |
| நீ குறிக்கொண்டு கேள் | நீ பராக்கில்லாமல் அவதானமாய்க் கேள்; | பொன் வளை கொண்டுதருதல் | (நான் இழந்த) பொன் வளைகளைக் கொண்டு வந்து கொடுப்பதென்ன |
| நான் | நான் | இரண்டத்து ஒன்று | இவையிரண்டில் ஏதாவதொரு காரியம் |
| பைங்கிளி வண்ணன் சிரீதரன் என்பது ஓர் பாசத்து | பசுங்கிளி போன்ற நிறத்தையுடையனான ச்ரிய: பதியென்கிற ஒருவலையிலே | திண்ணம் வேண்டும் | நீ கட்டாயம் செய்து தீரவேண்டும். |

ஓ குயிலே! என்னுடைய கூக்குரல் உன்காதில் விழமுடியாதபடி, வண்டுகளின் இசைகள் நிறைந்தசோலையிலே அவ்விசைகளைக் கேட்டுக்கொண்டு அதுவே போதுபோக்காக நீ திரிந்தாயாகிலும் உன்னை நான்விடுவேனல்லேன்; எனது கூக்குரலையும் உனது காதில் விழ்த்துகின்றேன்; கேளாய்; ஏதோதானோ என்று கேளாதே; வண்டுகளின் இசையில் நின்றும் காதை மீட்டுக்கொண்டு என்வாய்ச் சொல்லையே குறிப்பாகக்கேள்; என்ன சொல்லுகிறேனென்னில்; இப்போது எனக்கு உண்டாயிருக்கும் நோய் என்னால் பரிஹரித்துக் கொள்ள முடியாதது; எம்பெருமானுடைய வடிவழகு முதலியவற்றில் தோற்றுப்போய்க் கால் நடையாடாமல் இருந்தவிடத்தே யிருக்கும்படியான அவஸ்தையில் கிடக்கிறேன்; அதாவது—“முன்னையமரர் முதல்வன் வண்டுவராபதிமன்னன், மணிவண்ணன் வாசுதேவன் வலையுளே—அகப்பட்டேன்” என்றும் “கற்கின்ற நூல் வலையிற் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார் கால்வலையில் பட்டிருந்தேன்காண்” என்றும் சொல்லுமாபோலே மாதவனுகிற வலையிலே நான் அகப்பட்டுக்கொண்டேன்—என்றாள். இது கேட்ட குயிலானது ‘அம்ம! இந்த க்ஷேமலாபாசாரத்தைச் சொல்வதற்காகவா என்னையழைத்தது? நீ வலைப்பட்டிருந்தால் நான் என்செய்ய வல்லேன்?’ என்று சொல்லிவிட்டு மீண்டும் வண்டுகளின் இசையைக் கேட்பதாகப் பராங்முகமாயிருக்க, பின்னடிகளில் கடுமையாகச் சொல்லுகிறாள்;—குயிலே! நீ இச்சோலையிலிருந்து ஜீவிக்கவேணுமே; என்னை அலக்ஷியம் பண்ணிக்கிடந்தாயாகில் இதிலே உனக்கு வாழமுடியுமோ? நான் முடிந்துபோனால் இச்சோலையை உனக்கு நோக்கித்தருவார் ஆர்? பிறகு இருக்க இடமில்லாமல் வருந்துவாய்; சுகமாக இங்கேவாழ்ந்திருக்கவேணுமென்று விரும்புவாயாகில்; உனக்கு இரண்டு காரியம் சொல்லுகிறேன், இரண்டில் ஏதாவது ஒன்றை நீ செய்து தீரவேணும்;

அவை எவை என்னில்; *வலங்கையாழி யிடங்கைச்சங்கமுடையானை எம்பெருமான் இங்கே வரும்படிகூவுதல் ஒன்று; என் கையில் வளைகளைக் கொண்டுவந்து கொடுத்தல் ஒன்று; இவையிரண்டினுள் ஒன்றை நீ செய்தேயாகவேணுமென்கிறாள்.

இந்த விகல்பத்தின் கருத்து என்னென்று ஆராய்வோம்; கைவளைகளைக் கொணர்ந்து கொடுப்பதென்பது எப்படி? (கைவளை போனவிதம் இத்திருமொழியின் முதற்பாட்டினுரையில் விரியும்.) எம்பெருமானுடைய பிரிவினாலே கைகழிந்துபோனவளைகள் மீண்டுவரவேணுமென்றால் கழன்றுபோனவளைகள் கையில் தங்கும்படி செய்யவேணுமென்கை. இது எம்பெருமானுடைய ஸம்ச்லேஷத்தாலன்றி மற்றொருவழியாலும் நேருவதன்று. அந்தஸம்ச்லேஷந்தானும் அவ்வெம்பெருமான் வந்தாலன்றி நேரிடாது; இப்படியிருக்க, சங்கொடுசக்கரத்தான் வரக்கூவுதல் என்பது ஒருபக்ஷமாகவும், பொன்வளைகொண்டுதருதல் என்பது மற்றொருபக்ஷமாகவும் வேறுபாடுதோற்ற அருளிச்செய்திருக்கிறபடி என்? "மாம்பழமாவது வேணும், மாங்கனியாவது வேணும்" என்கிறாப்போலே வ்யாஹதமாயிருந்ததே இதுவும்—என்று நினைக்கும்படியாயிராநின்றது. ஆயினும் இஃதொரு சமத்கார வார்த்தையென்று கொள்ளவேணும்; பதிவ்ரதாசிரோமணியான ஸாவித்ரியானவள் தன்காதலனாகிய ஸத்யவானுடைய உயிரைக் கவர்ந்துசென்ற யமனைவணங்கி அவ்வுயிரைமீட்டுக் கொடுக்கும்படி பலவாறுவேண்டியும் அவன் அதற்கு இசையாமற்போக, உபாயமறிந்த அவள் பலபல தர்மஸம்பந்தமான வார்த்தைகளை இனிமையாகச் சொல்லிக்கொண்டுபோய் அந்த யமனை மதிமயக்கி "ஸத்யவானிடத்தில் எனக்குப் பலபிள்ளைகள் பிறக்கும்படி அருள்புரியவேணும்" என வேண்ட, அவனும் அப்படியே அருளினான் என்றொரு இதிஹாஸமுண்டு; அதில், நாயகனுடைய ப்ராணனைப் ப்ரார்த்தித்து அதனைப்பெறுமவள் ஸந்ததியின் அபிவ்ருத்தியை வேண்டினது வ்யாஹதமாயிருக்கச்செய்தேயும், எப்படியாவது தன் மநோரதத்தை நிறைவேற்றிக்கொள்ள நினைத்த ஸாவித்ரியின் சதுரமான உக்தியாகையாலே ஒழுங்குபெற்றது போல, இங்கும் *சங்கொடு சக்கரத்தான் வரக்கூவுதலும், பொன்வளைகொண்டு தருதலும் பர்யாயமாயிருந்தாலும் இதொரு சமத்காரமான உக்தியாகையாலே ஒழுங்கு பெறுமென்க. "ஒருகார்யத்தாலே இரண்டும் தலைக்கட்டுமிறே" என்று ஒரு சொல்லாலே முடித்தருளினார் பெரியவாச்சான்பிள்ளை.

நாராயணாதி நாமங்களைக் குறிப்பிடாதே "சங்கொடு சக்கரத்தான்" என்கையாலே, அவனுடைய ஆபரணத்தையாவது இங்கே கொண்டுசேர்; அல்லது என்னுடைய ஆபரணத்தையாவது கொண்டு கொடு—என்கிற ரஸோக்தி வெளிவரும்.

முதலடியில், பாசம் என்றது தற்சமவடசொல்லாய், கயிறு என்னும் பொருளைத்தந்து வலையைக் குறிக்கும். "கார்த்தண் கமலக்கண்ணென்னும் நெடுங் கயிறு" என்று—வலையைக் கயிறாகவே சொல்வதுமுண்டிறே. இனி, பாசம் என்பதற்கு ஸ்நேஹமென்ற பொருளுமுண்டாகையாலே "ஸ்ரீதவிஷயமான ஸ்நேஹத்திலே யென்னுதல்" என்று இரண்டாவது பொருளும்

வியாக்கியானத்தில் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. (ப்ராசீந தாளகோசங்களில் இந்தப் பங்க்தி இல்லை. "ஸ்ரீதரனுகிற வலையிலே," என்னுமளவே உள்ளது) ... ... ... ... ... ... (கூ)

அன்றுலகமளந்தானையுகந்து அடிமைக்கணவன்வலிசெய்ய *
தென்றலுந்திங்களுமூடறுத்து என்னைநலியுமுறைமையறியேன் *
என்றுமிக்காவிலிருந்திருந்து என்னைத்ததைத்தாதேநீயுங்குயிலே *
இன்றுநாராயணனைவரக்கூவாயேல் இங்குத்தை நின்றும் துரப்பன். (ம)

| | |
|---|---|
| அன்று | மஹாபலி கொழுத்திருந்த அக்காலத்தில் |
| உலகம் அளந்தானை | மூவுலகங்களையும் அளந்துகொண்டவனான எம்பெருமான் விஷயத்திலே |
| உகந்து | நான் கைங்கர்யத்தை ஆசைப்பட, |
| அவன் | அவ்வெம்பெருமான் |
| அடிமைக்கண் | (அந்த) கைங்கரியத்திலே |
| வலி செய்ய | வஞ்சனைபண்ண |
| (அதற்கு நான் நோவுபட்டிருக்கிற ஸமயத்திலே.) | |
| தென்றலும் | தென்றல்காற்றும் |
| திங்களும் | பூர்ணசந்திரனும் |
| என்னை | என்னை |
| ஊடு அறுத்து நலியும் முறைமை | உள்ளே பிளந்துகொண்டு புகுந்து ஹிம்ஸிக்கும் நியாயத்தை |

| | |
|---|---|
| அறியேன் | அறிகின்றிலேன்; |
| குயிலே! | ஓ குயிலே! |
| நீயும் | (என்னுடைய க்ஷேமத்தை விரும்புமவனை) நீயும் |
| என்றும் | எக்காலும் |
| இக் காவில் | இந்தச்சோலையிலே |
| இருந்து இருந்து | இடைவிடாமலிருந்துகொண்டு |
| என்னை | (ஏற்கனவே மெலிந்திருக்கிற) என்னை |
| ததைத்தாதே | ஹிம்ஸியாதிரு; |
| இன்று | இன்றைக்கு |
| நாராயணனை வரக்கூவாயேல் | ஸ்ரீமந்நாராயணன் இங்கேவரும்படி அவனைநீகூவாமற் போனாயாகில் |
| இங்குத்தை நின்றும் | இந்தச்சோலையிலிருந்து |
| துரப்பன் | உன்னைத்துரத்திவிடுவேன். |

எம்பெருமானுடைய பரத்வமொன்றே என்னெஞ்சிற்பட்டிருந்தால் அவனை நான் ஆசைப்படமாட்டேன்; முன்பொருகால் த்ரிவிக்ரமாவதார வ்யாஜத்தாலே வஸிஷ்ட சண்டாள விபாகம் பாராமல் எல்லார் தலையிலும் திருவடியைக் கொண்டு வைத்தானென்று கேள்விப்பட்டேனாகையால் அவன் மிக்க ஸௌசீல்யகுணம் பொருந்தியவனென்றுணர்ந்து, தன்னை ஆசைப்படாதவுலகங்கட்கே அவன் அவ்வளவு காரியம் தன்பேறாகச் செய்தபோது ஆசைப்பட்ட நம்மை உபேக்ஷிப்பனோ என்று நினைத்து அவ்வுலகளந்தபெருமான் திருவடிகளில் நான் கைங்கரியம் பண்ணவிரும்பினேன்; அக்கைங்கரியம் அடியேனுக்கு ப்ராப்தமாகவொண்ணாதபடி அப்பெருமான் சில்மிறுக்குக்களைப்பண்ணவே, தென்றல் திங்கள் முதலிய பாதகபதார்த்தங்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்துகொண்டு 'நாம் இவளை ஹிம்ஸிப்பதற்கு இதுவே வாய்த்த ஸமயம்; எம்பெருமான் இவளை இகழ்ந்திருக்கும் இச்சமயமே நாம் தாராளமாக இவளைவருத்தக்கூடிய சமயமாகும்' என்று துணிந்து அவை என்னைப் படுத்தும்பாடுகளை நான் வாய்கொண்டு சொல்லவல்லேனல்லேன்-என்று இவள் பரிதபித்துக்கொண்டு கதறுகிற்கையில் அச்சோலையிற் குயிலானது தன்

வியாக்கியானத்தில் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. (ப்ராசீந தாளகோசங்களில் இந்தப் பங்க்தி இல்லை. "ஸ்ரீ தாளஞகிற ஊஸ்யிலே," என்னுமளவே உள்ளது) ... ... ... (௯)

அன்றுலகமளந்தானையுகந்து அடிமைக்கணவன்வலிசெய்ய *
தென்றலுந்திங்களுமூடறுத்து என்னைநலியுமுறைமையறியேன் *
என்றுமிக்காவிலிருந்திருந்து என்னைத்ததைத்தாதேநீயுங்குயிலே *
இன்றுநாராயணனைவரக்கூவாயேல் இங்குத்தைநின்றும் துரப்பன். (௰)

| | | | |
|---|---|---|---|
| அன்று | மஹாபலி கொழுத்திருந்த அக்காலத்தில் | அறியேன் | அறிகின்றிலேன்; |
| உலகம் அளந்தானை | மூவுலகங்களையும் அளந்துகொண்டவனான எம்பெருமான் விஷயத்திலே | குயிலே | ஓ குயிலே! |
| உகந்து | நான் கைங்கர்யத்தை ஆசைப்பட, | நீயும் | (என்னுடைய கேடு[illegible] விரும்புமவளான) நீயும் |
| அவன் | அவ்வெம்பெருமான் | என்றும் | எப்போதும் |
| அடிமைக்கண் | (அந்த) கைங்கரியத்திலே | இக்காவில் | இந்தச்சோலையிலே |
| வலி செய்ய | வஞ்சனைபண்ண | இருந்து இருந்து | இடைவிடாமலிருந்துகொண்டு |
| (அதற்கு நான் நோவுபட்டிருக்கிற ஸமயத்திலே.) | | என்னை | (ஏற்கனவே மெலிந்திருக்கிற) என்னை |
| தென்றலும் | தென்றல்காற்றும் | ததைத்தாதே | ஹிம்ஸியாதிரு; |
| திங்களும் | பூர்ணசந்திரனும் | இன்று | இன்றைக்கு |
| என்னை | என்னை | நாராயணனை வரக்கூவாயேல் | ஸ்ரீமந்நாராயணன் இங்கே வரும்படி அவனை நீ கூவாமற் போனாயாகில் |
| ஊடு அறுத்து நலியும் முறைமை | உள்ளே பிளந்துகொண்டு புகுந்து ஹிம்ஸிக்கும் வியாபாரத்தை | இங்குத்தை நின்றும் | இந்தச்சோலையிலிருந்து |
| | | துரப்பன் | உன்னைத் துரத்திவிடுவேன். |

எம்பெருமானுடைய பாக்யமொன்றே என்னெஞ்சிற்பட்டிருந்தால் அவனை நான் ஆசைப்படமாட்டேன்; முன்பொருகால் த்ரிவிக்ரமாவதார வ்யாஜத்தாலே வஸிஷ்ட சண்டாள விபாகம் பாராமல் எல்லார் தலையிலும் திருவடியைக் கொண்டு வைத்தானென்று கேள்விப்பட்டேனாகையால் அவன் மிக்க ஸௌசீல்யகுணம் பொருந்தியவனென்றுணர்ந்து, தன்னை ஆசைப்பட்டார் வுலங்கட்கே அவன் அவ்வவ்வு காரியம் தன்பேறாகச் செய்தபோது ஆசைப்பட்ட நம்மை உபேக்ஷிப்பனோ என்று நினைத்து அவ்வுலகளந்த பெருமான் திருவடிகளில் நான் கைங்கரியம் பண்ணவிரும்பினேன்; அக்கைங்கரியம் அடியேனுக்கு ப்ராப்தமாகவொண்ணாதபடி அப்பெருமான் இலம்பறுக்குக்களைப்பண்ணவே, தென்றல் திங்கள் முதலிய பாதகபதார்த்தங்களெல்லாம் ஒன்று சேர்ந்துகொண்டு 'நாம் இவளை ஹிம்ஸிப்பதற்கு இதுவே வாய்த்த ஸமயம்; எம்பெருமான் இவளை இகழ்ந்திருக்கும் இச்சமயமே நாம் தாராளமாக இவளைவருத்தக்கூடிய சமயமாகும்' என்று துணிந்து அவை என்னைப் படுத்தும்பாடுகளை நான் வாய்கொண்டு சொல்லவல்லேனல்லேன் என்று இவள் பரிதபித்துக்கொண்டு கதறுகிற்கையில் அச்சோலையிற் குயிலானது தன்

களிப்புக்குப் போக்குவீடாக இனியபாட்டுகளைப் பாடத்தொடங்கவே அது இவளுக்கு மிகவும் பாதகமாகி, 'ஓ குயிலே! தென்றலும் திங்களும் என்னை ஹிம்ஸிப்பது ஸ்வல்பமாய், உன்னுடைய ஹிம்ஸையே அளவற்றதாயிருக்கிறது; அல்லும்பகலும் இடைவிடாதேயிருந்து நீ என்னை ஹிம்ஸிக்கிறாய், இதற்காகவா உன்னை நான் இச்சோலையிலே இடங்கொடுத்து வாழ்விப்பது? நன்று செய்கின்றாய்!; இதுவரை போனது போகட்டும், இந்தக்ஷணத்தில் திருமால் இங்கே எழுந்தருளும்படி கூவவல்லையாகில் கூவி அவனை இங்குவரவழை; இல்லையாகில் தடியெடுத்துதைத்து உன்னை இச்சோலையிலிருந்து துரத்திவிடுவேன்—என்கிறாள்.

"[அன்றுலக மளந்தானை யுகந்து] உறங்குகிற ப்ரஜைக்கு முலை கொடுக்கும் தாயைப்போல இவையறியாதிருக்கத் தானே இவற்றின் தலையிலே திருவடிகளை வைத்தவனையுகந்து." என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்க. உகந்து என்றது உகக்க என்றபடி; எச்சத்திரிபு: ("மழைபெய்து நெல்விளைந்தது" என்பதுபோல.) "சொல்திரியினும் பொருள்திரியா வினைக்குறை" என்ற நன்னூற்சூத்திர மறியத்தக்கது.

அடிமைக்கண் = கண்-ஏழாம்வேற்றுமையுருபு: அடிமையிலே என்றபடி. வலிசெய்தலாவது - இளைத்தவர்கள் விஷயத்தில் பலிஷ்டர் செய்யும் செயலைச் செய்தல்; (அலக்ஷியஞ்செய்தல்; மாட்டேனென்னுதல்.)

• [தென்றலு மித்யாதி.] தென்றலும் திங்களும் என்னை வந்து ஹிம்ஸிப்பதற்கு என்ன நியாயமுண்டு; நானாசைப்பட்ட விஷயத்தின் ரஸம் இவற்றுக்குச் சிறிதாகிலும் தெரியுமாகில் இவைஹிம்ஸிப்பதையும் ஒருவாறு போக்யமாகக்கொள்ளலாம்; அவ்விஷயத்தின் வாசியை அறியமாட்டாத இவை என்னைவந்து ஹிம்ஸிப்பதற்கு என்னநியாயமிருக்கிறது?. "ராவணன் நடுவே புகுந்து நலிந்தாப்போலே தென்றலும் சந்த்ரனும் நடுவேவந்து என்னை நலிகைக்கிடாயிருப்பதொரு • முறையுண்டாக அறிகிறிலேன்" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. "நலியும்முறைமையறியேன்" என்றசொல்நலத்தால் — தம்பதிகளைக் கூட்டிவைப்பது இவற்றுக்கு நியாயமேயொழிய இப்படி வருத்தப்படுத்துவது நியாயமாகமாட்டாது என்ற கருத்து வெளிவருமென்ப. தன்மகனை சிறியதிருவடிக்கிருந்த விவேகத்தில் காற்கூறும் இக்காற்றுக்கு இல்லையே.

[குயிலே! நீயும் இக்காவில் இருந்திருந்து என்னைத்ததைத்தாதே.] சோலையில் குயிலினுடைய இருப்பே இவளுக்கு ஹிம்ஸைக்கு உடலாயிருக்கிறபடி. "பைம்பொழில்வாழ் குயில்காள்! ..... எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கு என்செய்வதே?" என்று இவ்வாண்டாள் தானே மேல் அருளிச்செய்கிறாளாகையாலே குயிலானது விரஹதசையிலே எம்பெருமானது திருமேனி நிறத்தை நினைப்பூட்டி இடைவிடாது வருத்துமென்க.

"இங்குத்தைநின்றும் துரப்பன்" என்பதற்கு 'இச்சோலையிலிருந்து உன்னைத் தூரத்திவிடுவேன்' என்பது பொருளாயினும், நான் உயிர்துறந்து விடுவேன்' என்பது கருத்தாம். நீ நாராயணனை வரக்கூவாவிடில் 'நான்முடிந்து போவேன்; பிறகு இந்தச்சோலையை உனக்கு நோக்கித்தருவார் இல்லாமையினாலே நீ இருப்பிடமிழந்து வேறிடந்தேடி ஓடவேண்டியதுதான் என்றபடி. ஆகவே, துரப்பன் என்றது — நீ இவ்விடத்தைவிட்டு ஓடிப்போவதற் கிடான காரியத்தைச் செய்வேன் என்றபடியாம்: அக்காரியமாவது - தான் முடிந்துபோகை. இங்ஙனம் கூறியது மங்கலவழக்கின் பாற்படும். .... (ய)

விண்ணுறநீண்டடிதாவியமைந்தனை வேற்கண்மடந்தை விரும்பி*
கண்ணுறவென்கடல்வண்ணனைக் கூவுகருங்குயிலேயென்றமாற்றம்*
பண்ணுறநான்மறையோர் புதுவை மன்னன் பட்டர்பிரான்கோதைசொன்ன*
நண்ணுறுவாசகமாலைவல்லார் நமோநாராயணாயவென்பாரே. (கக)

| | | | |
|---|---|---|---|
| வேல் கண் | வேல்போன்ற கண்களையுடையளாய் | விரும்பி | ஆசைப்பட்டு |
| மடந்தை | பெண்மைக்கு உரிய குணங்கள் நிறைந்தவளாய் | கருங் குயிலே! என் கடல் வண்ணனை கண் உறகூவு என்ற மாற்றம் | 'ஓ கரியகுயிலே! கடல்போன்ற திருநிறத்தையுடையனான என்காதலனை நான் ஸேவிக்கும்படி நீ கூவு' என்று நியமித்த பாசுரமாக |
| பண் உறு நால்மறையோர் புதுவை மன்னன் பட்டர் பிரான் கோதை | ஸ்வரப்ரதானமான நான்குவேதங்களையும் ஓதின ஸ்ரீ வைஷ்ணவர்கள் வாழ்கிற ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் தலைவரான பெரியாழ்வாருடைய மகளான ஆண்டாள், | சொன்ன | அருளிச்செய்த |
| அடி விண் உற நீண்டு தாவிய மைந்தனை | திருவடியானது பரமாகாசத்தளவும் போய்ப்பொருந்தும்படியாக நெடுகவளர்ந்து (உலகங்களை) வியாபித்தமிடுக்கையுடையனான எம்பெருமானை | நண்ணுறு வாசகம் மாலை | போக்யமான (இந்த) ஸ்ரீ ஸூக்திமாலையை |
| | | வல்லார் | ஓதவல்லவர்கள் |
| | | 'நமோநாராயணாய' என்பார் | எம்பெருமானுக்கு அந்தரங்க கைங்கர்யராகப்பெறுவர்கள். |

இத்திருமொழியை ஓதவல்லவர்கள் ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தத்தைப் பெறுவர்களென்று பலஞ்சொல்லி முடிக்கிறது இப்பாட்டு.

"வேங்கடவனைவிரும்பி" என்றாவது "சங்கொடுசக்கரத்தானை விரும்பி" என்றாவது "பவளவாயனைவிரும்பி" என்றாவது அருளிச்செய்யாமல் "விண்ணுற நீண்டடிதாவிய மைந்தனை விரும்பி" என்றதற்குக்கருத்து—ஒருவரிடத்தில் ஒன்றைக்கொள்ளநினைத்தால் பின்பு அவர்களுக்கு ஒன்றும்மிருந்திருக்கவொண்ணாதபடி ஸர்வாங்கசுத்தி பண்ணுகிறவனையாயிற்று நான்விரும்பியது! ; *இரக்க மண் கொடுத்தவற்கு இருக்க வொன்று மின்றியே பாக்கவைத்தளந்துகொண்ட பற்பபாதனை நான்விரும்புகையாலே ஸர்வஸ்வத்தையுமிழந்து சந்தியில் நின்று சங்கடப்படவேண்டிற்று என்கை.

...கண்மடந்தை, பட்டர்பிரான்கோதை, விண்ணுற நீண்டடிதாவிய மைந்தனைக்கண்ணுறவிரும்பி, "கருங்குயிலே! என்கடல்வண்ணனைக்கூவு" என்ற மாற்றஞ்சொன்ன நண்ணுறுவாசக மாலைவல்லார் நமோநாராயணாய வென்பார் என்றும் அந்வயமாகலாம். "வேற்கண்மடந்தை கண்ணுறவிரும்பி" என்றஸ்வாரஸ்யத்தால்— "அவன்றன்னை வேறாய்க்கு இரையாக்கத்தேடுகிறாள்" என்றருளிச்செய்வர் பெரியவாச்சான்பிள்ளை.

நண்ணுறு=நண்ணுவதற்கு உற்ற=அனைவரும் ஆசைப்படத்தக்க—போக்யமான என்றபடி. 'எம்பெருமானை நண்ணுவதற்கு உற்றவாசகமாலை' என்றும் பொருள்கொள்ளலாம். எம்பெருமானுடைய குணங்களைப் பேசப்புகுந்த வேதம் "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ" [யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ] என்றபடி கைவொழிந்துபோனது போலல்லாமல், அவனுடையகுணம் முதலியவற்றை நன்று நண்ணுவதற்கு [ப்ரதிபாதிப்பதற்கு] உற்றவாசகமாலை என்று கருத்து.

நமோநாராயணாய வென்பாரே= "பல்லாண்டென்று பவித்திரனை .... நல்லாண்டென்று நவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று பல்லாண்டும் பரமாத்மனைச்சூழ்ந்திருந்து பல்லாண்டேத்துவர்" என்று இவளுடைய திருத்தமப்பனார் அருளிச்செய்தபடியில் நோக்கு: பல்லாண்டுபாடப்பெறுவரென்கை. திருமந்திரத்தின் பொருளிலே நிஷ்டையுடையராகப் பெறுவர் என்னவுமாம். திருவஷ்டாக்ஷரத்தை யநுஸந்திப்பவர்களுக்கு என்னபலனோ அதுவே இப்பதிகம் கற்றார்க்கும்பலன் என்றவாறு. இம்மாலை வல்லாரும் நமோநாராயணாய வென்பாரும் துல்யர் என்க. ... ... ... (௰௧.)

அடிவரவு;— மன்னு வெள்ளை மாதலி யென்பு பொன்னடை யெத்திசை பொங்கிய சார்ங்கம் பைங்கிளி யன்று விண் வாரணம்.

ஐந்தாந் திருமொழி உரை முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# ஆறாந்திருமொழி - வாரணமாயிரம்.

உரையவதாரிகை:— கீழ்த்திருமொழியில் குயிலை நோக்கி 'என்காதலனை நீ அழைத்துத்தரவேணும்' என்று பலவாறாக வேண்டியும் அக்குயில் அங்ஙனஞ் செய்யவில்லை. காலவிளம்பமின்றி எம்பெருமானைக் காணவேண்டும்படியான அவஸ்தை அதிகமாய்விட்டது இவளுக்கு. ஆனால் அந்தவிருப்பத்தின்படி அவனைக்காண்கைக்கு ஸௌகரியம் ஏற்படாமற்போயிற்று. இவளுடைய ஆசையை இன்னும்பெருக்கவேணுமென்று எம்பெருமானுடைய கருத்தாதலால் அதற்காக அவனும் விரைவாகவந்து முகங்காட்டாதொழிந்தான். இவளுக்கு நாம் அடியோடு முகங்காட்டாவிடில் இவள் தரித்திருக்கமாட்டாளென்று கருதிக் கண்ணபிரான் கனவிலேயாவது இவட்கு நாம் காட்சிதந்து ஒருவாறு தரிக்கும்படிசெய்தல் நன்று என்று துணிந்து விவாஹோத்ஸவத்தின் ஸந்நாஹஸமயம் முதலாகப் பாணிக்ரஹணபர்யந்தமான வ்ருத்தாந்தங்களைக் கனவிலே அநுபவிப்பிக்க அப்படியே ஆண்டாள் அநுபவித்துத் தனது உயிர்த்தோழிக்குச் சொல்லுகிறதாய்ச் செல்கிறது இத்திருமொழி. ... *

வாரணமாயிரம் சூழவலஞ்செய்து *
நாரணநம்பி நடக்கின்றானென்றெதிர் *
பூரணபொற்குடம் வைத்துப்புரமெங்கும் *
தோரணம்நாட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (க)

| | | | |
|---|---|---|---|
| தோழீ | என் உயிர்த்தோழியே!, | பொன் பூரண குடம் வைத்து | பொன்மயமான பூர்ணகும்பங்களை வைத்து |
| நம்பி | ஸகலகுணபரிபூர்ணனான | புரம் எங்கும் | பட்டணம் முழுதும் |
| நாரணன் | ஸ்ரீமந் நாராயணன் | தோரணம் நாட்ட | தோரண ஸ்தம்பங்கள் நாட்ட (இந்நிலைமையை) |
| ஆயிரம் வாரணம் சூழ | ஆயிரம் யானைகள் சூழ்ந்து வர | நான் கனாக்கண்டேன் | நான் ஸ்வப்நத்தில் அநுபவித்தேன். |
| வலம் செய்து நடக்கின்றான் என்று | பிரதக்ஷிணமாக எழுந்தருளுகிறானென்று (வாத்ய கோஷாதிகளால் நிச்சயித்து) | | |
| எதிர் | எதிரே | | |

12—B.

ஸ்ரீமந்நாராயணன் என்னை மணம்புணருவதாக நிச்சயித்து ஆயிரக் கணக்கான யானைகளைப்புறப்பட விட்டுக்கொண்டு மிக்கஸம்ப்ரமங்களுடன் திருவீதிப் பிரதக்ஷிணமாக எழுந்தருளுகிற செய்தியை அறிந்த நகரத்திலுள்ளார் யாவரும் "பெரியவர்கள் எழுந்தருளும்போது பூர்ணகும்பம் வைக்கவேணும்" என்ற சாஸ்த்ரவிதிப்படியும் சிஷ்டாசார முறைப்படியும் தங்கள் தங்கள் திருமாளிகைக்கெதிரில் பூர்ணகும்பங்களை வைத்தும் தோரணங்கள் நாட்டியும் இப்படிப் பலவகையாக மங்களாலங்காரங்கள் செய்வதாகக் கனாக்கண்டேன் தோழீ! என்று தோழியுடன் வ்ருத்தகீர்த்தனம்பண்ணித் தரிக்கிறாள்.

---

வாரணம் = தற்சமவடசொல். 'ஆயிரம்யானை' என்று அருளிச்செய்தமைக்குக் கருத்து — "தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு வருவான்" (பெரியாழ்வார்திருமொழி 3-1-1.) என்று கண்ணபிரானுக்கு ஆயிரம் பேர்த் தோழன்மார்கள் உண்டாகையாலும் அவர்களெல்லாரும் விட்டுப் பிரியாமல் கூடவேவருவர்களாகையாலும், கண்ணபிரான் தானொருவன் மாத்திரம் யானைமீதேறி யுட்கார்ந்து தோழன்மார்களை வேறுபடுத்தமாட்டானாகையாலும், * தம்மையேநாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையே யொக்க அருள்செய்யுங் கணக்கிலே அத்தோழன்மார்களையும் யானைமீதேற்றி உகப்பனாகையாலும் "வாரணமாயிரஞ்சூழ" எனப்பட்டதென்க.

ஆநிரைமேய்க்கப்பிறந்த கண்ணபிரானுக்கு * வாரணமாயிரஞ் சூழவருதல் எங்ஙனே ? என்னில்; "உந்துமதகளிற்றன் ஓடாத தோள்வலியன், நந்தகோபாலன்" (திருப்பாவை) என்றபாட்டின் ஆறாயிரப்படி வியாக்கியானத்தில்– "உந்து மதகளிற்றன் = மத்தகஜங்களையுடையவர் என்றுமாம்; ஆனையுண்டோ இவர்க்கென்னில்; ஸ்ரீவஸுதேவரும் தாமும் ஒருமிடறாயிருக்கையாலே அங்குள்ளது இங்கேயாய் இங்குள்ளது அங்கேயாய் ஒன்றாய்ப் போருகையாலும் தத்த (ஸ்வீக்ருத) புத்ரனுக்கு இரண்டிடத்திலும் ப்ராப்தியுண்டாகையாலும் ஆனையுண்டாகத் தட்டில்லை; 'வாரணமாயிரஞ் சூழ' என்றதிறே; திருவாய்ப்பாடியில் ஆனைகளும் பசுக்களுங் கலந்துதிரியுமாறத்தனையிறே." என்றருளிச்செய்துள்ளமை காண்க.

புரமெங்கும் = புரம்—வடசொல்; பட்டணம் என்று பொருள்: அதாவது—ஸ்ரீவில்லிபுத்தூர். "புறமெங்கும்" என வல்லினறகரப்பாடங் கொள்வாருமுளர்: எல்லாவிடங்களிலுமென்றபடி. தோரணம் — வடசொல். .... (க)

நாளைவதுவை மணமென்றுநாளிட்டு *
பாளைகமுகு பரிசுடைப் பந்தற்கீழ் *
கோளரிமாதவன் கோவிந்தனென்பானோர் *
காளை புகுதக் கனாக்கண்டேன்தோழீநான். (உ)

தோழீ!—;

| | |
|---|---|
| நாளை | நாளைக்கு |
| வதுவை மணம் என்று நாள் இட்டு | விவாஹமஹோத்ஸவமென்று முஹூர்த்தம் நிர்ணயித்து |
| பாளை கமுகு பரிசு உடைப்பந்தல்கீழ் | பாளைகளோடுகூடின பாக்கு மரங்களாகிற அலங்காரங்களையுடைத்தான மணப்பந்தலின் கீழே |
| கோளரி மாதவன் கோவிந்தன் என்பான் ஓர் காளை | நரஸிம்ஹனென்றும் மாதவனென்றும் கோவிந்தனென்றும் திருநாமங்கள்பூண்ட ஒரு யுவாவானவன் |
| புகுத | ப்ரவேசிக்க |

நான் கனாக் கண்டேன்—,

"நாளையதினம் கண்ணபிரானுக்கும் ஆண்டாளுக்கும் கல்யாணமஹோத்ஸவம்" என்பதாக முஹூர்த்த நிர்ணயம்பண்ணின பின்பு, விவாஹத்தின் முன்னாளிற் செய்யவேண்டுஞ் சடங்குகள்செய்தற்காகக் கண்ணபிரான் அலங்காரப் பந்தலின்கீழ் எழுந்தருளக் கனாக்கண்டேனென்கிறாள்.

'பத்துநாள் கழிந்தபின் முஹூர்த்தம்' என்றுநாளிட்டால் அத்தனை விளம்பம் ஸஹிக்க முடியாதாகையாலும், 'இன்றைக்கே முஹூர்த்தம்' என்று நாளிட்டால் அதிக ஸந்தோஷமும் தாங்கவொண்ணாமற் கேடுவிளையுமாதலாலும் *நாளை வதுவைமணமென்று நாளிட்டபடி. து:க்கம் அஸஹ்யமாவதுபோல் அபரிமிதமாகக் கைமேலேவருகிற பரமானந்தமும் அஸஹ்யமாயிருக்குமென்பது இதிஹாஸஸித்தம். வதுவை = கல்யாணம்; மணம் = உத்ஸவம்.

கல்யாணப்பந்தல்களில் பாளைகளோடுகூடின பாக்குமரங்களைக் கொண்டுவந்துநாட்டி அலங்காரம் செய்தல் முறைமையென்க. பரிசு என்று அலங்காரத்துக்கும் பெருமைக்கும் ஸம்மானத்துக்கும்பேர். பாளைகள் நிறைந்த கமுகுகளாகிய அலங்காரம் அணிந்தபந்தலின்கீழ் என்கை. "பந்தற்கீழ்" என்னும் "பந்தர்க்கீழ்" என்றும் பாடபேதங்கள். பந்தல், பந்தர் — கடைப்போலி. கோளரி - மிடுக்கையுடைத்தான சிங்கம்; "கோளரி மாதவன் கோவிந்தன்" என்று அடுக்கியிருப்பதற்கிணங்கப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்துள்ள ரஸமயமான அர்த்தவிசேஷம் ரஸிகர்களின் நெஞ்சையுருக்கும்; கோளரி= கண்ணபிரான் கல்யாணப்பந்தலுக்கு நடந்துவரும்போது நாட்டுப்புறத்துப்பையல்களைப் போலல்லாமல் தன்பெருமையெல்லாம் தோற்ற மிடுக்கோடே நடந்தபடியைச் சொல்லுகிறது. "அப்ரமேயம்ஹி தத்தேஜ:" என்னும்படியான மிடுக்கு நடையிலே தோன்றுமே. மாதவன் — பரமரஸிகன் என்று தோற்றுமாறு நடந்துவந்தபடியைச் சொல்லுகிறது: மா - பிராட்டிக்கு, தவன்-கொழுநன், என்றால் பரமரஸிகன் என்று தானே பொருள்படும். [கோவிந்தன்] "ஶ்ரேயாம்ஸி பஹுவிக்நாநி" [ச்ரேயாம்ஸி பஹுவிக்நாநி] என்றபடி நற்காரியங்களுக்கு இடையூறுகள் மிடைதருமாதலால் இந்தவிவாஹ மஹோத்ஸவத்துக்கு யாரால் என்ன இடையூறு நேர்ந்திடுமோ என்று அஞ்சி ஒருவரையும் விரோதித்துக்கொள்ளாமல் எல்லாருக்கும் கையாளாய் முகங்கொடுத்துக்கொண்டு வந்தபடியைச் சொல்லுகிறது: கோவிந்தனென்

ஸ்ரீஹம்ஸவிர்வலேலபனென்றும் பர்யாயமென்று கொண்மின். காளை = கல்வி இளமைப்பருவம் வாய்ந்தவனென்கை; "காளையே எருது பாலைக்கதிபன் கல்வியோன் பேராம்" என்பது நிகண்டு. ... ... .... (உ)

இந்திரனுள்ளிட்ட தேவர்குழாமெல்லாம் *
வந்திருந்தென்னை மகட்பேசிமந்திரித்து *
மந்திரக்கோடியுடுத்தி மணமாலை *
அந்தரிசூட்டக் கனாக்கண்டேன்தோழீநான் (௩)

| | | | |
|---|---|---|---|
| இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாம் எல்லாம் | இந்திரன் முதலான தேவஸமூஹங்களெல்லாம் | அந்தரி | 'துர்க்கை' என்கிற நாத்தனார் |
| வந்து இருந்து | (இந்நிலத்திலே) வந்திருந்து | மந்திரம் கோடி உடுத்தி | கல்யாணப் புடைவையை எனக்கு உடுத்தி |
| என்னை மகள் பேசி | என்னைக்கல்யாணப் பெண்ணாக வார்த்தைசொல்லி | மணம் மாலை சூட்ட | பரிமளம் மிக்க புஷ்பங்களையும் சூட்ட |
| மந்திரித்து | அதற்குமேல் ஸம்பந்திகள் ஒருவர்க்கொருவர்செய்து கொள்ளவேண்டிய ஏற்பாடுகள் விஷயமாக யோசித்து முடிவுசெய்து கொண்டு, (பிறகு) | தோழீ! நான் கனாக்கண்டேன்—. | |

இந்திரன் முதலிய வானவர்களெல்லாரும் 'நம்முடைய பெருமானுக்கு நடக்கப்போகிறகல்யாணமஹோத்ஸவத்தை நாமெல்லாருமாய்க் கூடியிருந்து காரியங்கள்செய்து நிறைவேற்றிவரவேணும்' என்று குதூஹலித்துத் தரையிலேகால் பாவிவந்து 'இக்காரியம் முடிந்தாலன்றி நாங்கள் எழுந்திருப்பதில்லை' என்று பிடிவாதமாயிருந்து 'எங்கள் பெருமானுக்கு உங்கள் பெண்ணை மணவாட்டியாக்கித் தரவேணும்' என்றுபெரியதிரளிலே ப்ரார்த்தித்து, பிறகு உபயவர்க்கத்தாரும் ரஹஸ்யமாகவிருந்து பூஷணபீதாம்பரங்கள்விஷயமாகவும் மற்றுமுள்ள ஸந்நிதானங்கள் விஷயமாகவும். ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளவேண்டியவற்றைக் காதோடு காதாகப்பேசி முடித்து, இனிக் காலவிளம்பம் செய்தால் ஏதாவது இடையூறு நேரிடக்கூடுமென்றெண்ணி அப்போதே, மணமகளுக்கு நாத்தனாரைக்கொண்டு புடவையுடுத்துகிறக்ரமத்திலே எனக்குநாத்தனாரான துர்க்கையைக்கொண்டு புடவையுடுத்தி நன்மாலைகளையும் சூட்டுவித்து இப்படிப்பட்ட சில பாணிக்ரஹணபூர்வாங்கங்கள் நடைபெறக் கனாக்கண்டேனென்கிறாள்.

சக்ரவர்த்தி திருமகன் பண்டு வனவாஸகாலத்தில் சரபங்கபகவானுடைய ஆச்ரமத்திற்கு எழுந்தருளினபோது அங்கு தேவேந்திரன் வந்திருந்தும் பெருமானை ஸேவியாமலே தன்னுலகம் நோக்கிச்சென்றான்; பெருமாள் தம்முடையபரத்வத்தை வெளிப்படுத்திக்கொள்ளாமல் "ஆத்மாநம்மாநுஷம்மந்யே" என்று ஸாமாந்யமான மானிடத்தன்மையையே ஏறிட்டுக்கொண்டிருந்தபடியால் இப்போது இவரைக்காணவேண்டா; ராவணஸம்ஹாரம் தலைக்கட்டினபின்பு ஸேவித்துக்கொள்வோம் என்று போய்விட்டான்; இருந்தாலு

நாராம் அப்படியல்லாமல் ஈசுவரத்வமும் கூடவேயுள்ள பரிமாறு முவதாரமாகையாலே இந்திரன்முதலியோர் வந்து குழுக்குழுவென்று குலாவித் திரிந்து அதிகப்ராஜாபத்யம் பண்ணுவர்களாம்.

மகள்பேசுதல் = 'இவளை மணமகளாகத் தாரைவார்த்துக்கொடுக்கவேணும்' என வேண்டிப் பேசுதல். மந்திரித்து = ஃந்த்ர: (மந்த்ர:) என்றவடசொல்லடியாப்பிறந்த அவ்யயம். மந்த்ரமாவது ஆலோசனை; ஆலோசித்து என்றபடி. மகள்பேசினபிறகு ஆலோசிப்பது பூஷணபீதாம்பராதி விஷயமென்க. மந்திரக்கோடி = ஃந்த்ரவாஸஸ் [மந்த்ரவாஸஸ்] என்பர் வடநூலார். "கோடியுடுத்து" என்று சிலர் ஓதுவர். "உடுத்தி" என்றபாடமே ஏற்கும்: 'உடுத்து' என்றால், தான் அணிந்துகொண்டு என்று பொருள்; உடுத்தி என்றால் பிறர்க்குச் சாத்தி என்றுபொருள்; இங்குப் பிறவினைப்பொருள் படவேண்டியிருத்தலால் 'உடுத்தி' என்றபாடமே ஏற்குமென்ப.

அந்தரி = 'துர்க்கைக்குப் பெயர்; இவள் கண்ணபிரானுக்கு உடன்பிறந்தாளாதலால் ஆண்டாளுக்கு நாத்தனாராவள். அந்தரத்திலே [ஆகாயத்திலே] அந்தர்த்தாநமாய்ப் போனமையால் அவளுக்கு அந்தரி என்று பேராயிற்றென்க. .... .... .... (ரு)

நாற்றிசைத்தீர்த்தங் கொணர்ந்துநனிநல்கி *
பாப்பனச்சிட்டர்கள் பல்லாரெடுத்தேத்தி *
பூப்புனைகண்ணிப் புனிதனோடென்றன்னை *
காப்புநாண்கட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (சு)

தோழீ!—;

| | |
|---|---|
| பாப்பனர் சிட்டர்கள் பல்லார் | சிஷ்டர்களானபல ப்ராஹ்மணர்கள் |
| நால் திசை | நான்கு திசைகளினுமிருந்து |
| தீர்த்தம் | தீர்த்தங்களை |
| கொணர்ந்து | கொண்டுவந்து |
| நனி நல்கி | நன்றாகத்தெளித்து |
| எடுத்து ஏத்தி | உச்சஸ்வரமாக வெடுத்து மங்களாசாஸநம்பண்ணி |
| பூ புனை கண்ணி புனிதனோடு | (பலவகைப்) புஷ்பங்கள் புனைந்தமாலையையுடையவனும் பரமபாவனுமான கண்ணபிரானோடு |
| என்றன்னை | என்னை (இணைத்து) |
| காப்பு நாண் கட்ட | கங்கணங்கட்ட |
| | நான் கனாக்கண்டேன்—. |

சக்ரவர்த்தித் திருமகனுடைய திருவபிஷேக மஹோத்ஸவத்திற்காக ஸ்ரீவாநரவீரர்கள் நாலுஸமுத்ரத்திலுமுள்ள தீர்த்தங்களையுங்கொணர்ந்தாப்போல என்னுடைய கல்யாணமஹோத்ஸவத்திற்காக வைதிகஸார்வபௌமர்களான பல அந்தணர்கள் நாற்றிசைகளினின்றும் நானாவகைப் புண்யதீர்த்தங்களைக் கொண்டு வந்து, ஆயுஸ்ஸு முதலான நன்மைகளெல்லாமுண்டாவதற்காக அந்தத் தீர்த்தங்

களாலே தம்பதிகளாகிய எங்களைப் பலகாலும் ப்ரோக்ஷித்து, "ஆயுராசாஸ்தே, ஸுப்ரஜாஸ்த்வமாசாஸ்தே" [ஆயுராசாஸ்தே, ஸுப்ரஜாஸ்த்வமாசாஸ்தே] இத்யாதி வேதவாக்கியங்களை உச்சைஸ்ஸ்வரமாக எடுத்து ஓதி ஆசீர்வாதங்கள் பண்ணிக் கண்ணபிரானோடு என்னை இணைத்துக் கங்கணநூல்கட்டும் நிலைமையைக் கனவில் கண்டேனென்கிறாள்.

நனி = மிகுதியையுணர்த்தும் உரிச்சொல்; மிகவும் என்றபடி. நல்குதல் – கொடுத்தல்; இங்கு, ப்ரோக்ஷணம்செய்தல். ப்ராஹ்மண: என்ற வடசொல் பாப்பனன் எனத் திரிந்தது. பாப்பனர் — சிட்டர், பாப்பனச்சிட்டர்; ப்ராஹ்மணயோனியிற் பிறப்புமாத்திரமின்றியே வேதங்களை நன்றாக ஓதி ஆசாரவ்யவஹாரங்களில் ஒன்றுங்குறையாதிருப்பவர்கள். "பல்லாண்டெடுத்தேத்தி" என்பது ஆதுநிகர்களின் பாடம்; வியாக்கியானத்தில் "மங்களாசாஸநம்பண்ணி" என்றருளிச்செய்திருப்பதைக்கண்டு பல்லாண்டு என்ற பாடத்தைக் கற்பித்தனர்போலும்; "பல்லார் எடுத்து எத்தி" என்றபாடத்திற்கே வியாக்கியானம் நன்கு பொருந்தியிருக்குமாற்றைக் காண்மின்.

பூப்புனைகண்ணி = கல்யாணப்பெண்ணுக்கு உயர்ந்த சேலையாலும் சிறந்த பூஷணங்களாலும் அலங்காரம்பண்ணினால், கலியாணப்பிள்ளைக்கு அவையெல்லாம் வேண்டாதே ஒருபுஷ்பஸரத்தாலே அலங்காரம் அமைந்தபடி. புனிதன் = பரிசுத்தன் என்றபடி: ஸ்நாநம்பண்ணிக் கையும் பவித்திரமுமாய் வைதிகவேஷம் பூண்டு ஒருவர்மேலும் படாமல் மிக்க ஆசாரசீலனாயிருந்திருப்புத் தோற்றப் புனிதன் என்கிறாள். ஆசாரம் சிறிதுகுறைந்தாலும் பெரியாழ்வார்பெண்பிள்ளையைக் கொடுக்கமாட்டார்களென்று கண்ணபிரான் மிக்க ஆசாரங்கொண்டாடுகிறபடி. புனிதனோடு என்றன்னை = புனிதனுக்கும் எனக்கும் என்றபடி. காப்புநாண் = மங்களார்த்தமான கங்கணஸூத்ரம். காப்புநாண்கட்டுகை புரோஹிதருடைய காரியமென்ப. ... (அ)

கதிரொளிதீபம் கலசமுடனேந்தி *
சதிரிளமங்கையர் தாம்வந்தெதிர்கொள்ள *
மதுரையார்மன்னன்-அடிநிலைதொட்டெங்கும் *
அதிரப்புகதக் கனாக்கண்டேன்தோழீநான். * (ரு)

தோழீ—,

| | |
|---|---|
| சதிர் இளமங்கையர் தாம் — | அழகிய இளம் பெண்கள் |
| கதிர் ஒளி தீபம் | ஸூர்யனுடையவொளி போன்றவொளியையுடைய மங்களதீபத்தையும் |
| கலசம் | பொற்கலசங்களையும் |
| உடன் ஏந்தி | கையில் ஏந்திக் கொண்டு |
| வந்து எதிர்கொள்ள | எதிர்கொண்டுவர, |
| மதுரையார் மன்னன் | மதுரையிலுள்ளார்க்கு அரசனான கண்ணபிரான் |
| அடிநிலை தொட்டு, | பாதுகைகளைச் சாத்திக்கொண்டு |
| எங்கும் அதிர | பூமியெங்கும் அதிரும்படியாக |
| புகுத | எழுந்தருள |
| | நான் கனாக்கண்டேன்—, |

பருவத்தாலும் வடிவாலும் தங்களையே எல்லாரும் நோக்கிக்கொண்டிருக்கும்படியிருக்க அழகுவாய்ந்த மாதர்கள் மங்களஸம்ருத்திக்காகத் தீபங்களையும் பூர்ணகும்பங்களையும் ஏந்திக்கொண்டு எதிர்கொண்டுவர, கண்ணபிரான் பாதுகைசாத்திக்கொண்டு பூமி அதிரும்படி ஸந்தோஷமாக நடந்துவரும்படியைக் கனவில் கண்டேனென்கிறாள்.

கதிர் என்று கிரணத்திற்குப்பேராயினும் இங்கு இலக்கணையால் ஸூர்யனுக்குப்பேராகிறது. இடையில் விளக்கு அணைந்தால் மங்களத்துக்குக் குறையாமென்று ஸூர்யப்ரபைபோலே மிக்கவொளியையுடைய விளக்குகளைக் கொண்டுவருவர்களென்க. தீபம், கலசம் — வடசொற்கள்.

மதுரையார் மன்னன் = மற்றதிருநாமங்களிற்காட்டில் இத்திருநாமத்தில் கண்ணபிரானுக்கு உகப்பு விஞ்சியிருக்குமென்பதற்கு ஒருஐதிஹ்யமருளிச்செய்வர் பெரியவாச்சான்பிள்ளை: — ஒருபக்தன் ஒருக்ருஷ்ணவிக்ரஹத்தை எழுந்தருளப்பண்ணி ‘இவர்க்கு என்னதிருநாமம்சாத்துவோம்’ என்று சிந்தியாநிற்க, பெருமாள் அவனுடையகனவிலே வந்துதோன்றி ‘அப்பா! எனக்குக் கண்ணனென்றுமென்று சிலநாமங்களை இடாமல் மதுரைமன்னன் என்றுபெயரிடு’ என்று நியமித்தாராம்.

அடிநிலைதொட்டு என்பதற்கு “தன் திருவடிநிலைகளை அருகிருப்பார் கையில் கொடுத்துவிட்டு” என்பதாகச் சிலர்பொருள்வரைந்து, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தையும் - “[ அடிநிலையித்யாதி. ] திருவடிநிலைகளைக் கொடுத்து” என்று அச்சிடுவித்தார்கள்: தொடுத்து என்றதைக் கொடுத்து என மயங்கி அச்சிட்டுவிட்டனர். “திருவடிநிலைகளைத்தொடுத்து” = பாதுகைகளைச் சாத்திக்கொண்டு என்கை. பாதுகையணிந்து நடந்தாலன்றோ பூமியதிரும். கோத்து என்றிருந்தது கொடுத்து என்றாயிற்று என்பாருமுளர்.

“எங்குமதிரப்புகுத” என்றவிடத்திற்கு ஸம்வாதமாக ஒருஐதிஹ்யமருளிச்செய்வர்; - முன்பு மஹாபலியஜ்ஞபூமியிலே ஸ்ரீவாமநன் நடந்தபோது பூமி நெளிந்ததென்று ‡ ஒருக்ரந்தத்திலே கிடக்கக்கண்டு ‘இதற்கு என்னபொருள்?’ என்று சிலமுதலிகள் சர்ச்சைபண்ணுகையில் “ஸர்வேச்வரனன்றோ; அவன்நடந்தால் பூமிநெளியச்சொல்லவேணுமோ?” என்று ஒருஸ்வாமிசொல்ல; பட்டருளிச்செய்யுமது கேட்கவேணுமென்று நஞ்சீயர்

‡ [யஸ்மிந் ப்ரயாதே அஸுரபூப்ருதோத்வாம் நநாம கேதாதவநிஸ் ஸஸாகரா, ஸவாமநஸ் ஸர்வஜகந்மயஸ் ஸதா மமாஸ்து மாங்கல்யவிவ்ருத்தயே ஹரி: ] என்றச்லோகம் இங்கே அநுஸந்திக்கத்தக்கது.

பட்டரைக் கேட்க, "யாசகவ்ருத்தியில் பதற்றத்தாலே அடியிட்டபடியால் பூமி நெளிர்ந்ததாகாணும்" என்று பட்டர் அருளிச்செய்தாராம். ஒருபூமிக்காக அப்படி பதறிவந்தவன், பெரியாழ்வார் திருமகளைப்பெறுகைக்கு எங்ஙனே பதறமாட்டான்! ... ... ... ... ... (௫)

மத்தளங் கொட்ட வரிசங்கம் நின்றூத *
முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்தபந்தற்கீழ் *
மைத்துனன்நம்பி மதுசூதன்வந்தென்னை *
கைத்தலம்பற்றக் கனாக்கண்டேன்தோழீநான். (௬)

தோழீ!—;

| | | | |
|---|---|---|---|
| மத்தளம் கொட்ட | மத்தளங்கள் அடிக்கவும் | முத்து உடை தாமம் நிரை தாழ்ந்த பந்தல் கீழ் வந்து | முத்துக்களையுடைய மாலைத் திரள்கள் தொங்கவிடப்பெற்ற பந்தலின்கீழேவந்து |
| வரி சங்கம் நின்று ஊத | ரேகைகளையுடைய சங்குகளை ஊதவும், | என்னை கைத்தலம் பற்ற | என்னைப் பாணிக்ரஹணம் செய்தருள |
| மைத்துனன் நம்பி மதுசூதன் | மைத்துனமைமுறையையுடையனும் பூர்ணனும் கண்ணபிரான் | நான் கனாக் கண்டேன்— | |

ம்ருதங்கம்முதலிய பலவகைவாத்தியங்கள் அடிக்கவும் சங்குகளூதவும் இப்படி மங்களவாத்யகோஷம் முழங்காநிற்க, கண்ணபிரான் முத்துப்பந்தலின்கீழே எழுந்தருளிப் பாணிக்ரஹணம்பண்ணியருளக் கனாக்கண்டேனென்கிறாள்.

"நின்றூத" என்றவிடத்து நின்று என்றது வார்த்தைப்பாடு. மைத்துனன் = அத்தைமைந்தன்; மாமன்மகளை மணக்குமுறைமைபற்றி நப்பின்னைப் பிராட்டிக்குக் கண்ணபிரான் மைத்துனனாகையால் ஆண்டாளும் அந்தஸம்பந்தத்தை ஆசைப்பட்டு "மைத்துனன் நம்பி" என்கிறாளென்ப. மதுசூதன் = மது என்ற அசுரனைக்கொன்றவன்; விரோதிநிரஸநத்தில் வல்லவன் என்றபடி. இங்கே வ்யாக்யானஸ்ரீஸூக்தி: — "[மதுசூதன்.] மற்றும் மைத்துனமைமுறையுண்டென்று ஆரேனும் வந்து கைப்பிடிக்கப்பார்க்கில் அவர்களையழியச்செய்து தானே ஸ்வீகரிக்கவல்லவனாய்த்து; தன்னுடைமையைப் பிறர் 'என்னது' என்னும்போது அவர்களையழியச்செய்து கைக்கொள்ளவல்லனாய்த்து. ... ... ... ... (௬)

வாய்நல்லார் நல்லமறையோதிமந்திரத்தால் *
பாசிலைநாணல்படுத்துப் பரிதிவைத்து *
காய்சினமாகளிறன்னான் என்கைபற்றி *
தீவலஞ்செய்யக் கனாக்கண்டேன்தோழீநான். (௭)

தோழீ! —;

| | |
|---|---|
| வாய் நல்லார் | நன்றாக ஓதின வைதிகர்கள் |
| நல்ல மறை ஓதி | சிறந்த வேதவாக்கியங்களை உச்சரிக்க, |
| மந்திரத்தால் | (அந்தந்தக்கிரியைகளுக்கு இசைந்த) மந்த்ரங்களைக்கொண்டு |
| பாசு இலை நாணல் படுத்து | பசுமைதங்கிய இலைகளையுடைத்தான நாணற்புல்லைப் பரிஸ்தரணமாக அமைத்து |
| பரிதி வைத்து | ஸமித்துக்களை இட்டு, |
| காய்சினமாகளிறு அன்னான் | மிக்க சினத்தையுடைய மத்தகஜம் போற்செருக்கனான கண்ணபிரான் |
| என் கை பற்றி | என்னைக்கையைப்பிடித்துக்கொண்டு |
| தீ வலம் செய்ய | அக்நியைச் சுற்றிவர |

நான் கனாக்கண்டேன்—.

வாயில் நல்வேதமோதும் வேதியர்கள் கர்மகாண்டங்களைச் சொல்லுகையன்றிக்கே பரப்ரஹ்மஸ்வரூபபரங்களான புருஷஸூக்தம், உபநிஷத்து முதலான வேதங்களை ஓத, அதிகம்பீரநடையையுடையனான கண்ணபிரான் ஸமந்த்ரகமாக அக்நிகாரியங்களைநடத்தி, என்கையைப்பிடித்துக்கொண்டு ஹோமாக்நியை ப்ரதக்ஷிணமாகச் சுற்றிவரக் கனாக்கண்டேனென்கிறாள்.

முதலடியில், ஓதியென்றது எச்சத்திரிபு; ஓதவென்றபடி. வாய்நல்லார்நல்ல மறையோத, காய்சினமாகளிறன்னான் மந்திரத்தால் பாசிலைநாணற்படுத்துப் பரிதிவைத்து, என்கைபற்றித் தீவலஞ்செய்யக் கனாக்கண்டேன்.

வேதராசியில் தேவதாந்தரப்ரசம்ஸாபரங்களான பாகங்களும் உள்ளமையால் "ஸ்ஸர்வார்த்தங்யோ விசேஷேண வேதமந்த்ரோப்யவைஷ்ணவ:" என்றபடி அவற்றை உபேக்ஷித்து வைஷ்ணவங்களான வேதபாகங்களை ஓதினர்களென்கைக்காக "நல்ல மறையோதி" என்னப்பட்டது. மந்த்ர: என்றவடசொல் மந்திரமெனத் திரிந்தது. பரிதி — வடசொல். நாணற்படுத்துவதும் பரிதிவைப்பதும் அக்நிகாரியங்கள். ஆண்டாளைக் கைப்பிடிக்கப் பெற்றமையாலுண்டான செருக்குக்குக் காய்சினமாகளிற்றின் செருக்கு ஒக்கும். என்கைபற்றித் தீவலஞ்செய்ய = திருமங்கலியதாரணத்திற்குப்பிறகு தீவலஞ்செய்தல் முறைமையென்ப. தம்பதிகள் தங்களுடைய அன்பை அக்நிஸாக்ஷிகமாக்குகிறபடி. இந்தத் தீவலஞ்செய்தல் ஸப்தபதீ எனவும்படும். ... ... ... ... (எ)

இம்மைக்கும் ஏழேழ்பிறவிக்கும்பற்றாவான் *
நம்மையுடையவன் நாராயணன்நம்பி *
செம்மையுடைய திருக்கையால்தாள்பற்றி *
அம்மிமிதிக்கக் கனாக்கண்டேன்தோழீநான். (அ)

| | | | |
|---|---|---|---|
| தோழீ— | | நாராயணன் | நாராயணனான் கண்ணபிரான் |
| இம்மைக்கும் — | இப்பிறவிக்கும் | செம்மை உடைய திரு கையால் | செவ்விய (தனது) திருக்கையினால் |
| ஏழ் ஏழ் பிறவிக்கும் | மேலுள்ள பிறவிகள் எல்லாவற்றிற்கும் | தாள் பற்றி | (எனது) காலைப்பிடித்து |
| பற்று ஆவான் | சரண்யனாயிருப்பவனாய் | அம்மி மிதிக்க | அம்மியின்மேல் எடுத்துவைக்க |
| நம்மை உடையவன் | நமக்குசேஷியாய் | நான் கனாக்கண்டேன்—. | |
| நம்பி | ஸகல கல்யாணகுண பரிபூர்ணனாய் | | |

"உன்றன்னோடுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம்" என்றபடி காலதத்வமுள்ளதனையும் நம்முடைய பணிவிடைகளை ஏற்றுக்கொண்டு நம்மை நோக்குமவனான கண்ணபிரான் தனது செந்தாமரை மலர்போன்ற திருக்கையாலே என்காலைப்பிடித்து அம்மிமிதிப்பிக்கக் கனாக்கண்டேனென்கிறாள். இது அச்மாரோஹணம் எனப்படும். மணவாளப்பிள்ளை மணவாட்டியின்காலைப் பிடித்துக்கொண்டுபோய் அம்மியை மிதிக்கச்செய்வது முறைமையோ? பெண்பிள்ளையின் காலை ஆண்பிள்ளை வந்து பிடிப்பது பொருந்துமோ? இது ஶாஸ்த்ர மரியாதைக்குச் சேருமோ? அப்படி ப்ரமாணந்தானுண்டோ வென்று பலபேர்க்கு இதிலே விசிகித்ஸைபிறக்கும்; திருக்கையால் தாள்பற்றுகையென்பது அஶாஸ்த்ரீயமான காரியமென்று சிலர் க்ரந்தமும் எழுதியிருக்கிறார்கள், ஆனால் அவர்கள், பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானவைகரியின் ஸ்வாரஸ்யத்தை ஆராயப்பெற்றிலர் போலும்; வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு:- "[ செம்மையுடையதிருக்கையால்தாள்பற்றி ] பிள்ளையுறவு முறையார் வேண்டா வென்பர்கள்; பெண்பிள்ளையுறவு முறையார் வேணுமென்னாநிற்பர்கள் ; இப்படி இரண்டுதலையிலுள்ளாரும் வார்த்தை சொல்லாநிற்கச்செய்தே தானேவந்து காலைப்பிடிக்கக் கணிசியாநிற்குமாய்த்து. அதாவது — ஆச்ரிதர்கால் பிடிக்கவென்றால் இறாயாத கைபாய்த்து. உபதேஶகாலத்திற் போலன்றிறே பரிமாற்றத்திலிருப்பது ; உபதேசிப்பது அவன்காலைப்பிடிக்கக்கடவதாக; பரிமாற்றத்தில்வந்தால் அவன்றான் கால் பிடிக்கும்படியாகவாய்த்திருப்பது ......[ தோழீ! நான் ] .... அவன்ஸ்வபாவம் நீ சொல்லக் கேட்டபடியே அநுபவிக்கப்பெற்றேன்." ... .... (அ)

வரிசிலைவாண்முகத்து என்னைமார்தாம்வந்திட்டு *
எரிமுகம்பாரித்து என்னைமுன்னேநிறுத்தி *
அரிமுகனச்சுதன் கைம்மேலென்கைவைத்து *
பொரிமுகந்தட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (கூ)

தோழீ—;

| | | | |
|---|---|---|---|
| இம்மைக்கும் — | இப்பிறவிக்கும் | நாராயணன் | நாராயணனான் கண்ணபிரான் |
| ஏழ் ஏழ் பிறவிக்கும் | மேலுள்ள பிறவிகள் எல்லாவற்றிற்கும் | செம்மை உடைய திரு கையால் | செவ்விய (தனது) திருக்கையினால் |
| பற்று ஆவான் | சரண்யனாயிருப்பவனாய் | தாள் பற்றி | (எனது) காலைப்பிடித்து |
| நம்மை உடையவன் | நமக்குசேஷியாய் | அம்மி மிதிக்க | அம்மியின்மேல் எடுத்துவைக்க |
| நம்பி | ஸகல கல்யாணகுண பரிபூர்ணனாய் | | நான் கனாக்கண்டேன்—. |

"உன்றன்னோடுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம்" என்றபடி காலதத்வமுள்ளதனையும் நம்முடைய பணிவிடைகளை ஏற்றுக்கொண்டு நம்மை நோக்குமவனான கண்ணபிரான் தனது செந்தாமரை மலர்போன்ற திருக்கையாலே என்காலைப்பிடித்து அம்மிமிதிப்பிக்கக் கனாக்கண்டேனென்கிறாள். இது அச்மாரோஹணம் எனப்படும். மணவாளப்பிள்ளை மணவாட்டியின்காலைப் பிடித்துக்கொண்டுபோய் அம்மியை மிதிக்கச்செய்வது முறைமையோ? பெண்பிள்ளையின் காலை ஆண்பிள்ளை வந்து பிடிப்பது பொருந்துமோ? இது ஶாஸ்த்ர மரியாதைக்குச் சேருமோ? அப்படி ப்ரமாணந்தானுண்டோ வென்று பல பேர்க்கு இதிலே விசிகித்ஸைபிறக்கும்; திருக்கையால் தாள்பற்றுகையென்பது அஶாஸ்த்ரீயமான காரியமென்று சிலர் க்ரந்தமும் எழுதியிருக்கிறார்கள். ஆனால் அவர்கள், பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானவைகரியின் ஸ்வாரஸ்யத்தை ஆராயப்பெற்றிலர் போலும்; வியாக்கியானஸ்ரீஸூக்தி வருமாறு:- "[ செம்மையுடையதிருக்கையால்தாள்பற்றி ] பிள்ளையுறவுமுறையார் வேண்டா வென்பர்கள்; பெண்பிள்ளையுறவு முறையார் வேணுமென்னாநிற்பர்கள்; இப்படி இரண்டுதலையிலுள்ளாரும் வார்த்தை சொல்லாநிற்கச்செய்தே தானேவந்து காலைப்பிடிக்கக் கணிசியாநிற்குமாய்த்து. அதாவது — ஆச்ரிதர்கால் பிடிக்கவென்றால் இருயாத கையாய்த்து. உபதேஶகாலத்திற் போலன்றிறே பரிமாற்றத்திலிருப்பது; உபதேசிப்பது அவன்காலைப்பிடிக்கக்கடவதாக; பரிமாற்றத்தில்வந்தால் அவன்றான் கால் பிடிக்கும்படியாகவாய்த்திருப்பது ...... [ தோழீ! நான் ] .... அவன்ஸ்வபாவம் நீ சொல்லக் கேட்டபடியே அநுபவிக்கப்பெற்றேன்." ... .... (அ)

வரிசிலைவாண்முகத்து என்னைமார்தாம்வந்திட்டு *
எரிமுகம்பாரித்து என்னைமுன்னேநிறுத்தி *
அரிமுகனச்சுதன் கைம்மேலென்கைவைத்து *
பொரிமுகந்தட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (கூ)

தோழீ—;

| | | | |
|---|---|---|---|
| வரி சிலை வாள் முகம் | அழகிய வில்போன்ற புருவத்தையும் ஒளி பொருந்திய முகத்தையுமுடையவர்களான | அரி முகன் | (ஹிரண்ய வதத்திற்காக) ஸிம்ஹமுகத்தையுடையனாய் அவதரித்த |
| என் ஐமார் தாம் வந்திட்டு | என்னுடைய தமையன்மார்கள் வந்து | அச்சுதன் | கண்ணபிரானுடைய |
| எரிமுகம் பாரித்து | அக்னியை நன்றாக ஜ்வலிக்கச்செய்து | கை மேல் | திருக்கையின்மேலே |
| முன்னே என்னை நிறுத்தி | அந்த அக்னியின் முன்னே என்னை நிறுத்தி | என் கை வைத்து | என்னுடைய கையை வைத்து |
| | | பொரி | பொரிகளை |
| | | முகந்து அட்ட | அள்ளிப்பரிமாற |
| | | நான் கனாக்கண்டேன்—. | |

அம்மிமிதித்தபிறகு 'லாஜஹோமம்' செய்வது முறைமை; அதாவது பொரியையிட்டு ஆஹுதிசெய்தல்; அது நடக்கும்படியைச் சொல்லுகிறாள் இப்பாட்டில். ப்ரயோகசந்த்ரிகை என்னும் க்ரந்தத்தில் விவாஹப்ரகரணத்தில் லாஜஹோமமுறைமையையிட்டு "வதூ ப்ராதா லாஜாநாவபதி" [பத்ந்யாஸ்ஸோதர்யோ லாஜாநாவபதி ] அதாவது—மணவாட்டியின் கூடப்பிறந்தவன் பொரியை எடுத்திடுவதாகச்சிலர் கொள்கை என்று சொல்லப்பட்டிருந்தலாலும் அநுஷ்டானமும் அப்படியேயிருப்பதாலும் "என்னைமார்தாம்வந்திட்டுப் பொரிமுகந்தட்ட" என்கிறாள். என்னைமார் = என் ஐமார்—தமையன்மார்; இப்பதம் திருவாய்மொழியிலும் [ஆறாம்பத்தில் இரண்டாந்திருவாய்மொழியில் ஏழாம் பாட்டில்] பிரயோகிக்கப்பட்டுள்ளமை காண்க: "என்னைமார் தந்தபாவமென்னார் ஒருநான்று தடிபிணக்கே."

சிலைபோன்ற புருவமென்னவேண்டுமிடத்துச் சிலை என்றது—முற்றுவமை: "தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே" என்றதுபோல; "கஞ்சைக் காய்ந்த கருவில்லி" என்று மேலும் வரும். ப்ராதாக்களுடைய முகத்தை வர்ணிப்பதற்குக் கருத்துத் தோன்றப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானிக்கிறார்— "என்னுடைய ப்ராதாக்களானவர்களே இதுக்கெல்லாம் அபிமானிகள் என்னுமிடம் தங்கள்முகத்திலெளியிலே காணும்படியாக வந்து அக்நிமுகத்தைப் பாரித்து, நான் வ்ரீளையாலே இருக்க என்னையெடுத்து முன்னேநிறுத்தி."

மைத்துனமைமுறையுடையார் கல்யாணப்பிள்ளையை இளிம்புபடுத்திச் சிரிக்கவேணுமென்று சில சேஷ்டைகள்செய்வது வழக்கம்; அப்படியே கண்

ணபிரான் ஸமீபத்தில் சிலர் செய்யப்பார்த்தபோது அவற்றை அவன்ஸஹியஞ் செய்யாமல் அவற்றுக்கு ஏமாந்துபோகாமல் பெருமிடுக்கனாகவேயிருந்தபடியைக் காட்டுமாம் அரிமுகன் என்றவுடைமொழி.

முகந்து அட்டுதல்—எடுத்துப்ரக்ஷேபித்தல். ... .... (௯)

குங்குமமப்பிக் குளிர்சாந்தம்மட்டித்து *
மங்கலவீதி வலஞ்செய்துமணநீர் *
அங்கவனோடும் உடன்சென்றங் கானைமேல் *
மஞ்சனமாட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (௰)

தோழீ!—;

| | | | |
|---|---|---|---|
| குங்குமம் | குங்குமக்குழம்பை | மங்கலம் வீதி | (விவாஹநிமித்தமான) அலங்காரங்கள் விளங்குகின்ற வீதிகளிலே |
| அப்பி | உடம்பெல்லாம்பூசி | | |
| குளிர் சாந்தம் | குளிர்ந்தசந்தனத்தை | வலம் செய்து | ஊர்வலம் வந்து |
| மட்டித்து | மனக்கத்தடவி | மணம் நீர் | வஸந்த ஜலத்திலே |
| ஆனை மேல் | மத்தகஜத்தின்மேலே | மஞ்சனம் ஆட்ட | (எங்க ளிருவரையும்) திருமஞ்சனம் பண்ணுவதாக |
| அவனோடும் உடன் சென்று | அக்கண்ணபிரானோடு கூடியிருந்து | | |
| | | | நான் கனாக்கண்டேன்—. |

கண்ணபிரானும் தானுமாக அக்நிஸமீபத்திலே சிலநாழிகை இருக்கநேர்ந்தமையால் அப்போதுண்டான வெப்பம் பொறுக்கமுடியாததாக, அதற்குப் பரிஹாரமாகக் குளிர்ந்த குங்குமக்குழம்பையும் சந்தனச்சேற்றையும் திருமேனியெங்கும் அப்பி இந்தத் திருக்கோலத்தோடே இருவருமானசேர்த்தியாய் ஆனையின்மீதேறித் திருவீதிவலம்வந்து, பிறகு வஸந்தஜலத்திலே மஞ்சனமாட்டப் பெற்றதாகக் கனாக்கண்டேனென்கிறாள். பச்சைக்கல்யாணத்தன்றிரவு நடைபெறும் வஸந்தஸ்நாநம் இப்பாட்டிற் கூறப்பட்டதென்க. .... .... (௰)

ஆயனுக்காகத் தான்கண்டகனாவினை *
வேயர்புகழ் வில்லிபுத்தூர்க்கோன் கோதைசொல்
தூயதமிழ்மாலை யீரைந்தும் வல்லவர்
வாயுநன்மக்களைப்பெற்று மகிழ்வரே. (௧௧)

| | | | |
|---|---|---|---|
| வேயர் புகழ் | வேயர் குலத்தவரால் புகழப்பட்டவராய் | சொல் | அருளிச்செய்த |
| | | தூய | பரிசுத்தமான |
| வில்லிபுத்தூர் கோன் | ஸ்ரீ வில்லிபுத்தூர்க்குத் தலைவரான பெரியாழ்வாருடைய (திருமகளான) | தமிழ் மாலை ஈரைந்தும் | தமிழ்த்தொடையான இப்பத்துப் பாட்டுக்களையும் |
| கோதை | ஆண்டாள் | வல்லவர் | ஓதவல்லவர்கள் |
| தான் ஆயனுக்கு ஆகக் கண்ட கனவினை | தான் கோபாலக்ருஷ்ணனுக்கு வாழ்க்கைப்பட்டதாகக் கனாக்கண்டபடியைக் குறித்து | வாயும் நல் மக்களைப் பெற்று | நற்குணங்களமைந்த விலக்ஷணரான புத்திரர்களைப்பெற்று |
| | | மகிழ்வர் | ஆநந்திக்கப் பெறுவர்கள். |

ஆயர்புத்திரனாகிய கண்ணபிரானுக்கு வாழ்க்கைப்பட்டதாக ஆண்டாள் கனாக் கண்டபடியை வெளியிட்ட இத்திருமொழியை ஓதவல்லவர்கள் பகவத்விஷயத்திலே ப்ராவண்யமுடைய விலக்ஷணபுத்திரர்களைப் பெற்றுப் பரமானந்தமடைவர்களென்று—இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லித் தலைக்கட்டினபடி.

தமிழ்மாலைக்குத் தூய்மையாவது—அநுபவத்தின் பரீவாஹரூபமாகப் புறப்பட்டதாயிருக்கை. கவிசாதுரியத்தைக் காட்டுவதற்கென்றே கவிபண்ணுவாரைப்போலன்றே ஆண்டாள்.

வாயும் நன்மக்களை = "மாயன் மணிவண்ணன் தாள்பணியும் மக்களைப் பெறுவர்களே" என்றார் பெரியாழ்வாரும்.

இக்காலத்தில் கல்யாணம் நடக்குமிடத்து, பச்சைக்கல்யாண தினத்தினன்று அத்யாபகர்கள் இத்திருமொழியை ஓதிச் சீர்பாடல் பாடும்போது, "சீர்பாடி களிமண்பாடிப்போமே" என்று நீட்டுவதைப் பெரும்பாலும் அனைவரும் கேட்டிருப்பர்கள்; அந்தவாக்கியத்தின் உண்மையான ஆநுபூர்வி எப்பட்டதென்று பலர் வியர்கிப்பர்கள்; "தளிர்பண்படுப்போமே" என்றிருக்கவேணுமென்று சிலர் திருத்துவர்; "தளுவம் பிடிப்போமே" என்றிருக்கவேணுமென்று சிலர் திருத்துவர்கள்; (ஒவ்வொரு சீர்பாடலுக்கும் அத்யாபகர்கள் தளுவம்பிடித்துத் தார்பூலம் பெறுதல் சிலவூர்களில் வழக்கமாம்.) "சீர்பாடிக் களியின் களிப்போமே" என்பதுதான் உண்மையான வாக்கியமென்று அழகிய மணவாளச்சீயர் அருளிச்செய்யக் கேட்டிருக்கை. சீர்பாடல்பாடி நீங்கள் சந்தோஷியுங்கள், நாங்களும் சந்தோஷிக்கிறோம் என்றபடி. இந்த வாக்கியத்தை இசையிலே நீட்டிச் சொல்லும்போது "களியின்காளிப்போமே" என்று சொல்லிக்கொண்டுவந்தார்கள் முன்னோர்; நாளடைவில், 'களிமண்பா' வாகவும், 'டப்போமே' யாகவும் விகாரத்தைப் பெற்றொழிந்தது. .... .... .... (௧௧)

அடிவரவு:—வாரணம் நாளை இந்திரன் நாற்றிசை கதிர் மத்தளம் வாய் இம்மை வரிசிலை குங்குமம் ஆயன் கருப்பூரம்.

ஆறாந் திருமொழி உரை முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

—:0:—

# ஏழாந்திருமொழி கருப்பூம்.

உரையவதாரிகை:— கீழ்த்திருமொழியில், மணநீர்மஞ்சனமாட்டுமளவும் கனாக்கண்டதாகச் சொல்லப்பட்டிருந்தாலும், அதற்கு அடுத்தபடியாக ஸர்ச் சேஷமும் ஸ்வப்னதுல்யமாகத்தானே நடந்ததறியதாகக் கொள்ளவேணும். இவ்விதமாக, கண்ணபிரானது திருவதாரத்தின் அமுதத்தைப் பருகப் பெற்ற ஆண்டாள் கண்விழித்துக்கொண்டவாறே 'அந்தோ! இத்தனையநு பவமும் கனாவாகவே கழிந்தது!; மெய்யே அநுபவிக்கப்பெற்றதாக நினைத்துக் களித்திருந்தேனே! தெய்வம் இப்படியா நம்மைவஞ்சித்தது'! என வருந்தினாள். கண்உறக்கமுங்கொள்ளாமல்போதுபோக்குமுபாயமும் தோன்றாமல் சிறிது நாழிகை அலைப்பாய்ந்தாள்; அவ்வளவில், 'கண்ணபிரானுடைய திருவாயமுதத்தை நம்மைப்போலன்றியே நித்யாநுபவம் பண்ணப்பெற்றவர்கள் யாரேனுமுண்டோ? அன்றி அவன் நம்மை வஞ்சித்ததுபோலவே எல்லாரையும் வஞ்சிப்பவன்தானோ?' என்று சிந்திக்கத் தொடங்கினாள். அவனுடைய இடத்திருக்கையிலே நித்யவாஸம் செய்கிற திருச்சங்காழ்வான் அத்திருவாயமுதத்தை இடைவிடாது அநுபவிக்கும் பாக்கியமுடையவன் என்றுணர்ந்தாள், 'ஹாஹா! அவனுடைய பாக்யம் என்னபாக்கியம்!' என்று கொண்டாடி, ஒருபக்கத்தில் ப்ரீதிப்ரகர்ஷமும் மற்றொருபக்கத்தில் அஸூயாதிசயமுமாய் அப்பாஞ்சசன்னியத்தையே நெஞ்சில் இடைவிடாது அநுஸந்தித்தாள்; அந்த பாவநாப்ரகர்ஷமானது அத்திருச் சங்காழ்வானைக் கண்ணெதிரே தோற்றுவிக்க, ஆண்டாள் அவனை முன்னிலையாக விளித்து, "ஓ பாஞ்சசன்னியமே! கண்ணபிரானது திருப்பவளத்தினமுதத்தை நீ இடைவிடாது அநுபவியாநின்றாயே; அத்திருவாயின் பரிமளமும் அவ்வமுதத்தின் ரஸமும் எப்படியிருக்கின்றது? சிறிதுசொல்லாய்; காதினாலாவதுகேட்டு மகிழ்கிறேன்" என வினவுவதும் அச்சங்கினுடைய பாக்யவிசேஷத்தைக்கொண்டாடிச் சொல்லுவதுமாய்ச் செல்லுகிறது-இத்திருமொழி.

பெருமாளைக்காட்டிலும் ஆண்டாளுடைய பாக்கியம் விஞ்சபெற்றதென்ன வேணும்; ஏனெனில்; பெருமாள் பிராட்டியைப்பிரிந்து நொந்திருந்த காலத்திலே அப்பிராட்டியைக் கண்டுவந்த ஒருகுரங்கைப் பார்த்து "கதமுரு கதம்பாஹூ" [கதமூரு கதம்பாஹூ] என்று-'அவளுடைய தொடையுமரு எப்படியிருக்

ஸ்ரீ

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

— :0: —

# ஏழாந்திருமொழி கருப்பூம்.

உரையவதாரிகை:— கீழ்த்திருமொழியில், மணநீர்மஞ்சனமாட்டுமளவும் கனக்கண்டதாகச் சொல்லப்பட்டிருந்தாலும், அதற்கு அடுத்தபடியாக ஸம்ச்லேஷமும் ஸ்வப்நாநுபவமாகத்தானே நடந்தேறியதாகக் கொள்ளவேணும். அவ்வநுபவத்தில், கண்ணபிரானது திருவதரத்தின் அமுதத்தைப் பருகப் பெற்ற ஆண்டாள் கண்விழித்துக்கொண்டவாறே 'அந்தோ! இத்தனையநுபவமும் கனவாகவா கழிந்தது!; மெய்யே அநுபவிக்கப்பெற்றதாக நினைத்துக் களித்திருந்தேனே!; தெய்வம் இப்படியா நம்மைவஞ்சித்தது'! என வருந்தினாள். கண் உறக்கமுங்கொள்ளாமல்போதுபோக்குமுபாயமும் தோன்றாமல் சிறிது நாழிகை அலைபாய்ந்தாள்; அவ்வளவில், 'கண்ணபிரானுடைய திருவாயமுதத்தை நம்மைப்போலன்றியே நித்யாநுபவம் பண்ணப்பெற்றவர்கள் யாரேனுமுண்டோ? அன்றி, அவன் நம்மை வஞ்சித்ததுபோலவே எல்லாரையும் வஞ்சிப்பவன்தானோ?' என்று சிந்திக்கத் தொடங்கினாள். அவனுடைய இடத்திருக்கையிலே நித்யவாஸம் செய்கிற திருச்சங்காழ்வான் அத்திருவாயமுதத்தை இடைவிடாது அநுபவிக்கும் பாக்கியமுடையவன் என்றுணர்ந்தாள். 'ஹாஹா! அவனுடைய பாக்கியம் என்னபாக்கியம்!' என்று கொண்டாடி, ஒருபக்கத்தில் ப்ரீதிப்ரகர்ஷமும் மற்றொருபக்கத்தில் அஸூயாதிஶயமுமாய் அப்பாஞ்சசன்னியத்தையே நெஞ்சில் இடைவிடாது அநுஸந்தித்தாள்; அந்த பாவநாப்ரகர்ஷமானது அத்திருச்சங்காழ்வானைக் கண்ணெதிரே தோற்றுவிக்க, ஆண்டாள் அவனை முன்னிலையாக விளித்து, "ஓ பாஞ்சசன்னியமே! கண்ணபிரானது திருப்பவளத்தினமுதத்தை நீ இடைவிடாது அநுபவியாநின்றாயே; அத்திருவாயின் பரிமளமும் அவ்வமுதத்தின் ரஸமும் எப்படியிராநின்றது? சிறிதுசொல்லாய்; காதினாலாவதுகேட்டு மகிழ்கிறேன்' என வினவுவதும் அச்சங்கினுடைய் பாக்யவிசேஷத்தைக்கொண்டாடிச் சொல்லுவதுமாய்ச் செல்லுகிறது-இத்திருமொழி.

பெருமாளைக்காட்டிலும் ஆண்டாளுடைய பாக்கியம் வீறுபெற்றதென்ன வேணும்: ஏனெனில்; பெருமாள் பிராட்டியைப்பிரிந்து நொந்திருந்த காலத்திலே அப்பிராட்டியைக் கண்டுவந்த ஒருகுரங்கைப் பார்த்து "கதமூரு கதம்பாஹூ" [ கதமூரு கதம்பாஹூ ] என்று-' அவளுடைய துடைமுகு எப்படியிருக்

கிறது? தோளழகு எப்படியிருக்கிறது? சொல்லிக்காண்' என்று வினவப் பெற்றார்; இவ்வாண்டாள் அப்படி ஒருகுரங்கைப்பார்த்து வினவவேண்டாதே எம்பெருமானது திருக்கையை ஒரு நொடிப்பொழுதும் விட்டுநீங்காதே நித்யாநுபவம் பண்ணும் பாக்கியமுடைய சங்கை நோக்கிக் கேட்கப்பெற்றது சிறந்த பாக்யமிறே. உசாத்துணைக்கும் உரியார்கிடைப்பது அரிதன்றே. ....

கருப்பூரம்நாறுமோ கமலப்பூநாறுமோ *
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ *
மருப்பொசித்தமாதவன்றன் வாய்ச்சுவையும்நாற்றமும் *
விருப்புற்றுக்கேட்கின்றேன் சொல்லாழிவெண்சங்கே. (க)

| | | | |
|---|---|---|---|
| ஆழி வெண் சங்கே | கம்பீரமாய்வெளுத்திராநின்ற ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானே!; | திரு பவளம் செம் வாய் தான் | (அப்பெருமானுடைய) அழகியபவளம் போன்ற சிவந்த திருவதரமானது |
| மருப்பு ஒசித்த மாதவன் தன் | (குவலயாபீட யானையின்) கொம்பை முறித்த கண்ணபிரானுடைய | கருப்பூரம் | பச்சைக்கற்பூரம் போல் |
| | | நாறுமோ? | பரிமளிக்குமோ? (அல்லது) |
| வாய் | திருஅதரத்தினுடைய | கமலம் பூ நாறுமோ? | தாமரைப்பூப்போலே பரிமளிக்குமோ? |
| சுவையும் | ரஸத்தையும் | | |
| நாற்றமும் | பரிமளத்தையும் | தித்தித்திருக்குமோ | மதுரமான ரஸத்தை உடைத்தாயிருக்குமோ? |
| விருப்புற்று | ஆசையோடே | | |
| கேட்கின்றேன் | (உன்னைக்) கேட்கிறேன்; | சொல் | (இன்னபடியிருக்குமென்று எனக்குச்) சொல் |

கம்பீரமான ஸ்வரூபத்தையும் பரமசுத்தஸ்வபாவத்தையுமுடைய சங்கே! உன்னை ஆசையோடு ஒருவிஷயம் கேட்கிறேன், சொல்லவேணும்; உனக்குத் தெரியாத அம்சத்தைப்பற்றி நான் கேட்கப்போகிறதாக நினைக்கவேண்டா; கண்ணபிரானது திருவதரத்தில் ஊறுகின்ற அமுதத்தின் ரஸபரிமளங்களைக் குறித்துக் கேட்கிறேனித்தனையல்லது வேறில்லை; அவ்வமுதமானது பரிமளத்திலே பச்சைக் கருப்பூரத்தை ஒத்திருக்குமோ, அல்லது தாமரைப்பூவை ஒத்திருக்குமோ? ரஸத்தில் த்ருஷ்டாந்தமாக எடுத்துக் குறிப்பிடக்கூடியவஸ்து யாதொன்றும் எனக்கு ஸ்புரிக்கவில்லை; விலக்ஷணமான தித்திப்பை உடையதாயிருக்குமோ? எனக்குத் தெரியச் சொல்லவேணும் என்கிறாள்.

"கருப்பூரம்நாறுமோ", "கமலப்பூநாறுமோ" என்ற இரண்டிடத்திலும் உவமவுருபு தொக்கிக்கிடக்கிறது; கருப்பூரம்போல் நாறுமோ கமலப்பூப்போல் நாறுமோ என விரிக்க.

சுவையும் நாற்றமும் = வாயினுடைய பரிமளத்தையும் வாயமுதத்தினுடைய ரஸத்தையும் என்க. ஆழிவெண்சங்கே = ஆழி என்று கடலுக்கும் பேராதலால், கடலில் நின்று தோன்றிய வெண்சங்கே! என்றுரைத்தலுமாம். "[ வெண்சங்கே !. ] கைவிடாதே அநுபவியாநிற்கச்செய்தேயும் உடம்பு வெளுக்கும்படியிறே இவனுடைய ஆற்றாமை" என்ற வியாக்யான ஸ்ரீஸூக்தியின் அழகுகாண்மின்: சங்குக்கு வெண்மை இயற்கைக்குணமன்றுபோலும். ...(க)

கடலில்பிறந்து கருதாது, *பஞ்சசன
னுடலில்வளர்ந்துபோய் ஊழியான்கைத்தலத்
திடரில்* குடியேறித் தீயவசுரர் *
நடலைப்படமுழங்குந் தோற்றத்தாய்நற்சங்கே. (உ)

| | | | |
|---|---|---|---|
| நல் சங்கே | அழகியசங்கே!, (நீ) | ஊழியான் | எம்பெருமானுடைய |
| கடலில் | ஸமுத்ரத்திலே | கை தலம் இடரில் | கைத்தலமாகிற உந்நதஸ்தானத்திலே |
| பிறந்து | பிறந்து (அங்குநின்றும்) | குடி ஏறி | குடிபுகுந்து |
| பஞ்சசனன் உடலில் போய் வளர்ந்து | பஞ்சஜனனென்ற அஸுரனுடைய சரீரத்திற்போய் வளர்ந்து, | தீய அசுரர் | கொடியவர்களான அசுரர்கள் |
| | | நடலை பட | துன்பப்படும்படி |
| கருதாது | (இப்படி பிறந்தவிடத்தையும் வளர்ந்தவிடத்தையும்) நினையாமல் | முழங்கும் தோற்றத்தாய் | ஒலிசெய்யும்படியான மேன்மையுடையையாயிராநின்றாய். (உன்பெருமையேபெருமை.) |

சங்கே! நீ பிறந்ததெங்கே? போய்வளர்ந்ததெங்கே?; உப்புக்கடலிலே பிறந்து அசுரனுடைய உடலுக்குள்ளே போய்வளர்ந்தாய்; இப்படி மட்டமான குலத்திலே பிறந்து வளர்ந்தவுனக்கு எம்பெருமானுடைய திருக்கைத்தலத்திலே நித்யவாஸம்பண்ணப்பெறுதலும், அவனுடைய திருவாயிலேயிருந்துகொண்டு அஸுரராக்ஷஸாதிகள் குடல்குழம்பும்படி கோஷம் செய்யப்பெறுதலும் வாய்த்தது என்னபாக்கியம்!; உன்வைலக்ஷண்யத்தை நான் சொல்வேன்? என்கிறாள்.

கருதாதுஎன்ற எதிர்மறைவினையெச்சம் குடியேறி என்றதில் அந்வயித்து, பிறந்தவிடத்தையும் வளர்ந்தவிடத்தையும் சிறிதும் ஸ்மரியாமல் அடியோடு மறந்து எப்போதும் எம்பெருமானது திருக்கைத் தலத்திலேயே குடிவாழ்ந்து என்று பொருள் தரும். இனி, "கருதாது பஞ்சசனனுடலில்வளர்ந்து" என உள்ளபடியே அந்வயித்தலுமாம்: பஞ்சசனனுடைய அஸுரத்தன்மையை [எம்பெருமானிடத்துப் பகைமைபூண்டவனென்னுமிடத்தை] ப்பாராமல் அவனது உடலில் வளர்ந்துஎன்றபடி. ஊழியான் = என்றும் அழிவின்றி நெடுங்காலம் வாழ்பவன்; யுகம்முடிந்தகாலத்தும் தானின்று அனைவரையும் நோக்குமவன்; காலத்துக்கு நிர்வாஹகன் - எனப் பலபொருள்களுண்டு; எம்பெருமானுக்கு வாசகம். "கைத்தலத்திடர்" = திடர் - உயர்ந்தஸ்தானம். நடலைப்படுதல்-துன்பமடைதலும் நடுக்கமடைதலும்; "ஸகோஷோ தார்த்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்" என்றவிதை இங்கு நினைக்கத்தக்கது. தோற்றம் = மேன்மை.

"முழங்குக்தோற்றத்தவனாய் நற்சங்கே! மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும் விருப்புற்றுக்கேட்கின்றேன் சொல்" என்று கீழ்ப்பாட்டோடே கூட்டி அந்வயித்தலுமாம்.

ஓரிடத்திற் பிறந்து ஓரிடத்தில் வளர்ந்து ஓரிடத்திற் குடியேறினதாகச் சொல்லப்பட்டுள்ள இவ்விடத்தில் கண்ணபிரானுடைய நிலைமை நினைவுக்கு வரும்: சங்கு கடலிற்பிறந்ததுபோல அவன் யதுகுலத்துப் பிறந்தான்; சங்கு அசுரனுடைய உடலில் வளர்ந்ததுபோல அவன் அசுரத்தன்மை பூண்டவனான கம்ஸனுக்குள்ளாய் இறையிறுத்திருக்கிற திருவாய்ப்பாடியிலே வளர்ந்தான்; சங்கு கைத்தலத்திடரிற் குடியேறியதுபோல அவன் காலயவநஜராஸந்தாதிகளுக்காகப்போய் ஸ்ரீத்வாரகையைப் படைவீடாகச்செய்து அங்கே குடியேறினான்; சங்கு தீயவசுரரை நடலைப்படுத்துவதுபோல அவன் துர்யோதனாதிகளை மண்ணுண்ணும்படி செய்தான். இப்படிகளாலே இச்சங்கானது எம்பெருமானோடு பராஸாம்யம் பெற்றிருக்கின்றதென்பதும் ஆண்டாளது கொண்டாட்டத்தில் உள்ளுறை. .... .... .... .... (உ)

தடவரையின்மீதே சரற்காலசந்திரன் *
இடையுவாவில்வந்து எழுந்தாலேபோல * நீயும்
வடமதுரையார்மன்னன் வாசுதேவன்கையில் *
குடியேறிவீற்றிருந்தாய் கோலப்பெருஞ்சங்கே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| கோலம் பெரு சங்கே | அழகியபெரிய சங்கே!, | வடமதுரையார் மன்னன் வாசுதேவன்கையில் | வடமதுரையிலுள்ளார்க்கு அரசனான கண்ணபிரானுடைய திருக்கையில் |
| சாற்காலம் சந்திரன் | சரத்காலசந்திரன். | குடி ஏறி | குடிபுகுந்து |
| உவா இடையில் | பௌர்ணமியின்று | வீற்றிருந்தாய் | உன் மேன்மையெல்லாம் தோற்றஇராநின்றாய். |
| தட வரையின் மீதுவந்து எழுந்தால்போல | பெரிய உதயகிரியிலே வந்துஉதித்தாற்போல | | |
| நீயும் | நீயும் | | |

சரத்காலத்தில் எல்லாக்கலைகளும் நிரம்பின பூரணசந்திரன் உதயகிரியின் மேல் வந்து தோற்றினாற்போலே, ஸ்ரீபாஞ்சஜந்யமே! நீயும் கண்ணபிரானது திருக்கையின்மேலே அழகாக வீற்றிருந்து தோற்றுகின்றாய்; உனது பெருமையே பெருமையென்று கொண்டாடுகிறாள்.

எம்பெருமானுடைய திருக்கை கடவரையாகவும், திருச்சங்காழ்வான் சரத்கால சந்திரமண்டலமாகவும் உருவகப் படுத்தப்பட்டிருக்கின்றமை அறிக. உவா என்று-அமாவாஸ்யைக்கும் பௌர்ணமிக்கும் பெயர்; இங்குப் பௌர்ணமி விவக்ஷிதம், இடை உவாவில் = உவாவிடையில் — பௌர்ணமியிலே என்கை. இனி, உவா என்று கடலுக்கும் பெயருண்டாதலால், 'கடலிடையில்நின்றும் தடவரையின்மேல் எழுந்தாற்போல்' என்றுமுரைக்கலாமாயினும் சுவைகுன்றும். சரற்கால சந்திரன் = வடசொல்தொடர். வாசுதேவன் என்றது - வஸுதேவருடைய புத்திரன் என்றும் எங்கும் நிறைந்துறையுங் கடவுள் என்றும் பொருள்படும். (௩)

சந்திரமண்டலம்போல் தாமோதரன்கையில் *
அந்தரமொன்றின்றி யேறியவன்செவியில் *
மந்திரங்கொள்வாயேபோலும் வலம்புரியே *
இந்திரனுமுன்னோடு செல்வத்துக்கேலானே. (௪)

| | | | |
|---|---|---|---|
| வலம்புரியே! | வலம்புரிச்சங்கே!, | மந்திரம் கொள் வாய் போலும் | ஏகாந்தரஹஸ்யம்பேசுகிறாய்போலிராநின்றாய்; |
| தாமோதரன்கையில் | கண்ணபிரானது திருக்கையில் | இந்திரனும் | (செல்வத்தில்மிக்கவனெனப்புகழ்பெற்ற) இந்திரனும் |
| சந்திரமண்டலம் போல் | சந்திர மண்டலம் போலே | செல்வத்துக்கு | ஐச்வர்யவிஷயத்தில் |
| அந்தரம் ஒன்று இன்றி ஏறி | இடைவிடாது இருந்து கொண்டு | உன்னோடு ஏலான் | உனக்கு இணையாகமாட்டான். |
| அவன் செவியில் | அவனுடைய காதில் | | |

கண்ணபிரானுடைய திருக்கையிலே சந்திரமண்டலம்போலே விளங்காநின்று கொண்டு ஒருநொடிப்பொழுதும் அத்திருக்கையை விட்டுப்பிரியாமல் அங்கேயிருந்துகொண்டு அவனுடைய திருச்செவியோடே அணைந்தாற்போலிருப்பதனால் அவன் திருக்காதில் ஏகாந்தரஹஸ்யம் ஓதுவான்போலேயிராநின்றாய்; சிறந்த செல்வம்பெற்றவனாகப் புகழ்ப்படுகின்ற இந்திரனுக்கும் உன்னளவு செல்வமில்லாமையாலே நீ ஒப்பற்ற ஐச்வர்யம் அடைந்தவனாயிராநின்றாய் என்கிறாள்.

"அவன்செவியில் மந்திரங்கொள்வாயேபோலும்" என்றவிடத்து வியாக்கியானஸ்ரீஸூக்தி: — "நம்மைப்பிரிந்து ஆற்றமாட்டாதார் பலருமுண்டு என்று

சரத்காலத்தில் எல்லாக்கலைகளும் நிரம்பின பூரணசந்திரன் உதயகிரியின் மேல் வந்து தோற்றினாற்போலே, ஸ்ரீபாஞ்சஜந்யமே! நீயும் கண்ணபிரானது திருக்கையின்மேலே அழகாக வீற்றிருந்து தோற்றாநின்றாய்; உனது பெருமையே பெருமையென்று கொண்டாடுகிறாள்.

எம்பெருமானுடைய திருக்கை உதயகிரியாகவும், திருச்சங்காழ்வான் சரத்கால சந்திரமண்டலமாகவும் உருவகப் படுத்தப்பட்டிருக்கின்றமை அறிக. உவா என்பது-அமாவாஸ்யைக்கும் பௌர்ணமிக்கும் பெயர்; இங்குப் பௌர்ணமி விவக்ஷிதம்; இடை உவாவில் = உவாவிடையில் — பௌர்ணமியிலே என்கை. இனி, உவா என்று கடலுக்கும் பெயருண்டாதலால், 'கடலிடையில்நின்றும் தடவரையின்மீதெழுந்தாற்போல' என்றுமுரைக்கலாமாயினும் சுவைகுன்றும். சரற்கால சந்திரன் = வடசொல்தொடர். வாசுதேவன் என்றது - வஸுதேவருடைய புத்திரன் என்றும் எங்கும் நிறைந்துறையுங் கடவுள் என்றும் பொருள்படும். (௩)

சந்திரமண்டலம்போல் தாமோதரன்கையில் *
அந்தரமொன்றின்றி யேறியவன்செவியில் *
மந்திரங்கொள்வாயேபோலும் வலம்புரியே *
இந்திரனுமுன்னோடு செல்வத்துக்கேலானே. (௪)

| | | | |
|---|---|---|---|
| வலம்புரியே! | வலம்புரிச்சங்கே!, | மந்திரம் கொள் வாய் போலும் | ஏதோ ரஹஸ்யம்பேசுகிறாய்போலிராநின்றாய்; |
| தாமோதரன்கையில் | கண்ணபிரானது திருக்கையில் | இந்திரனும் | (செல்வத்தில்மிக்கவனாகப்புகழ்பெற்ற) இந்திரனும் |
| சந்திரமண்டலம் போல் | சந்திர மண்டலம் போலே | | |
| அந்தரம் ஒன்று இன்றி ஏறி | இடைவிடாது இருந்து கொண்டு | செல்வத்துக்கு | ஐச்வர்யவிஷயத்தில் |
| அவன் செவியில் | அவனுடைய காதில் | உன்னோடு ஏலான் | உனக்கு இணையாக மாட்டான். |

கண்ணபிரானுடைய திருக்கையிலே சந்திரமண்டலம்போலே விளங்காநின்று கொண்டு ஒருநொடிப்பொழுதும் அத்திருக்கையை விட்டுப்பிரியாமல் அங்கே யிருந்துகொண்டு அவனுடைய திருச்செவியோடே அணைந்தாற்போலிருப்பதனால் அவனது திருக்காதில் ஏதோ ரஹஸ்யம் ஓதுவான்போலேயிராநின்றாய்; சிறந்த செல்வம்பெற்றவனாகப் புகழப்படுகின்ற இந்திரனுக்கும் உன்னளவு செல்வமில்லாமையாலே நீ ஒப்பற்ற ஐச்வர்யம் அடைந்தவனாயிராநின்றாய் என்கிறாள்.

"அவன்செவியில் மந்திரங்கொள்வாயேபோலும்" என்றவிடத்து வியாக்கியானஸ்ரீஸூக்தி: — "நம்மைப்பிரிந்து ஆற்றமாட்டாதார் பலருமுண்டு என்று

திருச்செவியிலே சொல்லுகிறாய்போலிருக்கிறது அவன் செவியிலே ரஹஸ்யத்தைச் சொல்லுவான்போல விருக்கை. கோள்கை— கொடுக்கை." — என்று.

இந்திரனும் என்ற உம்மையால், இந்திரன் செல்வத்தில் சிறந்தவனென்று விளங்கும்: அவனிலும் விஞ்சிய செல்வமுடையார் பலரிருக்கவும் இந்திரனை அவ்விந்திரனை உம்மைகொடுத்தெடுத்தது எங்ஙனேயெனில்; இதற்குப் பெரியவாச்சான்பிள்ளை இரண்டுவகையாக அருளிச்செய்வர்; — இந்திரன் தான்நினைத்தபோது மழைபெய்விக்கும் அல்லாதபோது தவிர்க்கும்போருகையாலே ஐச்வர்யமுள்ளது அவ்விந்திரனுக்கே என்றிருப்பர்கள் இடையருமிடைச்சிகளும்; ஆனதுபற்றியேயன்றோ அவர்கள் அவ்விந்திரனுக்கே ஆராதனை செய்துவந்தார்கள். இப்போது ஆண்டாள் இடைப்பெண்ஸமாதியில் இருக்கின்றவளாதலால் அவ்விடைப்பெண்களின் கருத்தின்படி அருளிச்செய்கிறாள் என்பது முதல் ஸமாதானம். இரண்டாவது ஸமாதானம்; — இங்கு இந்திரன் என்றது ஸாக்ஷாத்பரமாத்மாவையே சொல்லிற்றாகவுமாம்; வேதவேதாந்ததாத்பரியங்களை நிஷ்கல்மஷமாகத் தேர்ந்துணர்ந்துள்ள பெரியாழ்வாருடைய திருமகளாதலால், இந்த்ராதிபதங்களும் பரமாத்மவாசகங்களென்று வேதாந்தஸித்தாந்தமாகையாலே அதனையடியொற்றிக் கூறினபடி. ஸ்ரீபாஷ்யத்தில் முதல் அத்யாயத்தின் முதற்பாதத்தின் முடிவு அதிகரணமாகிய இந்த்ரப்ராணாதிகரணத்தில் இவ்விஷயம் விசதமாகக் காணத்தகும். பரமாத்மாவும் உன்னோடு செல்வத்துக்கு ஏலான் என்றது— அவனுடைய ஸ்வாதந்திரியச் செல்வமானது உன்னுடைய பாரதந்திரியச்செல்வத்திற்குத் தோற்றுப்போய்விடுமென்கை. பாரதந்திரியத்தின் எல்லைநிலத்தில் நிற்பவர்களையன்றோ லக்ஷ்மீஸம்பந்நராகச் சொல்லிப்போருவது: "அரசமர்ந்தானடி சூடுமரசையல்லால் அரசாக வெண்ணேன் மற்றரசுதானே." .... (ச)

உன்னோடுடனே ஒருகடலில்வாழ்வாரை *
இன்னாரினையாரென்று எண்ணுவாரில்லைகாண் *
மன்னாகின்ற மதுசூதன்வாயமுதம் *
பன்னாளுமுண்கின்றாய் பாஞ்சசன்னியமே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| பாஞ்சசன்னியமே! | சங்கே!, | | (நீ ஒருவன்மாத்திரம்) |
| ஒரு கடலில் | ஓரேகடலில் | மன் ஆகி நின்ற | ஸர்வஸ்வாமியாயிராநின்ற |
| உன்னோடு உடனே | உன்னோடு கூடவே | | |
| வாழ்வாரை | வாழப்பிறந்தவர்களானமற்றும்பலரை | மதுசூதன் | கண்ணபிரானுடைய |
| | | வாய் அமுதம் | திருவாயினமுதத்தை |
| இன்னார் இனியார், என்று எண்ணுவார் இல்லை காண் | ஒருபதார்த்தமாகவும் மதிப்பாரில்லை காண்; | பல் நாளும் | பலகாலமாக |
| | | உண்கின்றாய் | பருகாநின்றாய். |
| | | | (ஆகையால் நீயேபாக்யசாலி.) |

ஓ பாஞ்சசன்னியமே! நீ பிறந்தவிடத்தில் உன்னைப்போலப் பிறந்தவர்கள் எத்தனையோபேர்களிருக்கிறார்களன்றோ; அவர்களை யாராவது நெஞ்சிலும் நினைப்பாருண்டா? அவர்களுடைய ஸ்வரூபம் இப்படிப்பட்டது, ஸ்வபாவம் இப்படிப்பட்டதென்று யாராவது அறிய விரும்பினருண்டா? இல்லை; அப்படியிருக்க, உனக்கொருத்தனுக்கு மாத்திரம் வந்த வாழ்ச்சி என்னே!; கண்ணபிரானுடைய திருவாயிலமுதத்தை அல்லும் பகலும் அருந்துகின்றாயே! உன்னுடைய பாக்கியமே பாக்கியம் என்று கொண்டாடுகின்றாள்.

இன்னார் இனியார் = இன்ன உருவத்தை யுடையவர்கள், இன்ன இயற்கையையுடையவர்கள். "இன்னாரினியாரென்று" என்ற பாடமும் ஒருவாறு கொள்ளற்பாலதேயாம்; இன்னார்- அயோக்யர்கள்; இனியார் — யோக்கியர்கள் என்று பொருளாய், உன்னோடுடனே ஒருகடலில்வாழ்வாருடை நன்மைதீமைகளைப்பற்றிச் சிந்திப்பாருமில்லை என்று கருத்தாகலாம்.

பாஞ்சசன்னியமே! = நான் பெரியாழ்வார்பாடே வளர்ந்தும் பயனற்றிராநின்றேன், நீ பஞ்சஜநாஸுரன்பாடே வளர்ந்தும் ஒப்பற்ற பயன்பெற்றிராநின்றாய்; பிறப்பிலும் வளர்பிலும் என்ன இருக்கிறது? அத்ருஷ்டம் செவ்வனேயிருத்தல் வேண்டும்; அஃது உனக்கு நன்கு அமைந்ததுகாண்- என்கிறாள் போலும்.

போய்த்தீர்த்தமாடாதே நின்றபுணர்மருதம் ※
சாய்த்தீர்த்தான்கைத்தலத்தே யேறிக்குடிகொண்டு ※
சேய்த்தீர்த்தமாய்நின்ற செங்கண்மால்தன்னுடைய ※
வாய்த்தீர்த்தம்பாய்ந்தாடவல்லாய் வலம்புரியே. (௯)

| | | | |
|---|---|---|---|
| வலம்புரியே! | வலம்புரிச்சங்கே!, | நின்ற | (நாரதசாபத்தாலே மரமாய்நின்ற) |
| போய் | வெகுதூரம் வழிகடந்துபோய் | புணர் மருதம் | இரட்டைமருத மரத்தை |
| தீர்த்தம் | கங்கை முதலிய தீர்த்தங்களிலே | சாய்த்து ஈர்த்தான் | முறித்துத் தள்ளின கண்ணபிரானுடைய |
| ஆடாதே | நீராடுகையாகிற கஷ்டங்கள்பட வேண்டாமல் | கைத்தலத்து ஏறி | திருக்கைத்தலத்தின் மீதேறி |

இங்கிலவுலகத்தில் புண்யதீர்த்தங்களிற் படிந்து குடைந்தாடவேணுமென்னும் விருப்பமில்லாதாரில்லை; அங்ஙன் விருப்புற்றோரெல்லாரும் ஆயிரக்காதம் ஐந்நூறுகாதம் வழிநடந்துபோய் ஒருகுளத்திலும் குட்டையிலும் முழுக்கிட்டு வருவர்கள்; ஒருதடவை புண்யதீர்த்தத்திற் பாய்ந்தாடுவதற்கு எல்லாரும் பட்டபாடுகள் படாநிற்க, பாஞ்சசன்னியமே! நீ அப்படிப்பட்ட வருத்தமொன்றும் படாமல் எம்பெருமானுடைய திருக்கைத்தலத்திலேயே எளிதாகக் குடியிருந்துகொண்டு அவனுடைய வாயமுதமாகிற லோகோத்தரமான புண்யதீர்த்தத்திலே ஸர்வகாலமும் அவகாஹித்திருக்கின்றாயே!, உனது அதிருஷ்டமே அதிருஷ்டம்-என்று கொண்டாடுகின்றாள்.

“வலம்புரியே! (நீ மற்றவர்களைப்போல்) போய் தீர்த்தமாடாதே-செங்கண்மால் தன்னுடைய வாய்த்தீர்த்தம் பாய்ந்தாடவல்லாய்” என்று அந்வயக்ரமம். சேய்த்தீர்த்தமாய் நின்ற என்ற அடைமொழி செங்கண்மாலுக்கு ஆகலாம், செங்கண்மால் தன்னுடைய வாய்த்தீர்த்தத்துக்குமாகலாம். சேய்த்தீர்த்தம் என்றது - நெடுந்தூரத்திலுள்ள தீர்த்தமென்றபடியாய், அதனால் அருமை காட்டப்பட்டதாய், அதனால் மிக்கசிறப்பு காட்டப்பட்டதாமென்க. (சு)

செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல் *
செங்கண்கருமேனி வாசுதேவனுடைய *
அங்கைத்தலமேறி அன்னவசஞ்செய்யும் *
சங்கரையாவுன்செல்வம் சாலவழகியதே. (எ)

| | |
|---|---|
| நாள் | அப்போதலர்ந்த |
| செம் கமலம் மலர் மேல் | செந்தாமரைப் பூவில் (படிந்து) |
| தேன் | தேனை |
| நுகரும் | பருகுகின்ற |
| அன்னம் போல் | அன்னப்பறவை போன்று |
| செம் கண் கரு மேனி வாசுதேவனுடைய | சிவந்த திருக்கண்களையும் கறுத்த திருமேனியையுமுடைய கண்ணபிரானது |
| அம் கைத்தலம் ஏறி | அழகிய கைத்தலத்தின் மீதேறி |
| அன்னவசம் செய்யும் | கண்வளர்கின்ற |
| சங்கு அரையா! | சங்குகளிற் சிறந்த பாஞ்சஜந்யமே! |
| உன் செல்வம் | உன்னுடைய செல்வமானது |
| சால | மிகவும் |
| அழகியது | சிறந்ததுகாண். |

அப்போதலர்ந்த செந்தாமரைமலரின்மேலே அன்னம் படிந்து மதுபானம் பண்ணுமாபோலே கண்ணபிரானுடைய அழகிய திருக்கையின்மேலேறி மதுபானம் பண்ணி உணவுக்கீடாக உறக்கங்கொள்ளுகிற திருச்சங்கே! உன் போகத்தின் பெருமையை நான் என்னசொல்வேன் என்கிறாள். வெண்மைநிறத்தில் ஸாம்யத்தைக்கொண்டு சங்கை அன்னத்தோடு ஒப்பிட்டாள். அங்கைத்தலமானது செங்கமல நாண்மலரோடு ஒப்பிடப்பட்டது.

செங்கமலநாண்மலரில் மது உள்ளமையால் அதனை அன்னம் பருகுவதுண்டு; இங்குச் செங்கமலமலராகச் சொல்லப்பட்ட திருக்கையில் மது இல்லையே;

திருவாயில்தானே மது உண்டு; "அங்கைத்தலமேறி" என்றிருக்கைபாலே இந்த உபமாநோபமேயபாவம் எங்ஙனேபொருந்தும்? என்று சிலர் சங்கிப்பர்கள்; — அன்னமானது செங்கமல நாண்மலரின்மேல் இருந்துகொண்டு தேனை நுகர்வது போல் - என்று விவக்ஷிதமாகக்கொண்டால் இந்த ஶங்கைக்குப் பரிஹாரமாகும். செங்கமலநாண்மலர்மேல் அன்னத்தின் இருப்புக்கும் வாசுதேவனுடைய அங்கைத்தலத்தில் சங்கின் இருப்புக்கும் உபமாநோபமேயபாவம் விவக்ஷிதமென்க.

அன்னவசஞ்செய்தல் = உண்ட உணவுக்கீடாக இடம்வலங்கொள்ளுதல், உறங்குதல். சங்கரையா! = அரையன் - அரசன்; சங்குகளிற்சிறந்தது.

ஆழ்வானருளிச்செய்த ஸுந்தரபாஹுஸ்தவத்தில்- "ஶ்ரீமத்வநாத்ரிபதி பாணிதரலாப்ஜயுக்மம் ஆரூடயோர் விமலசங்கரதாங்கயோஸ்து - ஏகோப்ஜமாச்ரித இவோத்தமராஜ ஹம்ஸः பத்மப்ரியோர்க்க இவ தத்ஸமிதோ த்விதீயः" என்ற ஶ்லோகத்தில் திருச்சங்கைப்பற்றி வருணித்திருப்பதில் இப்பாட்டின் கருத்து அமைக்கப்பட்டிருக்கின்றமை அறியத்தக்கது. ... .... (எ)

உண்பதுசொல்லில் உலகளந்தான்வாயமுதம்*
கண்படைகொள்ளில் கடல்வண்ணன்கைத்தலத்தே *
பெண்படையாருன்மேல் பெரும்பூசல்சாற்றுகின்றார் *
பண்பலசெய்கின்றாய் பாஞ்சசன்னியமே. (அ)

பாஞ்சசன்னியமே! — சங்கே!,
உண்பது சொல்லில் — நீ உண்பது என்னவென்றால்
உலகு அளந்தான் வாய் அமுதம் — உலகங்களை அளந்தவனான எம்பெருமானுடைய திருவாயிலுள்ள அம்ருதம்;
கண் படை கொள்ளில் — நீ படுத்துக்கொள்வது எங்கேயென்றால்
கடல் வண்ணன் கைத்தலத்தே — கடல் போன்ற நிறத்தையுடையவனான அவ்வெம்பெருமானுடைய திருக்கையிலே;
(இப்படி உனக்கு ஊணும் உறக்கமும் அங்கேயாயிருப்பதனால்)

பெண் படையார் — பெண்குலத்தவர்கள் அனைவரும்
உன் மேல் — உன் விஷயமாக
பெரு பூசல் சாற்றுகின்றார் — பெரிய கோஷம் போடுகிறார்கள்; [எங்கள் ஜீவனத்தை இவனே கொள்ளை கொள்ளுகிறானென்று கூச்சலிடுகிறார்கள்;]
பண்பு அல செய்கின்றாய் — (இப்படி அவர்கள் வருந்தும்படி) அநியாயமான காரியத்தைச்செய்கிறாய்;
[இஃது உனக்குத்தகுதியல்ல என்கை.]

ஓ பாஞ்சசன்னியமே! நீசெய்வது சிறிதும் நியாயமாயில்லை; பெண்ணாய்ப் பிறந்தவர்களெல்லாரும் உன்மேல் வசைகூறும்படியான காரியம் நீசெய்கிறாய்; அது என்னவென்றால்; நீ கண்ணபிரானுடைய வாயமுதத்தை உண்பதும் அவனுடைய கைத்தலத்தில் உறங்குவதுமாயிருக்கிறாய்; கோயில் சோற்றைத்தின்று குளத்தில் நீரைக்குடித்துக் கோபுரவாசலிற் கிடந்துறங்குவார்க்குப்போலே உனக்கும் பகவத்ஸம்பந்தம் ஒருநொடிப்பொழுதும் இடையறாதிருக்கின்றது; இப்படி எம்பெருமானோடேயே ஸதாபோது போக்கவேணுமென்று ஆசைப்பட்டிருக்கிற பல்லா

திருவாயிலதாகே [illegible] உண்டு; "அங்கைத்தலமேறி" என்றிருக்கைபாலே இந்த உபமாநோபமேயபாவம் எங்ஙனேபொருந்தும்? என்று சிலர் சங்கிப்பர்கள்; — அன்னமானது செங்கமல நாண்மலரின்மேல் இருந்துகொண்டு தேனை நுகர்வது போல — என்று விவக்ஷிதமாகக்கொண்டால் இந்த ஶங்கைக்குப் பரிஹாரமாகும். செங்கமல நாண்மலர்மேல் அன்னத்தின் இருப்புக்கும் வாஸுதேவனுடைய அங்கைத்தலத்தில் சங்கின் இருப்புக்கும் உபமாநோபமேயபாவம் விவக்ஷிதமென்க.

அன்னவசஞ்செய்தல் = உண்ட உணவுக்கிடாக இடம்வலங்கொள்ளுதல், உறங்குதல். சங்கரையா! = அரையன் - அரசன்; சங்குகளிற்சிறந்தது.

ஆழ்வானருளிச்செய்த ஸுந்தரபாஹுஸ்தவத்தில்- "ஸ்ரீமத்வநாத்ரிபதி பாணிதரலாப்ஜயுக்மம் ஆரூடயோர் விமலசங்கரதாங்கயோஸ்து - ஏகோப்ஜமாச்ரித இவோத்தமராஜஹம்ஸ: பத்மப்ரியோர்க்க இவ தத்ஸமிதோ த்விதீய:" என்ற ஶ்லோகத்தில் திருச்சங்கைப்பற்றி வருணித்திருப்பதில் இப்பாட்டின் கருத்து அமைக்கப்பட்டிருக்கின்றமை அறியத்தக்கது. ... .... (எ)

உண்பதுசொல்லில் உலகளந்தான்வாயமுதம் *
கண்படைகொள்ளில் கடல்வண்ணன்கைத்தலத்தே *
பெண்படையாருன்மேல் பெரும்பூசல்சாற்றுகின்றார் *
பண்பலசெய்கின்றாய் பாஞ்சசன்னியமே. (அ)

பாஞ்சசன்னியமே! } சங்கே!,
உண்பது சொல்லில் } நீ உண்பது என்னவென்றால்
உலகு அளந்தான் வாய் அமுதம் } உலகங்களை அளந்தவனான எம்பெருமானுடைய திருவாயிலுள்ள அம்ருதம்;
கண் படை கொள்ளில் } நீ படுத்துக்கொள்வது எங்கேயென்றால்
கடல் வண்ணன் கைத்தலத்தே } கடல் போன்ற நிறத்தை யுடையனான அவ்வெம்பெருமானுடைய திருக்[illegible] யிலே;
(இப்படி உனக்கு [illegible] [illegible] யிருப்பதனால்)

பெண் படையார் } பெண்குலத்தவர்கள் அனைவரும்
உன் மேல் — உன் விஷயமாக
பெரு பூசல் சாற்றுகின்றார் } பெரிய கோஷம் போடுகிறார்கள்; [எங்கள் ஜீவனத்தை இவனே கொள்ளை கொள்ளுகிறானென்று கூச்சலிடுகிறார்கள்;]
பண்பு அல செய்கின்றாய் } (இப்படி அவர்கள் வருந்தும்படி) அநியாயமான காரியத்தைச்செய்கிறாய்;
[இஃது உனக்குத்தகுதியல்ல என்கை.]

ஓ பாஞ்சசன்னியமே! நீ செய்வது சிறிதும் நியாயமாயில்லை; பெண்ணாய்ப் பிறந்தவர்களெல்லாரும் உன்மேல் வசைகூறும்படியான காரியம் நீ செய்கிறாய்; அது என்னவென்றால், நீ கண்ணபிரானுடைய வாயமுதத்தை உண்பதும் அவனுடைய கைத்தலத்தில் உறங்குவதுமாயிருக்கிறாய்; கோவில் சோற்றைத்தின்று குளத்தில் நீராடுக்கித்துக் கோபுரவாசலில் கிடந்துறங்குவார்க்குப்போலே உனக்கும் பகவத்ஸந்நிதியில் ஒருசெய்யுமொழுதும் இடையறுகிருக்கின்றது; இப்படி எம்பெருமானேடே [illegible] போக்கவேணுமென்று ஆசைப்பட்டிருக்கிற பல்லா

யிரம் பெண்களை வயிறெரிந்துநிற்கவிட்டு நீயொருவனே இப்படிப் போதுபோக்குவதானது நியாயமேயல்ல; 'இப்பாவி இப்படி அநியாயம்செய்கிறனே' யென்று முறை யிடாதாரில்லைகாண் என்கிறாள்.

கண்படை=உறக்கம்; பெண்படையார்=திரள்திரளாயுள்ள பெண்கள் என்றபடி; திருவாய்ப்பாடியிலுள்ளாரும் ஸ்ரீமதுரையிலுள்ளாரும். பூசல்=பேரொலிசெய்தல். பண்பல=பண்பு அல—, பண்பு-நியாயம், அல-அல்ல=அல்லாதது, நியாயமல்லாதது அநியாயம். பகவத்விஷயத்தில் அவகாஹித்தவர்கள் "ஏக꞉ ஸ்வாது ந புஞ்ஜீத" [ஏக꞉ஸ்வாதுநபுஞ்ஜீத] [இன்கனிதனியருந்தான்] என்றபடி மற்றும்ருசியுடையாரையும் கூட்டிக்கொண்டு திரளாகவிருந்து அநுபவிக்கவேண்டியிருக்க, நீ ஏகாகியாய் அநுபவிப்பது அநீதியென்கை.

பாஞ்சசன்னியமே! = நீ நல்லகுடியிற்பிறந்து வளர்ந்திருப்பாயாகில் "வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல் வந்து மண்ணும்மணமுங்கொண்மின்" என்றும் "கூராட்பேர்தவீர் போதுமினோ" என்றும் எங்களைப்போலே பாஸம்ருத்திக்கு ஆசைப்படுவாய்; உப்புக்குழியிலே பிறந்து அசுரன்வயிற்றிலே வளர்ந்தவனாகலால் பிறரைத்துன்பப்படுத்துவதிலேயே ருசியுடையையாயிராநின்றாய் என்ற உட்கருத்துத்தோன்றப் பாஞ்சசன்னியமே! என்கிறாள் போலும். .... (அ)

பதினறுமாயிரவர் தேவிமார்பார்த்திருப்ப *
மதுவாயிற்கொண்டாற்போல் மாதவன்றன்வாயமுதம் *
பொதுவாகவுண்பதனைப் புக்குநீயுண்டக்கால் *
சிதையாரோவுன்னோடு செல்வப்பெருஞ்சங்கே. (கூ)

| | |
|---|---|
| பெரு செல்வம் சங்கே | பெரிய செல்வம் படைத்தசங்கமே!, |
| பதினறும் ஆயிரவர் தேவிமார் | பதினறுயிராம் தேவிமார்கள் |
| பார்த்து இருப்ப | (கண்ணபிரானுடைய வாயமுதத்தை நாம் பருகவேணுமென விரும்பி) எதிர்பார்த்திருக்கையில் |
| பொது ஆக உண்பது மாதவன் தன்வாய் அமுதத்தை | பகவத்ஸம்பந்திகளெல்லாரும் பொதுவாக உண்ணவேண்டியதான அவ்வெம்பெருமானது வாயமுதத்தை |
| நீ புக்கு | நீயொருவனே ஆக்ரமித்து |
| மது வாயில் கொண்டால் போல் உண்டக்கால் | தேனை உண்கிறாப்போல் உண்டால் |
| உன்னேடு சிதையாரோ | (மற்றபேர்கள்) உன்னேடு விவாதப்படமாட்டார்களோ?. |

பெருஞ்செல்வம் படைத்த சங்கே! நீ அல்லும்பகலும் உண்கிற கண்ணபிரான்றன் வாயமுதமானது உனக்கொருவனுக்கே உரிமைப்பட்டதன்று; அக்கண்ணபிரானுக்கு வாழ்க்கைப்பட்ட பதினறுயிரம்பெண்கள் இவ்வமுதத்தைப் பருகுவதற்குப் பங்குடையவர்கள். அன்னவர் இதனை அநுபவிக்க அவஸரம் பார்த்திருக்க நீஒருவனே மேல்விழுந்து புஜித்தால், அவர்கள் உன்னோடு பிணங்காதிருக்கமுடியுமோ? அவர்களுடைய மனவருத்தத்திற்கு நீ ஆளானாயாகில் உன்னை ஸாதுகோஷ்டியில் மதிப்பாருண்டோ? என்கிறள்.

நரகாஸுரன் தான் மணஞ்செய்து கொள்ளவேணுமென்று அங்கங்கிருந்து தெரிந்து பிடித்துக்கொண்டு வந்து திரட்டிவைத்திருந்த கன்னிகைகள் பதினாறாயிரம் பேரையும் கண்ணபிரான் அவ்வஸுரனைக் கொன்றொழித்துத் தானே மணஞ்செய்துகொண்டனனென்பது அறியத்தக்கது. ... (௯)

பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடும் *
வாய்ந்தபெருஞ்சுற்றம் ஆக்கியவண்புதுவை *
ஏய்ந்தபுகழ்ப்பட்டர்பிரான் கோதைதமிழீரைந்தும் *
ஆய்ந்தேத்தவல்லா ரவருமணுக்கரே. (௧௦)

| | | | |
|---|---|---|---|
| பாஞ்சசன்னியத்தை | சங்கை | பட்டர்பிரான் கோதை | பெரியாழ்வாருடைய திருமகளுமான ஆண்டாள் (அருளிச்செய்த) |
| பற்பநாபனோடும் | எம்பெருமானோடே | தமிழ் ஈரைந்தும் | இத்தமிழ்ப் பாசுரங்கள் பத்தையும் |
| வாய்ந்த பெருசுற்றம் ஆக்கிய | கிட்டினபெருறவை யுடையதாக வார்த்தை சொன்ன | ஆய்ந்து | அநுஸந்தித்து |
| வண் புதுவை | அழகிய ஸ்ரீ வில்லிபுத்தூரில் திருவவதரித்தவளும் | ஏத்த வல்லார் அவரும் | (இது கொண்டு எம்பெருமானைத்) துதிக்க வல்லவர்களும் |
| ஏய்ந்த புகழ் | நிறைந்த புகழை யுடையவளும் | அணுக்கர் | (பாஞ்சஜந்யம் போல் அந்தரங்கராகப் பெறுவர்கள். |

இத்திருமொழி கற்றார்க்குப் பலஞ்சொல்லி முடிக்கிறாள் இதில். ஸ்ரீபாஞ்சஜந்யத்தை நோக்கி "மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும் விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்" என்றமையால் இச்சங்குதான் எம்பெருமானுக்குக் கிட்டின உறவுடையது என்று ஆண்டாளுடைய கருத்தாயிருந்தது; அதுதோன்ற அருளிச்செய்கிறாள்—"பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடும் வாய்ந்தபெருஞ் சுற்றமாக்கிய" என்று. நெருங்கின பந்துத்வமுடையதாகக் கொண்டு சொன்ன என்றபடி. ஆக்கிய என்ற அடைமொழி கோதைக்குமாகலாம், கோதை தமிழ்க்கு மாகலாம். "ஏய்ந்தபுகழ்" என்ற அடைமொழி பட்டர்பிரானிடத்து அந்வயிக்கத் தகுமாயினும் கோதையிடத்து அந்வயித்தருளினர் பெரியவாச்சான்பிள்ளை. தமிழ்=தமிழாலாகிய பாசுரங்கட்கு ஆகுபெயர்.

ஆய்ந்து ஏத்தவல்லா ரவரும் = இத்திருவாய்மொழி முழுதும் பாஞ்சஜந்யத்தைப்பற்றிச் சொல்லிற்றேயன்றி எம்பெருமானைப்பற்றி இதில் ஒன்றுமில்லையேயென்று கருதிவிடாமல் இதுவும் எம்பெருமானுடைய பெருமையில் தான் சென்று முடிகின்றதென்று ஆராய்ந்து அநுஸந்திக்கவல்லவர்கள் என்றபடி. எம்பெருமானுடைய திருவாயமுதத்தின் இனிமையும் அவனுடைய ஆச்ரிதபக்ஷபாதமும் இத்திருமொழியில் விளங்கக்காண்க. அணுக்கர்=அன்புடையர், அந்தரங்கர்.

அடிவரவு:—கருப்பூரம் கடல் தடவரை சந்திரன் உன்னோடு போய் செங்கமலம் உண்பது பதினாறு பாஞ்ச விண். ... ... ...

ஏழாந்திருமொழி முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# எட்டாந்திருமொழி - விண்ணீலமேலாப்பு.

உரையவதாரிகை:—கீழ்த்திருமொழியில் திருச்சங்காழ்வாரோடு வார்த்தையாடி ஒருவாறு போதுபோக்கினாள்; இவள் எவ்வளவுபேசினும் அச்சங்கு மறுமாற்றமொன்றும் சொல்லக்காணாதொழியவே "[illegible]" [போதயந்த:பரஸ்பரம்] என்றபடியிலே தரிக்கப்பெற்றிலள்; ஆற்றாமை மீதூர்ந்து செல்லத்தொடங்கிற்று; காலமோ கார்காலமாயிருந்தது; மேகங்கள் மின்னி முழங்கிக்கொண்டு வந்து தோன்றின. பண்டு எம்பெருமான் கலந்துபிரிந்துபோம்போது மீண்டு வருங்காலத்தைப்பற்றி ப்ரஸ்தாவிக்குங்கால் கார்காலத்தில் திருமபி வருவேன் என்று கூறிப்போனது நினைவுக்கு வந்தது. அப்படியே அவனும் அந்த மேகங்களோடு கூட வந்திருக்கக் கூடுமென்று நினைத்தாள்; மேகங்களே! எம்பெருமானும் வந்தானோ? என்று கேட்டாள், அவை மறுமாற்றமுஞ் சொல்லவில்லை, அவ்வெம்பெருமானும் தென்படவில்லை; ஆகவே, மேகங்களைநோக்கி நீங்கள் என் தசையை அங்குச்சென்று அறிவிக்கவேணுமென்று இரக்கிறாள்— இங்ஙனம் மேகத்தைத் தூதுவிடுவதாகச் செல்லுகிறது இத்திருமொழி.

விண்ணீலமேலாப்பு விரித்தாற்போல்மேகங்காள் •
தெண்ணீர்பாய்வேங்கடத்து என்திருமாலும்போந்தானே •
கண்ணீர்கள்முலைக்குவட்டில் துளிசோரச்சோர்வேனை •
பெண்ணீர்மையீடழிக்குமிது தமக்கோர்பெருமையே. (க)

| | | | |
|---|---|---|---|
| விண் | ஆகாசம் முழுவதிலும் | போந்தானே | (உங்களோடுகூட) எழுந்தருளினானோ? |
| நீலம் மேலாப்பு விரித்தால் போல் | நீல நிறமான மேற்கட்டியை விரித்துக்கட்டினாற் போலிரா நின்ற | முலை குவட்டில் | முலை நுனியிலே |
| மேகங்காள்! | மேகங்களே! | கண் நீர்கள் துளி சோர | கண்ணீர் அரும்ப |
| தெள் நீர் பாய் | தெளிந்த தீர்த்தங்கள் பாயுமிடமான | சோர்வேனை | வருந்துகிற என்னுடைய |
| வேங்கடத்து | திருவேங்கடமலையிலெழுந்தருளி யிராநின்ற | பெண் நீர்மை ஈடு அழிக்கும் இது | பெண்மையை உருவழிக்கிறவிது |
| என் திரு மாலும் | திருமாலாகிய எம்பெருமானும் | தமக்கு ஓர் பெருமையே | அவர்தமக்கு ஒருபெருமையாயிரா நின்றதோ? |

ஆகாசப்பரப்பு முழுவதும் இடமடையும்படி நீலநிறமாயிருப்பதொரு மேற்கட்டி கட்டினாற்போன்ற மேகங்களே! என் திருவேங்கடமுடையானும் உங்க

ளோடு கூட இவ்விடமெழுந்தருளினனோ? என்று ஆண்டாள் மேகங்களை நோக்கிக்கேட்க, அதற்கு அவை மறுமொழியொன்றுஞ் சொல்லாதொழியவே, 'அவன் வாராமையாலன்றோ இவை பேசாதிருக்கின்றன' என்று கண்ணீர் வெள்ளமிடத் தொடங்க, 'மேகங்களே! இப்படி நான் கண்ணீர்விட்டு அழும்படி அவன் என்னைப் பரிதாபப்படுத்துவது அவனுடைய பெருமைக்கு ஏற்குமோ? நீங்களே சொல்லுங்கள்' என்கிறாள்.

திருவேங்கடமுடையானும் தானுமாக ஒரு படுக்கையிற் கிடந்து லீலாரஸம் அநுபவிக்கும்போதைக்கு ஆகாசத்தில் காளமேகங்களின் பரப்பானது மேற்கட்டி கட்டினாற்போலத் தோற்ற விண்ணீலமேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்! என்கிறாள். திருவேங்கடவன் முன்பு இவளோடு புணரவந்தபோது பிராட்டியுந் தானுமாக வந்தமை தோன்றுமாம் என்திருமாலும் என்றதனால்.

பெண்ணீர்மையீடழிக்குமிது=ஈடழித்தலாவது - சீர்கெடும்படிசெய்தல்; பெண்ணீர்மையாவது பெண்களுக்கு உரிய தன்மை; அதனைச் சீர்கெடுத்தலாவது எதுவும் நாயகனுடைய மனக்கருத்தின்படி நடக்கக்கடவது; அவன் வந்தபோது வருக; அவனது வரவைப்பற்றி நாம் சிறிதும் விசாரப்படத்தகாது; நாம் ஒரு வகை முயற்சியும் செய்யலாகாது' என்று ஸ்வரூபாநுரூபமாக இராமல் 'என் திருமாலும் போந்தானே?' என்று கேட்கும்படியாகவும் கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச் சோரும்படியாகவும் பதற்றமான தசையிலே கொண்டு நிறுத்துகை.

தமக்கு ஓர் பெருமையே?='ஸ்ரியஃபதி' என்று நாடெங்கும் புகழப்பெற்றவர், அந்த ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்குக் கரசரணாதி அவயவஸ்தாநீயையாயிருக்கிற என்னையும் அவளைப்போலே மகிழ்வித்தல் பெருமையாகுமேயன்றி, இப்படி முகங்கொடாதே நோவுபடுத்துவது பெருமையாகமாட்டாது, பழியாகவே தலைக்கட்டுமென்கை. திருவேங்கடமுடையானைப் பெரியாழ்வார் திருமகள் ஆசைப்பட்டுப் பெறுதொழிந்தாளென்றால் அவனுடைய பெருமை என்னாகும்? என்றபடியுமாம்.

... ... ... ... (௧)

மாமுத்தநிதிசோரியும் மாமுகில்காள் * வேங்கடத்துச்
சாமத்தின்நிறங்கொண்ட தாளாளன்வார்த்தையென்னே*
காமத்தீயுள்புகுந்து கதுவப்பட்டிடைக்கங்குல் *
ஏமத்தோர்தென்றலுக்கு இங்கிலக்காய்நானிருப்பேனே. (௨)

| | | | |
|---|---|---|---|
| மா முத்தம் நிதி சொரியும் | சிறந்த முத்துக்களையும் பொன்களையும் கொண்டு பொழிகிற | சாமத்தின் நிறம் கொண்ட | நீலநிற முடையனான |
| மா முகில்காள் | காளமேகங்களே! | தாளாளன் | எம்பெருமானுடைய |
| வேங்கடத்து | திருமலையிலெழுந்தருளி யிராநின்ற! | வார்த்தை என்னே | ஸமாசாரம் ஏதாகிலுமுண்டோ? |
| | | காமம் தீ | காமாக்நியானது |

[illegible] இவ்விடமெழுந்தருளினனோ? என்று ஆண்டாள் மேகங்களை நோக்[illegible] [illegible] [illegible] மறுமொழி யொன்றுஞ் சொல்லாதொழியவே, 'அவன் [illegible] [illegible] இங்கே [illegible] இருக்கின்றன' என்று கண்ணீர் வெள்ளமிடத் [illegible] மேகங்களே! இப்படி நான் கண்ணீர்விட்டு அழும்படி அவன் என் [illegible] [illegible] [illegible] பெருமைக்கு ஏற்குமோ? நீங்களே சொல்லுங்கள் என்கிறாள்.

திருவேங்கடமுடையானும் தானுமாக ஒரு படுக்கையிற் கிடந்து லீலா [illegible] [illegible] ஆகாசத்தில் காளமேகங்களின் பரப்பானது [illegible] [illegible] போலத் தோற்ற 'விண்ணீலமேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள்' என்கிறாள். திருவேங்கடவன் முன்பு இவளோடு புணரவந்தபோது [illegible] [illegible] வந்ததைத் தோன்றுமாம் என்திருமாலும் என்றதனால்.

பெண்ணீர்மையீடழிக்குமிது=ஈடழித்தலாவது - சீர்கெடும்படிசெய்தல்; பெண்ணீர்மையாவது பெண்களுக்கு உரிய தன்மை; அதனைச் சீர்கெடுத்தலாவது [illegible] [illegible] மனக்கருத்தின்படி நடக்கக்கடவது; அவன் வந்தபோது [illegible] வரவைப்பற்றி நாம் சிறிதும் விசாரப்படத்தகாது; நாம் ஒரு [illegible] முயற்சியும் செய்யலாகாது' என்று ஸ்வரூபாநுரூபமாக இராமல் 'என் திருமாலும் போந்தானே?' என்று கேட்கும்படியாகவும் கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச் சோரும்படியாகவும் பதற்றமான தசையிலே கொண்டு நிறுத்துகை.

தமக்கு ஓர் பெருமையே? = 'ஸ்ரீயப்பதி' என்று நாடெங்கும் புகழ்பெற்ற வர், அந்த ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்குக் கரசரணாதி அவயவஸ்தாநீயையாயிருக்கிற என்னையும் அவளைப்போலே மகிழ்வித்தல் பெருமையாகுமேயன்றி, இப்படி முகங்கொடாதே நோவுபடுத்துவது பெருமையாகமாட்டாது, பழியாகவே தலைக்கட்டுமென்கை. திருவேங்கடமுடையானைப் பெரியாழ்வார் திருமகள் ஆசைப்பட்டுப் பெறுதொழிந்தாளென்றால் அவனுடைய பெருமை என்னாகும்? என்றபடியுமாம். ... ... ... (க)

மாமுத்தநிதிசோரியும் மாமுகில்காள் * வேங்கடத்துச்
சாமத்தின்நிறங்கொண்ட தாளாளன்வார்த்தையென்னே *
காமத்தீயுள்புகுந்து கதுவப்பட்டிடைக்கங்குல் *
ஏமத்தோர்தென்றலுக்கு இங்கிலக்காய்நானிருப்பேனே. (உ)

| | | | |
|---|---|---|---|
| மா முத்தம் நிதி சொரியும் | சிறந்த முத்துக்களையும் பொன்களையும் கொண்டு [illegible] பொழிகிற | சாமத்தின் நிறம் கொண்ட | நீலநிற முடையனான |
| மா முகில்காள் | காளமேகங்களே! | தாளாளன் | எம்பெருமானுடைய |
| வேங்கடத்து | திருமலையிலெழுந்தருளி [illegible] யிராநின்ற! | வார்த்தை என்னே | ஸமாசாரம் ஏதாகிலு முண்டோ? |
| | | காமம் தீ | காமாக்நியானது |

| | | | |
|---|---|---|---|
| உள் புகுந்து | உள்ளேபுகுந்து | ஓர் தென்றலுக்கு | ஒரு தென்றற் காற்றுக்கு |
| நலிவுபட்டு | கவ்வ, அதனால் பாதைப்பட்டு | நான் இலக்கு ஆய் | நான் இலக்காகி |
| கங்குல் | இரவில் | இங்கு இருப்பேனே | இங்கு இருப்பனோ? (இது தகுதியோ?) |
| இடை ஏமத்து | நடுயாமத்திலே | | |

ஓ காளமேகங்களே! நீங்கள் எனக்காக ஔதாரியத்தில் இன்று புதிதாகப் பரிசயம் பண்ணவேணுமோ? வள்ளல்தனமே இயல்பாக இருப்பவர்களன்றோ நீங்கள்; விலையுயர்ந்த முத்துக்களையும் பொன்களையும் ஒருவரும் வேண்டாமலிருக்கத்தானே நீங்களே பொழிகின்றீர்களன்றோ. இப்படிப்பட்ட நீங்கள், அடிவிழுந்து வேண்டுகின்ற எனக்காக ஒருவாய்ச்சொல் நல்கலாகாதோ? திருவேங்கடமுடையானுடைய ஸமாசாரம் உங்களுக்குத் தெரியாமலிராதே; ஏதாவது சொல்லலாகாதா? பிறர்க்குப் பொன்னையும் முத்தையும் பொழிகின்ற நீங்கள் எனக்கு ஒருவாய்ச்சொல் பொழிய அருமையோ? என்கிறாள் முன்னடிகளில்.

இவள் அப்படிக் கேட்டவளவிலும் அம்முகில்கள் இன்னஸமாசாரமுண்டென்று மறுமாற்றம் சொல்லப்பெறாமையாலே தனது ஆற்றாமையின் கனத்தைச் சொல்லி வருந்துகின்றாள் பின்னடிகளில்;—அவ்வெம்பெருமானிடத்து வைத்த காமமாகிற தீயானது வெளியிலுள்ள அவயவங்களை நிஸ்ஸேஷமாக தலித்துவிட்டு இரை காணாமல் உள்ளே புகுந்து நலிக்க, தென்றற் காற்றானது அதற்குத் துணையாயிருந்துகொண்டு நோயை அதிகப்படுத்த இப்படி இரண்டின் கையிலும் அகப்பட்டுக்கொண்டு எத்தனைநாள் நான் தடுமாறிக்கிடப்பேனென்கிறாள்.

சாமம்='ஸ்யாமம்' என்றவடசொல்விகாரம். தாளாளன்=பெருமைபாராட்டி நிற்பவன், இங்கே வியாக்யான ஸ்ரீஸூக்தி:—"பிறர்க்காகக் கண்டவுடம்பைத் தனக்கென்றிருக்குமவனைப்போலன்றிக்கே; "ஸ்வநாம்" [பக்தாநாம்] என்றிருக்கிற வுடம்பைத் தனக்கென்றிருக்கிறவன்; 'இவ்வடிவு படைத்த நாமோ சென்றனைவோம்? இதில் அபேக்ஷையுடையார் வேணுமாகில் தாங்களே வருகிறார்கள்' என்று எழ வாங்கியிருக்குமவன்."—என்று. இதனால், பரத்வம் கொண்டாடி நிற்பவன் என்றதாயிற்று. தாள் என்று திருவடிக்குப்பேராய் அதனால் திருமேனியை உபலக்ஷித்ததாக்கி, திருமேனியை அடியார்கட்கு போக்யமாக்காதே தனக்கே போக்யமாக ஆளுமவன் என்று ஒருவர் பொருள் விவரித்தார். இதனை ஆராய்வது.

வார்த்தை என்னே?=அவர்தாம் இங்குவந்திலராகிலும் ஒரு வார்த்தையாகிலும் சொல்லியனுப்ப வமையுமே, அதுவுமில்லையோ என்கை. கங்குலிடை=இரவிலே, ஏமத்து=கட்டுங்காவலுமாயுள்ள விடத்தில் என்றும் பொருள்கொள்ளலாம். ... ... ... (உ)

ஒளிவண்ணம்வளைசிந்தை உறக்கத்தோடிவையெல்லாம் *
எளிமையாலிட்டென்னை யீடழியப்போயினவால் *
குளிரருவிவேங்கடத்து என்கோவிந்தன்குணம்பாடி *
அளியத்தமேகங்காள், ஆவிகாத்திருப்பேனே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| அளியத்த மேகங்காள் | அருள்புரியத்தக்க மேகங்களே! | ஆல் | அந்தோ!; |
| ஒளி | தேஹத்தின் காந்தியும் | குளிர் அருவி | குளிர்ந்த அருவிகளையுடைய |
| வண்ணம் | நிறமும் | வேங்கடத்து | திருமலையி லெழுந்தருளியிருக்கிற |
| வளை | வளைகளும் | என் கோவிந்தன் | எனது கண்ணபிரானுடைய |
| சிந்தை | நெஞ்சும் | குணம் | திருக்கல்யாண குணங்களை |
| உறக்கத்தோடு இவை எல்லாம் | உறக்கமும் ஆகிய இவையெல்லாம் | பாடி | வாயாரப் பாடிக்கொண்டு (அந்தப்பாட்டே தாரகமாக) |
| எளிமையால் | என்னுடைய தைந்யமே காரணமாக | ஆவி | பிராணனை |
| என்னை இட்டு | என்னை உபேக்ஷித்து விட்டு | காத்திருப்பேனே | ரக்ஷித்திருக்க என்னால் முடியுமோ? |
| ஈடு அழிய | என் சீர் குலையும்படி | | |
| போயின | நீங்கிப்போய்விட்டன; | | |

— எம்பெருமானைப்பிரிந்துபட்ட துக்கத்தினால் சரீரசோபைமாறி நிறமழிந்து வளைகழன்று நெஞ்சுதளர்ந்து உறக்கமொழிந்து இப்படியெல்லாம் நான் சீர்குலைந்து தடுமாறியிருக்குமிருப்பை என்சொல்லவல்லேனென்கிறாள் முன்னடிகளால். ஒளிவண்ணம்=ஒளிபொருந்தியவர்ணம் என்றுமாம். எம்பெருமானோடு ஸம்ச்லேஷிக்கப்பெறுங்காலத்தில் மேனிபுகர்த்திருப்பதும் பிரிந்துபடுங்காலத்தில் "நன்மங்கையிழந்தது மாமைநிறமே" என்னும்படி வைவர்ணியப்பட்டிருப்பதும் மெய்யன்பர்களின் இலக்கணமாமென்க. மேனி மெலியவே வளைகளும் கழன்றொழியும்; நெஞ்சும் உருக்குலையும்

எளிமையால்=நான் பிராண நாதனால் உபேக்ஷிக்கப்பட்டுத் தனிமையாய்த் தளர்ந்துகிடக்கிறேனென்பது காரணமாக ஒளிவண்ணம் வளைசிந்தையுறக்கங்கள் என்னைவிட்டு நீங்கின என்றபடி: எளியாரை எல்லாரும் கைவிடுவது ஸஹஜமேயன்றோ. ஆகவே, எளிமையால் என்றது - என்னிடத்துள்ள தைந்யம் காரணமாக என்றபடியாயிற்று. அன்றிக்கே, ஒளிவண்ணம்முதலியவை என்னை உபேக்ஷித்து விட்டுநீங்கினதற்குக் காரணம் தங்களுடைய புன்மையேயாம்; ஆபத்தையடைந்தவர்களை விட்டுநீங்குமவர்கள் நீசர்களேயிறே-என்றதாகவும் கொள்ளலாம். இப்பக்ஷத்தில், எளிமையால் என்றது-தங்களுடைய நீசத்தன்மையினால் என்றபடியாம்.

விச்லேஷகாலங்களில் நாயகனுடைய திருக்கல்யாணகுணங்களைச் சிந்தனைபண்ணிக்கொண்டு ஆவிகாத்திருப்போமென்று பார்த்தாலும், ஒளிவண்ணம் வளைசிந்தையொழியும்படி நேர்ந்த இத்தசையில் குணசிந்தனம்பண்ணித் தரித்-

திருக்க என்னலாகுமோ வென்கிறாள். பின்னடிகளில்... திருக்கும் காலத்தில் மேகங்கள்வந்து முகங்காட்டினபடியாலே அந்த... தைக் கொண்டாடி "ஆளிபத்த மேகங்காள்!" என்கிறாள். ...ஆவிகாத்திருப்பேனே— பிராணநாதன் அவனைபின்பு பிரார்ப்... கடமை அவன் தலைப்பட்டதேயன்றி எனக்குப் பணியாமோ? ... (ரு)

> மின்னாகத்தெழுகின்ற மேகங்காள் • வேங்கடத்துத்
> தன்னாகத்திருமங்கை தங்கியசீர்மார்வற்கு...
> என்னாகத்திளங்கொங்கை விரும்பித்தாம்நாடோறும் •
> பொன்னாகம்புல்குதற்கு என்புரிவுடைமைசெப்புமினே. (௬)

| | | | |
|---|---|---|---|
| ஆகத்து மின் எழுகின்ற மேகங்காள் | சரீரத்திலே மின்னல் தோன்றப்பெற்ற மேகங்களே! | நாள்தோறும் | நித்யமும் |
| என் ஆகத்து | என்மார்விலுண்டான | என் புரிவுடைமை | எனக்கு ஆசையிருக்கிறபடியை |
| இள கொங்கை | இளமுலைகளை | வேங்கடத்து | திருமலையிலே |
| தாம் விரும்பி | அவ்வெம்பெருமான் விரும்பி | தன் ஆகம் | தனது திருமேனியில் |
| | | திருமங்கை தங்கிய சீர் மார்வற்கு | பிராட்டிஎழுந்தருளியிருக்கப்பெற்ற திருமார்பு படைத்தபெருமானுக்கு |
| பொன் ஆகம் புல்குதற்கு | அழகிய தம் மார்வோடே அணையவேணுமென்னும் விஷயத்திலே | செப்புமின் | சொல்லுங்கள். |

எம்பெருமானுடைய கரிய திருமேனியில் மின்னற்கொடி போன்ற பிராட்டி விளங்குப்படியை நினைப்பூட்டிக்கொண்டு மின்னியெழுகின்ற மேகங்களே! நீங்கள் திருவேங்கடமுடையான் பக்கலிலே சென்று ஒருவார்த்தை சொல்லவேணும்; அதாவது—என்மார்பிலுள்ள இளமுலைகளை அவ்வெம்பெருமான் விரும்பி அணைந்துகொண்டே இடைவிடாது கிடக்கவேணுமென்று நான் ஆசைப்பட்டிராநின்றேனென்பதை நீங்கள் போய்ச் சொல்லவேணுமென்கிறாள்.

ஆகம் என்று உடம்புக்கும் மார்வுக்கும் பெயர். முதலடியில் ஆகத்து என்றது—உடம்பிலே என்றபடி: மின்னலாகிய பரபாகசோபையை பெற்றிருக்கிற உடம்பையுடைய மேகங்களே! என்றவாறு. மேகங்காள்! என்றவிடத்து "கடுவே பெரியவுடையார் (ஜடாயுபக்ஷி) வந்து தோற்றினாற் போலேயிருந்தது! அவனைப் பிரிந்து நோவுபடுகிற ஸமயத்திலே நீங்கள் வந்து தோற்றினபடியும்," என்றருளிச் செய்வர் பெரியவாச்சான் பிள்ளை. இரண்டாமடியில், தன்னாகம்— தன்னிடத்திலே என்றபடி. "சீர்மார்வற்குச் செப்புமினே" என்று அந்வயம்.

மற்றையோருடைய முலைபோலல்ல என்னுடைய முலை; ... யிருக்கும்; இவை "என் விஷயத்தைக் காட்டு, என் விஷயத்தைக் காட்டு" என்று எப்போதும் பதறினபடியே யிருக்கும் என்பதுதோன்ற என்னாகத்திளங் கொங்கை என்கிறாள்களும், இளங்கொங்கை=ஒரு ... விருப்ப முள்ள இளம்பிள்ளைகளைத் தாய்தந்தையர் எவ்வளவு ... 

திருக்க என்னாலாகுமோ வென்கிறாள் பின்னடிகளில். நாயகனைப் பிரிந்துதளர்ந்திருக்குங் காலத்தில் மேகங்கள்வந்து முகங்காட்டினபடியாலே அந்த உபகாரத்தைக் கொண்டாடி "உபகார மேகங்காள்!" என்கிறாள். ஆவிகாத்திருப்பேனே= பிராணநாதன் அவனானபின்பு பிராணன்களைக் காக்கவேண்டிய கடமை அவன் தலைப்பட்டதேயன்றி எனக்குப் பணியாமோ? என்கை. (ரு)

மின்னாகத்தெழுகின்ற மேகங்காள் * வேங்கடத்துத்
தன்னாகத்திருமங்கை தங்கியசீர்மார்வற்கு *
என்னாகத்திளங்கொங்கை விரும்பித்தாம்நாடோறும் *
பொன்னாகம்புல்குதற்கு என்புரிவுடைமைசெப்புமினே. (சு)

| | | | |
|---|---|---|---|
| ஆகத்து மின் எழுகின்ற மேகங்காள் | சரீரத்திலே மின்னல் தோன்றப்பெற்ற மேகங்களே! | நாள்தோறும் | நித்யமும் |
| என் ஆகத்து | என்மார்விலுண்டான | என் புரிவுடைமை | எனக்கு ஆசையிருக்கிற படியை |
| இள கொங்கை | இளமுலைகளை | வேங்கடத்து | திருமலையிலே |
| தாம் விரும்பி | அவ்வெம்பெருமான் விரும்பி | தன் ஆகம் | தனது திருமேனியில் |
| பொன் ஆகம் புல்குதற்கு | அழகிய தம் மார்வோடே அணையவேணுமென்னும் விஷயத்திலே | திருமங்கை தங்கிய சீர் மார்வற்கு | பிராட்டிஎழுந்தருளியிருக்கப்பெற்ற திருமார்பு படைத்தபெருமானுக்கு |
| | | செப்புமின் | சொல்லுங்கள். |

எம்பெருமானுடைய கரிய திருமேனியில் மின்னற்கொடி போன்ற பிராட்டி விளங்குப்படியை நினைப்பூட்டிக்கொண்டு மின்னியெழுகின்ற மேகங்களே! நீங்கள் திருவேங்கடமுடையான் பக்கலிலே சென்று ஒருவார்த்தை சொல்லவேணும்; அதாவது—என்மார்பிலுள்ள இளமுலைகளை அவ்வெம்பெருமான் விரும்பி அணைந்துகொண்டே இடைவிடாது கிடக்கவேணுமென்று நான் ஆசைப்பட்டிராநின்றே னென்பதை நீங்கள் போய்ச் சொல்லவேணுமென்கிறாள்.

ஆகம் என்று உடம்புக்கும் மார்வுக்கும் பெயர். முதலடியில் ஆகத்து என்றது—உடம்பிலே என்றபடி: மின்னலாலே பரபாகசோபை பெற்றிருக்கிற உடம்பையுடைய மேகங்களே! என்றவாறு. மேகங்காள்! என்றவிடத்து "நடுவே பெரியவுடையார் (ஜடாயுபக்ஷி) வந்து தோற்றினாற் போலேயிருந்ததீ! அவனைப் பிரிந்து நோவுபடுகிற ஸமயத்திலே நீங்கள் வந்து தோற்றினபடியும்." என்றருளிச் செய்வர் பெரியவாச்சான் பிள்ளை. இரண்டாமடியில், தன்னாகம்— தன்னிடத்திலே என்றபடி. "சீர்மார்வற்குச் செப்புமினே" என்று அந்வயம்.

மற்றையோருடைய முலைபோலல்ல என்னுடைய முலை; அவை ஆறியிருக்கும்; இவை "என் விஷயத்தைக் காட்டு, என் விஷயத்தைக் காட்டு" என்று எப்போதும் பதறினபடியே யிருக்கும் என்பதுதோன்ற என்னாகத்திளங்கொங்கை என்கிறாள்காணும். இளங்கொங்கை=ஒரு வஸ்துவிலே விருப்பமுள்ள இளம்பிள்ளைகளைத் தாய்தந்தையர் எவ்வளவு ஸமாதானப்படுத்தினாலும்

ஸ்மாதாகம்கிடையாமல் விரும்பின வஸ்துவைப் பெற்றல்லது விடாத பிடிவாதங் கொள்வதுபோல என் முலைகளும் அவ்வெம்பெருமானது திருமார்வோடே அணைந்தேயொழிய வேணுமென்ற பிடிவாதமுடையன என்கிருள்.—"சொற்கேளாத ப்ரஜைகளைப் போலேயாய்த்து முலைகளின்படி" என்பது வியாக்யான ஸ்ரீஸூக்தி. கொங்கை என்றவிடத்து இரண்டாம் வேற்றுமை யுருபு தொக்கிக் கிடக்கிறது; என்னுகத்து இளங்கொங்கையை அவர் தாம் நாடோறும் விரும்பித் தமது பொன்னுகத்தாலே புல்குதற்கு என் புரிவுடைமை செப்புமின் என்பதாகக் கொள்க. பொன் ஆகம் — விரும்பத்தக்க திருமார்பு. புரிவுடைமை — அன்புடைமை, ஆசையுடைமை. ... ... .... (ச)

ரு) வான்கொண்டுகிளர்ந்தெழுந்த மாமுகில்காள் * வேங்கடத்துத்
தேன்கொண்டமலர்சிதறத் திரண்டேறிப்பொழிவீர்காள் *
ஊன்கொண்டவள்ளுகிரால் இரணியனையுடலிடந்தான் *
தான்கொண்டசரிவளைகள் தருமாகில்சாற்றுமினே. (ரு)

| | |
|---|---|
| வேங்கடத்து | திருமலையிலே |
| தேன் கொண்ட மலர்சிதற | தேன் நிறைந்துள்ள புஷ்பங்கள் சிதறும்படி |
| திரண்டு ஏறி பொழிவீர்காள் | திரள்திரளாக ஆகாயத்திலேறி மழையைப்பொழிகின்றவையாயும் |
| வான்கொண்டு கிளர்ந்து எழுந்த | ஆகாயத்தைக்கபளீகரித்துக்கொண்டு ஓங்கிக்கிளம்புகின்றவையாயுமுள்ள |
| மா முகில்காள்! | காளமேகங்களே! |
| ஊன் கொண்ட வள் உகிரால் | வலியுள்ளவையாய் கூர்மையுடையவையான நகங்களாலே |
| இரணியனை உடல் இடந்தான் தான் | ஹிரண்யாஸுரனுடைய உடலைப் பிளந்தெறிந்த பெருமான் |
| கொண்ட | என்னிடத்துக் கொள்ளைகொண்டு போன |
| சரிவளைகள் | கைவளைகளை |
| தரும் ஆகில் | திருப்பிக் கொடுப்பதாகவிருந்தால் |
| சாற்றுமின் | எனது அவஸ்தையை அவர்க்குத் தெரிவியுங்கள். |

முன்னடிகளிரண்டும் மேகவிளி. ஆகாசத்தை விளாக்குலைகொண்டு — எங்குப்பார்த்தாலும் நீங்களேயாய்ப் பரந்து கிடக்கின்ற மேகங்களே! தேன் நிறைந்த நல்ல புஷ்பங்கள் சிதறி விழும்படி அவற்றுக்குக் கெடுதியை விளைத்துக் கொண்டு நீங்கள் மழைபொழிவதனால் என்ன பயன்? பிறர்க்குத் தீங்கை விளைப்பதோ உங்களுக்குப் புருஷார்த்தம்; இடர்ப்பட்டாரை இன்பக்கடலில் ஆழ்த்த வேண்டாவோ நீங்கள்?—என்பது முன்னடிகளின் உட்கருத்து.

விஶ்லேஷ காலத்திலே எனக்கு உத்தீபகங்களாய்க்கொண்டு தோற்றுகின்ற மலர்களை நீங்கள் சிதறவடிப்பது எனக்குச் சந்தோஷந்தான்; ஆகிலும் அவ்வளவு செய்தமாத்திரத்தால் பயனில்லை; திருவேங்கடமுடையானோடே நான் ஸம்ஶ்லேஷம்பெற்று இம்மலர்களைப் போகோபகரணமாகக் கொண்டு களிக்கும்படியாகச் செய்துவைக்கவேணும் என்பதாகவுங் கருத்துக்கொள்வர்.

அநிஷ்டத்தைத் தவிர்ப்பதோடு இஷ்டத்தைக் கொடுப்பதுஞ் செய்யவேண்டிய தாதலால், இப்போது எனக்கு அநிஷ்டங்களான மலர்களைச் சிதறவடிப்பது மாத்திரம் போதாது; பகவத் ஸம்ஶ்லேஷமாகிற இஷ்டப்ராப்தியையும்பண்ணித் தரவேணு மென்கை.

தான்கொண்ட சரிவளைகள் தருமாகில் சாற்றுமின்=எம்பெருமான் ஆண்டாளிடமிருந்து சரிவளைகள் கொண்டானேவென்னில்; அவன் இவளைவிட்டுப் பிரிந்ததனால் இவள் மேனிமெலிந்து வளைகள் கழன்றுபோகப் பெற்றாளாதலால் இவ்வளை நீங்குதலுக்கு அவனே காரணமாகின்றமைபற்றித் தான்கொண்ட சரிவளைகள் எனப்பட்டதென்க. தருமாகில் என்று - வளையைத் தருகையாவதென்னென்னில்; மறுபடியும் ஸம்ஶ்லேஷித்து வளைகள் தங்கும்படிசெய்தல். ஆகவே, சரிவளைகள்தருமாகில் என்றது—அவ்வெம்பெருமான் என்னுடைவந்து புணரத் திருவுள்ளம்பற்றி யிருக்கிறானாகில் என்றபடி. சரி என்பதே கைவளைக்குப் பெயராயிருக்க, சரிவளை என்றது "கர்ணகுண்டலம்,-கரிகலபம்" என்பனபோலவாம். சாற்றுமின்=அவனுடைய ஆபிமுக்யத்தை அறிந்துகொண்டு என் நிலைமையை அவனுக்குச் சொல்லுங்கள் என்கை. இங்கே வியாக்யானஸ்ரீஸூக்தி:—"[சாற்றுமினே.] அவன் தரிலும் தருகிறான், தவிரிலும் தவிருகிறான்; நீங்கள் அறிவித்துப் போருங்கோள்."

அன்றியே; அவனுடைய திருவுள்ளத்தை நீங்கள் அறிந்துகொண்டு அதனை என்னிடம்வந்து சொல்லுங்கள் என்றுமாம். (ரு)

சலங்கொண்டுகிளர்ந்தெழுந்த தண்முகில்காள் * மாவலியை
நிலங்கொண்டான்வேங்கடத்தே நிரந்தேறிப்பொழிவீர்காள் *
உலங்குண்டவிளங்கனிபோல் உள்மெலியப்புகுந்து* என்னை
நலங்கொண்டநாரணற்கு என்னுடலைநோய்செப்புமினே. (சு)

| | |
|---|---|
| சலம் கொண்டு | ஸமுத்ர ஜலத்தை முகர்ந்து கொண்டு |
| கிளர்ந்து எழுந்த | மேற்கிளம்பி விளங்குகின்ற |
| தண் முகில்காள் | குளிர்ந்த மேகங்களே!, |
| மா வலியை | மஹாபலியிடமிருந்து |
| நிலம் கொண்டான் வேங்கடத்து | பூமியை ஸ்வாதீநப்படுத்திக்கொண்டவனான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற திருமலையிலே |
| நிரந்து | பரவி |
| ஏறி | உயரவிருந்து |
| பொழிவீர்காள்! | பொழிகின்ற மேகங்களே!, |
| உலங்கு உண்ட | பெருங்கொசுக்கள் புஜித்த |
| விளங்கனி போல் உள் மெலிய | விளாம்பழம்போல நான் உள்மெலியும்படி. |
| புகுந்து | என்னுள்ளே பிரவேசித்து |
| என்னை | என்னுடைய |
| நலம் கொண்ட | நிறைவினை அபஹரித்த |
| நாரணற்கு | நாராயணனுக்கு |
| என் உடலை நோய் | எனதுகஷ்டவ்யாதியை |
| செப்புமின் | தெரிவியுங்கள். |

| | |
|---|---|
| விண்ணப்பம் | விஜ்ஞாபநம் (யாதெனில்) |
| கொங்கைமேல் | எனது முலைகளின்மேல் (பூசப்பட்டுள்ள) |
| குங்குமத்தின் குழம்பு | குங்குமக் குழம்பானது |
| அழிய | நன்ருக அவிந்துபோம்படி |
| ஒருநாள் | ஒரு நாளாகிலும் |
| புகுந்துதங்குமேல் | அவன் வந்துஸம்ச்லேஷிப்பானுகில் (அப்போதுதான்) |
| என் ஆவி தங்கும் என்று | என் பிராணன் நிலைநிற்கும்—என்பதாம்; |
| உரையீர் | (இவ்விண்ணப்பத்தை அப்பெருமானிடத்துச்) சொல்லுங்கள். |

தன்னை ப்ரமப்படுத்திப் பிறர் காரியமே கருத்தாகச் செய்து போருகிற எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற தேசத்தில் வாழ்கிறவுங்களுக்கு அவனுடைய குணம் படிய வேண்டாவா? என்கை ஸம்போதனத்தின் உட்கருத்து. நீங்கள் திருவேங்கடமுடையானது திருவடிவாரத்திலே அடியேனுடைய ஒரு விண்ணபத்தைச் சொல்லவேணும்; விண்ணப்பம் செய்யும் ப்ரகாரமென்னென்னில்; "கொங்கைமேற் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேல் என்னுவிதங்கும்" என்று சொல்லுங்கோள். அவர் என்னோடு கலவி செய்ய வருவாரென்று நம்பி முலைத்தடங்களிலே குங்குமக்குழம்பு பூசி அலங்கரித்து வைத்திருக்கிறேன்; அது ப்ரயோஜநமுடைத்தாம்படி பண்ணுவாராகில் தரிக்கலாம் என்று சொல்லுங்கோள் என்கிருள்; அணையவமுக்கிக் கட்டுகையாகிற (ஈ-டு) காடாப்லேஷத்தில் உள்ள விருப்பத்தை உணர்த்துகிறபடி. குங்குமத்தின்குழம்பு=குங்குமப்பூவை மர்த்தித்துக் குழம்பாக்கிப் பூசின பூச்சு.

இவளுடைய பாரிப்புக்கெல்லாம் ஒருநாள் அணைத்தால் போருமோ? ஊழியெல்லா மணைத்துக்கிடந்தாலும் த்ருப்தி பெறமாட்டாத அபிநிவேசமன்றோ இவளது; அப்படிப்பட்ட அபிநிவேசம் ஒருநாள் வந்து தங்கினவளவாலே த்ருப்திபெறுமோ வென்னில்; என்ஆவிதங்கும் என்ற சொல்நலத்தை நோக்குமின்; ஒருநாள் அணைந்தவளவால் (ஹார்த) போகத்துக்குப் போராது, ப்ராணரக்ஷணத்துக்குப்போரும் என்கிருளாய்த்து.

"[ஒருநாள் தங்குமேல் என்னுவி தங்கும்.] குணஜ்ஞானத்தாலே தரியாளோ என்றிருக்கவொண்ணுது; அணையுமாகில் தரிக்கலாம்" என்பது வியாக்யான ஸ்ரீஸூக்தி.

அடிவீழ்ச்சி—அடியாள்; பெயர்ச்சொல். ... ... (எ)

கார்காலத்தெழுகின்ற கார்முகில்காள் * வேங்கடத்துப்
போர்காலத்தெழுந்தருளிப் பொருதவனர்பேர்சொல்லி *
நீர்காலத்தெருக்கில் அம்பழவிலைபோல்வீழ்வேனை *
வார்காலத்தொருநாள் தம்வாசகம்தந்தருளாரே. (அ)

| | |
|---|---|
| கார் காலத்து | வர்ஷாகாலத்திலே |
| வேங்கடத்து எழுகின்ற | திருமலையிலே வந்து தோற்றுகின்ற |
| கார்முகில்காள் | காளமேகங்களே!, |
| போர்காலத்து | யுத்தஸமயத்திலே (போர்க்களத்தில்) |
| எழுந்தருளி | எழுந்தருளி |
| பொருதவனார் | போர்செய்து வெற்றி பெற்ற இராமபிரானுடைய |
| பேர் | திருநாமங்களை |
| சொல்லி | ஸங்கீர்த்தநம் பண்ணி |
| நீர் காலத்து எருக்கில் அம்பழஇலைபோல் வீழ்வேனை | மழைகாலத்தில் எருக்கம்பழுப்புக்கள் அற்று விழுவதுபோல் ஒசிந்து விழுகின்ற எனக்கு |
| வார் காலத்து ஒரு நாள் | நெடுகச் செல்லுகிற காலத்திலே ஒரு நாளாகிலும் |
| தம் வாசகம் தந்தருளாரே | தம்முடைய ஒரு வார்த்தையை அருளாதொழிவரோ? |

வர்ஷாகாலத்திலே தவறாமல் வந்துசேருகிறேன் என்று சொல்லிப்போன பெருமான் வாராதொழிந்தாலும், அவனுடைய வடிவுக்குப் போலியான நீங்களாவது வந்துதோன்றி நின்றீர்களே! என்ற உகவைதோன்றக் 'கார்காலத்தெழுகின்ற கார்முகில்காள்!' என விளிக்கிறாள். அவ்வெம்பெருமான் வாராதொழிந்தாலும் நாம் திருநாம ஸங்கீர்த்தநம் பண்ணிக்கொண்டாவது ஒருவாறு தரித்திருப்போமென்று பார்த்து, அடியார்கட்காகக் காரியம் செய்வதையே தொழிலாகக்கொண்டு விரோதிநிரஸநத்தில் உத்ஸாஹங்கொண்டு விளங்குமவனான சக்ரவர்த்தி திருமகனுடைய திருநாமங்களை ஸங்கீர்த்தநம் பண்ண ஆரம்பித்தேன்; அதுவே காரணமாக உடனே சைதில்யமடைந்தேன்; மழைகாலத்தில் எருக்கம்பழுப்புகள் அற்றற்று விழுவதுபோல் ஒசிந்து தளர்ந்து தளர்ந்து விழும்படியான நிலைமையில் நின்றேன்; இவ்வளவிலும் அப்பெருமான் எனக்கு அருள்செய்ய நினைத்திலன்; என் வாழ்நாளெல்லாம் இப்படி துக்கமயமாகவேயோ கழியப்போகிறது? ஒருநாளாகிலும் ஒருவாய்ச்சொல் சொல்லியனுப்பவும் மாட்டாரோ? என்கிறாள்.

... ... ... ... (௪)

மதயானைபோலெழுந்த மாமுகில்காள் * வேங்கடத்தைப்
பதியாகவாழ்வீர்காள் பாம்பணையான்வார்த்தையென்னே *
கதியென்றுந்தானாவான் கருதாது * ஓர்பெண்கொடியை
வதைசெய்தானென்னும்சொல் வையகத்தார்மதியாரே. (௫)

| | |
|---|---|
| வேங்கடத்தை | திருமலையை |
| பதி ஆக | இருப்பிடமாகக் கொண்டு |
| வாழ்வீர்காள் | வாழ்கின்றவையாயும் |
| மதம் யானை போல் எழுந்த | மத்தகஜம்போலே செருக்கிக் கிளர்ந்தவையாயுமுள்ள |
| மா முகில்காள் | காளமேகங்களே!, |
| பாம்பு அணையான் | சேஷசாயியான எம்பெருமானுடைய |
| வார்த்தை | வார்த்தையானது |
| என்னே | இப்படி பொய்யாய் விட்டதே! |
| தான் | "அவ்வெம்பெருமான்றான் |
| என்றும் | எப்போதைக்கும் |
| கதி ஆவான் | (ஆச்ரிதர்கட்கு) ரக்ஷகனாயிருந்துவைத்து |
| கருதாது | அத்தன்மையை நினையாமல் |
| ஓர் பெண் கொடியை | ஒருபெண்பிள்ளையை |
| வதை செய்தான் | கொலைபண்ணினான்" |
| என்னும் சொல் | என்கிற சொல்லை |
| வையகத்தார் மதியாரே | இப்பூமியிலுள்ளவர்கள் மதிக்கமாட்டார்களோ |

கார் காலத்து — வர்ஷாகாலத்திலே
வேங்கடத்து எழுகின்ற — திருமலையிலே வந்து தோற்றுகின்ற
கார்முகில்காள் — காளமேகங்களே!,
போர்காலத்து — யுத்தஸமயத்திலே (போர்க்களத்தில்)
எழுந்தருளி — எழுந்தருளி
பொருதவனார் — போர்செய்து வெற்றி பெற்ற இராமபிரானுடைய
பேர் — திருநாமங்களை
சொல்லி — ஸங்கீர்த்தனம் பண்ணி
நீர் காலத்து எருக்கில் அம் பழஇலைபோல் வீழ்வேனை — மழைகாலத்தில் எருக்கம்பழுப்புக்கள் அற்று விழுவதுபோல்ஒசிந்து விழுகின்ற எனக்கு
வார் காலத்து ஒரு நாள் — நெடுகிச் செல்லுகிற காலத்திலே ஒரு நாளாகிலும்
தம் வாசகம் தந்தருளாரே — தம்முடைய ஒரு வார்த்தையை அருளாதொழிவரோ?

வர்ஷாகாலத்திலே தவறாமல் வந்துசேருகிறேன் என்று சொல்லிப்போன பெருமான் வாராதொழிந்தாலும், அவனுடைய வடிவுக்குப் போலியான நீங்களாவது வந்துதோன்றி நின்றீர்களே! என்று உகவைதோன்றக் கார்காலத்தெழுகின்ற கார்முகில்காள்! என விளிக்கிறாள். அவ்வெம்பெருமான் வாராதொழிந்தாலும் நாம் திருநாம ஸங்கீர்த்தனம் பண்ணிக்கொண்டாவது ஒருவாறு தரித்திருப்போமென்று பார்த்து, அடியார்கட்காகக் காரியம் செய்வதையே தொழிலாகக்கொண்டு விரோதிநிரஸநத்தில் உத்ஸாஹங்கொண்டு திருமலைனை சக்ரவர்த்தி திருமகனுடைய திருநாமங்களை ஸங்கீர்த்தநம் பண்ண ஆரம்பித்தேன்; அதுவே காரணமாக உடனே மைதில்யமடைந்தேன்; மழைகாலத்தில் எருக்கம் பழுப்புகள் அற்று விழுவதுபோல் ஒசிந்து தளர்ந்து தளர்ந்து விழும்படியான நிலைமையில் நின்றேன்; இவ்வளவிலும் அப்பெருமான் எனக்கு அருள்செய்ய நினைத்திலன்; என் வாழ்நாளெல்லாம் இப்படி துக்கமயமாகவேயோ கழியப் போகிறது? ஒருநாளாகிலும் ஒருவாய்ச்சொல் சொல்லியனுப்பவும் மாட்டாரோ? என்கிறாள். (அ)

... .... ... ....

மதயானைபோலெழுந்த மாமுகில்காள் * வேங்கடத்தைப்
பதியாகவாழ்வீர்காள் பாம்பணையான் வார்த்தையென்னே *
கதியென்றுந்தானாவான் கருதாது * ஓர்பெண்கொடியை
வதைசெய்தானென்னும்சொல் வையகத்தார்மதியாரே, (கூ)

வேங்கடத்தை — திருமலையை
பதி ஆக — இருப்பிடமாகக் கொண்டு
வாழ்வீர்காள் — வாழ்கின்றவையாயும்
மதம் யானை போல்எழுந்த — மத்தகஜம்போலே செருக்கிக்கிளர்ந்தவையாயுமுள்ள,
மா முகில்காள் — காளமேகங்களே!,
பாம்பு அணையான் — சேஷசாயியான எம்பெருமானுடைய
வார்த்தை — வார்த்தை[illegible]
என்னே — இப்படிபொய்யாய் விட்டதே!
தான் — "அவ்வெம்பெருமான்
என்றும் — எப்போதைக்கும்
கதி ஆவான் — (ஆச்ரிதர்கட்கு) ரக்ஷகனாயிருந்துவைத்து
கருதாது — அத்தன்மையை நினையாமல்
ஓர் பெண் கொடியை — ஒருபெண்பிள்ளையை
வதை செய்தான் — கொலைபண்ணினான்"
என்னும்சொல் — என்கிற சொல்லை
வையகத்தார் மதியாரே — இப்பூமியிலுள்ளவர்கள் மதிக்கமாட்டார்களே

போகங்களைக் கொண்டாடி இருகால் ஸம்போதிக்கிறாள்; திருவேங்கடமுடையானை நீங்கள் இடைவிடாது ஸேவித்துக்கொண்டு அத்தாலே மத்தகஜம் போலச் செருக்கி யிருக்கிறீர்களன்றோ என்பது முதல் விளியின்கருத்து.

குக்ராமமே குடியிருப்பானவர்கள் வந்தேறிகளாய்த் திருநாள் ஸேவித்து விட்டுப் போவதுபோலன்றியே திவ்யதேசத்திலேயே நித்யவாஸம் பண்ணப் பெற்றீர்களே! என்ன பாக்கியம்!!—என்ற கொண்டாட்டம் இரண்டாம் விளியின்கருத்து.

பாம்பணையான் வார்த்தை என்னே!=திருவநந்தாழ்வானிடத்து ஸகலவித கைங்கரியங்களையும் கொள்வதுபோல என்னிடத்தும் கொள்வன் என்றிருந்தேன்; "நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்" என்றபடி போகஶயநத்தை விட்டுத் திருமதுரையிலே வந்துபிறந்த கண்ணபிரான் தேர்த்தட்டில் நின்று சொன்ன வார்த்தையை [சரமஶ்லோகத்தை] மெய்யென்று நம்பியிருந்தேன்; பாம்போடே அணைந்து பாம்பின் தன்மையே தனக்குமுண்டாகப் பெற்றான்; அதற்கு நாக்கு இரண்டாயிருப்பதுபோல இவனும் இரண்டுநாக்குப் பெற்றான்,—அதாவது பொய்யனாய்விட்டான்—என்ற கருத்துக்காண்க.

பலபேர்களுக்கு மெய்யனாகப் பரிமாறின அவன் உன்னளவிலே பொய்யனான மாத்திரத்தால் அவனுக்கு யாதொரு அபகீர்த்தியும் விளையமாட்டாதென்று மேகங்கள் சொன்னதாகக்கொண்டு மறுமொழி கூறுகின்றாள் பின்னடிகளில். "ரக்ஷிதா ஜீவலோகஸ்ய ஸ்வஜநஸ்யச ரக்ஷிதா" என்று ஸாமாந்யரக்ஷகனன்றிக்கே ஸ்வஜநங்களுக்கு விசேஷித்து ரக்ஷகனாகப் புகழ்பெற்றிருக்குமவன் ஒரு பெண்பிள்ளையைக் கொலைசெய்தான் என்றசொல் உலகில் பரவுமாகில், பின்னை அவனைத் துப்புவாருண்டோ? என்கிறாள்.

கதி = மதி. கருதாது = தன்னுடைய ரக்ஷகத்வத்தை மறந்து என்றபடி; அன்றியே; 'ஒரு பெண்கொடியை வதைசெய்வதால் நமக்கு ஸ்வரூபஹாநி விளையப்போகிறதே!' என்று கருதாமல் என்றதாகவுமாம். பெண்கொடியை வதைசெய்தானோ வென்னில்; ஓர்கொள்கொம்பிலே சேர்க்கவேண்டுங் கொடியைத் தரையிலே இட்டுவைப்பது அதனைக் கொலைசெய்வதொக்குமிறே. வதை—வத: என்ற வடசொல் விகாரம். "பெண்ணீர்மை யீடழிக்குமிது தமக்கோர் பெருமையே" என்று முதற்பாட்டில் மெழுகினாற்போற் சொன்னதை இப்பாட்டில் விளங்கச்சொன்னாளென்க. .... ... .... (௯)

நாகத்தினணையானை நன்னுதலாள்நயந்துரைசெய்
மேகத்தை * வேங்கடக்கோன் விடுதூதில்விண்ணப்பம் *
போகத்தில்வழுவாத புதுவையர்கோன்கோதைதமிழ் *
ஆகத்துவைத்துரைப்பா ரவரடியாராகுவரே. (௧௦)

| | |
|---|---|
| நல் நுதலீர் | விலக்ஷணமான முகத்தை யுடையளாய் |
| போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதை | பகவதநுபவத்தில் குறையாதவரான பெரியாழ்வாருடைய மகளான ஆண்டாள் |
| நாகத்தின் அணையான் வேங்கடக்கோனை | திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடையனை திருவேங்கடமுடையானை |
| நயந்து | ஆசைப்பட்டு |
| உரை செய் | அருளிச்செய்ததாய், |
| மேகத்தைவிடு தூதில் விண்ணப்பம் | மேகத்தைத் தூது விடுவதாக அமைந்தவிண்ணப்பமாகிய |
| தமிழ் | இத்தமிழ்ப்பாசுரங்களை. |
| ஆகத்து வைத்து | ஹ்ருதயத்திலே வைத்துக் கொண்டு |
| உரைப்பாரவர் | ஓதவல்லவர்கள் |
| அடியார் ஆகுவர் | எம்பெருமானுக்குநித்ய கைங்கரியம்பண்ணப் பெறுவாகள். |

இத்திருமொழி கற்றார்க்குப் பலன்சொல்லித் தலைக்கட்டுகிறாள் இப்பாட்டில். வேண்டினபடியெல்லாம் பகவதநுபவத்தைப் பெற்று மகிழ்ந்தவரான பெரியாழ்வார்க்குத் திருமகளாகப் பிறக்கப்பெற்றதுவே ஹேதுவாகத் தான் எம்பெருமானை விரும்பப்பெற்றாள் என்னுமிடம் தோற்றப் போகத்தில் வழுவாத புதுவையர்கோன்கோதை என்கிறாள். நன்னுதலாள் = முகத்தைப் பார்க்கும் போதே 'இவள் பகவதநுபவத்தில் விலக்ஷணை' என்னத்தக்க வீறுடையவள் என்றபடி. "நயந்து உரைசெய் விண்ணப்பம்" என்று அந்வயம். "மேகத்தை வேங்கடக்கோன் இல் தூதுவிடு விண்ணப்பம்" என்று அந்வயிக்கலாமென்பர் அழகிய மணவாளச்சீயர். இல் - இடம்.

ஆகத்துவைத்து உரைக்கையாவது—'ஒருத்தி பகவத்விஷயத்திலேஆரை வைத்து என்னபாடுபட்டாள்!' என்று உருக்கத்தோடே அநுஸந்திக்கையாம். அடியாராகுவரே = ஆண்டாள் மேகத்தைத் தூதுவிட்டு வருந்தினதுபோல அவர்கள் வருந்தவேண்டா; இவள் தூதுவிட்டதுவே ஹேதுவாக இவள்பெற்ற பேற்றை அவர்களும் எளிதிற்பெறுவர்கள் என்கை. போகம்=ஸோம என்ற வடசொல்விகாரம். பெரியாழ்வார், தமது திருமொழியில் தாம் விரும்பின படியெல்லாம் குறையற அநுபவிக்கப் பெற்றாராகையாலே "போகத்தில் வழுவாத புதுவையர்கோன்" எனப்பட்டார். (கo)

அடிவரவு:—விண் மா ஒளி மின் வான் சலம் சங்கம் கார் மத நாகச் சித்துரம். ... ... .... .... .... ....

எட்டாந் திருமொழி உரை முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ
ஆண்டாள் திருவடிகளே சரணம்

# ஒன்பதாந்திருமொழி—சிந்துரச்செம்பொடி.

உரையவதாரிகை:— கண்ணை [illegible] வந்து தோன்றின கார்முகில்களை நோக்கி "நீங்கள் எம்பெருமானிடத்துக்குச் [illegible] அவனுக்கு உணர்த்தி என்னையுமவனையுங் கூட்டவேணும்" என்று பலவாறாகப் பிரார்த்தித்தாள் கீழ்த்திருமொழியில்; இவள்வேண்டினபடி காரியஞ்செய்யவல்ல ஆற்றல் அம்மேகங்களுக்கு இல்லையே; அவை தாங்கள்வந்தகாரியத்தைச் செய்தன; அதாவது-நன்றாக மழைபொழிந்தன; உடனே வர்ஷாகாலத்தில் புஷ்பிக்கக் கூடிய புஷ்பங்களெல்லாம் புஷ்பிக்கத்தொடங்கி, சிலமலர்கள் முழுதும் மலர்வதும், சில பாதிபாகம் மலர்வதும், சில மலர உபக்ரமிப்பதுமாயின; மழைகாலத்தில் களித்துத்திரியுமவையான சிலபிராணிகளும் ஸந்தோஷத்தோடு வந்துலாவப்புக்கன. ஆக இப்படிப்பட்ட பதார்த்தங்களெல்லாம் இவளுடைய இந்தவிரஹதசையிலே வந்துதோற்றவே இவளுடைய ஆற்றாமை மீதூர்ந்து உயிர்கொண்டு தப்பிப்பிழைக்க முடியாத அவஸ்தையாயிற்று; அதனால் மிகவும் துவண்டு பேசுகிறபாசுரமாயிருக்கிறது இத்திருமொழியும் மேல்திருமொழியும்.

சிந்துரச்செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும் *
இந்திரகோபங்களே யெழுந்தும்பரந்திட்டனவால் *
மந்தரம்நாட்டியன்று மதுரக்கொழுஞ்சாறுகொண்ட *
சுந்தரத்தோளுடையான் சுழலையில்நின்றுய்துங்கொலோ.

| | |
|---|---|
| திருமாலிருஞ் சோலை எங்கும் | திருமாலிருஞ்சோலையில் பார்த்த பார்த்த விடமெங்கும் |
| இந்திர கோபங்கள் | பட்டுப்பூச்சிகளானவை |
| செம் | சிவந்த |
| சிந்தூரம் பொடி போல் | ஸிந்தூரப்பொடிப்போல |
| எழுந்து | மேலெழுந்து |
| பரந்திட்டன | பரவிக்கிடக்கின்றன ; |
| ஆல் | அந்தோ !; |
| அன்று | (கடலைக் கடைந்து அமுதமளிக்கவேணுமென்று தேவர்கள் சரணம் புகுந்துவேண்டின) அக்காலத்திலே |
| மந்தரம் | மந்தரமலையை |
| நாட்டி | (பாற்கடலில் மத்தாக) நாட்டி |
| | (கடல் கடைந்து) |
| கொழு மதுரம் | மிகவும் மதுரமான |
| சாறு | அம்ருதரஸத்தை |
| கொண்ட | எடுத்துக் கொண்ட |
| சுந்தரம் தோள் உடையான் | ஸ்ரீ ஸுந்தர பாஹு நாதனுடைய |
| சுழலையில் நின்று | சூழ்வலையில் நின்றும் |
| உய்தும் கொல் | பிழைப்போமோ ? |



ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# ஒன்பதாந்திருமொழி - சிந்துரச்செம்பொடி.

உரையவதாரிகை:— கண்ணெதிரே வந்துதோன்றின கார்முகில்களை நோக்கி "நீங்கள் எம்பெருமானிடத்துச் சென்று எனதுநிலைமையை அவனுக்கு உணர்த்தி என்னையுமவனையுங் கூட்டவேணும்" என்று பலவாறாகப் பிரார்த்தித்தாள் கீழ்த்திருமொழியில்; இவள்வேண்டினபடி காரியஞ்செய்யவல்ல ஆற்றல் அம்மேகங்களுக்கு இல்லையே; அவை தாங்கள்வந்தகாரியத்தைச் செய்தன; அதாவது-நன்றாக மழைபொழிந்தன; உடனே வர்ஷாகாலத்தில் புஷ்பிக்கக்கூடிய புஷ்பங்களெல்லாம் புஷ்பிக்கத்தொடங்கி, சில மலர்கள் நன்றாகமலர்வதும் சில பாதிபாகம் மலர்வதும், சில மலர உபக்ரமிப்பதுமான நிலைமையாய்த்து. மழைகாலத்தில் களித்துத்திரியுமவையான சிலபிராணிகளும் ஸம்ப்ரமத்தோடு வந்துலாவப்புக்கன. ஆக இப்படிப்பட்ட பதார்த்தங்களெல்லாம் இவளுடைய இந்தவிரஹதசையிலே வந்துதோற்றவே இவளுடைய ஆற்றாமை மீதூர்ந்து உயிர்கொண்டு தப்பிப்பிழைக்க முடியாத அவஸ்தையாயிற்று; அதனால் மிகவும் நொந்து பேசுகிறபாசுரமாயிருக்கிறது இத்திருமொழியும் மேல்திருமொழியும்.

சிந்துரச்செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும் *
இந்திரகோபங்களே யெழுந்தும்பரந்திட்டனவால் *
மந்தரம்நாட்டியன்று மதுரக்கொழுஞ்சாறுகொண்ட *
சுந்தரத்தோளுடையான் சுழலையில்நின்றுய்துங்கொலோ.

| | |
|---|---|
| திரு மாலிருஞ் சோலை எங்கும் | திருமாலிருஞ்சோலையில் பார்த்த பார்த்த விடமெங்கும் |
| இந்திர கோபங்கள் | பட்டுப்பூச்சிகளானவை |
| செம் | சிவந்த |
| சிந்துரம் பொடி போல் | ஸிந்தூரப்பொடிப்போல |
| எழுந்து | மேலெழுந்து |
| பரந்திட்டன | பரவிக்கிடக்கின்றன ; |
| ஆல் | அந்தோ !; |
| அன்று | (கடலைக் கடைந்து அமுதமளிக்கவேணுமென்று தேவர்கள் சரணம் புகுந்துவேண்டின) அக்காலத்திலே |

| | |
|---|---|
| மந்தரம் | மந்தரமலையை |
| நாட்டி | (பாற்கடலில் மத்தாக) நாட்டி |
| | (கடல் கடைந்து) |
| கொழு மதுரம் | மிகவும் மதுரமான |
| சாறு | அம்ருதரஸத்தை |
| கொண்ட | எடுத்துக் கொண்ட |
| சுந்தரம் தோள் உடையான் | ஸ்ரீ ஸுந்தர பாஹுநாதனுடைய |
| சுழலையில் நின்று | சூழ்வலையில் நின்றும் |
| உய்தும் கொல் | பிழைப்போமோ ? |

மழைகாலத்திலே பட்டுப்பூச்சிகள் விசேஷமாகப் பறக்கும்; அவை காதலனுடைய அதரத்தின் பழுப்புக்கு ஸ்மாரகங்களாயிருக்குமாதலால் தலைவிக்கு உத்தீபகமாயிருக்கும். ஐயோ! திருமாலிருஞ்சோலைப் புறமெங்கும் பட்டுப்பூச்சிமயமாய்விட்டதே!; விச்லேஷகாலத்திலே இவை வந்துதோற்றினால் இனி உயிர் தரிக்க வழியுண்டோவென்று வருந்துகின்றாள். "இந்திரகோபங்கள் எம்பெருமான் கனிவாயொப்பான், சிந்தும்புறவில் தென் திருமாலிருஞ்சோலையே" என்ற பெரியாழ்வார் திருமொழி இங்கே நினைக்கத்தக்கது.

எம்பெருமானுடைய வடிவுக்குப் போலியான திருமலையைக் கண்ணாலே ஸேவித்துக்கொண்டிருந்தாலும் ஒருவாறு தரித்திருப்போமென்று பார்த்தால் அதற்கும் இசைவில்லாதபடி பாழும் பட்டுப்பூச்சிகள் அம்மலையைச் சூழ்ந்துகொண்டு மறைக்கின்றனவே! என்று கருத்தாகவுங் கொள்ளலாம்.

மந்தரம்நாட்டி மதுரக்கொழுஞ்சாறு கொண்டவாறு கீழ்விவரிக்கப்பட்டுள்ளது. அந்தச்சரித்திரத்தை ஆண்டாள் இங்கெடுத்து அநுஸந்தித்ததற்குக் கருத்து யாதெனில்; ஒருவரிடத்தில் ஒன்றுகொள்ள நினைத்தால் பின்னை அவர்கட்கு ஒன்றும் மிகாதபடி ஸாரமானவற்றைக் கொள்ளைகொள்பவனன்றோ அவன்!; மந்தரமலையைக்கடலின் நடுநெஞ்சிலே நட்டு நெருக்கிக் கடையுமவனன்றோ அவன்!; ஒருவரால் கலக்கவொண்ணாத பெரிய தத்வங்களையுங் கலக்கி ஸாரம்ஸத்தைக் கொள்ளைகொள்ளவல்லவனன்றோ அவன்!; அப்படிப்பட்டவன் அபலையானவென்னை அழியச்செய்கிறானென்றால் இஃது என்ன அற்புதம்? என்றவாறு.

மதுரச்சாறு என்று அம்ருதரஸத்தைச் சொல்லிற்றாய், மதுரக்கொழுஞ்சாறு என்று அதிற்காட்டிலும் போக்யதைமிஞ்சின பெரியபிராட்டியாரைச் சொல்லிற்றாகலாம். தேவர்கட்கு அமுதமெடுத்துக்கொடுக்கிற வ்யாஜத்தினால் லோகோத்தரமான அமுதமென்னலாம்படியான பிராட்டியை ஸம்பாதித்துக் கொண்டானிறே; "விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே!" என்ற திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தியை நோக்குக. கூரத்தாழ்வான் அருளிய ஸுந்தரபாஹுஸ்தவத்தில் "உதயிமஹிராத்ரி" [உததிக மந்தராத்ரி] என்கிற நான்காவதுச்லோகத்தின் முற்பாதியில் இவ்விசேஷார்த்தம் நன்கு விளங்கக் காண்க.

சுழலை=சூழ்ச்சி; அதாவது-வஞ்சகர்செய்யும் தந்திரம். இங்குத் திருமாலிருஞ்சோலையழகர் செய்த தந்திரமாவது—தாம் நேராக எழுந்தருளாமல் தமதுவடிவுக்கு ஸ்மாரகங்களான மேகங்களை வரக்காட்டுதல், இந்திரகோபங்களைப் பரவச்செய்தல்முதலிய காரியங்களினால் ஆண்டாளுக்கு உத்தீபநஞ்செய்தல். சுழலையில்நின்றுய்துங்கொலோ? என்றது — இந்த ஆபத்தைத் தப்பிப் பிழைக்க நம்மாலாகாது என்றபடி. ஒரு பெரியகைகாரன் நம்மை அகப்படுத்தக் கைக்கவைத்த வலையைத் தப்பி நாம் பிழைக்கமுடியுமோ? இனிமுடிந்து போமித்தனையேயுள்ளது என்கிறாள்.

மழைகாலத்திலே பட்டுப்பூச்சிகள் விசேஷமாகப் பறக்கும்; அவை காதலனுடைய அதரத்தின்பழுப்புக்கு ஸ்மாரகங்களாயிருக்குமாதலால் தலைவிக்கு உத்திபகமாயிருக்கும். ஐயோ! திருமாலிருஞ்சோலைப் புறமெங்கும் பட்டுப்பூச்சிமயமாய்விட்டதே! ; விச்லேஷகாலத்திலே இவை வந்துதோற்றினால் இனி உயிர் தரிக்க வழியுண்டோவென்று வருந்துகின்றாள். "இந்திரகோபங்கள் எம்பெருமான் கனிவாயொப்பான், சிந்தும்புறவில் தென்திருமாலிருஞ்சோலையே" என்ற பெரியாழ்வார்திருமொழி இங்கே நினைக்கத்தக்கது.

எம்பெருமானுடைய வடிவுக்குப் போலியான திருமலையைக் கண்ணாலே ஸேவித்துக்கொண்டிருந்தாகிலும் ஒருவாறு தரித்திருப்போமென்று பார்த்தால் அதற்கும் ஆசையில்லாதபடி பாழும் பட்டுப்பூச்சிகள் அம்மலையைச் சூழ்ந்து கொண்டு மறைக்கின்றனவே! என்று கருத்தாகவுங் கொள்ளலாம்.

மந்தரம்நாட்டி மதுரக்கொழுஞ்சாறு கொண்டவரலாறு கீழ்விவரிக்கப்பட்டுள்ளது. அந்தச்சரித்திரத்தை ஆண்டாள் இங்கெடுத்து அநுஸந்தித்ததற்குக் கருத்து யாதெனில்; ஒருவரிடத்தில் ஒன்றுகொள்ள நினைத்தால் பின்னை அவர்கட்கு ஒன்றும் மிகாதபடி ஸாரமானவற்றைக் கொள்ளைகொள்பவனன்றோ அவன்!; மந்தரமலையைக்கடலின் நடுநெஞ்சிலே நட்டு நெருக்கிக் கடையுமவனன்றோ அவன்! ; ஒருவரால் கலக்கவொண்ணாத பெரிய தத்வங்களையுங் கலக்கி ஸாராம்சத்தைக் கொள்ளைகொள்ள வல்லவனன்றோ அவன்!; அப்படிப்பட்டவன் அபலையானவென்னை அழியச்செய்கிறானென்றால் இஃது என்ன அற்புதம்? என்றவாறு.

மதுரச்சாறு என்று அம்ருதரஸத்தைச் சொல்லிற்றாய், மதுரக்கொழுஞ்சாறு என்று அதிற்காட்டிலும் போக்யதைவிஞ்சின பெரியபிராட்டியாரைச் சொல்லிற்றாகலாம். தேவர்கட்கு அமுதமெடுத்துக்கொடுக்கிற வியாஜத்தினால் லோகோத்தரமான அமுதமென்னலாம்படியான பிராட்டியை ஸம்பாதித்துக் கொண்டானிறே; "விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே!" என்ற திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்தியை நோக்குக. கூரத்தாழ்வான் அருளிய ஸுந்தரபாஹுஸ்தவத்தில் "உதயிமஷிராதி" [உததிகமந்தராத்ரி] என்கிற நான்காவதுச்லோகத்தின் முற்பாதியில் இவ்விசேஷார்த்தம் நன்கு விளங்கக் காண்க.

சுழலை=சூழ்ச்சி; அதாவது-வஞ்சகர்செய்யும் தந்திரம். இங்குத் திருமாலிருஞ்சோலையழகர்செய்த தந்திரமாவது—தாம் நேராக எழுந்தருளாமல் தமதுவடிவுக்கு ஸ்மாரகங்களான மேகங்களை வரக்காட்டுதல், இந்திரகோபங்களைப் பரவச்செய்தல்முதலிய காரியங்களினால் ஆண்டாளுக்கு உத்தீபநஞ்செய்தல். சுழலையில்நின்றுஉய்துங்கொலோ? என்றது — இந்த ஆபத்தைத் தப்பிப்பிழைக்க நம்மாலாகாது என்றபடி. ஒரு பெரியகைகாரன் நம்மை அகப்படுத்து கைக்குவைத்த வலையைத்தப்பி நாம் பிழைக்கமுடியுமோ? இனிமுடிந்து போமித்தனையேயுள்ளது என்கிறாள்.

சிந்தூரம், இந்திரகோபம், மந்தாரம், மதுரம், சுந்தரம்=வடசொல் விகாரங்கள். உய்தும்=உய் என்னும் வினைப்பகுதியடியாய்ப்பிறந்த தன்மைப்பன்மை வினைமுற்று. ... ... ... ... ... (க)

போர்க்களிறுபொரும் மாலிருஞ்சோலையம்பூம்புறவில் *
தார்க்கொடிமுல்லைகளும் தவளநகைகாட்டுகின்ற *
கார்க்கோள்படாக்கள்நின்று கழறிச்சிரிக்கத்தரியேன் *
ஆர்க்கிடுகோதோழீ அவன்தார்செய்தபூசலையே.

| | | | |
|---|---|---|---|
| போர் களிறு | போர் செய்வதையே தொழிலாகவுடைய யானைகள் | நின்று | பூத்து நின்று |
| பொரும் | பொருது விளையாடுமிடமான | கழறி சிரிக்க | 'எமக்கு நீ தப்பிப்பிழைக்க முடியாது' என்று சொல்லிக்கொண்டே சிரிப்பது போல விகஸிக்க |
| மாலிருஞ் சோலை | திருமாலிருஞ் சோலை மலையிலுண்டான | தரியேன் | (அதுகண்டு) தரிக்கமாட்டுகின்றிலேன்; |
| அம் பூ புறவில் | மிகவுமழகிய தாழ்வரைகளிலே | தோழீ | என்னுடைய உயிர்த் தோழியே! |
| தார் கொடி முல்லைகளும் | அரும்புகளையுடைய கொடி முல்லைகளும் | அவன் தார் | (நாம் ஆசைப்பட்ட) அவனுடைய தோள் மாலையானது |
| தவளம் நகை | (அழகருடைய) வெளுத்த புன்சிரிப்பை | செய்த | உண்டுபண்ணின |
| காட்டுகின்ற | நினைப்பூட்டாநின்றன; (அன்றியும் | பூசலை | பரிபவத்தை |
| கார் கொள் படாக்கள் | மினுகொண்ட படா என்னுங் கொடிகள் | ஆர்க்கு இடுகோ | யாரிடத்து முறையிட்டுக்கொள்வது? |

யானைகள் கூடிப்பொருது விளையாடா நிற்கப்பெற்ற திருமாலிருஞ்சோலைமலைச்சாரல்களில் அரும்புகொண்டு விளங்குகின்ற கொடிமுல்லைகளானவை, அவ்வெம்பெருமான் ஸம்போகஆரம்பஸமயத்திற்பண்ணும் புன்முறுவலை நினைப்பூட்டிக்கொண்டு என்னைத் துன்பப்படுத்தாநின்றன; அதற்குமேலே, படாக்களானவை புஷ்பித்து, ஸம்ச்லேஷம் நடந்தேறினபின்பு ஒருதலையில்வெற்றிக்கு ஈடாகப்பண்ணும் பெருஞ்சிரிப்பை நினைப்பூட்டாநின்றுகொண்டு என்னை உருவழிக்கின்றன. தோழீ! அவ்வெம்பெருமான் திருத்தோளில்சாத்திக்கொண்டிராநின்ற மாலையை ஆசைப்பட்டமையாலன்றோ நான் இப்படிப்பரிபவப்பட நேர்ந்தது!; இந்தப்பரிபவத்தை நான் யாரிடத்திற்சென்று முறையிட்டு ஆறுவேன் என்கிறாள்.

புறவு=சோலைகள் நிரம்பிய ஆராமம். தவளம்=தவள என்றவடசொல் விகாரம். காட்டுகின்ற = வினைமுற்று. படாக்கள்=பெருங்கொடிகள். கார்க்கொள்ளுகை=அழகுகொண்டிருக்கையுமாம். ... ... (உ)

கருவிளையொண்மலர்காள் காயாமலர்காள், * திருமாலுருவொளிகாட்டுகின்றீர் எனக்குய்வழக்கொன்றுரையீர் *
திருவிளையாடுதிண்டோள் திருமாலிருஞ்சோலைநம்பி *
வரிவளையில்புகுந்து வந்திபற்றும்வழக்குளதே. (௩)

| | |
|---|---|
| [illegible] அழகிய | |
| கருவிளை மலர்காள் | காக்கணம் பூக்களே! |
| (உ) காயாமலர்காள் | காயாம் பூக்களே! |
| | (நீங்கள்) |
| திருமால் | எம்பெருமானுடைய |
| உரு ஒளி | திருமேனியின் நிறத்தை |
| காட்டுகின்றீர் | நினைப்பூட்டாநின்றீர்கள் |
| எனக்கு | (அதனை நினைத்து வருந்துகின்ற) எனக்கு |
| உய் வழக்கு ஒன்று | பிழைக்கும் வகை யொன்றை |
| உரையீர் | சொல்லுங்கள்; |
| திரு விளையாடு | பெரியபிராட்டியார் விளையாடுமிடமான |
| திண் தோள் | திண்ணிய திருத்தோளை யுடையரான |
| திருமாலிருஞ் சோலை நம்பி | அழகர் |
| இல் புகுந்து | (எனது) வீட்டினுள் புகுந்து |
| வரி வளை | (எனது) அழகிய வளைகளை |
| வந்தி பற்றும் வழக்கு உளதே | பலாத்காரமாகக் கொள்ளைகொண்டு போவதும் நியாயமோ? |

மழைகாலத்தில், கருவிளைப்பூக்களென்கிற காக்கணம் பூக்களும் காயாம் பூக்களும் விசேஷமாகப் புஷ்பிக்குமாதலாலும், அவை எம்பெருமானுடைய திருமேனிநிறத்தோடொத்த நிறத்தையுடையனவாயிருக்குமாதலாலும் அவற்றின்காட்சி தனக்கு விரஹதசையில் உத்தீபகமாயிருப்பதுபற்றி உண்டாகும் வருத்தத்தை அம்மலர்களை விளித்தே உரைக்கின்றாள். எம்பெருமானுடைய திருநிறத்தை நினைப்பூட்டாநின்றீர்கள் கருவிளைப்பூக்களே! காயாம்பூக்களே! நீங்கள் என்னை முடிக்கும்வகை ஒன்றுமோ தான் கற்றது? நான்பிழைக்கும்வகையை அறிவீர்களாகிற் சொல்லுங்கள் என்கிறாள் முன்னடிகளில்.

இங்ஙனம் யாசிக்கப்பட்ட அம்மலர்கள் ஆண்டாளை நோக்கி, 'நாங்கள் உமக்கு ஜீவநோபாயம்சொல்லவேண்டும்படி இப்போது உமக்குநேர்ந்த அநர்த்தம் என்ன?' என்று கேட்டனவாகக் கொண்டு, அவ்வநர்த்தத்தை முறையிடுகின்றாள் பின்னடிகளில்;- திருமாலிருஞ் சோலையில் அவாப்தஸமஸ்தகாமராய் எழுந்தருளியிருக்கிற பெரியவர், நானொருத்தி இருப்பதாகவும் நினையாமல் தமது திருத்தோளைப் பெரியபிராட்டியார்க்கு நித்யாநுபவயோக்யமாகக்கொடுத்து அவளும் தாமும் பரமரஸபுஞ்ஜமாய் அநுபவம் நடத்தாநிற்பதைப்பற்றி நான் ஒன்றும்விசாரப்படாமல், 'அவர் முன்புவிரும்பிப்போந்த வளைகள் நம்மையிலிருக்கின்றனவே, அவற்றைக் கண்டுகொண்டாவது தரித்திருப்போம்' என்றெண்ணி நான்என்வீட்டுக்குள்ளே கதவடைத்துக்கொண்டு கிடந்தால், அப்பெரியவர் அதனையும்பொறுமல் சடக்கென ஓடிவந்து என்வீட்டினுள்புகுந்து பலாத்காரமாக அவ்வளைகளைப்பறித்துக்கொண்டு ஓடினரே, இஃது எவர்தநீதியிற்சேரும்? இதற்குமேற்பட எனக்கு வேறோர் அநர்த்தம் விளையவேண்டுமோ என்கிறாள்.

காட்டுகின்றீர்=வினைமுற்றாகக்கொள்ளாமல் ஸம்போதநமாகக்கொள்ளுதலுமாம். உரையீர்=சொல்லுங்கள் என்றபடியுமாம், சொல்லமாட்டீர்களோ என்றபடியுமாம். உய்வழக்கு உரைத்தலாவது — அம்மலர்கள் தங்களைவெளிக்காட்டிக்கொள்ளாமல் அடங்கிப்போதலாம். "நீ அஞ்சாதேகொள்; நாங்கள் மறைகின்றோம்; என்றுஒருவார்த்தை சொன்னலாகாதோ? பூப்போலே வந்து புலியானிகோளீ!" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி நோக்கத்தக்கது.

| | |
|---|---|
| ஒண் [illegible] | அழகிய |
| கருவிளை மலர்காள் | காக்கணம் பூக்களே! |
| காயா மலர்காள் | காயாம் பூக்களே! (நீங்கள்) |
| திரு மால் | எம்பெருமானுடைய |
| உரு ஒளி | திருமேனியின் நிறத்தை |
| காட்டுகின்றீர் | நினைப்பூட்டாநின்றீர்கள் |
| எனக்கு | (அதனை நினைத்து வருந்துகின்ற) எனக்கு |
| உய் வழக்கு ஒன்று | பிழைக்கும் வகையொன்றை |
| உரையீர் | சொல்லுங்கள்; |

| | |
|---|---|
| திரு விளையாடு | பெரியபிராட்டியார் விளையாடுமிடமான |
| திண் தோள் | திண்ணிய திருத்தோளையுடையரான |
| திருமாலிருஞ்சோலை நம்பி | அழகர் |
| இல் புகுந்து | (எனது) வீட்டினுள் புகுந்து |
| வரி வளை | (எனது) அழகிய வளைகளை |
| வந்தி பற்றும் வழக்கு உளதே | பலாத்காரமாகக் கொள்ளைகொண்டு போவதும் நியாயமோ? |

மழைகாலத்தில், கருவிளைப்பூக்களென்கிற காக்கணம் பூக்களும் காயாம் பூக்களும் விசேஷமாகப் புஷ்பிக்குமாதலாலும், அவை எம்பெருமானுடைய திருமேனிநிறத்தோடொத்த நிறத்தையுடையனவாயிருக்குமாதலாலும் அவற்றின்காட்சி தனக்கு விரஹதசையில் உத்தீபகமாயிருப்பதுபற்றி உண்டாகும் வருத்தத்தை அம்மலர்களை விளித்தே உரைக்கின்றாள். எம்பெருமானுடைய திருநிறத்தை நினைப்பூட்டாநின்றுள்ள கருவிளைப்பூக்களே! காயாம்பூக்களே! நீங்கள் என்னை முடிக்கும்வகை ஒன்றுமோதான் கற்றது? நான்பிழைக்கும்வகையை அறிவீர்களாகிற் சொல்லுங்கள் என்கிறாள் முன்னடிகளில்.

இங்ஙனம் யாசிக்கப்பட்ட அம்மலர்கள் ஆண்டாளைநோக்கி, 'நாங்கள் உமக்கு ஜீவநோபாயம்சொல்லவேண்டும்படி இப்போது உமக்குநேர்ந்த அநர்த்தம் என்ன?' என்று கேட்டனவாகக் கொண்டு, அவ்வநர்த்தத்தை முறையிடுகின்றாள் பின்னடிகளில்; - திருமாலிருஞ் சோலையில் அவாப்தஸமஸ்தகாமரா யெழுந்தருளியிருக்கிற பெரியவர், நானொருத்தி இருப்பதாகவும் நினையாமல் தமது திருத்தோளைப் பெரியபிராட்டியார்க்கு நித்யாநுபவயோக்யமாகக்கொடுத்து அவளும் தாமும் பரமரஸபுஞ்ஜமாய் அநுபவம் நடத்தாநிற்பதைப்பற்றி நான் ஒன்றும்விசாரப்படாமல், 'அவர் முன்புவிரும்பிப்போந்த வளைகள் நம்கையில் இருக்கின்றனவே, அவற்றைக் கண்டுகொண்டாவது தரித்திருப்போம்' என்றெண்ணி நான்என்வீட்டுக்குள்ளே கதவடைத்துக்கொண்டு கிடந்தால், அப்பெரியவர் அதனையும்பொறாமல் சடக்கென ஓடிவந்து என்வீட்டினுள்புகுந்து பலாத்காரமாக அவ்வளைகளைப்பறித்துக்கொண்டு ஓடினரே, இஃது எந்தநீதியிற்சேரும்? இதற்குமேற்பட எனக்கு வேறோர் அநர்த்தம் விளையவேண்டுமோ என்கிறாள்.

காட்டுகின்றீர் = வினைமுற்றாகக்கொள்ளாமல் ஸம்போதநமாகக்கொள்ளுதலுமாம். உரையீர் = சொல்லுங்கள் என்றபடியுமாம், சொல்லமாட்டீர்களோ என்றபடியுமாம். உய்வழக்கு உரைத்தலாவது — அம்மலர்கள் தங்களைவெளிக்காட்டிக்கொள்ளாமல் அடங்கிப்போதலாம். "நீ அஞ்சாதேகொள்; நாங்கள் மறைகின்றோம்; என்று ஒருவார்த்தை சொன்னாலாகாதோ? பூப்போலே வந்து புலியானிகோளீ!" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி நோக்கத்தக்கது.

திருமாலிருஞ்சோலை நம்பி இல்புகுந்தவரிவனை வந்திறைவனாகச் சொல்லுகிறவிதற்குக் கருத்து யாதெனில்; எம்பெருமான் தானாகவே வந்து ஸம்ச்லேஷித்துத் தானாகவே பிரிந்துபோனானாகையால் வந்திப்பவனைப் பிறர் இசையாதிருக்க நிர்ப்பந்தப்படுத்திப் பிடிக்கிக்கொள்ளுதல். (௩)

பைம்பொழில்வாழ்குயில்காள்மயில்காள் ஒண்கருவிளைகாள் *
வம்பக்களங்கனிகாள் வண்ணப்பூவைநறுமலர்காள் *
ஐம்பெரும்பாதகர்காள் அணிமாலிருஞ்சோலைநின்ற *
எம்பெருமானுடையநிறம் உங்களுக்கென்செய்வதே.

பை பொழில் வாழ் } பரந்த சோலையில் வாழ்கின்ற
குயில்காள் குயில்களே!
மயில்காள் மயில்களே!
ஒண் கருவிளைகாள் } அழகிய காக்கணம் பூக்களே!
வம்பக் களங்கனிகாள் } புதிய களாப்பழங்களே!
வண்ணம் நறு பூவைமலர்காள் } அழகிய நிறத்தையும் பரிமளத்தையுமுடைய காயாம் பூக்களே!

ஐ பெரு பாதகர்காள் } (ஆகிய) பஞ்சமஹாபாதகர்களே!
உங்களுக்கு உங்களுக்கு,
அணி மாலிருஞ்சோலை நின்ற எம்பெருமானுடைய நிறம் என் செய்வது } திருமாலிருஞ்சோலையிலுள்ள அழகருடைய திருமேனி நிறமானது எதுக்காக?]
[அந்த நிறத்தை நீங்கள் ஏற்றுக் கொண்டது என்னை ஹிம்ஸிப்பதற்காகவே என்கை.]

குயில், மயில், கருவிளை, களங்கனி, காயாம்பூ என்னும் இவ்வைந்து வஸ்துக்களையும் பஞ்சமஹாபாதகிகள் என்கிறாள். பொற்களவு, கள்குடித்தல்முதலிய மஹத்தான ஐந்துபாதகஞ் செய்தவர்களைப் பஞ்சமஹாபாதகிகளென்று சாஸ்திரம் கூறும்; அப்பாதகங்களிலும் மேற்பட்ட பாதகங்களை இக்குயில்முதலியவை செய்கின்றனவாகக்கொண்டு ஆண்டாள் இவற்றைப் பஞ்சமஹாபாதகிகளென்கிறாளாய்த்து. இவை தனக்குப்பொறுக்கவொண்ணாத ஹிம்ஸையைப்பண்ணுவதுபற்றி இங்ஙனம் கூறினளென்க. "பெரும்பாதகர்=பெரியபாதகத்தைச்செய்பவர்; பாதகம்=பாவம். அன்றி "பெரும்பாதகர்" என்று-பெரிய வாயகர் என்றபடியுமாம். (பொறுக்கமுடியாத வேதனையை உண்டுபண்ணுமவர்கள் என்கை.) இங்கு இரட்டுறமொழிதலாகக் கொள்க.

பரமசேதநனான எம்பெருமானோடு, அற்பசேதநங்களான குயில்மயில்களோடு, அசேதநங்களான கருவிளை முதலியவற்றோடு வாசியற எல்லாவஸ்துக்களும் எனக்குத் தீங்குவிளைக்க ஒருப்பட்டால் நான் எங்ஙனே பிழைக்கும்படி?; அவன் பிரிந்துபோன ஸமயத்தில் முகங்காட்டி என்னைத் தேற்ற வேண்டியவைகளும் பாதகங்களானால் நான் எங்ஙனம் பிழைக்கவல்லேன்?; பிரிந்தவன் ஒருவனாய், பாதகங்கள் பலவானால் பிழைக்கமுடியுமோ? என்கிறாள்போலும்.

எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கு என்செய்வதே? என்னை உயிர்க் கொலைசெய்கின்ற அவனுடைய நிறத்தை நீங்கள் எதுக்காக ஏறிட்டுக்கொண்டீர்கள்? என்னை ஹிம்ஸிக்கவேணுமென்றே நீங்கள் அவனது நிறத்தை ஏறிட்டுக் கொண்டீர்கள் போலும் என்கை.

திருமாலிருஞ்சோலை நம்பி இல்புகுந்து வரிவளைகளை வந்திபற்றினதாகச் சொல்லுகிறவிதற்குக் கருத்து யாதெனில்; எம்பெருமான் தானாகவே—வந்து ஸம்ஶ்லேஷித்துத் தானாகவே பிரிந்துபோனானென்கை. வந்திபற்றுகை=பிறர் இசையாதிருக்க நிர்ப்பந்தப்படுத்திப் பிடுங்கிக்கொள்ளுதல். (௬)

பைம்பொழில்வாழ்குயில்காள்மயில்காள் ஒண்கருவிளைகாள் *
வம்பக்களங்கனிகாள் வண்ணப்பூவைநறுமலர்காள் *
ஐம்பெரும்பாதகர்காள் அணிமாலிருஞ்சோலைநின்ற *
எம்பெருமானுடையநிறம் உங்களுக்கென்செய்வதே.

| | |
|---|---|
| பை பொழில் வாழ் | பரந்த சோலையில் வாழ்கின்ற |
| குயில்காள் | குயில்களே! |
| மயில்காள் | மயில்களே! |
| ஒண் கருவிளை காள் | அழகிய காக்கணம் பூக்களே! |
| வம்பக் களங் கனிகாள் | புதிய களாப்பழங்களே! |
| வண்ணம் நறு பூவைமலர்காள் | அழகிய நிறத்தையும் பரிமளத்தையுமுடைய காயாம் பூக்களே! |
| ஐ பெரு பாதகர் காள் | (ஆகிய) பஞ்சமஹாபாதகர்களே! |
| உங்களுக்கு | உங்களுக்கு, |
| அணி மாலிருஞ் சோலை நின்ற எம்பெருமானுடைய நிறம் என் செய்வது | திருமாலிருஞ் சோலையிலுள்ள அழகருடைய திருமேனி நிறமானது ஏதுக்காக?] |

[அந்த நிறத்தை நீங்கள் ஏற்றுக் கொண்டது என்னை ஹிம்ஸிப்பதற்காகவே என்கை.]

குயில், மயில், கருவிளை, களங்கனி, காயாம்பூஎன்னும் இவ்வைந்து வஸ்துக்களையும் பஞ்சமஹாபாதகிகளென்கிறாள். பொற்களவு, கள்குடித்தல்முதலிய மஹத்தான ஐந்துபாதகஞ் செய்தவர்களைப் பஞ்சமஹாபாதகிகளென்று ஶாஸ்த்ரம் கூறும்; அப்பாதகங்களினும் மேற்பட்ட பாதகங்களை இக்குயில்முதலியவை செய்கின்றனவாகக்கொண்டு ஆண்டாள் இவற்றைப் பஞ்சமஹாபாதகிகளென்கிறாளாய்த்து. இவை தனக்குப்பொறுக்கவொண்ணாத ஹிம்ஸையைப்பண்ணுவதுபற்றி இங்ஙனம் கூறினளென்க. "பெரும்பாதகர்=பெரியபாதகத்தைச்செய்பவர்; பாதகம்=பாவம். அன்றி "பெரும்பாதகர்" என்று-பெரிய வாயகர் என்றபடியுமாம். (பொறுக்கமுடியாத வேதனையை உண்டுபண்ணுமவர்கள் என்கை.) இங்கு இரட்டுறமொழிதலாகக் கொள்க.

பரமசேதநனான எம்பெருமானோடு, அற்பசேதநங்களான குயில்மயில்களோடு, அசேதநங்களான கருவிளை முதலியவற்றோடு வாசியற எல்லாவஸ்துக்களும் எனக்குத் தீங்குவிளைக்க ஒருப்பட்டால் நான் எங்ஙனே பிழைக்கும்படி?; அவன் பிரிந்துபோன ஸமயத்தில் முகங்காட்டி என்னைத் தேற்ற வேண்டியவைகளும் பாதகங்களானால் நான் எங்ஙனம் பிழைக்கவல்லேன்?; பிரிந்தவன் ஒருவனாய், பாதகங்கள் பலவானால் பிழைக்கமுடியுமோ? என்கிறாள்போலும்.

எம்பெருமானுடைய நிறம் உங்களுக்கு என்செய்வதே?=என்னை உயிர்க்கொலைசெய்கின்ற அவனுடைய நிறத்தை நீங்கள் ஏதுக்காக ஏறிட்டுக்கொண்டீர்கள்? என்னை ஹிம்ஸிக்கவேணுமென்றே நீங்கள் அவனது நிறத்தை ஏறிட்டுக்கொண்டீர்கள் போலும் என்கை.

பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற, காவிமலரென்றுங் காண்டோறும் பாவியேன், மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை, யெல்லாம் பிரானுருவே யென்று" "கொண்டல்தான் மால்வரைதான் மாகடல்தான் கூரிருள்தான், வண்டறும் பூவைதான் மற்றுத்தான்-கண்டநாள், காருருவங் காண்டோறும் நெஞ்சோடுங் கண்ணனூர்; பேருரு வென்றெம்மைப் பிரிந்து" என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரங்கள் இங்கே அநுஸந்திக்கத் தக்கன. களங்கனியை எம்பெருமானது திருநிறத்தோடொத்ததாகக் கூறுதல் "ஊழிகளாயுலகேழு முண்டானென்றிலம்" என்ற திருவிருத்தப் பாசுரத்திலுங் காணத்தக்கது. "களங்கனி வண்ணா கண்ணனே!" என்றார் கலியனும். (ச)

துங்கமலர்ப்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
செங்கட்கருமுகிலின் திருவுருப்போல்* மலர்மேல்
தொங்கியவண்டினங்காள் தொகுபூஞ்சுனைகாள் * சுனையில்
தங்குசெந்தாமரைகாள் எனக்கோர்சரண்சாற்றுமினே. (ரு)

| | |
|---|---|
| துங்கம் மலர் பொழில் சூழ் | ஓங்கின மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த |
| திருமாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலையில் |
| நின்ற | நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கிற |
| செம் கண் கரு முகிலின் | செந்தாமரை போன்ற திருக்கண்களையும் காளமேகம்போன்றவடிவையுமுடைய எம்பெருமானுடைய |
| தி உருபோல் | அழகிய வடிவம்போலே |
| மலர் மேல் தொங்கிய வண்டு இனங்காள் | மலர்மேல் தங்கியிருக்கிற வண்டுக்கூட்டங்களே! |
| தொகு | நெருங்கியிருக்கின்ற |
| பூ சுனைகாள் | அழகிய சுனைகளே! |
| சுனையில் தங்கு | அச்சுனைகளில் உள்ள |
| செம் தாமரைகாள் | செந்தாமரை மலர்களே! |
| எனக்கு | (உங்களை யமதூதர்களாக நினைக்கிற) எனக்கு |
| ஓர் சரண் சாற்றுமின் | ஒரு பற்றுக்கோடு சொல்லுங்கள். |

திருமாலிருஞ்சோலைமலைப் பொழில்களில் மலர்ந்துள்ள பூக்களில் தங்குகின்ற வண்டுகளும் சுனைகளும் அழகருடைய திருவுருவை நினைப்பூட்டி நலிவதனாலும், சுனைகளில் அலர்ந்த செந்தாமரை மலர்கள் அவருடைய திவ்யாவயவங்களுக்கு ஸ்மாரகங்களாய்க்கொண்டு ஹிம்ஸிப்பதனாலும் அந்த ஹிம்ஸையைப் பொறுக்கமாட்டாத ஆண்டாள் அவற்றை நோக்கி 'அந்தோ! நான் உங்களுக்குத் தப்பிப் பிழைப்பதொரு உபாயம்சொல்ல வல்லீர்களோ?' என்கிறாள்.

துங்கம்—வடசொல். கருமுகில்=முற்றுவமை; "தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே" என்றாற்போல. சுனை=நீர்நிலை. சரண்=சரணம். (ரு)

நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலைநம்பிக்கு * நான்
நூறுதடாவில்வெண்ணெய் வாய்நேர்ந்துபராவிவைத்தேன் *
நூறுதடாநிறைந்த அக்காரவடிசில்சொன்னேன் *
ஏறுதிருவுடையான் இன்றுவந்திவைகொள்ளுங்கொலோ. (சு)

"பூவையுங் காயாவும் நீலமும் பூக்கின்ற, காவிமலரென்றுங் காண்டோறும் பாவியேன், மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும் அவ்வவை, யெல்லாம் பிரானுருவே யென்று". "கொண்டல்தான் மால்வரைதான் மாகடல்தான் கூரிருள் தான், வண்டறுப் பூவைதான் மற்றுத்தான்-கண்டநாள், காருருவங் காண்டோறும் நெஞ்சோடுங் கண்ணனார்; பேருரு வென்றெம்மைப் பிரிந்து" என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரங்கள் இங்கே அநுஸந்திக்கத் தக்கன. களங்கனியை எம்பெருமானது திருநிறத்தோடொத்ததாகக் கூறுதல் "ஊழிகளா யுலகேழு முண்டானென்றில்" என்ற திருவிருத்தப் பாசுரத்திலுங் காணத் தக்கது. "களங்கனி வண்ணா கண்ணனே!" என்றார் கலியனும். (ச)

துங்கமலர்ப்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
செங்கட்கருமுகிலின் திருவுருப்போல்* மலர்மேல்
தொங்கியவண்டினங்காள் தொகுபூஞ்சுனைகாள் * சுனையில்
தங்குசெந்தாமரைகாள் எனக்கோர்சரண்சாற்றுமினே. (ரு)

| | |
|---|---|
| துங்கம் மலர் பொழில் சூழ் | ஓங்கின மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த |
| திருமாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலையில் |
| நின்ற | நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கிற |
| செம் கண் கரு முகிலின் | செந்தாமரை போன்ற திருக்கண்களையும் காளமேகம்போன்றவடிவையுமுடைய எம்பெருமானுடைய |
| திரு உருபோல் | அழகிய வடிவம்போலே |
| மலர் மேல் தொங்கிய வண்டு இனங்காள் | மலர்மேல் தங்கியிருக்கிற வண்டுக்கூட்டங்களே! |
| தொகு | நெருங்கியிருக்கின்ற |
| பூ சுனைகாள் | அழகிய சுனைகளே! |
| சுனையில் தங்கு | அச்சுனைகளில் உள்ள |
| செம் தாமரைகாள் | செந்தாமரை மலர்களே! |
| எனக்கு | (உங்களை யமதூதர்களாக நினைக்கிற) எனக்கு |
| ஓர் சரண் சாற்றுமின் | ஒரு பற்றுக்கோடு சொல்லுங்கள். |

திருமாலிருஞ்சோலைமலைப் பொழில்களில் மலர்ந்துள்ள பூக்களில் தங்குகின்ற வண்டுகளும் சுனைகளும் அழகருடைய திருவுருவை நினைப்பூட்டி நலிவதனாலும், சுனைகளில் அலர்ந்த செந்தாமரை மலர்கள் அவருடைய திவ்யாவயவங்களுக்கு ஸ்மாரகங்களாய்க்கொண்டு ஹிம்ஸிப்பதனாலும் அந்த ஹிம்ஸையைப் பொறுக்கமாட்டாத ஆண்டாள் அவற்றை நோக்கி 'அந்தோ! நான் உங்களுக்குத் தப்பிப் பிழைப்பதொரு உபாயம்சொல்ல வல்லீர்களோ?' என்கிறாள்.

துங்கம்—வடசொல். கருமுகில்=முற்றுவமை; "தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே" என்றாற்போல. சுனை = நீர்நிலை. சரண்=ஶரணம். (ரு)

நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலைநம்பிக்கு * நான்
நூறுதடாவில்வெண்ணெய் வாய்நேர்ந்துபராவிவைத்தேன் *
நூறுதடாநிறைந்த அக்காரவடிசில்சொன்னேன் *
ஏறுதிருவுடையான் இன்றுவந்திவைகொள்ளுங்கோலோ. (சு)

| | |
|---|---|
| நறு பொழில் நாறும் | பரிமளம்மிகுந்தபொழில்கள் மணங்கமழா நிற்கப்பெற்ற |
| மாலிருஞ் சோலை | திருமாலிருஞ்சோலையில் (எழுந்தருளியிருக்கிற) |
| நம்பிக்கு | எம்பெருமானுக்கு |
| நான் | அடியேன் |
| நூறு தடாவில் | நூறுதடாக்களில் நிறைந்த |
| வெண்ணெய் | வெண்ணெயை |
| வாய் நேர்ந்து | வாயாலே சொல்லி |
| பராவி வைத்தேன் | ஸமர்ப்பித்தேன் ; (இன்னமும்) |
| நூறு தடா நிறைந்த | நூறு தடாக்களில் நிறைந்த |
| அக்கார அடிசில் | அக்காரவடிசிலும் |
| சொன்னேன் | வாசிகமாக ஸமர்ப்பித்தேன்; |
| இவை | இந்த வெண்ணெயையும் அக்காரவடிசிலையும்; |
| ஏறு திரு உடையான் | (நாட்செல்லநாட்செல்ல) ஏறிவருகிற ஸம்பத்தையுடையரான அழகர் |
| இன்று வந்து | இன்று எழுந்தருளி |
| கொள்ளுங்கொல் | திருவுள்ளம் பற்றுவரோ? |

இப்பாட்டும் மேற்பாட்டும் இத்திருமொழியில் விலக்ஷணமாக அமைந்த பாசுரங்கள். கீழ்ச்சென்ற பாசுரங்களின் சைலியும் மேல்வரும் பாசுரங்களின் சைலியும் வேறாயிருக்க, இப்பாட்டின் சைலியும் மேற்பாட்டின் சைலியும் விஜாதீயமாக அமைந்திருக்கிறபடியைக் காண்மின். கீழ்ப்பாட்டில் "எனக்கோர் சரண் சாற்றுமினே" என்றவாறே தளர்ந்து த்வயாநுஸந்தானம் பண்ணினாள்; உத்தரகண்டத்தை நன்றாக அநுஸந்தித்தாள்; அதற்கு அர்த்தமாகிய கைங்கரிய ப்ரார்த்தனையிலே ஊன்றினாள்; காயிகமான கைங்கரிய மொன்றும் செய்யமுடியாதபடி தளர்ந்திருக்கும் தசையாகையாலே வாசிகமான கைங்கரியம்செய்ய விரும்பினாள்; அதுசெய்தபடியைச் சொல்லுகிறாள் இப்பாட்டில்; இப்பாட்டுக்கு சேஷபூதம் மேற்பாட்டு.

மணங்கமழாநின்ற சோலைகளாலே சூழப்பட்ட திருமாலிருஞ்சோலைமலையில் அவாப்த ஸமஸ்தகாமனாய் எழுந்தருளியிருக்கும் எம்பிரானுக்கு அடியேன் நூறுதடா நிறைந்த வெண்ணெயும் நூறுதடாநிறைந்த அக்காரவடிசிலும் வாசிக கைங்கரிய ரூபமாக ஸமர்ப்பிக்கிறேன்; இவற்றை அவ்வெம்பெருமான் திருவுள்ளம் பற்றுவானோ? என்கிறாள்.

எம்பெருமானார், நாய்ச்சியார் திருமொழி காலக்ஷேபம் ப்ரஸாதித்தருளும்போது இப்பாட்டளவிலே வந்தவாறே "ஆண்டாளுடைய மநோரதம் வாசிக மாத்ரமாகப் போச்சுதே யொழிய, கார்யபர்யவஸாயியாகவில்லை; அதனை நாம் தலைக்கட்டவேணும்" என்று அப்போதே புறப்பட்டுத் திருமாலிருஞ்சோலை மலைக்கு எழுந்தருளி * நூறுதடா நிறைந்த வெண்ணெயும் நூறுதடா நிறைந்த அக்காரவடிசிலும் அழகருக்கு அமுது செய்வித்தருளி, அப்படியே ஸ்ரீவில்லிபுத்தூரேற வெழுந்தருளி ஆண்டாளை அடிவணங்கி நிற்க, தன் நினைவறிந்து இவர்செய்த காரியத்துக்கு மனமுகந்து "நம் அண்ணரே!" என்றுசொல்லி அர்ச்சாவதாரஸமாதியைக் கடந்து தழுவிக்கொண்டாள்—என்பர் பெரியோர். இதுபற்றியே "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள்வாழியே". என்று ஆண்டாள் வாழ்த்தப்படுவதும்.

"அந்யத் பூர்ணதபாம் கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத்-அந்யத் குசலஸம்ப்ரச்நாத் நசேச்சதி ஜநார்தந:" என்கிறபடியே ஒரு பூர்ணகும்பத்துக்கு மேற்பட அதிகப்படியானவற்றை விரும்பாத எம்பெருமான் விஷயத்திலே நூறு தடா நிறைந்த வெண்ணெயும் நூறு தடா நிறைந்த அக்காரவடிசிலும் ஸமர்ப்பிக்க வேண்டுவானேன்?—என்று நஞ்ஜீயர் ஸந்நிதியிலே நம்பிள்ளை கேட்க; "திருவாய்ப்பாடியிற் செல்வத்துக்கு இதெல்லாம் கூடினாலும் ஒரு பூர்ண கும்பத்துக்குப் போராதிகாணும்" என்று ஜீயர் அருளிச்செய்தாராம்.

தடா=பானை. பராவுதல்=வணங்குதல், துதித்தல் பரப்புதல். வயதிருவுடையான்= "வ்ராஜ ஸ்ரீ:" என்று மொழிபெயர்த்தார் கூரத்தாழ்வான் ஸ்ரீ ஸுந்தரபாஹுஸ்தவத்தில்.

இன்றுவந்து இவை கொள்ளுங் கொலோ?="இது ஒரு வாங்மாத்ரமே யாய்ப் போகாமே இத்தை அநுஷ்டான பர்யந்தமாக்கி ஸ்வீகரிக்கவல்லனோ?; அத்ரிபகவானாச்ரமத்திலே ஸாயம்ஸமயத்திலே சென்று 'நான் ராமன், இவள் மைதிலி, இவன் லக்ஷ்மணன்' என்று நின்றாப்போலே வந்து நின்று இவற்றை ஸ்வீகரிக்கவல்லனோ?" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி அநுஸந்திக்கத்தக்கது.()

இன்றுவந்தித்தனையும் அமுதுசெய்திடப்பெறில் * நான்
ஒன்றுநூறாயிரமாக்கொடுத்துப் பின்னுமாளும்செய்வன் *
தென்றல்மணங்கமழும் திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரான் * அடியேன்மனத்தேவந்துநேர்படிலே. (எ)

| | |
|---|---|
| தென்றல் | தென்றல் காற்றானது |
| மணம் கமழும் | மணத்தைக்கொண்டு வீசுகின்ற |
| திருமாலிருஞ் சோலைதன்னுள் | திருமாலிருஞ்சோலை மலையிலே |
| நின்ற | எழுந்தருளியிருக்கிற |
| பிரான் | ஸ்வாமியான அழகர் |
| இன்று | இன்றைக்கு |
| வந்து | இவ்விடமெழுந்தருளி |
| இத்தனையும் | நூறுதடா நிறைந்த வெண்ணெயையும் அக்காரவடிசிலையும் |
| அமுதுசெய் இட பெறில் | அமுது செய்தருளப் பெற்றால் |
| | (அவ்வளவுமன்றி) |
| அடியேன்மனத்தே வந்து நேர் படில் | அடியேனுடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம் பண்ணப்பெற்றால் |
| நான் | அடியேன் |
| ஒன்று | ஒரு தடாவுக்கு |
| நூறு ஆயிரம் ஆ கொடுத்து | நூறாயிரம் தடாக்களாக ஸமர்ப்பித்து |
| பின்னும் | அதற்கு மேலும் |
| ஆளும்செய்வன் | ஸகலவித கைங்கரியங்களும் பண்ணுவேன். |

"இன்று வந்து இவை கொள்ளுங் கொலோ?" என்று (கீழ்ப்பாட்டில்) மநோரதித்தபடியே திருமாலிருஞ்சோலை யெம்பெருமான் இன்று இவ்விடமெழுந்தருளி, அடியேன் (வாசா) வாசா ஸமர்ப்பித்த நூறுதடா நிறைந்த வெண்ணெயையும் அக்காரவடிசிலையும் அமுதுசெய்தருள்வனாகில் இந்த மஹோபகாரத்துக்குக் கைம்மாறாக அடியேன் இன்னும் நூறாயிரம் தடா நிறைந்த வெண்ணெயும் அக்காரவடிசிலும் ஸமர்ப்பிப்பேன்; அவ்வெம்பெருமான் இங்கெழுந்தருளி

இவற்றை அமுது செய்துவிட்டு மீண்டு போய்விடாமல் என் ஹ்ருதயத்திலேயே ஸ்தாவரப்ரதிஷ்டையாக இருந்துவிடும் பக்ஷத்தில் "ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்" என்று பெரியோர் மனோரதித்த கைங்கரியங்களெல்லாவற்றையும் குறையறச் செய்திடுவேன் என்கிறாள்.

"தென்றல் மணங்கமழும் திருமாலிருஞ்சோலை தன்னுள் நின்றபிரான் இன்று வந்து இத்தனையும் அமுது செய்திடப்பெறில் நான் ஒன்று நூறாயிரமாக் கொடுப்பேன்; அடியேன் மனத்தே வந்து நேர்படில் பின்னுமாளுஞ் செய்வேன்" என்று யோஜிப்பது.

ஒன்றுநூறாயிரமாக் கொடுத்தலாவது=தான் ஸமர்ப்பித்த தடாக்களில் ஒரு தடாவை அமுதுசெய்தால் அதற்குக் கைம்மாறாகப் பின்னும் நூறாயிரம் (லக்ஷம்) தடா ஸமர்ப்பித்தல். இப்படியே பார்த்துக்கொள்க. இதனால், ஆண்டாள் தனது பாரிப்பின் மிகுதியை வெளியிட்டபடி.

"இன்று உவந்து" என்றும் பிரிக்கலாமென்ப. .... (எ)

காலையெழுந்திருந்து கரியகுருவிக்கணங்கள் *
மாலின்வரவுசொல்லி மருள்பாடுதல்மெய்ம்மைகொலோ*
சோலைமலைப்பெருமான் துவராபதியெம்பெருமான் *
ஆலினிலைப்பெருமான் அவன்வார்த்தையுரைக்கின்றவே. (அ)

| | |
|---|---|
| கரிய குருவி கணங்கள் | கரியகுருவிக்கூட்டங்கள் |
| காலை | விடியற்காலத்திலே |
| எழுந்திருந்து | எழுந்து, |
| சோலைமலை பெருமான் | திருமாலிருஞ்சோலை மலைக்குத் தலைவனாயும் |
| துவராபதி எம் பெருமான் | த்வாரகா புரிக்குத் தலைவனாயும் |
| ஆலின் இலை பெருமான் அவன் | ஆலிலையில்வளர்ந்தபெருமானாயுமுள்ள அந்தஸர்வேச்வரனுடைய |
| வார்த்தை | வார்த்தைகளை |
| உரைக்கின்ற | சொல்லாநின்றன; (இப்படி) |
| மாலின் | எம்பெருமானுடைய |
| வரவு | வருகையை |
| சொல்லி | சொல்லிக்கொண்டு |
| மருள் பாடுதல் | மருளென்கிற பண்ணைப் பாடுவதானது |
| மெய்ம்மை கொல் | மெய்யாகத் தலைக்கட்டுமோ |

ஆண்டாள் பிறந்தவூரில் திர்யக்குக்களுங் கூட எம்பெருமானைப்பற்றின சிந்தனையே மிக்கிருக்கு மாதலால் சில கருங்குருவிகள் காலை யெழுந்திருந்து கூட்டங் கூட்டமாக இருந்து எம்பெருமானுடைய வரவை ஸூசிப்பித்துக் கொண்டு பண்களைப்பாடுவதும் அவ்வெம்பெருமான் விஷயமான வார்த்தைகளைச் சொல்லுவதுமா யிருக்கவே, அதுகண்ட ஆண்டாள் இது மெய்யாய்த் தலைக்கட்டுமோ பொய்யாய்விடுமோவென்று சிந்திக்கிறளாய்த்து.

மெய்ம்மை கொலோ? என்றதற்கு இரண்டு வகையாகக் கருத்தாகலாம்; நம்முடைய சித்தவிப்ரமத்தால் இவை பாடுகின்றனவாகத் தோற்றுகின்றதா? அல்லது மெய்யாகவே பாடுகின்றனவா? என்பது ஒருகருத்து; இக்கரிய குருவிக் கணங்கள் இதற்கு முந்தியும் பலகால் மாலின் வரவுசொல்லி மருள்பாடியும் அவ்வெம்பெருமான் வரக்காணாமையினாலே இதுவரையில் இவற்றின் பாட்டு பொய்யாயொழிந்தது; இப்போதாவது அங்ஙனன்றி மெய்யாகத் தலைக்கட்டுமா; என்பது மற்றொரு கருத்து.

பாட்டின் இறுதியிலுள்ள உரைக்கின்ற என்பதை வினைமுற்றாகக் கொள்ளாமல் பெயரெச்சமாகக் கொண்டு, ... "அவன் வார்த்தை யுரைக்கின்ற கரிய குருவிக்கணங்கள் காலையெழுந்திருந்து மாலின் வரவுசொல்லி மருள்பாடுதல் மெய்ம்மைகொலோ?" என்று ஏகவாக்யமாக யோஜிப்பதும் ஒருவாறு பொருந்தும்.

துவராவதி='த்வாரவதீ' என்ற வடசொல்விகாரம். வார்த்தை=ஸமாசாரம். (அ)

கோங்கலரும்பொழில் மாலிருஞ்சோலையில்கொன்றைகள்மேல் *
தூங்குபொன்மாலைகளோடு உடனாய்நின்றுதூங்குகின்றேன் *
பூங்கொள்திருமுகத்து மடுத்தூதியசங்கொலியும் *
சார்ங்கவில்நாணொலியும் தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ (௯)

| | | | |
|---|---|---|---|
| கோங்கு அலரும் பொழில் | கோங்கு மரங்கள் மலரப்பெற்ற சோலைகளையுடைய | பூ கொள் திரு முகத்து | அழகுபொருந்திய திருப்பவளத்திலே |
| மாலிருஞ் சோலையில் | திருமாலிருஞ் சோலைமலையில் | மடுத்து | வைத்து |
| கொன்றைகள் மேல் | கொன்றைமரங்களின் மேலே | ஊதிய | ஊதப்படுகிற |
| தூங்கு | தொங்குகின்ற | சங்கு | ஸ்ரீ பாஞ்சஜந்யத்தினுடைய |
| பொன் மாலைகளோடு உடனாய் நின்று | பொன் நிறமான பூமாலைகளோடு ஸமமாக | ஒலியும் | த்வநியும் |
| தூங்குகின்றேன் | வாளா கிடக்கிறேன்; | சார்ங்கம் வில் நாண் ஒலியும் | சார்ங்கமென்னும் வில்லின் நாணோசையும் |
| | | தலைப்பெய்வது | ஸமீபிப்பது |
| | | எஞ்ஞான்று கொல் | என்றைக்கோ? |

இப்பாசுரத்தின் கருத்து மிகவும் ஆழ்ந்தது. திருமாலிருஞ் சோலைமலையிற் கொன்றை மரங்களின் மீது தொங்குகின்ற கொன்றைப்பூ மாலைகளோடொப்ப நானும் தூங்குகின்றேன் என்று கூறுகின்ற ஆண்டாளுடைய கருத்து யாதெனில்,—கேண்மின்; திருமாலிருஞ்சோலைமலையில் ஸாத்விக புருஷர்கள் ஏறிப்போவார்களேயன்றி ராஜஸ தாமஸ புருஷர்கள் ஏறிப்போகமாட்டார்கள். கொன்றைமலர்கள் சிவன் முதலிய தேவதாந்தரங்களின் ஆராதனைக்கு உபயோகப்படக்கூடியவை யாதலால் அம்மலர்கள் ராஜஸ தாமஸ புருஷர்கட்கு உபயுக்தமாகுமேயன்றி ஸாத்விக புருஷர்கட்கு அவைகொண்டு பயனில்லை. இனி, ஸாத்

விகமாத்ரப்ராப்யமான திருமாலிருஞ் சோலைமலையில் மலர்கின்ற கொன்றை மலர்கட்கு ஏதாவது உபயோகமுண்டோவென்று சிந்தித்தால், அவை அங்கே மலர்ந்து அங்கே வீழ்வதொழிய வேறொருபயோகமும் அவற்றுக்கு இல்லையென்றே சொல்லவேண்டும். ஆகவே, அம்மலர்களின் ஜன்மம் எப்படி வீணோ, அப்படியே என் ஜன்மமும் வீணாயிற்றே! என்கிறாள்.

"தாமஸ புருஷர்கள் புகுரும் தேசமன்று; ஸாத்விகர் இதுகொண்டு காரியங்கொள்ளார்கள்; பெரியாழ்வார் வயிற்றிலே பிறந்து பகவதர்ஹமான வன்று இங்ஙனே இழந்திருந்து க்லேசப்படுவதே!" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியின் போக்யதையை நோக்குமின்.

"கன்னவிலுங் காட்டகத்தோர் வல்லிக்கடிமலரின், நன்னறுவாசம் மற்றாரானு மெய்தாமே, மன்னும் வறுநிலத்து வாளாங்கு உகுத்ததுபோல், என்னுடைய பெண்மையு மென்னலனு மென்முலையும், மன்னுமலர் மங்கைமைந்தன் கணபுரத்துப், பொன்மலைபோல் நின்றவன்றன் பொன்னகலம் தோயாவேல், என்னிவைதான் வாளா எனக்கே பொறையாகி, முன்னிருந்து மூக்கின்று மூவாமைக் காப்பதோர், மன்னுமருந்தறிவீரில்லையே!" என்ற பெரிய திருமடற் பாசுரங்கள் இங்கு நினைக்கத்தக்கன.

[பூங்கொள் திருமுகத்து இத்யாதி.] கண்ணபிரானை யன்றி மற்று எவனையும் கனவிலுங் கருதாதிருந்த ருக்மிணிப்பிராட்டிக்கு சிசுபாலனோடு விவாஹம் நடப்பதாகக் கோடித்து ஸித்தமாயிருந்த ஸமயத்தில் கண்ணபிரானது வரவை எதிர்பார்த்திருந்த அப்பிராட்டியின் நெஞ்சு முறிந்துபோய் இனி நாம் உயிர் துறப்பதே நல்லுபாயம் என்று நிர்மாணித்திருந்த க்ஷணத்தில் கண்ணபிரான் பதறி ஓடிவந்து புறச்சோலையிலே நின்று தனது ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஊத, அவ்வோசையானது அந்த ருக்மிணிப்பிராட்டியின் செவியிற்புகுந்து எப்படிப்பட்ட ஆநந்தத்தை உண்டாக்கிற்றோ அப்படிப்பட்ட ஆநந்தம் எனக்கு என்றைக்கு உண்டாகும்!; இராவணனானவன் ஸீதையிடம் வந்து இராமபிரான் இறந்தானாக ஒரு பொய்க்கூற்றுக் கூறி மாயாசிரஸ்ஸைக் காட்டினபோது அப்பிராட்டி வருந்திக்கிடக்கும் க்ஷணத்திலே இராமபிரான் கடற்கரையிலே நின்று தனது சார்ங்க வில்லை ஒலிப்பிக்க, அவ்வொலியானது ஸீதையின் செவியிற்புகுந்து எப்படிப்பட்ட ஆநந்தத்தை உண்டாக்கிற்றோ அப்படிப்பட்ட ஆநந்தம் எனக்கு என்றைக்கு உண்டாகும்!-என்கிறாள்.

"இரண்டவதாரத்தில் இரண்டு பிராட்டிமார்க்கு உதவினது தனக்கொருத்திக்கே வேண்டும்படியாயாய்த்து இவள் தசை; சிசுபாலன் ஸ்வயம்வரார்த்தமாக ஒருப்பட்ட ஸமயத்திலே, புறச்சோலையிலே ஸ்ரீபாஞ்சஜந்யகோஷமானது வந்து செவிப்பட்டு தரிப்பித்தது ருக்மிணிப்பிராட்டியை; ராவணன் மாயாசிரஸ்ஸைக் காட்டினபோது ஸ்ரீ சார்ங்கத்தின் ஜ்யாகோஷமானது வந்து செவிப்பட்டு தரிப்பித்தது ஸ்ரீஜநகராஜன் திருமகளை; இரண்டவதாரத்திலுள்ளவையும் மடுத்தொலிக்க வேண்டும்படியாயாய்த்து இவள்விடாய்; அவர்களளவல்ல வாய்த்து இவளாற்றாமை" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியை அநுஸந்திப்பது.

சந்தோகாரகிலும்சுமந்து தடங்கள்பொருது *
வந்திழியும்சிலம்பாறுடை மாலிருஞ்சோலைநின்ற
சுந்தரனை*சுரும்பார்குழற்கோதை தொகுத்துரைத்த*
செந்தமிழ்ப்பத்தும்வல்லார் திருமாலடிசேர்வர்களே. (ய)

| | |
|---|---|
| சந்தொடு | சந்தனக்கட்டைகளையும் |
| கார் அகிலும் | காரகிற்கட்டைகளையும் |
| சுமந்து | அடித்துக்கொண்டு |
| தடங்கள் பொருது வந்து | பலபலகுளங்களையும் அழித்துக்கொண்டோடிவந்து |
| இழியும் | பெருகுகின்ற |
| சிலம்பாறு உடை | நூபுர கங்கையையுடைத்தான |
| மாலிருஞ்சோலைநின்ற சுந்தரனை | திருமாலிருஞ்சோலை மலையிலெழுந்தருளியிருக்கிற அழகரைக்குறித்து |
| சுரும்பு ஆர் குழல்கோதை | வண்டுகள்படிந்த கூந்தல் முடியை யுடையளான ஆண்டாள் |
| தொகுத்து உரைத்த | அழகாக அருளிச்செய்த |
| செம் தமிழ் பத்தும் வல்லார் | செந்தமிழிலாகிய இப்பத்துப்பாசுரங்களையும் ஓத வல்லவர்கள் |
| திரு மால் அடி | ஸ்ரீமந்நாராயண னுடைய திருவடிகளை |
| சேர்வர்கள் | அடையப்பெறுவர்கள். |

இத்திருமொழி கற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டுகிறாள் பிறந்தகத்தில் நின்றும் புக்ககத்துக்குப் போம் பெண்கள் வேண்டிய தனங்களைக் கொண்டுபோமாபோலே சந்தனமரங்களையும் காரகில் மரங்களையும் வேரோடே பறித்து இழுத்துக்கொண்டு, வழியிடையே உள்ள பலபல தடாகங்களையும் அழித்துக்கொண்டு பெருவேகமாக வந்து ப்ரவஹியா நின்ற சிலம்பாற்றையுடைய திருமாலிருஞ்சோலைமலைக்குத் தலைவரான அழகர் விஷயமாகச் சுரும்பார் குழற் கோதை யருளிச்செய்த இப்பத்துப் பாட்டையும் ஓதவல்லவர்கள் தன்னைப் போலே வருந்தாமல் ஸுகமாகத் திருமாலின் திருவடித்தாமரைகளை யணுகி நித்ய கைங்கரிய ஸம்பத்துடனே வாழப்பெறுவர்கள்—என்றாளாய்த்து.

சந்து='சந்தனம்' என்ற வடசொற் சிதைவு. தடங்கள்பொருது = தடம் என்று கரைக்கும் பெயராகையாலே, இருகரையையும் அழித்துக்கொண்டு என்று பொருள் கொள்ளுதலும் ஒன்று. "ஒருமத்த கஜம் கரைபொருதுவருமா போலே" என்றார் பெரியவாச்சான்பிள்ளையும்.

சிலம்பாறு — நூபுரகங்கையென்று வடமொழிப்பெயர்பெறும். திருமால் உலகமளந்தகாலத்தில் மேலே ஸத்யலோகத்திற்சென்ற அப்பெருமானது திருவடியைப் பிரமன் தன் கைக்கமண்டலதீர்த்தத்தாற் கழுவிவிளக்க, அத்திருவடிச் சிலம்பினின்று தோன்றியதனால் சிலம்பாறு என்று பெயராயிற்று. நூபுரகங்கை என்றவடமொழித்திருநாமமும் இதுபற்றியதே. நூபுரம் = சிலம்பு; ஒருவகைக் காலணி.

இனி, இதற்கு ரஸோக்தியாக ஒருபொருள்கூறலாம்; அதாவது—ஆழ்வான், ஸுந்தரபாஹுஸ்தவத்தில், "வகுள தரஸரஸ்வதீ விஷக்தஸ்வரரஸபாவ யுதாஸு கிந்நரீஷு-த்ரவதி த்ருஷதபி ப்ரஸக்தகாநாஸ்விஹ வநசைலதடீஷு

«ஸௌந்தரஸ்ய'' என்றருளிச்செய்தபடி*மரங்களுமிரங்கும்வகை மணிவண்ணவோ வென்றுகூவின ஆழ்வார்பாசுரங்களைக் கின்னரிகள்பாட, அப்பாடலைக்கேட்ட குன்றுகள் உருகிப் பெருகா நின்றமையால் சிலம்பிரறென்றுபெயராயிற்று, சிலம்பு= குன்றுக்கும்பெயர்; ''சிலம்பொலிஞெகிழி குன்றும்'' என்பது சூளாமணிநிகண்டு. இப்பொருளை ரஸோக்திபாகவே கொள்க.

சுரும்பார்குழற்கோதை=தேன்நிறைந்த மலர்களையணிந்த குழல்முடியை யுடைய ஆண்டாள் என்றபடி. ஒருகுழற்கற்றையாலே எம்பெருமானை மயக்கவல்ல வீறுடையளானவிவள் தான் இப்படி மயங்கிவருந்தினளே! என்று கரும் ஈடுபடுவதற்காகச் ''சுரும்பார்குழல்'' என்ற அடைமொழி இட்டுக்கொண்டாளென்க. கோதை=மொழிா; ஸ்ரீஸூக்திகளைத் தந்தவள்.

தொகுத்துஉரைத்த=தொகுத்தல்—ஒழுங்குபடுத்துதல், திரட்டுதலுமாம். அப்பொருளில், எம்பெருமானுடைய கல்யாணகுணங்களைத் திரட்டிப்பாசுரமாக்கி அருளிச்செய்தளன்கை, இத்திருமொழியில் எம்பெருமானுடைய கல்யாணகுணம் விளங்கும்வகை என்? அவன் இவளை இப்படித் தடிக்கவிட்டான் என்கிற பழிப்பு இத்திருமொழியில்விளங்குமேயன்றி அவனது கல்யாணகுணம் விளங்குமோவெனில்; ஸம்ஸாரத்தொல்லைகளில் ஈடுபடுத்தி வருந்தச்செய்யாமல் தன்திறத்தில்ஈடுபடுத்தி வருந்தச்செய்வதைக் கல்யாணகுணங்களிற் சிறந்ததாகக் கொள்ள வேண்டாவோ ? ''வேதாக்ஷராணி யாவந்தி-படிதாநி த்விஜாதிபி:-தாவந்தி- ஹரி நாமாநி கீர்த்திதாநி நஸம்ஶய:'' என்றபடி - வேதத்தில் ஒவ்வோரெழுத்தும் பகவந்நாமமாவதுபோல, அருளிச்செயலில் ஒவ்வோரெழுத்தும் பகவத்குணகர்ப்பிதம்எனக் கொள்க.

அடிவரவு:—சிந்துரப்போர் கருவிளை பைம்பொழில் துங்க நாறு இன்று காலை கோங்கு சந்து கார்க்கோடல்.

ஒன்பதாந் திருமொழி உரை முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# பத்தாந்திருமொழி — கார்க்கோடல் பூக்காள்.

உரையவதாரிகை:—இத்திருமொழியும் கீழ்த்திருமொழியின் சைலியோடு ஒத்திருக்கும். வர்ஷாகாலத்திலே எம்பெருமானுடைய திருவுருவை நினைப்பூட்டிக்கொண்டு வந்துதோன்றின சில புஷ்பவிசேஷங்களைக் கண்டு ஆற்றாதாளாய்ச் சில பாசுரங்கள் பேசுகிறாள், அப்படிப் பேசிக்கொண்டேவந்து, "இனி நாம் எவ்வழியாலே உயிர்தரிக்கப்பெறுவது? பண்டு நமக்கு அநுகூலமாயிருந்த வஸ்துக்களும் இப்போது ப்ரதிகூலங்களாய்விட்டனவே!; "ந த்யஜேயம் கதஞ்சந" [நத்யஜேயம் கதஞ்சந] என்று - எப்போதும் கைவிடுவதில்லையென்பதாகப் ப்ரதிஜ்ஞை பண்ணித் தந்த பெருமானும் கைவிட்டொழிந்தானே!; இனி நாம் ஜீவிப்பது எங்ஙனம்?" என்று சிந்திக்கையில்; "நமக்குப் பெரியாழ்வார் வயிற்றிற்பிறப்பு கிடைத்திருக்கையாலே அதுகொண்டு நாம் உஜ்ஜீவிக்க ப்ராப்தமாயிருக்க இப்படிச் சிந்திப்பதேன்?" என்று ஒருவாறு சிந்தை நீங்கித்தரிக்கும் உபாயமறிந்து அதுதன்னைச் சொல்லி முடிக்கிறாள் இதில். ... ... ... ... ...

கார்க்கோடல்பூக்காள் கார்க்கடல்வண்ணனெம்மேல் * உம்மைப்
போர்க்கோலஞ்செய்து போரவிடுத்தவனெங்குற்றான் *
ஆர்க்கோவினிநாம் பூசலிடுவது * அணிதுழாய்த் *
தார்க்கோடும்நெஞ்சந்தன்னைப் படைக்கவல்லேனந்தோ. (க)

| | | | |
|---|---|---|---|
| கார் கோடல் பூக்காள்! | கறுத்த காந்தள் பூக்களே! | நாம் | (உங்களால் மிகவும் நலிவுபட்ட) நான் |
| உம்மை | உங்களை | இனி | இனிமேல் |
| போர் கோலம் செய்து | யுத்தத்திற்கு உசிதமாக அலங்கரித்து | ஆர்க்கு | யாரிடத்தில்போய் |
| எம்மேல் | என்மேலே (பாயும்படி) | பூசல் இடுவதோ | முறை யிட்டுக்கொள்வதோ! (அறியேன்.) |
| போர விடுத்தவன் | அனுப்பினவனான | அணி | அழகிய |
| கார் கடல் வண்ணன் | கறுத்த கடல்போன்ற வடிவை யுடையவனான கண்ணபிரான் | துழாய் தார்க்கு | திருத்துழாய்மாலையை ஆசைப்பட்டு |
| எங்குற்றான் | எங்கேயிருக்கிறான்? | ஓடும் நெஞ்சம் தன்னை படைக்க வல்லேன் அந்தோ! | ஓடுகின்றநெஞ்சை யுடையவளா யிராநின்றேனே! ஐயோ!! |

கோடல்பூக்கள் என்று ஒருபுஷ்பஜாதி உண்டு; அது காந்தள்பூ என்றுஞ் சொல்லப்படும். அப்புஷ்பங்கள் கார்காலத்திலே மிகுதியாக மலரும். அவை விரஹகாலத்திலே காமுகர்கட்கு மிகவும் உத்தீபகங்களாயிருக்கும்; பலவகைப்பட்ட நிறங்களையுடைய அப்புஷ்பஜாதியில் கரியநிறமுள்ள பூக்களும் உண்டு; அவை எம்பெருமானுடைய திருநிறத்துக்கு ஸ்மாரகங்களாய்க்கொண்டு ஆண்டாளை விசேஷமாக வருத்துகின்றமையால் 'இம்மலர்களை எம்பெருமான் படைத்தது நம்மைக் கொலைசெய்வதற்காகவே போலும்' என்று உறுதியிட்டு அம்மலர்களையே நோக்கிக் கூறுகின்றாள்; "ஓ கோடல்பூக்களே! என்னைக்கொலைசெய்வதற்கென்று உங்களை அழகாகக்கோடித்து அனுப்பின மஹாபாவன் எங்கிருக்கிறான்?" எனவினவுகின்றாள் முன்னடிகளில்.

உண்மையில் அப்புஷ்பங்கள் அசேதநங்களாகையாலே மறுமொழி ஒன்றும் சொல்லாதிருக்கவே, 'அந்தோ! நம்மை இந்தப்பூக்களும் லக்ஷியம்பண்ணுகின்றனவில்லையே; அந்த எம்பெருமானோ வரமாட்டேனென்கிறான்; இவையோ நம்மோடு பேசுகின்றனவில்லை; உசாத்துணை ஆகக்கூடியவர்களும் யாருமில்லை; இனி நாம் ஆர்வீட்டுவாசலிலேபோய் நம் துயரை முறையிட்டு ஆறுவது!' என்கிறாள் மூன்றாமடியில்.

எம்பெருமானுடைய விபூதியடங்கலும் நம்மைநலிவதற்கு அவனுக்குத் துணையாயிருப்பதுபோல, நம்மைச் சேர்ந்த வஸ்துக்களாவது நமக்குத் துணைநிற்குமோவென்று பார்த்தாலோ அதுவுமில்லை; நமக்கு விதேயமாயிருக்கக் கடவதான நெஞ்சம் நம்மை உதறித்தள்ளிவிட்டு அவனுடைய திருத்துழாய் மாலையைநாடி ஓடாநின்றது; இப்படி எல்லாம் பகைபாகப்பெற்றோமே! இஃது என்ன கஷ்டகாலம்! என்கிறாள் ஈற்றடியில். இதனால், எம்பெருமானுடைய விச்லேஷம் தனக்கு அஸஹ்யமாயிருக்கிறபடியையும், அவ்வளவிலும் தனது திருவுள்ளம் பகவத்விஷயத்திலேயே ஈடுபட்டுச் செல்லுகிறபடியையும் அருளிச்செய்தாளாய்த்து.

" கார்க்கோடல்பூக்காள் " என்பதற்கு=கார்காலத்திலே வந்து தோன்றுகின்ற கோடல்பூக்களே ! என்றும், கறுத்த கோடல்பூக்களே ! என்றும், பெருத்த கோடல்பூக்களே! என்றும் மூன்றுவகையாகப் பொருள் கூறுவர். உம்மைப் போர்க்கோலஞ்செய்து என்மேல் போரவிடுத்தகார்க்கடல்வண்ணன் எங்குற்றான்? என்று அந்வயித்துக்கொள்க. ஒவ்வொரு பதார்த்தங்களுக்கும் ரூபநாமங்களை ஏற்படுத்தினவன் எம்பெருமான் என்ற நூற்கொள்கைப்படி இம்மலர்கட்கு நிறங் கொடுத்தவன் எம்பெருமானாதலாலும், அந்தநிறம் இப்போது இவளுடைய ஹிம்சைக்கு உறுப்பாயிருப்பதால் யுத்தஞ்செய்வதற்கு ஏற்ற கோலஞ்செய்து விட்டதுபோன்றிருப்பதாலும் "உம்மைப் போர்க்கோலஞ்செய்து போரவிடுத்தவன்" என்றாள், இந்திரஜித்தைக் கொல்வதற்கு இராமபிரான் இளையபெருமாளை அலங்கரித்து அனுப்பினதுபோலத் தன்னைமுடிப்பதற்காக இவற்றை நிறமூட்டியனுப்பினான் என்றிருக்கிறாள் போலும். 'போதர' என்பது போர என மருவிற்று. போரவிடுத்தல் - அனுப்புதல்.

உங்களை அனுப்பினவன் எங்கேஇருக்கிறான்? என்றகேட்பதற்குக்கருத்து யாதெனில்; ஸுக்ரீவன் இராமபிரானைப் பின்னேஒளித்து நிறுத்திவைத்திட்டு வாலியைச் சண்டைக்கு அழைக்கவந்ததுபோல நீங்களும் எம்பெருமானை ரஹஸ்யமாகத் துணைகொண்டு என்னைச் சண்டைக்கழைக்க வந்திருக்கவேணுமேயன்றி, நீங்கள் மாத்திரம் தனிப்பட்டு வந்திருக்கமாட்டீர்கள்; ஆதலால் அவன் எங்கே பதுங்கிநிற்கிறான்? சொல்லுங்கள் என்கிறாள் என்க.

பூசலிடுவது:—பேரொலிசெய்து முறையிடுவது. ... .... (க).

மேற்றோன்றிப்பூக்காள் மேலுலகங்களின்மீதுபோய் *
மேற்றோன்றுஞ்சோதி வேதமுதல்வர்வலங்கையின் *
மேற்றோன்றுமாழியின் வெஞ்சுடர்போலச்சுடாது * எம்மை
மாற்றோலைப்பட்டவர்கூட்டத்து வைத்துக்கொள்கிற்றிரே. (உ).

| | |
|---|---|
| மேல் தோன்றி பூக்காள் | உயரப்பூத்திருக்கிற காந்தள் பூக்களே! |
| மேல் உலகங்களின் மீது போய் மேல் தோன்றும் சோதி | மேலுள்ள உலகங்களெல்லாவற்றையுங் கடந்து அவற்றுக்கு மேற்பட்டு விளங்குகின்ற 'தன்னுடைச்சோதி,' என்கிற பரமபதத்தில் எழுந்தருளி இருக்கிற |
| வேதம் முதல்வர் | வேதப்ரதிபாத்யனான பரம புருஷனுடைய |
| வலம்கையின் மேல் தோன்றும் | வலத்திருக்கையிலே விளங்காநின்ற |
| ஆழியின் | திருவாழியாழ்வானுடைய |
| வெம் சுடர் போல | வெவ்வியதேஜஸ்ஸு போல |
| சுடாது | தஹியாமல் |
| எம்மை | என்னை |
| மாற்றோலைப் பட்டவர்கூட்டத்து | இந்த ப்ரக்ருதிமண்டலத்தை விட்டுநீங்கினவர்களுடையதிரளில் |
| வைத்துக் கொள்கிற்றிரே | கொண்டு சேர்க்க வல்லீர்களோ? |

கீழ், கோடல்பூக்கள் பண்ணின ஹிம்ஸையைப் பொறுக்கமாட்டாமல் அவற்றில்நின்றும் கண்ணைமீட்டு மேலொருபக்கத்திலே வைத்தாள்; அங்கே, மேல் தோன்றிப்பூக்கள் மலர்ந்துதோன்றின. அவை எம்பெருமானுடைய சிரிப்பைக் கோட்சொல்லிக்கொண்டு நலியவே, அவற்றைநோக்கிக் கூறுகின்றாள். தோன்றிப்பூ என்றாலும், காந்தட்பூ என்றாலும், கோடல்பூ என்றாலும் புஷ்பஜாதியொன்றேயாம்; மேல்தோன்றிப்பூ என்றமையால் கீழ்ப்பாட்டிற்சொன்ன கோடல்பூக்கள் கீழேபடர்கின்றவையென்றும், இவை மேலே படர்கின்றவையென்றும் அவாந்தரபேதம் அறியத்தக்கது; நிலஸம்பங்கி, கொடிஸம்பங்கி என்கிறாப்போலே.

"த்ருஷ்டிவிஷம்போலே கோடல்பூக்கள் பாதகமாகப் புக்கவாறே அவற்றுக்கு இறாய்த்துக் கண்ணை மேலேவைத்தாள்; அங்கே மேல்தோன்றிப்பூக்களாய்க் கிடந்தது; அவற்றைநோக்கி 'மேல்தோன்றிப்பூக்காள்!' என்கிறாள்; அதுக்குத்தப்பினாரையும் அழிக்கக்கடவோமென்று அதுக்கு ஒருபேரும் பெற்று நீங்கள் மேலேபுக்குநிற்பதே!" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்திகாண்க.

மேலுலகங்களின்மீதுபோய் மேல்தோன்றுஞ்சோதி என்றது—பரமபதமாகிற சோதிமிக்க இடத்தையாம். அவ்விடத்திலே எழுந்தருளியிருக்கின்ற வேதவேத்யனான பரமபுருஷனுடைய வலத்திருக்கையின்மேல் விளங்குகின்ற திருவாழியாழ்வானுடைய வெவ்விய சுடர் ஆச்ரிதசத்ருக்களை தஹிப்பதுபோல, என்னை நீங்கள் தஹிக்கவேண்டாவென்று வேண்டிக்கொள்ளுகிறாள். இதனால், மேல்தோன்றிப்பூக்களின் தாபம் அஸஹ்யமாயிருத்தல் சொல்லிற்றாயிற்று.

எம்மை மாற்றோலைப்பட்டவர் கூட்டத்து வைத்துக்கொள்கிற்றிரே= கைவல்யமோக்ஷாநுபவம் பண்ணுகிறவர்களுடைய கோஷ்டியிலேயாவது என்னைக் கொண்டுபோய் வைப்பீர்களாவென இரக்கிறாளென்று திருமலைநம்பி அருளிச்செய்வராம். இவள் விச்லேஷத்தாலே மிகவும் நொந்துபோனபடியாலே, 'நமக்கு பகவதநுபவம் கிடைக்காமற்போனாலும் போகிறது; இந்த சரீரம் கழிந்தால் போதும்; அதுவே பரமஸுகம்,' என்று நினைத்து இங்ஙனே கூறுகின்றாள்போலும். "மாற்றோலைப்பட்டவர்" என்றால் கைவல்யமோக்ஷநிஷ்டர்களை எப்படிச் சொல்லுமென்னில்; பகவதநுபவத்துக்கு மாறானவர்கள் என்று ஓலைப்பட்டவர்கள்-கேவலர் எனக்கொள்க: (ஓலைப்பட்டவர்கள்=ஓலையில் எழுதப்பட்டவர்கள்.)

கேவலர்கள் தனித்தனியாக ஆத்மாநுபவம் பண்ணுமவர்களேயன்றி, ஒரு கூட்டமாக இருந்து அநுபவம் பண்ணமாட்டாதவர்களாகையாலும், இங்கு "கூட்டத்து" என்று அருளிச்செய்திருப்பதாலும் அந்த அர்த்தம் அவ்வளவு ஸ்வரஸமல்லவென்று எம்பார் வேறுவகையாக அருளிச்செய்வராம்—மாற்றோலைப் பட்டவர்கூட்டமாவது அடியார்கள் குழாங்களாம்; என்னை நித்யமுக்தர்களின் திரளின்நடுவே கொண்டுபோய் வைப்பீர்களாவென்கிறாள் என்று அருளிச்செய்வராம். இப்போது, மாற்றோலைப்பட்டவர் என்கிறது - ஸம்ஸாரத்திலிருந்து ஓலை மாற்றப்பட்டவர் என்றபடி.

அன்றியே: "மாற்றோலைப்பட்டு - அவர்கூட்டத்து" என்றும் பிரித்து உரைப்பர் சில ஆசிரியர். யமன் தனது தூதர்களை நோக்கி 'இன்னானைப் பிடித்து என்னிடம்கொண்டுவாருங்கள்' என்றுசொல்லி ஓலைச்சாசனம் எழுதித்தந் தனுப்பினால், சிலஸமயங்களில் அத்தூதர்கள் மாறுபாடாக வேறொருவனைப் பிடித்துக் கொண்டுபோய்விடுவதுண்டு; அப்படியே, இப்போது இவ்வாண்டாளை ஹிம்ஸிக்கும்படியாக இப்புஷ்பங்கள் எம்பெருமானால் நியமித்தனுப்பப்பட்டிருந்தாலும் அந்நியமநத்தை மாற்றி இவளைக்கொண்டுபோய் அவ்வெம்பெருமானுடைய கோஷ்டியிலே நிறுத்திவிடக்கூடுமென்கிற எண்ணத்தினால், ஓ! மேல்தோன்றிப் பூக்களே! என்னை ஹிம்ஸிக்கவேணுமென்கிற பகவதாஜ்ஞையைமாற்றி அவ்வெம் பெருமானுடைய கோஷ்டியிலே என்னைக்கொண்டுபோய் நிறுத்துங்கள்! என்கிறாளென்க. இப்பக்ஷத்தில், மாற்றோலைப்பட்டு —ஓலைமாற்றப்பட்டு - அவருடைய ஆஜ்ஞையைமாற்றி என்கை. இன்னும் பலபடியாகவும் பொருள்கொள்ள இடமுண்டு. ... ... ... ... ... ... ... (௨)

கோவைமணாட்டி நீயுன்கொழுங்கனிகொண்டு * எம்மை
ஆவிதொலைவியேல் வாயழகர்தம்மையஞ்சுதும் *
பாவியேன்தோன்றிப் பாம்பணையார்க்குந்தம்பாம்புபோல் *
நாவுமிரண்டுளவாய்த்து நாணிலியேனுக்கே. (௫)

| | | | |
|---|---|---|---|
| கோவை மணாட்டி! | அம்மா! கோவைக் கொடியே! | அஞ்சுதும் | பயப்படாநின்றேன்! |
| நீ | நீ | பாவியேன் | பாவியானநான் |
| உன் | உன்னுடைய | தோன்றி | பிறந்தபின்பு |
| கொழுங்கனி கொண்டு | அழகியபழங்களாலே | நாணிலியேனுக்கு | லஜ்ஜை யற்றவளான என் விஷயத்திலே |
| எம்மை | என்னுடைய | பாம்பு அணையார்க்கும் | சேஷ சாயியான பெருமானுக்கும் |
| ஆவி | உயிரை | தம் பாம்பு போல் | தமது படுக்கையான திருவனந்தாழ்வானுக்குப் போல |
| தொலைவியேல் | போக்கலாகாது; | நாவும் இரண்டு உள ஆயிற்று | இரண்டு நாக்குகள் உண்டாயின. |
| வாய் அழகர் தம்மை | அழகியவாய்படைத்த பெருமான்விஷயத்திலே | | |

மேற்புறங்களில் நின்றும் கண்ணை மீட்டுப் பக்கங்களில் நோக்கினாள், அங்கே ஒருசெடியிலே கோவைக்கொடி படர்ந்து பழுத்துக்கிடந்தன; அவற்றை நோக்கிப் பேசுகின்றாள். கோவைக்கனிகள் எம்பெருமானுடைய திருவதரத்திற்கு ஸ்மாரகங்களாயிருப்பவையாதலால் அவ்வழியாலே அவை தன்னை நலியவே அந்த நலிவுபொறுக்கமாட்டாமற் சொல்லுகிறாளென்க.

கீழ்ப்பாட்டுக்களில் "கார்க்கோடல்பூக்காள்!" என்றும் "மேல்தோன்றிப்பூக்காள்!" என்றும் சொன்னதுபோல் இப்பாட்டிலும் 'கோவைக்கொடிகாள்!' என்றாவது, 'கோவைக்கனிகாள்!' என்றாவது சொல்லாமல் கோவைமணாட்டி! என்றதென்னென்னில்; "கொடியாகையாலே ஸாபத்ந்யத்தாலே நலிந்தாப்போலேயிருக்கின்றது" என்றருளிச்செய்வர் பெரியவாச்சான்பிள்ளை. வடமொழியில் கொடிக்கு வாசகமாகிய லதா; வல்லீ முதலிய ஶப்தங்கள் ஸ்திரீலிங்கமாதல் அறிக. ஸ்த்ரீகளைக் கொடிகளாகவே கூறுதலும் வழக்கம். இனி, மணாட்டி என்று மணமுண்டானமை சொல்லிற்றாகவுமாம். அதாவது—பரிமளத்தை யுடைத்தாகை.

ஓ! கோவைக்கொடியே! நீ உனது சிறந்தகனிகளைக்காட்டி என் உயிரைச் சிதைக்கவேண்டா; உன் கனிகளைக்காணும்போதே திருமாலிருஞ்சோலையழகருடைய திருவதரம் நினைவுக்குவந்து மிகவும் தளர்ந்தொழிவேன்; அதுபற்றி எனக்கு மிகவும் அச்சமாயிருக்கிறது என்கிறாள் முன்னடிகளில்.

"[illegible]" [அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி] என்று அபயப்ரதானம் பண்ணியருளினவன் விஷயத்திலே பயப்படப்ரஸக்தியேது? என்று அதை கேட்கக்கூடுமென்றுகொண்டு, அவ்வெம்பெருமானுடைய வாக்கு என்னளவில் பொய்யாய்விட்டதென்கிறாள் பின்னடிகளில், பாவியான நான் பிறப்ப

கோவைமணாட்டி நீயுன்கொழுங்கனிகொண்டு * எம்மை
ஆவிதொலைவியேல் வாயழகர் தம்மையஞ்சுதும் *
பாவியேன்தோன்றிப் பாம்பணையார்க்குந்தம்பாம்புபோல் *
நாவுமிரண்டுளவாய்த்து நாணிலியேனுக்கே. (ரு)

| | |
|---|---|
| கோவை மணாட்டி! | அம்மா! கோவைக் கொடியே!! |
| நீ | நீ |
| உன் | உன்னுடைய |
| கொழுங்கனி கொண்டு | அழகியபழங்களாலே |
| எம்மை | என்னுடைய |
| ஆவி | உயிரை |
| தொலைவியேல் | போக்கலாகாது; |
| வாய் அழகர் தம்மை | அழகியவாய்படைத்த பெருமான்விஷயத்திலே |
| அஞ்சுதும் | பயப்படாநின்றேன்! |
| பாவியேன் | பாவியானநான் |
| தோன்றி | பிறந்தபின்பு |
| நாணிலியே னுக்கு | லஜ்ஜை யற்றவளான என் விஷயத்திலே |
| பாம்பு அணை யார்க்கும் | சேஷ சாயியான பெமா ளுக்கும் |
| தம் பாம்பு போல் | தமது படுக்கையான திரு வனந்தாழ்வானுக்குப் போல |
| நாவும் இரண்டு உள ஆயிற்று | இரண்டு நாக்குகள் உண் டாயின. |

மேற்புறங்களில் நின்றும் கண்ணைமீட்டுப் பக்கங்களில் நோக்கினாள், அங்கே ஒருசெடியிலே கோவைக்கொடிபடர்ந்து பழுத்துக்கிடந்தன: அவற்றை நோக்கிப் பேசுகின்றாள். கோவைக்கனிகள் எம்பெருமானுடைய திருவதரத்திற்கு ஸ்மாரகங்களாயிருப்பவையாதலால் அவ்வழியாலே அவை தன்னை நலியவே அந்த நலிவுபொறுக்கமாட்டாமற் சொல்லுகிறாளென்க.

கீழ்ப்பாட்டுக்களில் "கார்க்கோடல்பூக்காள்!" என்றும் "மேல்தோன்றிப்பூக்காள்!" என்றும் சொன்னதுபோல் இப்பாட்டிலும் 'கோவைக்கொடிகாள்!' என்றாவது, 'கோவைக்கனிகாள்!' என்றாவது சொல்லாமல் கோவைமணாட்டி! என்றதென்னென்னில்; "கொடியாகையாலே ஸாபத்ந்யத்தாலே நலிந்தாப்போலேயிராநின்றது" என்றருளிச்செய்வர் பெரியவாச்சான்பிள்ளை. வடமொழியில் கொடிக்கு வாசகமாகிய லதா, வல்லீ முதலிய சப்தங்கள் ஸ்திரீலிங்கமாதல் அறிக. ஸ்த்ரீகளைக் கொடிகளாகவே கூறுதலும் வழக்கம். இனி, மணாட்டி என்று மணமுண்மை சொல்லிற்றாகவுமாம். அதாவது—பரிமளத்தை யுடைத்தாகை.

ஓ! கோவைக்கொடியே! நீ உனது சிறந்தகனிகளைக்காட்டி என்உயிரைச் சிதைக்கவேண்டா; உன்கனிகளைக்காணும்போதே திருமாலிருஞ்சோலையழகருடைய திருவதரம் நினைவுக்குவந்து மிகவும் தளர்ந்தொழிவேன்; அதுபற்றி எனக்கு மிகவும் அச்சமாயிருக்கிறது என்கிறாள் முன்னடிகளில்.

"అభయం సర్వభూతేభ్యో దదామి" [அபயம் ஸர்வபூதேப்யோ ததாமி] என்று அபயப்ரதானம் பண்ணியருளினவன் விஷயத்திலே பயப்படப்ரஸக்தியேது? என்று அவை கேட்கக்கூடுமென்றுகொண்டு, அவ்வெம்பெருமானுடைய வாக்கு என்னளவில் பொய்யாய்விட்டதென்கிறாள் பின்னடிகளில். பாவியான நான் பிறப்ப

நற்குமுன் அவன் "ஒன்றேயுரைப்பான் ஒருசொல்லே சொல்லுவான்" என்னும் ஸத்யவாக்காயிருந்தானாகிலும், நான் தோன்றினபிறகு என்னுடையபாவத்தினால் அவன் அஸத்யவாக்காய்விட்டான். சொல்வதொன்றும் செய்வதொன்றுமாய்விட்டான், நாக்கு ஒன்றாயிருந்தாலன்றோ சொல்லும் செய்கையும் ஒன்றாயிருக்கும்: இரட்டை நாக்குப் படைத்தவனை திருவனந்தாழ்வானோடு இடைவிடாதசேர்த்தியாலே இவனும் அவனைப்போலே இரண்டுநாக்குப்பெற்றானாயினன்; 'அபயம் ததாமி'' [அபயம் ததாமி] என்ற நாக்கு இப்போது இல்லை என்கிறாள்.

தம்பாம்புபோல்='த்விஜிஹ்வ:' என்றும், 'த்விரஸந:' என்றும்சொல்லப்படுமிறே பாம்பு. [நாவும்இரண்டுளவாயிற்று.] நாக்கு ஒன்றாயிருந்தால் வாக்கும் ஒன்றாயிருக்கும்; வாக்கு இரண்டுபட்டபடியால் நாக்கும் இரண்டாய் விட்டதென்றிருக்கிறாள்.

நாணிலியேனுக்கே=நான்தவிர மற்றபேர்கள் விஷயத்தில் அவன ஸத்யவாக்காகவே இருக்கக்கூடும். வெட்கங்கெட்ட என்விஷயத்தில் மாத்திரமே அவன் த்விஜிஹ்வனாய்விட்டானென்கிறாள். இப்படி அவன் பொய்யனாயிருக்கச்செய்தேயும் தான் அவனையே வாய்வெருவாநின்றமைபற்றித் தன்னை வெட்கமற்றவளாகச் சொல்லிக்கொள்ளுகிறாள். ... ... ... ... ... .... (௯)

முல்லைப்பிராட்டி நீயுன்முறுவல்கள்கொண்டு * எம்மை
அல்லல்விளைவியேல் ஆழிநங்காயுன்னடைக்கலம் *
கொல்லையரக்கியைமூக்கரிந்திட்ட குமரனார்
சொல்லும்பொய்யானால்* நானும்பிறந்தமைபொய்யன்றே. (௰)

| | | | |
|---|---|---|---|
| முல்லைப் பிராட்டி! | அம்மா! முல்லைக் கொடியே! | உன் அடைக்கலம் | (இதற்காக) உன்னைச் சரண மடைகிறேன்; |
| ஆழி நங்காய்! | கம்பீரமான இயல்வை யுடையாய்! | கொல்லை அரக்கியை | வரம்புகடந்தவளான சூர்ப்பணகையை |
| நீ | நீ | மூக்கு அரிந்திட்ட | மூக்கறுத்துத் துரத்தின |
| உன் முறுவல்கள் கொண்டு | (எம் பெருமானது முறுவல்போன்ற) உனது விகாஸத்தாலே | குமரனார் | சக்ரவர்த்தி திருமகனுடைய |
| எம்மை | என் விஷயத்திலே | சொல்லும் | வார்த்தையே |
| அல்லல் விளைவியேல் | வருத்தத்தை உண்டாக்க வேண்டா; | பொய் ஆனால் | பொய்யாய் விட்டால் |
| | | நான் பிறந்தமையும்பொய் அன்றே | நான் பெரியாழ்வார் வயிற்றில் பிறந்ததும் பொய்யாகக் கடவதன்றோ. |

கோவைக்கொடியில் நின்றும் கண்ணைத்திருப்பி வேறோரிடத்தே வைத்தாள்; அங்கே முல்லையானது நன்றாகப் பூத்துக்கிடந்தது; அதைக்கண்டவாறே, எம்பெருமானுடைய முறுவல் நினைவுக்கு வரவே ஆற்றமாட்டாதாளாய் அதின் காலிலே விழுகிறாள்.

வழிபறிக்கவந்த கள்ளனைக்கண்டால் 'பிரானே! நாயனே! அப்பனே!' என்னுமாபோலே முல்லைப்பிராட்டி என்கிறாள். அம்மா முல்லைக்கொடியே! கோடல்பூக்களுக்கும் மேல்தோன்றிப் பூக்களுக்கும் கோவைக்கொடிக்கும் ஒருவாறு தப்பிப் பிழைத்தோமென்று நான் மகிழ்ந்திருக்கையில், நீ உன்விகாஸத்தைக்காட்டி என்னைத் துன்பப்படுத்துவது தகுதியோ? இனி இப்படி என்னைத் துன்பப்படுத்தாதே; உன்காலிலேவிழுந்து உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன், என்னை ஹிம்ஸிக்கவேண்டாமம்மா! என்கிறாள் முன்னடிகளில்.

ஆழி நங்காய்! = ஆழியென்றதனால் - காம்பீர்யமுடைமை சொல்லப்படுகிறது; நங்காய் என்றதனால் - பரிபூர்த்தி சொல்லப்படுகிறது. உலகில் துதிப்பவர்கள் இப்படிப்பட்ட குணங்களையிட்டுத் துதிப்பது வழக்கமாதலால் ஆண்டாளும் இம்முல்லைக்கொடியை அங்ஙனே துதிக்கின்றாளென்க. இனி, ஆழி என்றதனால் - வட்டமாயிருக்குந்தன்மை சொல்லிற்றாகவுமாம். முல்லைச்செடியை முட்டாக்கிட்டாற்போல் புஷ்பங்கள் வட்டமாகப் பூத்திருக்குமிறே.

இவள் பெரியாழ்வார் திருமகளாயிருந்துவைத்து எம்பெருமானையும் தன்காற்கீழே விழத்தவேண்டியிருக்க இவள்போய் அசேதநங்களின் காலிலே விழும்படி என்னே! என்று சிலர் நினைக்கக்கூடுமென்றெண்ணி, "எனக்குப் பெரியாழ்வார் திருவயிற்றிற் பிறப்பு அகிஞ்சித்கரம்" என்கிறாள் பின்னடிகளில்.

கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் - இராமபிரான்; அவருடைய சொல்லாவது — "மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந" [மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந] அதாவது - ஒருவன் மெய்யான அன்போடு என்னை வந்து பற்றுவிட்டாலும் அன்பன்போல் பாவனை செய்துகொண்டு வந்துசேர்ந்தானேலும் அவனையும் நான் ஒருநிலத்திலும் கைவிடமாட்டேன் - என்ற வார்த்தை. இரவுபகல் மாறுடினாலும் என்னுடைய வார்த்தையானது எந்த க்ஷணத்திலும் எள்ளளவும் மாறுடமாட்டாது என்ற அவருடைய வார்த்தையே என்னளவில் பொய்யாய்விட்டபோது, பெரியாழ்வார் வயிற்றிற் பிறப்பா எனக்குக் கார்யகரமாகப்போகிறது? என்று அதிலும் அதிசங்கிக்கிறாள்.

கொல்லையரக்கி என்றது—வரம்பு அழிந்தசெயலையுடையவள், அதாவது - மரியாதையைத் தப்பி நடந்தவள் என்றபடி. பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு பெருமானைப்பற்றி உய்ந்து போகலாமாயிருக்க அங்ஙன் செய்யாதே பிராட்டியின்மீது விபரீதமான எண்ணங்கொண்டு அவளை விழுங்கப் போனாளிறே.

சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு பொறுக்கமுடியாத துக்கத்தோடும் பரிபவத்தோடும் கதறிக்கொண்டு போகிறவள், பெருமானை மனம்போனபடியே நிந்திக்கவேண்டி யிருக்கச்செய்தேயும் "தருணௌ ரூபஸம்பந்நௌ" என்று பருவத்துக்கும் அழகுக்கும் தோற்றுப்போனமை தோற்றப் பேசினாளாகையாலே "அரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார்" என்கிறாள்.

"குமரனார் சொல்லும் பொய்யானால் நானும் பிறந்தமை பொய்யன்றே" என்றதற்கு - "அப்பெருமானுடைய வார்த்தை பொய்யாய்விட்டாலும் என் பிறப்பு பொய்யாய்விடாதிறே" என்று பொருள் சொல்லலாமாயினும் வியாக்கியானத்திற்குச் சேராது.—"பொய்யன்றே என்றது பொய்யாமிறே என்கை" என்றிறே பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்தது. அன்றே = அன்றோ என்றபடி. ... ... .... .... (ச)

பாடும்குயில்காள் ஈதென்னபாடல்*நல்வேங்கட
நாடர்நமக்கொருவாழ்வுதந்தால் வந்துபாடுமின்*
ஆடும்கருளக்கொடியுடையார் வந்தருள்செய்து*
கூடுவராயிடில் கூவிநம்பாட்டுக்கள்கேட்டுமே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| பாடும் குயில்காள்! | பாடுகின்ற குயில்களே! | ஆடும் | (ஆநந்தத்தாலே) ஆடுகின்ற |
| ஈது | (கர்ண கடோரமான) இக்கூசல் | கருளன் | பெரியதிருவடியை |
| என்ன பாடல்? | என்னபாட்டு; | கொடி உடையார் | த்வஜமாகக் கொண்டிருக்கிற அப்பெருமான் |
| நல் வேங்கடம் நாடர் | விலக்ஷணமான திருவேங்கடமலையை இருப்பிடமாகவுடைய பெருமான் | அருள் செய்து | க்ருபைபண்ணி |
| நமக்கு | என் விஷயத்திலே | வந்து கூடுவார் ஆயிடில் | (இங்கே) வந்து சேர்வானாகில் |
| ஒரு வாழ்வு தந்தால் | ஒரு வாழ்ச்சியைப் பண்ணிக்கொடுப்பனாகில் | கூவி | (அப்போது உங்களை) வரவழைத்து |
| | (அப்போது) | நம் பாட்டுக்கள் | உங்களது பாட்டுக்களை |
| வந்து பாடுமின் | (நீங்கள் இங்கே) வந்து பாடுங்கள்; | கேட்டும் | கேட்போம். |

எந்தப்பக்கம் நோக்கினாலும் ஒவ்வொரு புஷ்பம் கண்ணிலே தோற்றி ஹிம்ஸகமாயிருந்தபடியாலே 'கண்ணைமூடிக் கொண்டோமாகில் சுகப்படலாம்' என்று நினைத்துக் கண்ணை மூடிக்கொண்டாள். உடனே குயில்களின் பாட்டுக்கள் செவிப்பட்டன. அவற்றைக்கேட்டுத் தரிக்கமாட்டாதவளாய் அக்குயில்களை நோக்கி 'நீங்கள் ஏன் இப்படி கர்ணகடோரமாகக் கத்துகின்றீர்கள்? போரும் போரும்; உங்கள்பாட்டை நிறுத்துங்கள்' என்கிறாள்.

இரண்டருகும் நெருப்புப்பரப்பி யெரியா நிற்கச்செய்தே நடுவேயிருந்து சந்தனம் பூசுவாரைப்போலே யிருந்ததீ!; உங்கள் பாட்டைக் கேட்கும்படியாகவோ இப்போது என்னுடைய தசையிருப்பது; ஐயோ! என்னபாட்டுப் பாடுகிறீர்கள். ஸம்ஶ்லேஷரஸாநுபவம் செல்லும்போது பாடத்தக்க பாட்டுக்களை நீங்கள் விஶ்லேஷத்தில் பாடாநின்றீர்களே!; பாவிகாள்! பாடினது போரும்; எம்பெருமான் இங்கேயெழுந்தருளி என்னை வாழ்விக்குங் காலம் வாய்க்குமாகில் அப்போது நீங்கள் இங்குவந்து ஆசைதீரப் பாடுங்கள் என்கிறாள் முன்னடிகளில்.

"எம்பெருமான்" என்று பொதுப்படையாகச் சொல்லாமல் "நல்வேங்கடநாடர்" என்று சிறப்பித்து அருளிச்செய்துள்ளமையால், அந்தஸ்வாரஸ்யத்துக்கு இணங்கப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்கிறார்—"ஆற்றுப் பெருக்கில் முன்னே சிறியாறுபடுமாபோலே அவன் வரவுக்குறுப்பான நற்குறிகள் உண்டாயிராநின்றன; அது பலித்தால் வந்துபாடப்பாரிகோள். ஆச்ரிதர்க்கு அருமைப்படவேண்டாதபடி வந்து நிற்கிறவராய்த்து. பரமபதம் கலவிருக்கையாயிருக்க, அத்தைவிட்டுத் திருமலையிலே வந்து முகங்காட்டினார். ஸ்ரீவில்லிபுத்தூரிலேபோலேயிருக்கது பயணம்."

நமக்கோருவாழ்வுதந்தால் என்றது - உங்கள்பாட்டைக் கேட்கும்படியான காலத்தை எனக்குத் தந்தால் என்றபடி: இப்போது ஸர்வேந்த்ரியங்களும் அவனாலே அபஹரிக்கப்பட்டு அழிந்துகிடக்கின்றமை அறிக. வந்துபாடுமின்=இப்போது உங்களுடைய காட்சி எனக்கு அஸஹ்யமாயிருக்கையாலே ஒழிந்துபோங்கள் என்றபடி.

வேங்கடநாடர் வந்து உனக்கு வாழ்வுகொடுக்கும் ஸமயம் எங்களுக்கு எப்படித்தெரியும்? தெரிந்தாலன்றோ அந்த ஸமயத்தில் நாங்கள் வந்து பாடக்கூடும் என்று அக்குயில்கள் கேட்பனவாகக்கொண்டு கூறுகின்றாள் [ஆடுங்கருளக்கொடியுடையார் இத்யாதி]—அவருடைய வரவுக்கு ஸூசகமாகப் பெரிய திருவடி நாயனார் சிறகைவிரித்துக் கூத்தாடிக்கொண்டு வருவர்; அந்த அடையாளத்தைக் கொண்டே நீங்கள் தெரிந்துகொள்ளலாம். அப்படி நீங்கள் தெரிந்துகொள்ளாவிட்டாலும் அப்போது நானே உங்களை வரவழைத்து உங்கள் பாட்டைக்கேட்பேன் போங்கள் என்கிறாள். .... ... ... ... .... (௫)

கண்மாமயில்காள் கண்ணபிரான்திருக்கோலம்போன்று *
அணிமாநட்டம்பயின்றுஆடுகின்றீர்க்கு அடிவீழ்கின்றேன் *
பணமாடரவணைப் பற்பலகாலமும்பள்ளிகொள் *
மணவாளர்நம்மைவைத்த பரிசிதுகாண்மினே. (௬)

| | |
|---|---|
| கண மா மயில்காள்! | கூட்டமாயிருக்கிற சிறந்தமயில்களே! |
| கண்ணபிரான் | கண்ணபிரானுடைய |
| திருக்கோலம் போன்று | அழகிய வடிவு போன்ற வடிவையுடையீராய்க்கொண்டு |
| அணி மா நட்டம் பயின்று | அழகிய சிறந்த நாட்டியத்திலேபழகி |
| ஆடுகின்றீர்க்கு | ஆடுகின்ற உங்களுடைய |
| அடி | திருவடிகளிலே |
| வீழ்கின்றேன் | ஸேவிக்கின்றேன்; (இந்நாட்டத்தை நிறுத்துங்கள்.) |
| பணம் ஆடு அரவு அணை | படமெடுத்து ஆடுகின்ற திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே |
| பல்பல காலமும் | காலமுள்ளதனையும் |
| பள்ளி கொள் | பள்ளி கொண்டருளாநின்ற |
| மணவாளர் | அழகியமணவாளப் பெருமாள் |
| நம்மை வைத்த பரிசு | எனக்கு உண்டாக்கித் தந்த லக்ஷணம் |
| இது காண்மின் | இப்படி உங்கள் காலிலே விழும்படியானதாயிற்று. |

சிலமயில்கள் கூட்டங்கூட்டமாக இருந்துகொண்டுகூத்தாடுவதைக்கண்டு தரிக்கமாட்டாதாளாய் 'இக்கூத்தாடுதலை நிறுத்துங்கள், உங்கள்காலிலேவிழுகி றேன்' என்கிறாள்.

" நின்றுடுகணமயில்போல் நிறமுடையநெடுமால் " [பெரியாழ்வார்திரு மொழி] என்னப்பட்ட எம்பெருமானுக்கு இவை ஸ்மாரகங்களாய்க்கொண்டு நலி கிறபடியால் " கண்ணபிரான் திருக்கோலம்போன்று " என்கிறாள். அடிவீழ்கின் றேன் = இக்கூத்து ஒழியவேணுமென்று ப்ரபத்திபண்ணுகிறேனென்றபடி.

இப்படி இவள்சொன்னவாறே, அந்தோ! பெரியாழ்வார் திருமகளாகப் பெற்ற பெருமைவாய்ந்த நீ இப்படிச்சொல்லத்தகுமோ? உன்காலிலேயன்றோ நாங் கள் விழக்கடவோம்" என்று அம்மயில்கள் சொல்லவனவாகக்கொண்டு, கூறுகின் றாள் [பணமாடரவணைப்பத்தி] "சென்றால்குடையாம் இருந்தால் சிங்காசன மாம்" என்றபடி திருவனந்தாழ்வானை ஸர்வப்ரகாரங்களாலும் அடிமைகொண்டு சிறப்பிக்குமவர் என்னை உங்கள்காலிலே விழும்படிசெய்த பின்பு நான்செய்யலாவ துண்டோ? என்கிறாள்.

" பணவாளரவணை " என்றும்பாடமுண்டு; அப்பாடத்தில், படங்களையும் ஒளியையுமுடைய அரவு என்க. வாள்—ஒளி. ... ... ... (சு)

நடமாடித்தோகைவிரிக்கின்ற மாமயில்காள் * உம்மை
நடமாட்டங்காணப் பாவியேன்நானோர்முதலிலேன் *
குடமாடுகூத்தன் கோவிந்தன்கோமிறைசெய்து * எம்மை
யுடைமாடுகொண்டான் உங்களுக்கினியொன்றுபோதுமே. (எ)

| | | | |
|---|---|---|---|
| நடம் ஆடி | கூத்தாடிக்கொண்டு | கோவிந்தன் | கோபாலக்ருஷ்ணன் |
| தோகை விரிக்கின்ற | தோகைகளை விரிக்கிற | கோமிறை செய்து | கேட்பாரற்ற மிறுக்குக்களைப்பண்ணி |
| மா மயில்காள் | சிறந்தமயில்களே! | எம்மை | என்னை |
| உம்மை | உங்களுடைய | உடை மாடு கொண்டான் | ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினான்; |
| நடம் ஆட்டம் காண | கூத்தைப்பார்ப்பதற்கு | இனி | இப்படியிருக்க |
| பாவியேன்நான் | பாவியானநான் | ஒன்று | (என் முன்னே கூத்தாடி என்னைஹிம்ஸிக்கையாகிற) ஒருகாரியம் |
| ஓர் முதல் இலேன் | ஒரு கைம்முதலுடையேனல்லேன்; | உங்களுக்கு | உங்களுக்கு |
| குடம் ஆடு கூத்தன் | குடக்கூத்தாடினவனை | போதுமே | தகுமோ? |

'உங்கள் கூத்தைநிறுத்துங்கள்' என்றுமயில்களின்காலிலே இவள் விழுந்து வேண்டிக்கொள்ளவே, அம்மயில்கள் இவளுடைய எளிமையை நன்கு தெரிந்து கொண்டு 'இவளுக்கு நாம் அநிஷ்டமானதைச் செய்தால் நம்மை இவள் தண்டிப் பளோவென்று நாம் அஞ்சவேண்டா; இவள் புகலற்றுக்கிடக்கின்றாள்; இவளை

நாம் எப்படி ஹிம்ஸித்தாலும் கேட்பாரில்லை ' என்று எண்ணி முன்னிலும் அதிகமாகத் தோகைகளை விரித்துக் கூத்தாடத்தொடங்கின; அவற்றைநோக்கி மீண்டும் தன் அவஸ்தையை முறையிட்டுக்கொள்கிறாள்.

நடமாடித் தோகை விரிக்கின்ற மாமயில்காள் = தோகைவிரித்து நடமாடுகின்ற மாமயில்காள்! என்க. உள்ளபடியே அசைவிப்பதும் ஒக்கும். [உம்மை இத்யாதி.] கண்ணுடையவர்கள் உங்கள்கூத்தைக் கண்டால் பரமாநந்தம் பெறுவர்கள் என்பதில் தட்டில்லை; கண் இழந்திருக்கிறநான் உங்கள் கூத்தை காண்கிலேனோ காணவல்லேன்.? முதல் இலேன் என்றது-காண்பதற்கு முக்யஸாதநமான கண்ணை யுடையேனல்லேன் என்றபடி. "என்ஐம்புலனும் எழிலுங்கொண்டு" என்றபடி-எல்லா இந்திரியங்களையுங் கொள்ளைகொண்டானிறே எம்பெருமான்.

" பாவியேன் நானோர்முதலிலேன் " என்றுசொன்னதை விரித்துரைக்கின்றாள் பின்னடிகளில். நாற்சந்தியிலே குடக்கூத்தாடி அக்கூத்திலே எல்லாரையும் ஈடுபடுத்திக்கொண்டவனாய், பசுக்களுக்கும் இடையர்க்குங்கூட ஸுலபனானவன், ஸ்வதந்த்ரர்பண்ணும்படியான பிறக்குக்களை என்விஷயத்திலே பண்ணி என்னுடைய ஸர்வஸ்வத்தையும் கொள்ளைகொண்டான்; இப்படிப்பட்ட தசையிலே நீங்களும் என்னை வந்து ஹிம்ஸிப்பது தகுதியோ? என்கிறாள்.

கோமிறை = கோ—அரசர்கள்; மிறை-மிறுக்கு; அரசர்கள்செய்யும்படியான மிறுக்காவது-ஈரநெஞ்சு இளநெஞ்சு இல்லாமல் புரியுங் கொடுமைகள். கொடுமைகள். கோக்கள் மிறுக்குசெய்யுமாபோலே செய்து என்றபடி. அரசர்கள் எதுசெய்தாலும் கேட்பாரில்லையே.

[எம்மையுடை மாடு கொண்டான்.] எம்மை-எங்களுடைய, உடை—ஆடையையும், மாடு—செல்வத்தையும், கொண்டான் என்றும்; எம்மையுடை—எங்களுடைய, மாடு—ஸர்வஸ்வத்தையும் என்றும் பொருள்கொள்ளலாம், ' மாடு பொன் பக்கஞ் செல்வம் " என்பதிகண்டு அறிபத்தக்கது. திருவாய்மொழியில் "மாலுக்கு வையமளந்தமணாளற்கு" என்ற திருவாய்மொழியிற் கூறியபடி எல்லாவற்றையும் இழந்துகிடக்கிற என்னை நீங்களும் நலிகை ப்ராப்தமன்று என்கிறாள்.

மழையேமழையேமண்புறம்பூசி உள்ளாய்நின்ற
மெழுகூற்றினாற்போல் * ஊற்றுநல்வேங்கடத்துள்நின்ற *
அழகப்பிரானார்தம்மை யென்னெஞ்சத்தகப்படத்
தழுவநின்று * என்னைத்ததைத்துக்கொண்டு ஊற்றவும்வல்லையே. (அ)

| | |
|---|---|
| மழையே மழையே | ஓமேகமே! |
| புறம் | மேற்புறத்திலே |
| மண் பூசி | மண்ணைப்பூசிவிட்டு |
| உள்ளாய் நின்ற மெழுகு ஊற்றினால் போல் | உள்ளே யிருக்கும் மெழுகை உருக்கிவெளியில் தள்ளுமாபோலே |

| | | | |
|---|---|---|---|
| ஊற்றும் | என்னை அணைந்து அந்தஸ்ஸாரமான ஆத்மாவை உருக்கியழிப்பவராய் | என் நெஞ்சத்து அகப்பட்டுத் தழுவ நின்று | என் நெஞ்சிலே ஸேவை ஸாதிக்கிறபடியே நான் அணைக்கும்படி பண்ணி |
| நல் வேங்கடத்துள் நின்ற அழகப்பிரானார் தம்மை | விலக்ஷணமான திருவேங்கடமலையிலே நிற்கு மவரான அழகியபெருமானை | என்னை | என்னை |
| | | ததைத்துக் கொண்டு | அவரோடே நெருக்கி வைத்து (பிறகு) |
| | | ஊற்றவும் வல்லையே. | வர்ஷிக்கவல்லையோ? |

* விண்ணீலமேலாப்பிலேகண்ட மேகங்கள் வர்ஷித்த பிறகு விகாஸத்தோடும் விலாஸத்தோடுங்கூடிக் கிளர்ந்த பதார்த்தங்களை நோக்கி வார்த்தை சொல்லிக்கொண்டுவந்த ஆண்டாள் இப்போது பழையபடியே மேகங்களைவிளித்துக் கூறுகின்றாள்—; மேகங்களானவை சிலபதார்த்தங்களை உத்தீபகங்களாகக் கிளப்பி அவற்றின்வழியாலே நலிந்ததுபோதாமல் பின்னையும்விடாதேநின்று வர்ஷித்து ஸாக்ஷாத்தாகவும் நலியத்தொடங்கினபடியாலே அவற்றைநோக்கிக் கூறுகின்றனளென்க. மழைபொழிதலும் விரஹிகளுக்கு உத்தீபகமிறே.

இப்பாட்டில் அந்தபரம்பரையாக மூன்று எழுத்துப்பிழைகள் நெடுநாளாகவே நேர்ந்திருக்கின்றன. முதலடியின் முடிவில் "உள்ளாய்நின்று" எனவும், இரண்டாமடியின்முடிவில் "வேங்கடத்துள்நின்று" எனவும், ஈற்றடியின் முதலில் "தழுவிநின்ற" எனவும் பெரும்பாலும் பண்டிதபாமர விபாகமற அனைவராலும் ஓதப்பட்டுவருகின்றது. மூலப்பதிப்புகளெல்லாவற்றிலும் இப்பிழைகள் உள்ளன; அடைவே, "உள்ளாய்நின்ற" எனவும்; "வேங்கடத்துள்நின்ற" எனவும் "தழுவநின்று" எனவும் திருத்திக்கொள்க. கோயில் பத்தராவிஸ்வாமி இப்பிழைகளைக் குறிப்பாக எடுத்துக்காட்டினர்.

மழையேயென்று ஒருகாற்சொல்லாமல் இருகாற்சொல்லிவிளித்தது—மேகங்கள் எத்தனை தூரஞ்சென்றாலும் அவற்றின்செவியிலே இந்தக் கூக்குரல் உறைப்பதற்காகவென்ப.

[மண்புறம்பூசி இத்யாதி.] வெண்கலப்பாத்திரம் முதலியன நிருமிப்பவர்கள், முதலில், பாத்திரத்தின்வடிவத்துக்குஒப்ப மண்ணைக்கட்டி அதன்மேல் சுற்றிலும் மெழுகைவளைத்து, பின்னையும் அம்மெழுகின்மேலே மண்ணைப் பூசி, மர்மமாக ஓரிடத்திலே த்வாரமாக்கி, உள்ளிருக்கும்மெழுகை வெதுப்பி அவ்வழியாலே வெளியே ஊற்றுவர்கள். அவ்வாறாக ஊற்றுகின்றார் வேங்கடத்துள் நின்ற அழகப்பிரானார்-என்கிறவிதனால் தேறுங்கருத்து யாதெனில்;-மேலேமண்ணை இணைத்து உள்ளிருக்கும்மெழுகைத் தள்ளிவிடுவதுபோல, அப்பெருமானும் உடம்பின் மேலே அணைந்து உள்ளிருக்கும் ஸத்தை உருகிக்கழிந்துபோம்படி செய்யவல்லவன் என்றதாகிறது.—"உடம்பிலே அணைந்து அகவாயிற் குடிபோம்படி பண்ணுமவராய்த்து" என்றருளிச்செய்தார் பெரியவாச்சான் பிள்ளையும்.

ஊற்றும் என்ற விசேஷணம் அழகப்பிரானிடத்து அந்வயிக்கும். என்னை இப்பாடுபடுத்துகைக்கு அப்பெருமானிடத்துள்ள முக்கியஸாமக்ரி அழகுதான் என்றகருத்துத்தோன்ற அழகப்பிரானார்தம்மை என்கிறாள். [என்னெஞ்சத்தகப்பட இத்யாதி.] அப்பெருமான் என்நெஞ்சில் ப்ரகாசிக்கிறப் போலிருக்கிறானத் தனைபொழிய, அவனைநான் அணைக்கவிரும்பிக் கையை நீட்டப்புகுந்தால் அகப்படுவதில்லை; இப்படிநான் நோவுபடவொண்ணாமல், அப்பெருமான் எனது நெஞ்சில் ப்ரதிபாஸிக்கும்படியே அவனை நான் அணைக்கும்படி பண்ணிவைத்து [-அதாவது, உஷையையும் அநிருத்தனையும் கூடவிலங்கிட்டுவைத்தாப்போலே அவனையும் என்னையும் ஒருவ்யக்திபாக நெருக்கி] ஓமேகமே! பிறகு நீ வர்ஷிப்பாயாகில் அப்போதன்றோ உன்னுடைய வர்ஷம் ஆநந்தகரமாயிருக்குமென்கிறாளென்க. விச்லேஷகாலத்தில் வேண்டாத வர்ஷந்தானே ஸம்ச்லேஷஸமயத்தில் உத்தேச்யமாயிருக்குமிறே.

இப்பாட்டையும் மேற்பாட்டையும் திருமலைநம்பி அநுஸந்திக்கும்போதெல்லாம் நெடும்போது கண்ணும் கண்ணநீருமாயிருந்து உருகிப்போவாராம்; அதுபற்றி இவ்விரண்டுபாட்டையும் நம்பூருவாசாரியர்கள் மிகவும் ஆதரித்துப் போருவர்களாம். ... ... ... ... (௮)

கடலேகடலேயுன்னைக்கடைந்து கலக்குறுத்து *
உடலுள்புகுந்துநின்று ஊறலறுத்தவற்கு * என்னையு
முடலுள்புகுந்துநின்று ஊறலறுக்கின்றமாயற்கு * என்
நடலைகளெல்லாம் நாகணைக்கேசென்றுரைத்தியே. (௯)

கடலே கடலே! — ஓகடலே!,
உன்னை — (தனக்குப் படுக்கையிடமாகவாய்ந்த) உன்னை
கடைந்து — (மலையையிட்டுக்) கடைந்து
கலக்குறுத்து — கலக்கி
உடலுள்புகுந்து நின்று — (உனது) சரீரத்திலே புகுந்திருந்து
ஊறல் அறுத்தவற்கு — ஸாரமான அம்ருதத்தை அபஹரித்தவராய் (அவ்வாறாகவே)
என்னையும் உடலுள் புகுந்து நின்று — என் உடலிலும் புகுந்திருந்து
ஊறல் அறுக்கின்ற — என் உயிரை அறுக்குமவரான
மாயற்கு — எம்பெருமானுக்கு (விண்ணப்பம்பண்ணும்படி)
என் நடலைகள் எல்லாம் — என் துக்கங்களையெல்லாம்
நாக அணைக்கே — அவர்படுக்கையான திருவனந்தாழ்வானிடத்தில்
சென்று — நீ போய்
உரைத்தியே — சொல்லுவாயா? (சொல்லவேணும் என்கை.)

அநந்தரம், கடலின் ஓதம் காதில்விழத் தொடங்கிற்று; கடலே! என்று ஒருகால் அதனைநோக்கிச் சொன்னளவிலும் அது தன் கோஷத்தையே பெருக்கிளப்பிக் கொண்டிருக்க, அந்தக் கோஷத்தைக் கீழ்ப்படுத்தித் தன்னுடைய த்வநியே ஓங்கும்படி கடலேகடலே! எனவிளித்து ஒருவார்த்தை சொல்லுகின்றாள்

"மாலும் கருங்கடலே! என்னோற்றாய்!, வையகமுண்டாலிலைத் துயின்ற வாழியான்-கோலக், கருமேனிச் செங்கண்மால் கண்படையுளென்றும், திருமேனி நீதீண்டப்பெற்று." [முதல்திருவந்தாதி] என்றபடி-எம்பெருமானுக்கும் கடலுக்கும் நெருங்கினஸம்பந்தம் இருக்கின்றமையால் அந்தஸம்பந்தத்தையே பற்றாசாகக்கொண்டு கடலைப் பிரார்த்திக்கின்றாள்-நான்படும் பாட்டை *அரவணை மேற்பள்ளிகொண்ட முகில்வண்ணன் பக்கலிலே நீதெரிவிக்க வேணுமென்கிறாள்.

தனக்கு உபகாரம்செய்யுமவர்களை வேண்டியமட்டும் ஹிம்ஸித்து அவர்களிடத்துள்ள ஸாரத்தையும் கொள்ளைகொள்பவன் எம்பெருமான்-என்னுமிடம் விளங்கக் கூறுவன முன்னடிகள். 'கடலானது நமக்குப் படுக்குமிடமாயிற்றே' யென்று சிறிதும் நோக்காமல் மலைகளையெல்லாங் கொணர்ந்து உன்னுள்ளே போட்டு உன்குடல்குழம்பும்படி உன்னைக்கடைந்து கலக்கினதுமல்லாமல் உன்னோடே அன்புடன் அணைந்துகிடக்கிறப்போற் கிடந்து உன்பக்கல் ஸாரமாயிருந்த அம்ருதத்தைக் கொள்ளைகொள்வித்தவனன்றோ அவன் என்கிறாள்.

"நீதான் என்செய்தாய்?; தாசித்தலையிலே படையறுப்பாரைப்போலே உன்னையன்றோ நெருக்கிக்கடைந்து கலங்கப்பண்ணிற்று; படுக்கையென்றும்பாராதேயன்றோ நெருக்கிற்று; இடங்கொடுத்தார் நெஞ்சிலே கல்லையிட்டுநெருக்கிச் சாறுபெறுத்துமவரல்லரோ" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி ஸேவிக்கத்தக்கது.

உன்னை இப்பாடுபடுத்தியதுபோலவே என்னையும்படுத்தா நின்றானென்கிறாள் மூன்றாமடியில். மேலோடே அணைந்து உள்ளே பசையறுத்தபெருமானென்கிறாள். மாயற்கு என்றது-இவன் இப்பாடுபடுத்தச்செய்தேயும் "ஆகிலுங்கொடிய வென்னெஞ்சமவனென்றே கிடக்குமெல்லே!" என்றபடி அவனையே பற்றிநிற்கும் படியான மாயமுடையவன் என்றபடி. நடலை=துக்கம். நாகணைக்கே சென்று உரைத்தி='சென்றால் குடையாமிருந்தால் சிங்காசனமாம்" என்றபடி ஸர்வவித கைங்கரியங்களும் திருவனந்தாழ்வானொருவனிடத்தில்தானே கொள்ளவேணும்; அத்தகைய கைங்கரியங்களுக்கு அடியோம் உரிமைப்பட்டோமல்லோமோ?என்று சொல்லவேணுமென்பது உள்ளுறை. அன்றியே திருவனந்தாழ்வானைப் புருஷகாரமாகக்கொண்டு சொல்லவேணுமென்பதாகவுமாம். ... .... (௬)

நல்லவென்தோழி நாகணைமிசைநம்பரர் *
செல்வர்பெரியர் சிறுமானிடவர்நாஞ்செய்வதென் *
வில்லிபுதுவை விட்டுசித்தர்தங்கள்தேவரை *
வல்லபரிசுவருவிப்பரேல் அதுகாண்டுமே. (௰)

| | | | |
|---|---|---|---|
| என்நல்லதோழி! | எனதுஉயிர்த்தோழியே, | செல்வர் | பெருஞ்செல்வம்படைத்தவர் |
| நாக அணை மிசை | திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே சயனித்திருக்கிற | பெரியர் | எல்லாரினும் மேற்பட்டவர்; |
| நம் பரர் | நம்பெருமாள் | நாம் | நாமோவென்றால் |

| | | | |
|---|---|---|---|
| சிறுமானிடவர் | க்ஷுத்ர மநுஷ்யரா யிரா நின்றோம்; (இப்படிப்பட்டநாம்) | தங்கள்தேவரை | தமக்கு விதேயரா யிருக்கிற அப்பெருமானை |
| என் செய்வது | என்னசெய்யலாம்?. | வல்ல பரிசு | தம்மால் கூடினவகைகளாலே |
| வில்லி புதுவை விட்டுசித்தர் | ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வார் | வருவிப்பரேல் | அழைப்பராகில் |
| | | அது காண்டும் | அப்போது(அவனை)நாம் ஸேவிக்கப்பெறுவோம். |

ஆண்டாள் இப்படி பகவத்விரஹத்தாலே ஆற்றமாட்டாதாளாய்ப்படுகிற அலமாப்பைக் கண்ட உயிர்த்தோழியானவள் 'ஐயோ! இவள் இப்பாடுபடுகின்றாளே! இவளை நாம் எப்படித் தேற்றுவிப்பது! ஒருவழியும் தெரியவில்லையே!' என்று சிந்தித்து வ்யஸநித்திருக்கையில், ஆண்டாள் அவ்வுயிர்த்தோழியைநோக்கி 'நீ அஞ்சவேண்டா; ஜீவிப்பதற்கு ஒருவழி கண்டேன்காண்' என்கிறாள்.

திருவனந்தாழ்வான்மேல் சயனித்தருளுமவராய் ஸ்ரீய: பதியாய்ப் பரமபுருஷராயிருக்கிறவரை அதிக்ஷுத்ரராயிருக்கிற நாம் கிட்டவோ அணுகமுடியும்? "அம்மானாழிப்பிரானவன் எவ்விடத்தான்யானார்?" என்னுமாபோலே அவருடைய பெருமைக்கும் நம்முடையசிறுமைக்கும் எவ்வளவோ வாசியுண்டாயிருக்க அவரை நாம் வளைப்பிடமுடியுமோ?, முடியாது. ஆகில் நாம் இழந்தேபோகவேண்டியதோவென்னில்; இழவாமைக்கு ஒருவழியுண்டு; அப்பெரியவர் நமக்குவசப்படமாட்டாராயினும் நம் அண்ணலான பெரியாழ்வார்க்கு வசப்படாதிருக்க அவரால் முடியாது. அந்தநாகணைமிசைநம்பரர் தாமே பெரியாழ்வாரிடத்தில் கோற்கீழ்க்கன்றாயிருப்பர். "பூச்சூட்டவாராய்" என்றும் "நீராடவாராய்" என்றும் "காப்பிடவாராய்" என்றும் அவர் அழைத்தவாறே அப்பெரியவர் பதறி ஓடி வருவர்; அப்போது நாம் எளிதாக அவரை ஸேவிக்கப்பெறுவோமென்கிறாள்.

வல்லபரிசுவருவிப்பரேல் = ஒருபூவையிட்டு வரப்பண்ணவுமாம்; ஒரு இசையைச்சொல்லி இசைவிக்கவுமாம்; கிரியையறுத்து வரப்பண்ணவுமாம்; திருமஞ்சனத்தைச்சேர்த்து அழைக்கவுமாம்; திருக்குழல்பணியைச் சேர்த்துவைத்து அழைக்கவுமாம்; திருவந்திக்காப்பிட்டழைக்கவுமாம்; ........அன்றிக்கே, நான் அவர் தம்மை முன்னிட்டாப்போலே அவர் தமக்குப்புருஷகாரமானாரை முன்னிட்டு வரப்பண்ணவுமாம்-அவ்வழியாலே பெறக்கடவோம்'' என்ற வியாக்கியான ஸூக்தியின் போக்யதை அநுபவிக்கத்தக்கது.

இத்திருமொழிக்குப் பலஸ்ருதி அருளிச்செய்யாமல் இப்பாட்டே அதன் ஸ்தாநத்தில் நின்றது. பாகவதஸம்பந்தத்தைக்கொண்டு உஜ்ஜீவிக்கப்பெறுவர்கள் என்பதே இத்திருமொழிக்கும் பலஸ்ருதியாகக் கொள்ளத்தக்கது. .... (க)

அடிவரவு:—கார் மேல் கோவை முல்லை பாடும் கணா நடமாடி மழை கடலே நல்ல தாம்.

பத்தாந் திருமொழி உரை முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



# பதிமூன்றாந்திருமொழி - தாமுகக்கும்.

உரையவதாரிகை:—"ஒன்றேயுரைப்பான் ஒருசொல்லே சொல்லுவான்" என்று புகழ்பெற்ற பெருமான் ஒருகால் பொய்சொல்லிவிட்டாலும், அப்பொய்ம்மையடியாக அவனால் நாம் உபேக்ஷிக்கப்பட்டோமாயினும், பெரியாழ்வாருடைய ஸம்பந்தம் நமக்கு உண்டாதலாலும் அது பலனைத் தந்தேதீருமாதலாலும் அவ்வழியிலே நாம் உஜ்ஜீவிக்கக்குறையில்லையென்று அத்யவஸாயங்கொண்ட ஆண்டாள் பகவத்விஶ்லேஷத்தாலே மிகவும் நோவுபட்டிருக்கிறபடியைக்கண்ட தாய்மார் தோழிமார் மற்றுமுள்ள ஊர்ப்பெண்டுகளுமடங்கலும் 'இவளுடையநிலைமை இன்னதென்றறியவேணும்' என்று அருகேவந்து திரண்டுகிடக்க, அவர்களை நோக்கித் தன்னுடைய அவஸ்தை இருக்கும்படியையும் எம்பெருமான் தன்னை உபேக்ஷித்திருக்கும்படியையும் விரிவாகச்சொல்லி வருத்தப்பட்டுக்கொண்டுபோய், என்னைப்போன்ற ஒரு ருக்மிணிப்பிராட்டிக்குக் குறைதீர்த்த பெருமான் என்குறையையும் தீராமற்போகமாட்டான் என்று ஒருவாறு தைரியங்கொண்டு தேறியிருப்பதாகச் சொல்லி முடிக்கிறாள் இத்திருமொழியில்.

தாமுகக்கும்தங்கையில் சங்கமேபோலாவோ *
யாமுகக்குமென்கையில் சங்குமமேந்திழையீர் *
தீமுக்துநாகணைமேல் சேரும்திருவரங்கர் *
ஆமுகத்தைநோக்காரால் அம்மனேயம்மனே. (௧)

| | | | |
|---|---|---|---|
| ஏந்து இழையீர்! | ஆபரணங்களை யணிந்துள்ள மாதர்களே! | நாக அணைமேல் | திருவனந்தாழ்வானாகிற படுக்கையின்மேலே |
| யாம் உகக்கும் என் கையில் சங்குமும் | நான் உகந்து தரித்துக் கொண்டிருக்கிற என் கையில் வளைகள் | சேரும் | பள்ளி கொண்டருளா நின்ற |
| தாம் உகக்கும் தம்கையில் சங்கம்போலாவோ | தான் உகந்து தரித்துக் கொண்டிருக்கிற தன்கையில் சங்கோடு ஒவ்வாதோ? | திரு அரங்கர் | ஸ்ரீரங்கநாதன் |
| தீ முகத்து | க்ரூரமானமுகங்களையுடைய | முகத்தை | (என்னுடைய)முகத்தை |
| | | நோக்கார் | நோக்குகின்றாரில்லை; |
| | | ஆ! | ஐயோ!; |
| | | அம்மனே! அம்மனே!! | அந்தோ! அந்தோ!! |

எம்பெருமானுடைய விஶ்லேஷம் நெடுகிச்செல்லவே, அதனால் உடல் சக்குப்போல் மெலிந்து கைவளைகளெல்லாம் கழன்றொழிந்தமையையும், இவ்

வளவிலும் வந்து முகங்காட்டாத எம்பெருமானுடைய கொடுமையையுங் கூறி வருந்துகின்றாள். ஏந்திழையீர்! என்று அருகே வந்திருக்கும் பெண்களை விளிக்கிறபடி. 'பெண்கள்!,—தோழிகாள்!' என்னாதே ஏந்திழையீர் என்றது— என்னைப்போலே வளையிழந்து வருந்தாதே, ப்ரளயத்துக்குத் தப்பிப் பிழைப்பாரைப்போலே நீங்கள் மாத்திரம் அவனுடைய விரஹத்துக்கு எப்படித் தப்பிப் பிழைத்தீர்கள்? என வியந்து கேட்கிறபடிபோலும். "ஏந்திழையீர்!, யாமுகக்கு மென்கையிற் சங்கமும் தாமுகக்கும் தம்கையிற் சங்கமே போலாவோ? என்று அப்பெருமானைக் கேளுங்கள்" என்று வாக்யசேஷம் பூரித்துக்கொள்ளவேணும். 'நம் கையிலுள்ள சங்கு எப்போதும் நம்கையிலேயே இருக்கவேணும்' என்று அவர் ஆசைப்படுவதுபோல், நானும் 'நம்கையிலுள்ள சங்கு நம்கையிலேயே இருக்கவேணும்' என்று ஆசைப்பட ப்ராப்தி இல்லையோ? அவருடைய ஆசை மாத்திரம் வழுவாமல் பலித்துவிடவேணும் என்னுடைய ஆசைமாத்திரம் பாழ்த்துப் போகவேணுமென்று இஃது என்ன விபரீதஸங்கல்பம்? என்று அவரையேபோய்க் கேளுங்கள் என்கிறாள். இரண்டடியிலும் சங்கம் என்றது ஸ்ப்த ஶ்லேஷம். பாஞ்சஜந்யத்துக்கும் கைவளைக்கும் பெயர்.

தான் சங்கிழந்தமைக்குக் காரணம் சொல்லுகிறாள் பின்னடிகளில். திருவனந்தாழ்வான் ஒருத்தனுக்கே பகவதநுபவத்தைக்கொள்ளைகொள்கிறானென்ற வயிற்றெரிச்சலினால் தீமுகத்துநாகணை என்கிறாள் — எரிமூஞ்சித்தெய்வம், சுடுமூஞ்சிப்பாம்பு — என்கிறாப்போலே. * ஆங்கு ஆரவாரமதுகேட்டு அழலுமிழும் பூங்காரரவாகையாலே அஸ்தாநே பயஶங்கையினால் எப்போதும் தீயைக் கக்கிக்கொண்டேயிருப்பனிறே திருவனந்தாழ்வான். "வாய்ந்த மதுகைடபரும் வயிறுருகி மாண்டார்" இத்யாதிப்படியே உகவாதார் வந்துகிட்டவொண்ணாதபடி யிருக்குமவனை திருவனந்தாழ்வான் என்கிறாளாகவுமாம். இருவராய்ப் படுக்கவேண்டிய படுக்கையிலே ஒருவராய்ப்படுத்தாரே, அவருடைய நெஞ்சு என்ன நெஞ்சு! என்ற பரிதாபந்தோற்றக் கூறுகின்றாள் அணைமேல் சேரும் திருவரங்கர் என்று. ஆர்த்தர்களை ரக்ஷிப்பதையே தொழிலாகக்கொண்டவர் நல்ல வாய்ப்பாகப் படுக்கை கிடைத்ததென்று சாய்ந்து கிடந்து தூங்குகிறார் — என்கிறாளாகவுமாம். திருவரங்கத்தில் வந்தும் என்னைப்பேணாதே உறங்கிக்கிடந்தாராகில் இதைவிடப் பரமபதத்திலேயே ஸுகமாக வீற்றிருக்கலாமே; இவ்வளவு தூரம் ஏன் ஓடி வரவேணும்? என்றுங் கருதுகின்றாள். தன்னைக் கைப்பிடித்தால்தான் திருவரங்கத்தில் வரவு பயன்படைத்ததாம் என்றிருக்கிறாளிறே.

முகத்தை நோக்கார்=உடம்போடே அணைய வாராவிடினும் கண்வட்டத்திலே ஸேவைஸாதிப்பதும் தவிரவேணுமோ? என்முகத்தை நோக்குவதற்கும் அவர் கூசும்படி நான் என்னபாவம் செய்தேனோ அறியேன். ஆ, ஆல்= ஐயோ! ஐயோ!! என்றவாறு. அம்மனே! அம்மனே!! = இப்படிப்பட்ட அவரை இப்போது நினைப்பதும் — புலி, சிங்கம் முதலியவற்றை நினைப்பது போல் பயங்கரமாயிற்றே! என்கிறாள்போலும். .... ... (க).

எழிலுடையவம்மனேமீர் என்னரங்கத்தின்னமுதர் *
குழலழகர்வாயழகர் கண்ணழகர்*கொப்பூழில்
எழுகமலப்பூவழகர் எம்மானுர்*என்னுடைய
கழல்வளையைத்தாமும் கழல்வளையேயாக்கினரே. (உ)

| | |
|---|---|
| எழில் உடைய | அழகையுடைய |
| அம்மனேமீர் | தாய்மார்களே], |
| அரங்கத்து | திருவரங்கத்திலெழுந்தருளியிருக்கிற |
| என் இன் அமுதர் | என்னுடையஇனியஅமுதம் போன்றவராய் |
| குழல் அழகர் | அழகிய திருக் குழற்கற்றையையுடையவராய் |
| வாய் அழகர் | அழகிய திருவதரத்தையுடையவராய் |
| கண் அழகர் | அழகிய திருக்கண்களையுடையராய் |
| கொப்பூழில் எழு கமலம் பூ அழகர் | திருநாபியி லுண்டான தாமரைப்பூவாலே அழகு பெற்றவராய் |
| எம்மானுர் | எனக்குஸ்வாமியான அழகிய மணவாளர் |
| என்னுடைய | என்னுடைய |
| கழல்வளையை | 'கழல்வளை' என்ற இடுகுறிப்பெயர்பெற்ற கைவளையை |
| தாமும் | அவர்தாம் |
| கழல் வளையே ஆக்கினர் | 'கழன்றொழிகிறவளை' என்று காரணப்பெயர் பெற்றவளையாக; ஆக்கினுர். |

“சங்கஞ்சரிந்தன சாயிழந்தேன் தடமுலை பொன்னிறமாய்த் தளர்ந்தேன்” என்னும்படி நான் அழகழிந்து கிடக்கச்செய்தே நீங்கள் அழகு பொலிந்து நிற்பதும் உங்கள் பாக்கியமே—என்பாள்போல எழிலுடையவம்மனேமீர் என விளிக்கின்றுளென்க.

திருவரங்கத்திலே எனக்கு போக்யமான அமுதம்போன்று எழுந்தருளியிருப்பவராய், திருக்குழலழகும் திருவதரத்தினழகும் திருக்கண்ணழகும் திருநாபிக்கமலத்தழகும் பொலிய நின்று இவ்வழகையெல்லாங் காட்டி என்னை ஆட்படுத்திக்கொண்டவரான பெரியபெருமாள் தப்பாக ஒன்றுஞ்செய்யவில்லை; யுக்தமாகவே செய்தார்; நான் கழலாதவளையை இட்டுக்கொண்டிருந்தேனுகில் அவரும் அதனைக் கழலாத வளையாகவே அமைத்துவைப்பர்; நான் கழல்வளையையிட்டுக்கொண்டேனுகையாலே அவர் அதை அந்வர்த்தமாக்கினுர்; என்மேல் குற்றமேயன்றி அவர்மேல் என்ன குற்றமிருக்கிறது? உள்ளதை உள்ளபடிசெய்பவரன்றோ அவர். நான் கழலாதவளையை இட்டுக்கொண்டிருந்து அவர் அதைக் கழல்வளையாக ஆக்கினுராகில் அப்போது ஒருவாறு அவர்மேல் குற்றஞ்சாட்டலாம்; நானே கழல்வளையிட்டுக் கொண்டேனுன பின்பு அதை அவர் அந்யதாகரிக்க எப்படி கடவர்? என்று ரஸோக்தியாக அருளிச்செய்கிறுள். இது நர்மோக்தி எனவும்படும். கைவளைக்குக் கழல்வளை யென்று இடுகுறிப்பெயர். அதனைக் காரணப்பெயர்போலக்கொண்டு “தாமுங் கழல்வளையேயாக்கினரே’ என்றுள். கழன்றொழியும்வளையாதலால் கழல்வளை எனப்பெயர்வந்ததென்கிறுளாய்த்து. “[illegible]’ [யுக்தோ வாரணலாபோயம் ஸ்யால! தே வாரணார்த்திநः] என்ற வடமொழி

ஶ்லோகத்தை இதனோடு ஒருபுடை ஒப்பிடலாம். வடமொழியில் வாரணம் என்றால் யானைக்கும்பெயர், கழுத்தைப்பிடித்துத் தள்ளுதலுக்கும் பெயர்: ஒருவன், தனக்கு ஒருயானைகொடுக்கவேணுமென்று நாடோறும் ஒரு அரசனிடத்திற் சென்றுகொண்டிருந்தான்; இப்படி நீ யானைகேட்பது தகுதியல்லவென்று சேவகர் நெடுநாள் அவனுக்கு ஹிதமாகச்சொல்லியும் அவன் கேளாதொழியவே, ஒருநாள் சேவகர் அவனைக் கழுத்தைப்பிடித்து நெட்டித்தள்ளிவிட்டனர்; அதைக்கண்ட ஒருவன் அவனைநோக்கிக் கூறுகின்றான் வாரணம் விரும்பிய நீ வாரணம்பெற்றது தகுதியே என்கிறான். அதுபோல ஆண்டாளும் "என்னுடைய கழல்வளையைத் தாமுங் கழல்வளையேயாக்கினரே'' என்கிறாள். .... ... (உ).

போங்கோதம்சூழ்ந்த புவனியும்விண்ணுலகும் *
அங்காதுஞ்சோராமே ஆள்கின்றவெம்பெருமான் *
செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார் *
எங்கோல்வளையால் இடர்தீர்வராகாதே.

| | |
|---|---|
| பொங்கு | அலையெறியா நின்றுள்ள |
| ஓதம் | கடலாலே |
| சூழ்ந்த | சூழப்பட்ட |
| புவனியும் | இப்பூமண்டலமும் |
| விண் உலகும் | பரமபதமும் |
| ஆதும் சோராமே | சிறிதும் குறைவுபடாதபடி |
| ஆள்கின்ற | நிர்வஹித்துக் கொண்டுபோருகிற |
| எம் பெருமான் | ஸ்வாமியாய் |
| செங் கோல் உடைய | செங்கோல் செலுத்த வல்லவராய் |

| | |
|---|---|
| திரு அரங்கம் செல்வனார் | கோயிலிலேபள்ளி கொண்டிருப்பவரான மஹாநுபாவர் |
| என் | என்னுடைய |
| கோல்வளையால் | கைவளையாலே |
| இடர் தீர்வர் ஆகாதே | தம்குறைகளெல்லாம் தீர்ந்து நிறைவுபெறுவரன்றோ. |

(அப்படியே என்வளையைக் கொள்ளை கொண்டு அவர் நிறைவுபெற்றுப் போகட்டும் என்றபடி.)

கடல்சூழ்ந்தமண்ணுலகும் விண்ணுலகுமாகிய உபயவிபூதியையும் அபாயலேஶமுமின்றி ரக்ஷித்தருளுமவனாய், என்னை ஒரு மூன்றும் விபூதியாக ஆளுமவனாய், திருவரங்கத்திலேபள்ளிகொண்டருளினபடியே செங்கோல்செலுத்துமவனான எம்பெருமான் இப்படி அவாப்தஸமஸ்தகாமனாயிருந்துவைத்தும் குறைவாளன்போன்று என்னுடைய கைவளையைக் கொள்ளை கொண்டுபோனான்; போயிடுக; இவ்வளையினால் அவனுடைய தாரித்ரியமெல்லாம் ஹதமாகட்டும் என்கிறாள்.

இரண்டாமடியின் முதலிலுள்ள அங்கு என்பது ஓர் அசைச்சொல்; அதற்கு இவ்விடத்தில் பொருள் இல்லை. எம்பெருமான் என்றவிடத்துவியாக்கியான ஸ்ரீஸூக்தி:—"ஶப்தாதிகளாலே களிக்கும் படிபண்ணிவைத்தான் இவ்விபூதியை; தன்னையநுபவித்துக் களிக்கும்படி பண்ணிவைத்தான் அவ்விபூதியை; இங்குள்ளார்க்கும் கூட்டன்றிக்கே அங்குள்ளார்க்குங்கூட்டன்றிக்கே நடுவே நோவுபடும்படி பண்ணிவைத்தான் என்னையொருத்தியையும்.'' ... .... (௩).

மச்சணிமாட மதிளரங்கர்வாமனனுர் *
பச்சைப்பசுந்தேவர் தாம்பண்டுநீரேற்ற *
பிச்சைக்குறையாகி யென்னுடையபெய்வளைமேல் *
இச்சையுடையரேல் இத்தெருவேபோதாரே. (௩)

| | |
|---|---|
| மச்சு | மேல்தளங்களாலே |
| அணி | அலங்கரிக்கப்பட்ட |
| மாடம் | மாடங்களையும் |
| மதின் | மதிள்களையுமுடைய |
| அரங்கர் | திருவரங்கத்திலே எழுந்தருளியிருப்பவராய் |
| வாமனனுர் | (முன்பு) வாமனாவதாரம் செய்தருளினவராய் |
| பச்சைப் பசுந் தேவர் | பசுமைதங்கிய தேவரான பெரியபெருமாள் |
| தாம் | தாம் |
| பண்டு | முன்பு (மஹாபலியிடத்தில்) |
| நீர் ஏற்றபிச்சை குறை ஆகி | உதகதாரா பூர்வகமாகப் பெற்ற பிச்சையிலே குறையுண்டாகி |
| | (அக்குறையைத்தீர்ப்பதற்காக) |
| என்னுடைய | என்னுடைய |
| பெய் வளைமேல் | (கையில்)இடப்பட்டுள்ள வளைமேல் |
| இச்சை உடையர் எல் | விருப்பமுடையவராகில் |
| இத்தெருவே | இத்தெருவழியாக |
| போதாரே | எழுந்தருளமாட்டாரோ? |

'மற்றபேருடைய கைகளில் வளை இருக்க உன்கைவளைகளை மாத்திரம் எம்பெருமான் கொள்ளைகொண்டது உன்னிடத்துள்ள அன்பு மிகுதியாலன்றோ ஆகவே, அதற்கு நீ மகிழவேண்டியிருக்க சோகிக்கலாமோ?' என்று சிலபெண்கள் ஆண்டாளை நோக்கிக் கூற, அவர்களைநோக்கிக் கூறுகின்றாள்.

மச்சுக்களாலே அலங்கரிக்கப்பட்ட மாடங்களையும் மதிள்களையுமுடைத்தான திருவரங்கம்பெரியகோயிலிலேவந்து நம் உடைமையைப் பெறுகைக்குத் தாம் அர்த்தியாய்க் கண்வளர்ந்தருள்பவராய்ப் பசுகுபசுகென்று ஆகர்ஷகமான திவ்யமங்கள விக்ரஹத்தையுடையரான பெரியபெருமாள் முன்பு தாம் மஹாபலியிடத்திலே யாசகராக எழுந்தருளி அவனிடத்தில் உதகதாராபூர்வகமாக பிக்ஷைவாங்கிக்கொண்ட பிச்சையில் குறையுண்டாகி அக்குறையை என்கையாலே தீர்த்துக்கொள்ளவேணுமென்ற ஆவலுடையவராய் என் கைவளையிலே ஆசையுடையவராகில் அஸுரனுடைய யஜ்ஞபூமியிலே நடந்தநடையை இத்தெருவே என்கண்வட்டத்திலே நடந்துகாட்டலாகாதோ? என்கிறாள்.

பச்சைப்பசுந்தேவர் = "மேகஸ்யாமம்" என்றபடி பசுமைநிறம்மிக்க பெருமாள் என்றவாறு. அன்றியே, "பச்சைப்பசும்பொய்" என்றால் மெய்கலசாதபொய்என்றபொருளாகிறாப்போலே 'தீம்மைகலசாத மேன்மையுடையவர்' என்றும்பொருளாம். கலப்பற்ற பரதேவதை. ... ... (௩)

போல்லாக்குறளுருவாய்ப் போற்கையில்நீரேற்று *
எல்லாவுலகும் அளந்துகோண்டவெம்பெருமான் *
நல்லார்கள்வாழும் நளிரரங்கநாகணையான் *
இல்லாதோம்கைப்போருளும் எய்துவானொத்துளனே. (ரு)

| | | | |
|---|---|---|---|
| பொல்லா குறள் உரு ஆய் | விலக்ஷண வாமநரூபியாய் | நளிர் அரங்கம் | ஸர்வதாபஹரமான திருவரங்கத்தில் |
| பொன் கையில் | அழகிய கையாலே | நாக அணையான் | திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடையரான பெரியபெருமாள் |
| நீர் ஏற்று | பிக்ஷைபெற்று | | |
| எல்லா உலகும் | ஸகலலோகங்களையும் | | |
| அளந்து கொண்ட | தன்வசப் படுத்திக் கொண்ட | இல்லாதோம் | அகிஞ்சநையான என்னுடைய |
| எம்பெருமான் | ஸ்வாமியாய் | கைப்பொருளும் | கைம் முதலான வஸ்துவையும் [சரீரத்தையும்] |
| நல்லார்கள் வாழும் | நன்மைமிக்க மஹான்கள் வாழ்கிற | எய்துவான் ஒத்து உளன் | கொள்ளைகொள்வான் போலிராநின்றான். |

விலக்ஷணமான வாமநரூபத்தைப் பரிக்ரஹித்து அழகிய கையிலே நீரேற்றுப் பிச்சைவாங்கி, பிச்சையிட்டவன் குடிவாழ்வதற்கும் ஓரடிமன்மிகாதபடி ஸகலலோகங்களையும் அளந்து ஸ்வாதீநப்படுத்திக்கொண்ட மஹாநுபாவராய், ஶிஷ்டர்கள் வாழ்கிற திருவரங்கத்திலே அநந்தஶாயியாய் எழுந்தருளியிருக்கிற பெரியவர் தரித்ரரான நம்முடைய கைப்பொருளையும் [அதாவது—இந்தவுடம்பையும்] கொள்ளை கொள்வார்போலே இராநின்றார் என்கிறாள்.

பொல்லாக்குறள்=' நல்லகுறளுருவாய் ' என்னவேண்டியிருக்க, ' பொல்லாக்குறளுருவாய் ' என்றது என்னென்னில்; நல்லதென்றால் கண்ணெச்சில் படுமென்று நினைத்து, நல்ல வஸ்துக்கள்மேலே கரிபூசுவாரைப் போலே பொல்லாக்குறளென்கிறாளென்பர். அன்றியே, அழகியகுறளுருவாய்என்றால் நாட்டிலுள்ள அழகோடு ஸமமாக நினைக்கக்கூடுமென்று விஜாதீயத்வம் தோற்றப் பொல்லாக்குறள் என்கிறாளென்றும் கூறுவர்.

நல்லார்கள்வாழும் நளிரரங்கம் என்றவிடத்து, " மறைப்பெருந்தீவளர்த்திருப்பார் வருவிருந்தை யளித்திருப்பார், சிறப்புடைய மறையவர்வாழ்திருவரங்கமென்பதுவே " என்ற பெரியாழ்வார் திருமொழி நினைக்கத்தக்கது.

இல்லாதோம்='இல்லாதார்' என்பதன் தன்மைப்பன்மை. அந்தரங்கனையில் ஏற பாக்யமில்லாத என்னுடைய;—மஹாபலியைப்போலேதம் அபேக்ஷிதம் பூர்ணமாகக் கொடுக்கஶக்தியில்லாத வென்னுடைய;—அவரைத்தவிர வேறொரு துணையில்லாத வென்னுடைய - என்றிப்படி மூன்றுவிதமாகப் பொருள் அருளிச்செய்வர். அகிஞ்சநையாயிருக்கிற என்னுடைய என்றபடி. கைப்பொருளாவது இங்கே ஶரீரம். மிகுந்திருப்பது ஶரீரமேயிறே.

நளிரரங்கம் என்றவிடத்தில், திவ்யதேசத்தின் போக்யதையிலே ஈடுபட்டு இரண்டு ஐதிஹ்யங்களருளிச்செய்வர்:—'' பட்டர் முதுகில் புண்ணோடொரந்திருக்கச்செய்தே பெருமாள் அருள்பாடிட்டு 'வாராய்! அஞ்சினையோ?' என்றுகேட்டருள, 'நாயன்றே! எனக்குச் செய்து தந்தருளாத தர்மில்லை; இங்கேயிருக்கச் செய்தேயும் பரமபதம் என்சிறுமுறிப்படி செல்லும்படி பண்ணியருளிற்று; அதிலொரு குறையுமில்லை; இங்கே குளிர்ந்த முகத்தையும் திருநாமத்தழும்பையும் முறுவலையும் இழக்கவென்றால் அடியேன் அஞ்சமாட்டேனோ'' என்றாராம்.

•ஆளவந்தார்மகனார் சொட்டைநம்பி ஓரளவிலே திருக்கோட்டியூர் நம்பியை நெகிழ ஒருவார்த்தை சொன்னாராய் 'நீ கடக்க வர்த்தி' [என்கண்வட்டத்தில் நில்லாதே தூரஸ்த்தனாய் ஒழிந்துபோ] என்று ஆளவந்தார் அருளிச்செய்ய, அவரும் படைவீட்டிலே ராஜஸேவை பண்ணித் திரிந்தாராய், பின்பு இவருடைய சரமஸமயத்திலே இவருடைய அத்யவஸாயமறிய வேணுமென்று 'நீ நினைத்துக்கிடக்கிறதென்?' என்று கேட்டார்களாய், 'ஆளவந்தார் ஸ்ரீபாதத்தின் ஸம்பந்தம் பரமபத ப்ராப்தி பண்ணித் தந்தல்லது விடாது; அங்கேபோனால் ஸ்ரீவைகுண்டநாதன்முகம் நம்பெருமாள் திருமுகமண்டலம்போலே குளிர்ந்திருந்ததில்லையாகில் முறிச்சுக்கொண்டு வருவதாக நினைத்திருந்தேன்' என்றாராம். இவ்விரண்டு ஐதிஹ்யங்களும் நளிர் என்ற விசேஷணத்தினால் ஏற்படுகிற போக்யதாப்ரகர்ஷத்தை விளக்குவன. .... ... (ரு)

கைப்பொருள்கள்முன்னமே கைக்கொண்டார்*காவிரிநீர்
செய்ப்புரளவோடும் திருவரங்கச்செல்வனார்*
எப்பொருட்கும்நின்றார்க்கும் எய்தாது*நான்மறையின்
சொற்பொருளாய்நின்றார் என்மெய்ப்பொருளும்கொண்டாரே. (௬)

காவிரி நீர் } காவேரியின் தீர்த்தமானது
செய்புரளவோடும் } பயிர்நிலங்களிலெல்லாம் ஒடிப்புரளும்படியான நீர் வளம்மிகுந்த
திரு அரங்கம் } திருவரங்கத்தில்எழுந்தருளியிருக்கிற
செல்வனார் ஸ்ரீமானும்,
எப்பொருட்கும் நின்று } எல்லாப்பொருள்களிலும் அந்தராத்மாவாய் நின்று
ஆர்க்கும் எய்தாது } ஒருவர்க்கும் கைப்படாமல்
நால் மறையின் சொல் பொருள் ஆய்நின்றார் } நான்கு வேதங்களிலுள்ள சொற்களுக்கும் பொருளாய் நிற்பவருமான பெரியபெருமான்
முன்னமே ஏற்கனவே
கைப் பொருள்கள் } கையிலுள்ள பொருள்களையெல்லாம்
கைக்கொண்டார் } கொள்ளை கொண்டவரா யிருந்துவைத்து
(இப்போது)
என் மெய் பொருளும் } எனது சரீரமாகிற வஸ்துவையும்
கொண்டார் கொள்ளைகொண்டார்.

எல்லாப்பொருள்களிலும் அந்தர்யாமியா யிருந்துகொண்டு ஒருவர்க்கும் கைப்படாமல் வேதவேத்யராயிருக்கும் பெரியபெருமாள் என்கையிலுள்ள

பொருள்களை முன்னமே கைக்கொண்டார்; கடைசியாக ஶரீரமென்கிற ஒரு வஸ்து மிகுந்திருந்தது; அதையும் கொள்ளைகொண்டாரென்கிறாள்.

"கைப்பொருள்கள் முன்னமே கைக்கொண்டார்" என்றவிடத்து வியாக்கியான ஸ்ரீஸூக்தி பரமபோக்யமானது;—"இவளுக்கு முலைப்பாலோடே கூடப் புகுந்ததிறே பகவத்ஸம்பந்தம்; * ஸ்ருஷ்ட ஸ்த்வம் வநவாஸாய போலே பிறக்கிறபோதே வலையிழந்து கொண்டுபோலே காணும் பிறந்தது."

காவிரிநீர்செய்ப்புரளவோடும் திருவரங்கம் = அசேதநமான நீர்த்தமுங் கூட ரக்ஷ்யவர்க்கம் வாடாமல் நோக்கும் தேஶம் என்றபடி. அசேதநமான வஸ்துக்களும் தங்கள் தங்கள் ரக்ஷ்யவர்க்கங்களை நோக்குமிடமான திருவரங்கத்திலே வாழப்பெற்ற பரமசேதநன் ரக்ஷ்யகோடியிலே ஒருத்தியான என்னை நோக்காதிருப்பது தகுதியன்று என்று குறிப்பித்தபடி.

எப்பொருட்கும் நின்று=வேடுவிச்சி, குரங்கு, தயிர்க்காரன் முதலிய ஸாமாந்யமான பிராணிகட்கும் ஸுலபனாய் நிற்கச் செய்தேயும், ஆர்க்கும் எய்தாது—எவ்வளவு ஜ்ஞாநாதிகராயிருந்தாலும் ஸ்வயத்நத்தாலே கிட்ட நினைப்பார்க்குக் கிட்டக்கூடாதவனாய் என்றும் பொருள் கொள்ளலாம்.

மெய்ப்பொருளும் கொண்டார்=மெய் என்று ஆத்மாவையும் சொல்லக் கடவதாகையாலே, ஆத்மீயங்களை ஏற்கனவே கொள்ளைகொண்டவர் இப்போது ஆத்மாவையும் கொள்ளைகொண்டார் என்பதாகவும் உரைக்கலாம் ... (சு)

உண்ணாதுறங்காது ஒலிகடலையூடறுத்து*
பெண்ணாக்கையாப்புண்டு தாமுற்றபேதெல்லாம்*
திண்ணார்மதில்சூழ் திருவரங்கச்செல்வனார்*
எண்ணாதேதம்முடைய நன்மைகளேயெண்ணுவரே. (எ)

| | | | |
|---|---|---|---|
| திண் ஆர் மதிள் சூழ் | (மஹா ப்ரளயத்துக்கும் அழியாதபடி) திண்மை பொருந்திய மதிள் களாலே சூழப்பட்ட | உறங்காது | உறங்காமலும் (வருந்தி) |
| | | ஒலி கடலை | (திரைக் கிளப்பத்தாலே கோஷிக்கின்ற கடலை |
| திரு அரங்கம் | கோயிலிலே எழுந்தருளி யிருக்கிற | ஊடு அறுத்து | இடையறும்படி பண்ணி [அணைகட்டி] |
| செல்வனார் | ஸ்ரிய:பதியானபெருமாள் (ஸ்ரீராமனாய்த் திருவவதரித்த போது) | தாம் உற்ற பேது எல்லாம் | (இப்படி) தாம் அடைந்த வைத்தியத்தையெல்லாம் |
| பெண் ஆக்கை ஆப்புண்டு | (ஸீதையென்கிற வொரு) பெண்ணின் சரீரத்தில் ஆசைக்குக்கட்டுப்பட்டு | எண்ணாது | மறந்துபோய் (இப்போது) |
| | | தம்முடைய நன்மைகளே எண்ணுவர் | தம்முடைய பெருமைகளையே எண்ணுகின்றார். |
| உண்ணாது | உண்ணாமலும் | | |

தமக்கு மேற்பட்டாரொருவருமில்லாதபடி பரமபுருஷராயிருக்குமவரை ஒருமானிடப் பெண்ணாகிய நீ இப்படியெல்லாஞ் சொல்லுவது தகுதியோ? அவருடைய மேன்மை எங்கே? உன்னுடைய கீழ்மை எங்கே? இதை ஆராயாமல் நீ அப்பெரியவரைப் பழிப்பது சிறிதும் பொருந்தாது' என்று சில்மாதர்கள் ஆண்டாளை நோக்கிக் கூற, அதற்கு மறுமாற்ற முரைக்கின்றாள். அப்பெரியவர் ராமாவதாரத்தில் பட்டபாடுகள் தெரியாதா? ஒரு பெண்பெண்டாட்டியின் உடம்பிலே ஆசைகொண்டு அந்த ஆஶாபாஶ பாரவஶ்யத்தாலே ஊணுமின்றி உறக்கமுமின்றி அவளுடைய பிரிவுக்கு ஆற்றமல் நோவுபட்டு வானரப்படைகளைத் துணைகொண்டு கடலிலே அணைகட்டுகையாகிற அருந்தொழிலைச்செய்து இப்படிகளாலே தாம் வெளிப்படுத்திய பைத்தியத்தை ஸ்ரீராமாயணம் நடையாடுந் தேஶத்திலே அறியாதாருண்டோ? "అనిద్ర స్సతతం రామః" [அநித்ரஸ்ஸத தம்ராமः] என்றும், "న మాంసం రాఘవో భుఙ్క్తే న చాపి మధు సేవతే" [ந மாம்ஸம் ராகவோபுங்க்தே நசாபி மது ஸேவதே] என்றும் ஸ்ரீராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கவில்லையா? பரமபுருஷராயிருப்பவர் ஒரு பெண்ணுக்காக அப்பாடு படலாமோ? அது அவருடைய மேன்மைக்குத் தகுமோ? அது தகுமாகில், எனக்காகவும் அவர் அப்பாடுபட்டிருக்க வேண்டாவோ? என்னிடத்தில் மாத்திரமேயோ அவர் மேன்மை பாராட்டி யிருக்கவேணும்? என்கிறாள்.

தாமுற்ற பேதெல்லாம் என்றவிடத்தில், ஸுக்ரீவனைச் சரணமடைந்தது ஸமுத்ரராஜனைச் சரணமடைந்தது முதலிய மற்றுள்ள இழிவான செயல்களும் அநுஸந்திக்கத்தக்கவை. பெண்ணுக்கையாப்புண்டு என்றவிடத்து, "ஒருபெண் கோடியாலே கட்டுண்டு" என்ற வியாக்கியான ஸூக்தி நோக்கத்தக்கது. (எ)

பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்குப்பண்டொருநாள்*
மாசுடம்பில்நீர்வாரா மானமிலாப்பன்றியாம்*
தேசுடையதேவர் திருவரங்கச்செல்வனார்*
பேசியிருப்பனக்ள் பேர்க்கவும்பேராவே. (அ)

| | | | |
|---|---|---|---|
| பண்டு ஒருநாள் | முன்னொருகாலத்தில் | தேசு உடைய தேவர் | தேஜஸ்ஸையுடையகடவுளாகிய |
| பாசி தூர்த்து கிடந்த | பாசிபடர்ந்து கிடந்த | திரு அரங்கம் செல்வனார் | ஸ்ரீரங்கநாதன் |
| பார் மகட்கு | ஸ்ரீபூமிப்பிராட்டிக்காக | பேசி இருப்பனகள் | (முன்பு) சொல்லியிருக்கும் பேச்சுக்களானவை |
| மாசு உடம்பில் நீர்வாராமானம் இலாபன்றிஆம் | அழுக்கேறின சரீரத்தில் ஜலம் ஒழுகாநிற்கும் ஹேயமானதொருவராஹ வடிவு கொண்ட | பேர்க்கவும் பேரா | (நெஞ்சில்நின்றும்)பேர்க்கப்பார்த்தாலும் பேரமாட்டாதவை. |

ஸ்ரீதேவிக்காகப்பட்ட பாட்டைச் சொன்னாள் கீழ்ப்பாட்டில்; பூமிப்பிராட்டிக்காகப் பட்டபாட்டைச் சொல்லுகிறாள் இப்பாட்டில்.

ஹிரண்யகசிபுவின் உடன்பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னும்கொடிய அசுரராஜன் தன்வலிமையாற் பூமியைப் பாயாகச்சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச்சென்றபோது, தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் நீருக்கும் சேற்றுக்கும் இருயாத மஹாவராஹரூபமாகத் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக்கண்டுபொருது கோட்டினாற்குத்திக்கொன்று, பாதாளலோகத்தைச் சார்ந்திருந்த பூமியைக்கோட்டினாற்குத்தி அங்குநின்றுஎடுத்துக்கொண்டுவந்து பழையபடி விரித்தருளினனென்றவரலாறு அறியத்தக்கது. இப்போழுது நடக்கிற ஶ்வேதவராஹகல்பத்துக்குமுந்தின பாத்மகல்பத்தைப்பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளயஜலத்தில் மூழ்கியிருந்த பூமியை மேலேயெடுக்க நினைத்து ஸ்ரீவராஹாவதாரத்தைச் செய்தருளிக் கோட்டுநுனியாற் பூமியை எடுத்துவந்தனனென்ற வரலாறும் உண்டு.

பூமிப்பிராட்டியானவள் வெகுகாலம் ஜலத்துக்குள்ளே முழுகிக்கிடந்தபடியால் பாசிபடர்ந்துகிடந்தமைபற்றிப் "பாசிதூர்த்துக்கிடந்த" என்று அடைமொழிகொடுக்கப்பட்டது. மாசுடம்பில்நீர்வாராமானமிலாப்பன்றி=ஒரு பூமிப்பிராட்டிபக்கலிலே அமர்ந்த ஆசையினால் ஒருஶரீரத்தைப் பரிக்ரஹித்தவன், அழுக்குடம்பினரான நாமெல்லாருங்கூட அருவருக்கும்படியாய் அத்யந்தஹேயமான பன்றிவடிவத்தையோ பரிக்ரஹிக்கவேணும்? 'உடம்பு அழுக்கேறிற்று' என்று லஜ்ஜிக்கவுமறியாத ஜன்மத்தையன்றோ ஏறிட்டுக்கொண்டது. நீர்வாருதல்—நீர்பெருகுதல். மானமிலா என்றவிடத்து வியாக்கியானம்:-"மாயாம்ருகத்தைக்கண்டு அல்லாதம்ருகங்கள் மோந்துபார்த்து வெருவியோடினவிறே; அப்படியன்றிக்கே ஸஜாதீயங்கள் மோந்துபார்த்தாலும் 'நம்இனம்' என்று மருவும்படியாயாய்த்து; ஈஶ்வராபிமாநம் வாஸனையோடே போனபடி."

பன்றியாந்தேசுடையதேவர்=அஸ்மாததிகளுக்குப்போலே கர்மமடியாக நேர்ந்த ஜன்மமன்றே; ஸ்வேச்சையாலே ஏறிட்டுக்கொண்ட ஜன்மமாகையாலே தேஜஸ்ஸு—பொலியநிற்குமென்கிறது. "நிலவரம்பில பலபிறப்பாய் ஒளிவரு முழுநலம்" என்ற திருவாய்மொழியையுங்காண்க.

ஆண்டாள் தன்னுடையப்ரபணரோஷத்தின்மிகுதியினால் "மானமிலாப் பன்றி" என்னச்செய்தேயும், ஆஸ்ராப்ரக்ருதிகளாய்ப் பழிக்குமவர்கட்கு இடமறும்படி தேசுடையதேவர் என்று உடனேசொல்லிவைக்கிறாள்.

[பேசியிருப்பனகள் இத்யாதி.] ஸ்ரீவராஹநாயனார் பேசியிருக்கும்பேச்சுக்களாவன - "స్థితే మనసి సుస్వస్థే శరీరే సతి యో నరః। ధాతుసామ్యే స్థితే స్మర్తా విశ్వరూపం చ మామజమ్॥ తతస్తం మ్రియమాణం తు కాష్ఠపాషాణసన్నిభమ్। అహం స్మరామి మద్భక్తం నయామి పరమాం గతిమ్" [ஸ்திதே மநஸி ஸுஸ்வஸ்தே ஶரீரே ஸதி யோ நர:- தாது ஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா விச்வரூபஞ்ச மாமஜம், ததஸ்தம் ம்ரியமாணம் து காஷ்ட பாஷாண ஸந்நிபம், அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம்.] என்றவை.

வராஹசரமச்லோகமிறே இவை. ஶரீரம் மனம்முதலியவை பாங்காயிருக்கும்போது என்னை ஒருவன் ஸ்மரிப்பானாகில் பின்பு அவன் மூச்சடங்கி முடியுமளவானபோது அவனை நான் ஸ்மரித்திருந்து நற்கதியையாண்ணுவிப்பேன் — என்றிறே சொல்லிவைத்திருக்கிறார். அப்பேச்சுக்கள் தன்னளவில் பலிக்கக் காணாமையாலே வருத்தம்.

பேசியிருப்பனகள் என்றவிடத்திற்கு வியாக்கியானத்தில் அருளிச்செய்யும் பொருள் வேறும் சீரியதாயுமிருக்கும்:—

[செல்வனார்பேசியிருப்பனகள்.] 'செல்வர் சொல்லுக்கஞ்சாரே.' விபூதி விஷயமாகவும் ஆச்ரிதர் விஷயமாகவும் சொல்லியிருக்குமவை யென்னுதல்; அன்றிக்கே, 'நின்னைப்பிரியேன், பிரியிலுமாற்றேன்' என்றாற்போலே கூடியிருந்த போது சொன்னவையென்னுதல். [பேர்க்கவும்பேராவே.] இவற்றை மறந்து பிழைக்க வென்றுபார்த்தால் நெஞ்சில்நின்றுபேர்க்கவும் பேருகிறதில்லை; * தாமுற்றபேதெல்லாம் எண்ணாதே தம்முடைய நன்மைகளே யெண்ணி அவர் நம்மைமறந்தாலும் 'கொடியவென்னெஞ்சமவனென்றே கிடக்கும்,' என்னும்படியே நம்மால் மறந்துபிழைக்கப்போகிறதில்லை. யென்கிறாள்.'' என்பது வியாக்கியான ஸூக்தி.

தேசு=தேஜஸ் என்றவடசொற்சிதைவு. .... ... .... (அ)

கண்ணாலங்கோடித்துக் கன்னிதன்னைக்கைப்பிடிப்பான் *
திண்ணார்ந்திருந்த சிசுபாலன்தேசழிந்து *
அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக்கைப்பிடித்த *
பெண்ணாளன்பேணுமூர் பெருமாரங்கமே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| கண்ணாலம் கோடித்து | கல்யாண ஸந்நாஹங்களையெல்லாம் பரிஷ்காரமாகச்செய்து முடித்து | அவளை | அந்த ருக்மிணிப்பிராட்டியை |
| கன்னி தன்னை | கல்யாணப் பெண்ணை ருக்மிணிப்பிராட்டியை | கை பிடித்த | பாணிக்ரஹணம்செய்தருளினவனாய் |
| கை பிடிப்பான் | பாணிக்ரஹணம் செய்துகொள்ளப்போவதாக | பெண்ணாளன் | பெண்பிறந்தார் எல்லாம் தனையவன் என்று ப்ரஸித்தனான பெருமான் |
| திண் ஆர்ந்து இருந்த | ஸம்சயமில்லாமல் நிச்சயமாக நினைத்திருந்த | பேணும் | விரும்பி எழுந்தருளியிருக்கிற |
| சிசுபாலன் | சிசுபாலனானவன் | ஊர் | திவ்யதேசத்தினுடைய |
| தேசு அழிந்து | அவமானப்பட்டு | பேரும் | திருநாமமும் [illegible] |
| அண்ணாந்திருக்க ஆங்கு | ஆகாசத்தைநோக்கிக்கிடக்கும்படியாக நேர்ந்த அச்சமயத்திலே | அரங்கம் | திருவரங்கமாம் [illegible] |

ருக்மிணிப்பிராட்டியின் ப்ரதிபந்தகங்களைப்போக்கி அவளுக்கு உதவின படியை அநுஸந்தித்து, 'அவளொருத்திக்கு உதவினதானது பெண்பிறந்தா[illegible]

வராஹசரமச்லோகமிறே இவை. ஶரீரம் மனம்முதலியவை பாங்காயிருக்கும்போது என்னை ஒருவன் ஸ்மரிப்பானாகில் பின்பு அவன் மூச்சடங்கி முடியுமளவானபோது அவனை நான் ஸ்மரித்திருந்து நற்கதியையநுபவிப்பேன்— என்றிறே சொல்லிவைத்திருக்கிறார். அப்பேச்சுக்கள் தன்னளவில் பலிக்கக்காணாமையாலே வருத்தம்.

பேசியிருப்பனகள் என்றவிடத்திற்கு வியாக்கியானத்தில் அருளிச்செய்யும் பொருள் வேறும் சீரியதாயுமிருக்கும்:—

[செல்வனார்பேசியிருப்பனகள்.] 'செல்வர் சொல்லுக்கஞ்சாரே.' விபூதி விஷயமாகவும் ஆச்ரிதர் விஷயமாகவும் சொல்லியிருக்குமவை யென்னுதல்; 'அன்றிக்கே, நின்னைப்பிரியேன், பிரியிலுமாற்றேன்' என்றாற்போலே கூடியிருந்தபோது சொன்னவையென்னுதல். [பேர்க்கவும்பேராவே.] இவற்றை மறந்து பிழைக்க வென்றுபார்த்தால் நெஞ்சில்நின்றுபேர்க்கவும் பேருகிறதில்லை; * தாமுற்றபேதெல்லாம் எண்ணாதே தம்முடைய நன்மைகளே யெண்ணி அவர் நம்மைமறந்தாலும் 'கொடியவென்னெஞ்சமவனென்றே கிடக்கும்,' என்னும்படியே நம்மால் மறந்துபிழைக்கப்போகிறதில்லை. யென்கிறாள்." என்பது வியாக்கியானஸூக்தி.

தேசு=தேஜஸ் என்றவடசொற்சிதைவு. .... ... .... (அ)

கண்ணாலங்கோடித்துக் கன்னிதன்னைக்கைப்பிடிப்பான் *
திண்ணார்ந்திருந்த சிசுபாலன்தேசழிந்து *
அண்ணாந்திருக்கவே ஆங்கவளைக்கைப்பிடித்த *
பெண்ணாளன்பேணுமூர் பேருமரங்கமே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| கண்ணாலம் கோடித்து | கல்யாண ஸந்நாஹங்களையெல்லாம் பரிஷ்காரமாகச்செய்து முடித்து | அவளை | அந்த ருக்மிணிப்பிராட்டியை |
| கன்னிதன்னை | கல்யாணப் பெண்ணை ருக்மிணிப்பிராட்டியை | கை பிடித்த | பாணிக்ரஹணம்செய்தருளினவனாய் |
| கை பிடிப்பான் | பாணிக்ரஹணம் செய்து கொள்ளப்போவதாக | பெண்ணாளன் | பெண்பிறந்தார்க்கெல்லாம் துணைவன் என்று ப்ரஸித்தனான பெருமான் |
| திண் ஆர்ந்து இருந்த | ஸம்சயமில்லாமல் நிச்சயமாக நினைத்திருந்த | பேணும் | விரும்பி எழுந்தருளியிருக்கிற |
| சிசுபாலன் | சிசுபாலனானவன் | ஊர் | திவ்யதேசத்தினுடைய |
| தேசு அழிந்து | அவமானப்பட்டு | பேரும் | திருநாமமும் |
| அண்ணாந்திருக்க ஆங்கு | ஆகாசத்தைநோக்கிக்கிடக்கும்படியாக நேர்ந்த அச்சமயத்திலே | அரங்கம் | திருவரங்கமாம். |

ருக்மிணிப்பிராட்டியின் ப்ரதிபந்தகங்களைப்போக்கி அவளுக்கு உதவினபடியை அநுஸந்தித்து, 'அவளொருத்திக்கு உதவினதானது பெண்பிறந்தா

ரெல்லார்க்கும் உதவினபடியன்றோ’ என்று அவ்வழியாலே தரிக்கிறாள். அர்ஜுநனொருவனை நோக்கிக் கண்ணபிரானருளிச்செய்த வார்த்தையை நாமெல்லாரும் விச்வஸித்திருக்கிறோமிறே; அதுபோல்.

ருக்மிணியைக் கைப்பிடித்த வரலாறு:—விதர்ப்பதேசத்தில் குண்டினமென்கிற பட்டணத்தில் பீஷ்மகனென்கிற அரசனுக்கு ருக்மி என்கிற பிள்ளையும் ருக்மிணி என்கிற பெண்ணுமிருந்தனர். அந்தருக்மிணியானவள் ஸாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அவதாரம். அவளுக்கு யுக்தவயதுவந்தவுடன் க்ருஷ்ணன் சென்று இப்பெண்ணை எனக்கு விவாஹஞ் செய்துகொடுக்கவேணுமென்று கேட்க, ருக்மியென்பவன் அவளைச் சேதிதேசத்தரசனான சிசுபாலனுக்குக் கொடுக்கவிரும்பியவனாதலால் கிருஷ்ணனுடைய விருப்பத்திற்கு உடன்படாதொழிந்தான். சிலநாள் கழிந்தபின் அந்த ருக்மிணியின் கல்யாணத்துக்காக ஸ்வயம்வரம் கோடித்து ஸகலதேசத்து அரசர்களையும் ருக்மி வரவழைத்தான். அவர்கள் வந்து சேர்ந்தவுடனே க்ருஷ்ணனும் பலராமாதிகளைக்கூட்டிக்கொண்டு அப்பட்டணத்துக்குப்போய்க் கல்யாணத்துக்கு முதல்நாள் அந்தருக்மிணியை மாயமாய் அபஹரித்துக்கொண்டு வந்துவிட்டான். பின்பு அங்குள்ள ‘தந்தவக்த்ரன்’ முதலியபல அரசர்கள் போர்செய்ய எதிர்த்துவர, அவர்களைப்பலராமனும் கண்ணபிரானும் முதுகுகாட்டியோடும்படி செய்துவிட்டனர். பிறகு ருக்மிணிப்பிராட்டியின் தமையனான ருக்மியானவன் “இஃது என்னவபிமானகாரியமாயிருக்கிறதே” என்று எதிர்பொருது மீட்பதாக நினைத்துவந்து கண்ணனைத் தகைய, அப்போது ஸ்ரீக்ருஷ்ணன், இவனைக்கொன்றால் ருக்மிணி மனம்வருந்துவாள் என்று அவனைப்பிடித்துத் தனது தேர்க்காலிலேகட்டி அம்பாலே அவனது தலையைச் சிரைத்திட்டு மானபங்கஞ்செய்துவிட்டுப் பின்பு ருக்மிணியை விதிபூர்வகமாகக் கல்யாணஞ்செய்துகொண்டான்—என்பதாம். இவ்வரலாற்றில் இன்னுஞ்சில விஸ்தாரங்களுமுண்டு.

ருக்மிணிப்பிராட்டியொருத்திக்கு உதவினதைப் பெண்பிறந்தார்க்கெல்லாமுதவினதுபோல் நினைத்துப் பேண்ணுளன் என்கிறாளென்ப.

பெரும்அரங்கமே=பேருமென்கிற உம்மைக்குக் கருத்தென்னெனில்; அவனும் பெண்ணுளன், அவனுடைய ஊரின்பேரும் அரங்கம்—, அதாவது—அரங்கமென்றால் கூத்தாடுமிடத்துக்குப் பெயர்; ஸ்ரீரங்கமென்றும்திருவரங்கமென்றும் ப்ரஸித்தியால் பெண்டிர் கூத்தாடுமிடம் அரங்கம் என்று கூறப்படுதலால் அவனும் பெண்களைவாழ்விப்பவன், அவனிருக்குமூரும் பெண்கள் களித்து வாழுமிடமாய்த்து; இனி எமக்கு என்னகுறையென்கை. ... ... (கூ)

செம்மையுடைய திருவரங்கர்தாம்பணித்த *
மெய்ம்மைப்பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர் *
தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னுஞ்சொல் *
தம்மிடையேபொய்யானால் சாதிப்பாராரினியே. (௰)

ரெல்லார்க்கும் உதவினபடியன்றோ' என்று அவ்வழியாலே தரிக்கிறாள். அர்ஜுநனொருவனை நோக்கிக் கண்ணபிரானருளிச்செய்த வார்த்தையை நாமெல்லாரும் விஶ்வஸித்திருக்கிறோமிறே; அதுபோல்.

ருக்மிணியைக் கைப்பிடித்த வரலாறு:—விதர்ப்பதேஶத்தில் குண்டினமென்கிற பட்டணத்தில் பீஷ்மகனென்கிற அரசனுக்கு ருக்மி என்கிற பிள்ளையும் ருக்மிணி என்கிற பெண்ணுமிருந்தனர். அந்தருக்மிணியானவள் ஸாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ்மியின் அவதாரம். அவளுக்கு யுக்தவயதுவந்தவுடன் க்ருஷ்ணன் சென்று இப்பெண்ணை எனக்கு விவாஹஞ் செய்துகொடுக்கவேணுமென்று கேட்க, ருக்மியென்பவன் அவளைச் சேதிதேசத்தரசனான ஶிஶுபாலனுக்குக் கொடுக்கவிரும்பியவனாதலால் கிருஷ்ணனுடைய விருப்பத்திற்கு உடன்படாதொழிந்தான். சிலநாள் கழிந்தபின் அந்த ருக்மிணியின் கல்யாணத்துக்காக ஸ்வயம்வரம் கோடித்து ஸகலதேஶத்து அரசர்களையும் ருக்மி வரவழைத்தான். அவர்கள் வந்து சேர்ந்தவுடனே க்ருஷ்ணனும் பலராமாதிகளைக்கூட்டிக்கொண்டு அப்பட்டணத்துக்குப்போய்க் கல்யாணத்துக்கு முதல்நாள் அந்தருக்மிணியை மாயமாய் அபஹரித்துக்கொண்டு வந்துவிட்டான். பின்பு அங்குள்ள 'தந்தவக்த்ரன்' முதலியபல அரசர்கள் போர்செய்ய எதிர்த்துவர, அவர்களைப்பலராமனும் கண்ணபிரானும் முதுகுகாட்டியோடும்படி செய்துவிட்டனர். பிறகு ருக்மிணிப்பிராட்டியின் தமையனான ருக்மியானவன் "இஃது என்ன அநியாயமானகாரியமாயிருக்கிறதே'' என்று எதிர்பொருது மீட்பதாக நினைத்துவந்து கண்ணனைத்தகைய, அப்போது ஸ்ரீக்ருஷ்ணன், இவனைக்கொன்றால் ருக்மிணி மனம்வருந்துவாள் என்று அவனைப்பிடித்துத் தனது தேர்க்காலிலேகட்டி அம்பாலே அவனது தலையைச் சிரைத்திட்டு மானபங்கஞ்செய்துவிட்டுப் பின்பு ருக்மிணியை விதிபூர்வகமாகக் கல்யாணஞ்செய்துகொண்டான்—என்பதாம். இவ்வரலாற்றில் இன்னுஞ்சில விஸ்தாரங்களுமுண்டு.

ருக்மிணிப்பிராட்டியொருத்திக்கு உதவினதைப் பெண்பிறந்தார்க்கெல்லாமுதவினதுபோல் நினைத்துப் பேண்ணுளன் என்கிறாளென்ப.

பேரும்அரங்கமே=பேரும்என்கிற உம்மைக்குக் கருத்தென்னெனில்; அவனும் பெண்ணுளன், அவனுடைய ஊரின்பேரும் அரங்கம்—, அதாவது—அரங்கமென்றால் கூத்தாடுமிடத்துக்குப் பெயர்; ஸ்ரீரங்கமென்றும்திருவரங்கமென்றுமுள்ள ப்ரஸித்தியால், பிராட்டி கூத்தாடுமிடம் அரங்கம் என்று கூறப்படுதலால், அவனும் பெண்களைவாழ்விப்பவன், அவனிருக்குமூரும் பெண்கள் களித்து வாழுமிடமாய்த்து; இனி நமக்கு என்னகுறையென்கை. ... ... (௯)

செம்மையுடைய திருவரங்கர்தாம்பணித்த *
மெய்ம்மைப்பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர் *
தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னுஞ்சொல் *
தம்மிடையேபொய்யானால் சாதிப்பாராரினியே. (௧௦)

| | |
|---|---|
| செம்மை உடைய | (மனமொழி மெய்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருக்கையாகிற) செம்மைக்குணமுடைய |
| திரு அரங்கர் | ஸ்ரீரங்கநாதர் |
| தாம் பணித்த | (முன்பு) தம்வாயாலே அருளிச்செய்த |
| மெய்ம்மை | ஸத்யமானதும் |
| பெரு | பெருமை பொருந்தியதுமான |
| வார்த்தை | சரமச்லோகரூபமான வார்த்தையை |
| விட்டுசித்தர் | (என் திருத்தகப்பனாரான) பெரியாழ்வார் |
| கேட்டு இருப்பர் | (குருமுகமாகக்) கேட்டு (அதில் சொல்லியிருக்கிறபடி) நிர்ப்பரராயிருப்பர் |
| தம்மை உகப்பாரை தாம் உகப்பர் என்னும் சொல் | "தம்மை விரும்பினவர்களைத் தாமும் விரும்புவர்" என்ற பழமொழியானது |
| தம் இடையே | தம்மிடத்திலேயே. |
| பொய் ஆனால் | பொய்யாய்ப் போய்விட்டால் |
| இனி | அதற்குமேல் |
| சாதிப்பார் ஆர் | (அவர் தம்மை) நியமிப்பார் ஆர்? (யாருமில்லை.) |

* * * நெஞ்சில் நினைப்பது ஒன்றாய் வாயாற்சொல்வது வேறொன்றாய், பின்பு அநுஷ்டிப்பது மற்றொன்றாயிருக்கும் செவ்வைக்கேடர்களை ஒருங்க விடுகைக்கு மநோவாக்காயங்கள் மூன்றும் ஒருபடிப்பட்டிருக்குமவராய் அக்குணம்விளங்குமாறு கோயிலிலே கண்வளர்ந்தருளுமவரான பெருமாள், முன்பு அர்ஜுநனை வ்யாஜீகரித்து அவனுடைய தேர்த்தட்டிலே நின்றுகொண்டு, யதார்த்தமுமாய் ப்லாக்யமுமான ஒருவார்த்தையை அருளிச்செய்தார்; அதாவது— "உன்காரியங்களை யெல்லாம் குறையறத் தலைக்கட்டிவைக்க நானிருக்கிறேன்; நீ ஒன்றுக்கும் கவலைப்படவேண்டியதில்லை; உனது ஸகலபாரங்களையும் என்பக்கல் ஸமர்ப்பித்து நிர்ப்பரனாய் இரு" என்று உரைத்த சரமச்லோகம். அவ்வார்த்தையைக்கேட்டு அதன்படியே நிஷ்டையுடையராயிருப்பர் பெரியாழ்வார் என்கிறாள்முன்னடிகளில்; அவருடைய மகளான தனக்கும் அந்த அத்யவஸாயமே புகல் என்று காட்டியவாறு.

[தம்மையுகப்பாரை இத்யாதி.] நாட்டில் ஒருவன் ஒருவனைநோக்கி "நீ ஆர்க்கு நல்லவன்?" என்றால், அதற்கு அவன் "நான் நல்லார்க்குநல்லன்" என்று மறுமொழிகூறுவது ஸார்வலௌகிகம். "நல்லார்க்குத் தீயாருண்டோ?" என்றும் ஒரு உலகநீதியுண்டு. இந்த உலகவழக்குச்சொல் அவ்வெம்பெருமானிடத்துப் பொய்யாகப்போய்விட்டால் "ஏன் நீர் இப்படி அநியாயம் பண்ணுகிறீர்?" என்று அவரைக்கேட்பதற்கும் "இனிநீர் இன்னபடி வர்த்திக்கவேணும்" என்று நியமித்துச்சொல்வதற்கும்வல்லாருண்டோ? வேலியே பயிரைமேய்கிறப்போலே, * நெறியெல்லாமெடுத்துரைத்தவனே நன்னெறிக்கு மாறுபாடாக நடக்குமாகில் நாமோ அவனுக்கு நெறியுரைப்பது? "மாமேகம் சரணம் வ்ரஜ" என்று அவர் நடக்கு விதித்த காரியத்தை நாம் குறையறச்செய்து தலைக்கட்டினோம். "மோக்ஷயிஷ்யாமி" என்றும் "மாசுச:" என்றும் ஸ்வக்ருத்யமாக

அவர் சொல்லிற்றை அவர் நிறைவேற்றாதொழியில் நாம் என்செய்வது? என்கிறாள் பேர்த்தும்.

“ஸாஸிப்பார்” என்பது தமிழ்நெறிக்கிணங்கச் “சாதிப்பார்” என்று கிடக்கிறது. ஸாஸித்தல்=நியமித்தல். இங்கே வியாக்கியான ஸ்ரீஸூக்தி:— “உம்மையுகந்தவனை நீரும் உகக்கவேணும் என்று கசையெடுத்துக் கற்பிக்கவோ.” [இவ்விடத்தில் அச்சுப்பிரதிகளில் “கசையெடுத்து உகப்பிக்கவோ” என்றிருப்பது பிழையேயாம். “கசையடித்துக் கற்பிக்கவோ?” என்றும் பாடம் உண்டு.] கசையாவது - மாடுகுதிரை முதலியவற்றை அடக்கும் கருவியான சாட்டை. தாடநதர்ஜநாதிகள் பண்ணி மாணாக்கர்களுக்குக் கற்பிக்குமாபோலே எம்பெருமானுக்குக் கற்பிக்க யாரால் முடியும் என்றவாறு.

கண்ணபிரான் எந்தத்தேரில் இருந்து கொண்டு கீதை அருளிச்செய்தனனோ அந்தத்தேர் பெரியதிருவடியின் அபராவதாரமென்பது ஸம்ப்ரதாயம்; விட்டுசித்தரும் பெரியதிருவடியின் அபராவதாரபூதர், ஆகவே விட்டுசித்தர் அப்போது தேராக இருந்துகொண்டு கீதையைக்கேட்டிருப்பர் என்கிற கருத்துப்பட இப்பாசுரத்தில் இரண்டாமடி அமைந்திருக்கிற அழகு காண்மின்.

அடிவரவு:— தாம் எழில் பொங்கு மச்சு பொல்லாக் கை உண்ணா பாசி கண்ணாலம் செம்மை மற்று.

.... ... ...

பதினோராந்திருமொழி உரை முற்றிற்று.

---

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்



ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# பன்னிரண்டாந்திருமொழி—மற்றிருந்தீர்கட்கு.

உரையவதாரிகை:—கீழ்த்திருமொழியில் இவள்பட்ட ஆர்த்தியை எம்பெருமான் உடனே வந்து பரிஹரித்தருளவில்லை. அந்த ஆர்த்தியோ இவளால் ஆற்றமுடியவில்லை. "அவன் திருவுள்ளமானபோது வந்து நம்மைத் திருவுள்ளம் பற்றுகிறான்" என்று ஆறியிருக்குந்தன்மையில்லை இவளுக்கு. அவிளம்பிதமாக அவனோடே ஸம்ச்லேஷித்துத் தீரவேண்டும்படி த்வரைமிக்கது. தானே காலால் நடந்து அவனுள்ளவிடத்தே போகப் பார்த்தும் அசக்தியாலே கால்நடை தாராமையாலே தன்னிடத்தில் பரிவுள்ளவர்களை நோக்கி "நீங்கள் என்னை இப்போதே அக்கண்ணபிரானெழுந்தருளியிருக்குமிடத்திலே கொண்டுபோய்ப் போடுங்கள்" என்கிறாள். ஒவ்வொரு பாட்டிலும் ஒவ்வொரு உத்தேச்யபூமியை அருளிச்செய்கிறாள்.

மற்றிருந்தீர்கட்கறியலாகா மாதவனேன்பதோரன்புதன்னை *
உற்றிருந்தேனுக்குரைப்பதெல்லாம் ஊமையரோடுசெவிடர்வார்த்தை*
பெற்றிருந்தாளையொழியவேபோய்ப் பேர்த்தொருதாயில்வளர்ந்தநம்பி *
மற்பொருந்தாமற்களமடைந்த மதுரைப்புறத்தென்னையுய்த்திடுமின். (க)

| | |
|---|---|
| மற்று இருந்தீர்கட்கு | (என்னுடைய துணிவுக்கு) மாறுபாடாக இருக்கின்ற உங்களுக்கு |
| அறியல் ஆகா | அறிய முடியாததாய் |
| மாதவன் என்பது ஓர் அன்பு தன்னை | மாதவன் விஷயமான அபிநிவேசத்தை, |
| உற்றிருந்தேனுக்கு | அடைந்திருக்கிற எனக்கு |
| உரைப்பது எல்லாம் | நீங்கள் சொல்லுவதெல்லாம் |
| ஊமையரோடு செவிடர் வார்த்தை | ஊமையும் செவிடனுங்கூடி வார்த்தை சொல்லிக்கொள்வது போல் வீண்; |

(இப்போது எனக்குச் செய்யத்தக்கது எதுவென்றால்;)

| | |
|---|---|
| பெற்றிருந்தாளை ஒழிய போய் | மெய்சொந்து பெற்ற தாயான தேவகியை விட்டொழிந்து |
| பேர்த்து ஒரு தாய் இல் | வேறொரு தாயாகிய யசோதையின் க்ருஹத்திலே, |
| வளர்ந்த | வளர்ந்தவனும் |
| மல் பொருந்தா மல் களம் அடைந்த | மல்லயுத்தபூமியிலே மல்லர்கள் வந்து சேர்வதற்கு முன்னே தான் முற்பாடனாய்ப்போய்ச் சேர்ந்திருப்பவனுமான |
| நம்பி | கண்ணபிரானுடைய (நகரமாகிய) |
| மதுரை | மதுராபுரியினுடைய |

புறத்து — ஸமீபப்ரதேசத்திலே
என்னை — என்னை
உய்த்திடுமின் } கொண்டு சேர்த்து விடுங்கள்.

* * * எம்பெருமானை இப்போதே பெறவேணுமென்று வருந்திக்கிடக்கின்ற ஆண்டாளை நோக்கித் தோழிகளும் அன்னையரும் 'அம்மா! நம் தலையால் ஆவதொன்றுமில்லை; பேறு அவன் தலையாலே ஆகவேணும் என்பது ஸித்தாந்தமான பின்பு நீ இப்படிப்பதறுவதில் பயனொன்றுமில்லையே; அவனடியிலேபேறு பெறலாமென்று ஆறியிருப்பதன்றோ முறைமை; அசோக வநிகையிற் பிராட்டியின் அத்யவஸாயம் உனக்குத் தெரியாததன்றே; அவளைப்போலே நீயும் ஆறியிருக்கவேணும் காண்; நீ இப்படிப் பதறலாகாது' என்றாற்போலே சிலஹிதவசநங்களைச் சொல்லப்புக, அவர்களைக்குறித்துக் கூறுகின்றாள்—'எனக்கு இப்போது நிகழ்கிற அவஸ்தை இப்படிப்பட்டதென்று சிறிதும் அறிவில்லாத நீங்கள், பகவத்விஷய காமத்தின் மேலெல்லையிலே நிற்கிற எனக்குச்சொல்லுகிற வார்த்தைகள் வீண்; உங்கள்பேச்சு என்காதில் புகவும்மாட்டா; புகுந்தாலும் அவற்றுக்கு மறுமொழி கூறுமளவிலே நான் நிற்கின்றிலேன்; ஆகையாலே நீங்கள் எனக்குஹிதஞ்சொல்லப்பார்ப்பதை நிறுத்திவிட்டு * ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாய் ஒளித்துவளர்ந்து சாணூர முஷ்டிகாதிமல்லர்களோடே போர்புரிந்து, வெற்றி பெற்ற கண்ணபிரானெழுந்தருளி யிருக்கிற மதுராபுரியின் ப்ராந்தத்திலே என்னைக்கொண்டுபோய்ப் போடுங்கள்' என்கிறாள்.

ஊமையரோடு செவிடர்வார்த்தை = செவிடரோடு ஊமையர் வார்த்தை சொல்லுமாபோலேயிராநின்றதென்றபடி ஊமை வார்த்தை சொல்வதற்கு அநர்ஹன்; செவிடன் வார்த்தைகேட்பதற்கு அநர்ஹன்; அதுபோல, நீங்கள் என்னைப்பற்றிப் பேசுவதற்கு யோக்யதையற்றவர்கள்; மர்யாதைமீறி நீங்கள் பேசினும் அப்பேச்சைக் கொள்வதற்கு எனக்குச் செவியில்துளையில்லை; ஆகையாலே நீங்கள் எனக்குச் சொல்வதெல்லாம் வீண் என்றவாறு.

'இப்படி நீ வெட்டொன்று துண்டிரண்டாகச் சொல்லலாமா? நான் உன்னைப்பெற்ற தாய் அல்லேனோ? என்னைக் கைவிடப்பார்க்கலாமோ?' என்று தாய்சொல்ல, 'அம்மா! நான் என்செய்வேன்? பெற்றதாயை உதறித்தள்ளிவிட்டு வேறிடந்தேடியோடுமவன் எனக்குத் தன்னோடு ஸாம்யாபத்தி கொடுத்தான்காண்' என்பாள்போலக் கூறுகின்றாள் மூன்றாமடி. கண்ணபிரான் வஸுதேவ பத்நியான தேவகிக்குப் பிள்ளையாகப்பிறந்து நந்தகோப பத்நியான யசோதையின் மகனாக வளர்ந்தருளினவரலாறு அறியத்தக்கது.

மற்போருந்தா மற்களமடைந்தநம்பி—'தன்னுடம்போடே அணையவேணுமென்னுமாசையுடைய நானிருக்க, இத்தனை போது புறப்பட்டு முரட்டுமல்லரோடே அணைகைக்குப் போகாநிற்கும். மல்லரானவர்கள் மற்பொருகைக்கு யுத்தபூமியிலே சென்று கிட்டுங்காட்டில் தான் யுத்தபூமியிலே சென்று கிட்டுமாய்த்து. அவன் மல்லருடம்போடே அணைவதற்குமுன்னே இடையிலே நான்

"சென்றுகிட்டிக்கொள்ளும்படி என்னை மதுரையின் பரிஸரத்திலே கொடுபோய்ப் பொகடுங்கோள்" என்ற வியாக்யான ஸ்ரீஸூக்தியின் போக்யதை அநுபவிக்கத் தக்கது.

மற்களமடைந்த வரலாறு:—கம்ஸனால் வலிய அழைக்கப்பட்டு ஸ்ரீக்ருஷ்ண பலராமர்கள் அவனது ஸபையிற் செல்லுகையில் அவர்களை எதிர்த்துப் பொருது கொல்லும்படி கம்ஸனால் ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர்வந்து எதிர்த்து உக்ரமாகப் பெரும்போர்செய்ய, அவர்களையெல்லாம் அவ்யாதவவீரர் இருவரும் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டனர் என்பது மல்லவதஞ்செய்த கதை.

"மதுரையின் பரிஸரத்திலே" என்று வியாக்யானத்தில் அருளிச்செய்யப்பட்டிருத்தலால் "மதுரைப்புறத்து" என்றபாடமே ஏற்கும். "புரத்து" என்னக்கூடாது. இடையினரகரமல்ல, வல்லினறகரம்.

உய்த்திடுதல் = கொண்டு சேர்க்கையும், உஜ்ஜீவிக்கச்செய்கையும். .... (க)

நாணியினியோர்கருமமில்லை நாலயலாருமறிந்தொழிந்தார் *
பாணியாதென்னைமருந்துசெய்து பண்டுபண்டாக்கவுறுதிராகில் *
மாணியுருவாயுலகளந்த மாயனைக்காணில்தலைமறியும் *
ஆணையால்நீரென்னைக்காக்கவேண்டில் ஆய்ப்பாடிக்கேயென்னையுய்த்திடுமின்.

| | |
|---|---|
| இனி | இனிமேல் |
| நாணி | வெட்கப்பட்டு |
| ஓர் கருமம் இல்லை | ஒருபயனுமில்லை ; |
| | (ஏனெனில்,) |
| நால் அயலாரும் | ஊரிலுள்ளாரெல்லாரும் |
| அறிந்தொழிந்தார் | (எனது செய்தியை) அறிந்து கொண்டார்கள். |
| பாணியாது | காலதாமதமின்றி |
| மருந்து செய்து | வேண்டும் பரிஹாரங்களைச்செய்து |
| என்னை | என்னை |
| பண்டு பண்டு ஆக்க உறுதிர் ஆகில் | இப்போதைய விரஹாவஸ்தைக்கு முற்பட்டதான ஸம்ச்லேஷ தசைக்கும் முற்பட்டதான பகவத் விஷய வாஸனையையே அறியாத தசையிலிருந்த நிறத்தைப்பெற்றவளாகச் செய்ய நினைப்பீர்களாகில், |

| | |
|---|---|
| நீர் | நீங்கள் |
| என்னை | என்னை |
| ஆணையால் | ஸத்யமாக |
| காக்க வேண்டில் | காப்பாற்ற விரும்புகிறீர்களாகில் |
| என்னை | என்னை |
| ஆய்ப்பாடிக்கே | திருவாய்ப்பாடியிலே |
| உய்த்திடுமின் | கொண்டு சேர்த்துவிடுங்கள் ; |
| | (அவ்விடத்தில்) |
| மாணி உரு ஆய் உலகு அளந்த மாயனை காணில் | (மாவலியினிடத்தில்) வாமநரூபியாய்ச் சென்று (த்ரிவிக்ரமனாகி) உலகங்களை யெல்லாம் அளந்துகொண்ட பெருமானை ஸேவிக்கப்பெற்றால் |
| தலை மறியும் | (இந்த நோயானது) தலைமடங்கும். |

"பெண்ணே! நீ ஆயிரந்தான் சொல்லு; உன்னுடைய துணிவு உகக்கத்
தக்கதாகமாட்டாது. நீ படிதாண்டாப் பத்தினியாயிருக்க வேண்டியவள்; படி
கடந்து நீ செல்லுமளவில் அவ்வெம்பெருமானுக்கு அது பெருத்த அவத்யமாய்
முடியும்; 'ப்ரபந்நஸந்தானத்திலே இப்படியொருத்தி கிளம்பினளே' என்று
ஊராரும் பழிக்கநேரிடும்; இதெல்லாம் உனது பெண்மை நிறைவுக்குப் பாங்
கல்ல; உன்ஸ்வரூபத்தை நீ காத்துக்கொள்ளவேண்டாவா?" என்று தாய்மார்
சொல்ல, அவர்களை நோக்கிக் கூறுகின்றாள்—நான் முறை கெட்டபடியை
இனிமேலா ஊரார் அறியப்போகிறார்கள்? என்றைக்கோ அறிந்து விட்டார்கள்!
இனிமேல் அறியவேண்டும்படி இங்கு ஒன்றும் ரஹஸ்யமாயிருக்கவில்லை, ஏழைப்
புல்லையும் மேய்ந்து எட்டேர்த்தண்ணீரையுங் குடித்து வருகிற கொண்டிப் பசுவின்
நிலைபோன்றதன்றோ எனது நிலை; இனி நாம் ஆர்க்கு லஜ்ஜைப்படவேணும்;
லஜ்ஜைப்பட்டுத்தான் பெறவேண்டியது என்ன இருக்கிறது.

இங்ஙனே கூறின ஆண்டாளை நோக்கிப் பின்னையும் அவர்கள் "நீ இப்படித்
துணிச்சலாகச் சொல்லிவிட்டாலும் உன்னை நாங்கள் இவ்வளவிலே விட்டுப்
போவோமோ? உனக்கு நன்மைதேடுகை எங்கள் காரியமன்றோ? யானை தன்தலை
யில் தான்மண்ணை வாரியிட்டுக்கொண்டாலும் பாகன் அதலை சோதிக்கக்கட
வனன்றோ? அப்படியே நீயும் அறியாமையாலே உன்தலைக்குத் தீங்குவிளைத்துக்
கொண்டாலும் அத்தீங்கைத் துடைத்து நன்மைபெறுத்த வேண்டியது எமது
கடமையாதலால் உன் துணிச்சலை நாங்கள் நிறைவேறவொட்டுவோமோ?"
என்றார்கள்; அவர்களைநோக்கிக் கூறுகின்றாள்—"அன்னைமீர்! எனக்கு நன்மை
விளைக்கவேணுமென்ற விருப்பம் உங்களுக்கு உண்மையாக உண்டாகில், இப்
போதே என்னைத்திருவாய்ப்பாடியிலே கொண்டு சேர்க்கப்பாருங்கள்; இதுவே
எனக்குற்ற நன்மையாம்; மற்றைப்படி நீங்கள் செய்யுமதெல்லாம் எனக்குத்
தீமையேகிடீர்! என்கிறாள். "என்னை மெய்யே நோக்கப்பார்க்கிறீர்களாகில்,
தன்னுடைமைபெறுகைக்காகத் தன்னை இரப்பாளனுக்கினவனை என்கண்ணுக்கு
இலக்காக்கப் பாருங்கோள்" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி அநுஸந்திக்கத்
தக்கது.

பாணியாது=காலதாமஸம் செய்யாமல் என்றபடி. பாணித்தல் என்னும்
பதத்தை ஆழ்வார்களுள் பெரியாழ்வாரும் இவளுமே ப்ரயோகித்தனர்.
"பாணிக்கவேண்டா நடமின்" என்றாரிறே பெரியாழ்வார்திருமொழியில்.

பண்டுபண்டாக்க = "பண்டாக்க" என்றால் போராதோ? 'பண்டுபண்
டாக்க' என்றதற்குக் கருத்தென்? எனில், கேண்மின். இப்போதைய என்
அவஸ்தைக்கு முற்பட்டதான யாதொரு அவஸ்த்தையுண்டோ, அதற்கும்
முற்பட்டதான யாதொரு அவஸ்தையுண்டோ அவ்வவஸ்த்தையில் நான் எப்படி
யிருந்தேனோ அப்படி என்னை இப்போது ஆக்கவிரும்புவீர்களாகில் என்றபடி.
இதனை விவரிப்போம்.— இப்போதைய அவஸ்த்தையாவது விரஹாவஸ்தை;
இதற்கு முந்திய அவஸ்தையாவது ஸம்ஸ்லேஷாவஸ்தை; அதற்கும் முந்திய

அவஸ்தையாவது - பகவத்விஷயவாஸனையே தெரியாமல் அந்யபரமாகப் போது போக்கினகாலம், *உண்டியே உடையே உகந்திருந்த காலம். அப்போது ஶரீரம் வாடாமல் மெலியாமல் மாமைகுன்றாமல் பசுபசுவென்றிருக்குமிறே; நிர்விசாரமாக உண்டுடுத்துத் திரியுங்காலத்திலே மேனி நித்யபுஷ்டமாயிருக்கும். பகவத்விஷயத்தில் வாஸனை பண்ணிப்போந்தது முதலாக "ஸம்யோகா விப்ரயோகாந்தா;" என்றபடி க்ஷணகாலம் ஸம்ஶ்லேஷமும் சிரகாலவிஶ்லேஷமுமாய் வ்யஸநமே மீதூர்ந்து செல்லுகையாலே-இப்போதைய விரஹாவஸ்தைக்கு முந்தியதான ஸம்ஶ்லேஷாவஸ்தையிலுள்ள நிறத்தை விரும்புவதில் பயனில்லையென்று, அதற்கும் முந்தியதான அந்யபரத்வாவஸ்தையிலிருந்த நிறத்தை விரும்புகிறாளாய்த்து. இவ்வளவு அர்த்தங்களையும் இரண்டு வாக்கியத்திலே அடக்கி அருளிச்செய்தார் பெரியவாச்சான் பிள்ளை; ஸம்ஶ்லேஷிப்பதற்கு முன்புத்தைப்பூர்த்தி எனக்குண்டாகப் பார்த்திகோளாகில்; —கலக்கப்புக்கவன்று தொடங்கி மெலியத்தொடங்கிற்றே க்ருஷிபண்ணிற்று." என்று.—"என்னிறம் பண்டுபண்டுபோலொக்கும்" [பெரியதிருமொழி-கக-க-கூ] என்றவிடத்தில் வியாக்கியானத்திலே சிறிது தெளியக்காட்டியருளினார்—"அவன் வாய்புலற்றும் நிறம் அறப்பண்டுபோலேயாம்; கலக்கையாகிறது பிரிவுக்கு அங்குரமிறே. கலந்து பிரிந்து லாபாலாபங்களறியாதே பூர்ணையாயிருந்தபோதை நிறம்போலேயாம்." என்பது அவ்விடத்து அருளிச்செயல்.

தலைமறியும் என்ற வினைமுற்றுக்கு எழுவாய்வருவித்துக்கொள்ளவேணும்; உலகளந்தமாயனை ஸேவிக்கப்பெற்றால் என்னுடைய ஆற்றாமை தலைமடங்குமென்கை.

தந்தையுந்தாயுமுற்றாருநிற்கத் தனிவழிபோயினாளென்னுஞ்சொல்லு*
வந்தபின்னைப்பழிகாப்பரிது மாயவன்வந்துருக்காட்டுகின்றான்*
கொந்தளமாக்கிப்பரக்கழித்துக் குறும்புசெய்வானோர்மகனைப்பெற்ற*
நந்தகோபாலன்கடைத்தலைக்கே நள்ளிருட்கணென்னையுய்த்திடுமின். (௫)

தந்தையும் - "தகப்பனாரும்
தாயும் - தாய்மாரும்
உற்றாரும் - மற்றுமுள்ள உறவினரும்
நிற்க - இருக்கும்போது
தனி வழி போயினாள் என்னும் சொல்லு - (இவள்) தான்தோன்றியாகத் தெருவிலே புறப்பட்டாள்" என்கிறவார்த்தையானது
வந்த பின்னை - உலகில் பரவின பிறகு
பழிகாப்பு அரிது - அப்பழியைத் தடுப்பது முடியாது;
(நான் தனிவழி போகாதிருக்கவும் முடியவில்லை; ஏனென்றால்)
மாயவன் - ஆச்சர்யசேஷ்டிதங்களையுடையனான கண்ணபிரான்
வந்து - எதிரேவந்து
உருகாட்டுகின்றான் - தன் வடிவைக் காட்டி இழுக்கின்றானே
(இப்போது நீங்கள் செய்யவேண்டியதென்னவென்றால்)
கொந்தளம் ஆக்கிபரக்கழித்து குறும்பு செய்வான் ஓர் மகனை பெற்ற - (பெண்களைக்)குடிகெடுத்துக் குறும்புசெய்யும் பிள்ளையைப் பெற்றவனான

| | | | |
|---|---|---|---|
| நந்தகோபாலன் | நந்தகோபருடைய | நள்ளிருட்கண் | நடுநிசியிலே |
| கடைத்தலைக்கே | திருமாளிகை வாசலிலே | என்னை உய்த்திடுமின் | என்னைக் கொண்டுபோய்ச் சேர்த்து விடுங்கள். |

தாய் தகப்பன்மார் சுற்றத்தார் முதலானோர் இருக்கும்போது, அவர்களைக்கொண்டு தனக்குற்ற நன்மைகளைத் தேடிக்கொள்ளவேண்டியது தகுதியாயிருக்க, ஒருபெண்பிள்ளை அவர்களையெல்லாம் திரஸ்கரித்துவிட்டுத் தான் தோன்றியாகத் தானே புறப்பட்டாள் என்று சிலர் பழிக்கத் தலைப்படுவர்கள்; அப்பழியானது என்னளவிலே நில்லாமல் இக்குடிக்கே பெருத்த பழிப்பாய்த் தலைக்கட்டும். அப்போது இப்பழிப்பைப் பரிஹரிக்க நீங்கள் முயலாதிருக்கப் போகிறதில்லை; ஆனால் அப்போது உங்களுடைய முயற்சி பயன்படமாட்டாது; பழி விளைவதற்கு முன்னே அதனைப் பரிஹரிக்கப் பார்க்கவேணுமேயல்லது பழிவிளைந்து பரவினபின்பு அதை பரிஹரிக்கப்போமோ? பழிவிளைவதற்கு ப்ரஸக்தியில்லாமல் அடங்கியிருக்க என்னால் முடியவில்லை; இப்படிப்பட்ட நிலைமையில் நீங்கள் செய்யத்தக்கது யாதெனில், தான்தோன்றியாய் நானாகப் படிகடந்து புறப்பட்டுப்போனேனென்கிற வார்த்தைக்கு அவகாசமில்லாதபடி என்னை நீங்களாகவே விரும்பி அழைத்துக்கொண்டுபோய்க் கண்ணபிரானருகில் சேர்த்துவிடுங்கள்; அப்படிச் செய்யுமளவில் என் மநோரதமும் நிறைவேறி நானும் வாழ்ந்தேனாகிறேன்; நீங்களும் புகழ்பெற்றுப் போகிறீர்கள், பழிக்கநினைப்பார்க்கும் அவகாசமில்லாமே போகிறது. இந்த ஔசித்யத்தை நீங்கள் நன்கு கண்டறிந்து இப்படிச் செய்துமுடிப்பீர்களென்று நம்பியே நான் விரைந்து புறப்படாதே நிற்கின்றேன் என்கிறாள்.

தாய் தகப்பன்மார் முதலானவர்களைத் திரஸ்கரித்தாகிலும் தான் புறப்பட்டுப்போயே தீரவேணுமென்கைக்குக் காரணஞ்சொல்லுகிறாள் மாயவன்வந்து உருக்காட்டுகின்றான் என்று. என்னைக் கண்ணபிரானுடைய திருவுருவம் கொள்ளைகொள்ளா நிற்கும்போது உங்களைப்பார்த்து நான் எங்ஙனே ஆறியிருப்பேனென்கிறாள்போலும். கண்ணபிரானுடைய வேணுகாநம் செவிப்பட்டபோது "கோவலர் சிறுமியரிளங்கொங்கை குதுகலிப்ப உடலுளவிழ்ந்தெங்கும், காவலுங்கடந்து கயிறுமாலையாகி வந்து கவிழ்ந்து நின்றனரே" என்றபடி பெண்களெல்லாரும் பதறி ஓடினபடி உங்களுக்குத் தெரியாதா; நானும் அப்படிக் காவல்கடந்து ஓடவேணுமென்று உங்களுக்கு ஆசையோ? என்கிறாள்போலும்.

தன்னைக் கொண்டுபோய் விட வேண்டுமிடத்தைக் கூறுகின்றாள் பின்னடிகளில். * மச்சொடு மாளிகையேறி மாதர்கள் தம்மிடம்புக்குக், கச்சொடு பட்டைக்கிழித்துக் காம்புதுகிலவை கீறி, நிச்சலுந்தீமைகள் செய்பவனாய், * ஆற்றிலிருந்து விளையாடுவோர்களைச் சேற்றாலெறிந்து வளைதுகில் கைக்கொண்டு, காற்றில் கடியனாய் ஓடி அகம்புகுமவனாய் இப்படித் தீமைகள்செய்து திரியுமவனை மகனைப்பெற்ற நந்தகோபாலனுடைய திருமாளிகை வாசலிலே என்னைக்கொண்டு

போய்ப் படுக்கவையுங்களென்கிருள். நந்தகோபாலன் கடைத்தலையென்றால்— வைத்யர்களின் வீட்டுவாசல்களில் நோயாளிகள் படுகாடுகிடக்குமாபோலே கண்ணபிரானால் புண்பட்ட பெண்கள் படுகாடு கிடக்குமிடமென்று ப்ரஸித்தமாயிருக்கும்'' என்று பட்டரருளிச்செய்வராம்,

''கொந்தளம்=சிதுகிடுகை; பரக்கழிக்கை = பழிவிளைக்கை.'' என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. அதாவது—'கண்ணன் பெண்களைப் புண்படுத்தினவாறு என்னே!' 'நோவுபடுத்தினவாறு என்னே' என்று அனைவரும் மனம் நொந்து பழிக்கும்படிக்கீடான குறும்புகளைச் செய்யுமவனென்கை.

நள்ளிருட்கணென்னையுய்த்திடுமின்=நாலுபேர் கண்ணிலே தென்படும்படியான ஸமயத்திலே நீங்கள் என்னை அங்கே கொண்டுபோனால் அவன் தாய் தந்தையர்க்கு வெட்கப்பட்டு முகம்நோக்காதேயிருப்பன்; ஆதலால், ஒருவர்க்கும் வெள்காமல் உடனே அவன் என்னை அணைக்கும்படி நடுநிசியிலே கொண்டு போங்கள் என்கிருள். ... ... ... (௩)

அங்கைத்தலத்திடையாழிகோண்டானவன் முகத்தன்றிவிழியேனென்று*
சேங்கச்சுக்கோண்டுகேண்ணுடையார்த்துச் சிறுமானிடவரைக்காணில்நாணும்
கோங்கைத்தலமிவைநோக்கிக்காணீர் கோவிந்தனுக்கல்லால்வாயில்போகா*
இங்குத்தைவாழ்வையோழியவேபோய் யமுனைக்கரைக்கேன்னையுய்த்திடுமின்

| | |
|---|---|
| அம் கைத்தலத்திடை | அழகிய திருக்கைத்தலத்திலே |
| ஆழி கொண்டானவன் | திருவாழியை ஏந்தியிருப்பவனான கண்ணபிரானுடைய |
| முகத்து அன்றி விழியேன் என்று | முகத்தில் தவிர (மற்றவருடைய முகத்தில்) விழிக்கமாட்டேனென்று |
| செம் கச்சு ஆடைகொண்டு | நல்ல கஞ்சுகமாகிற ஆடையினாலே |
| கண் ஆர்த்து | கண்களை மூடிக்கொண்டு |
| சிறு மானிடவரை காணில் நாணும் | க்ஷுத்ர மநுஷ்யர்களைக் கண்டால் வெட்கப்படாநின்ற |
| கொங்கைத் தலம் இவை | இக்கொங்கைகளை |
| நோக்கி காணீர் | (தாய்மார்களே!)நீங்கள் உற்றுநோக்குங்கள்; |
| | (இக்கொங்கைகளானவை) |
| கோவிந்தனுக்கு அல்லால் | கண்ணபிரானைத் தவிர்த்து |
| வாயில் போகா | மற்றொருவருடைய வீட்டுவாசலை நோக்கமாட்டா; |
| | (ஆகையாலே) |
| இங்குத்தை வாழ்வை ஒழிய போய் | நான் இவ்விடத்திலே வாழ்வதையொழித்து |
| என்னை எமுனை கரைக்கு உய்த்திடுமின் | என்னை யமுநா நதிக் கரையிலே கொண்டு போட்டுவிடுங்கள். |

'இப்படிப்பட்ட பதற்றம் உனக்கு ஆகாது; சிறிது அடக்கம்வேண்டும்' என்றுசொன்ன தாய்மார்களைநோக்கிக் கூறுகின்றாள்—என் கொங்கைகள் படுகிறபாட்டைப் பாருங்கள்; 'கையுந்திருவாழியுமான அழகுபொலிந்து நின்ற கண்ணபிரானுடைய முகத்தை நோக்குவோமேயன்றி மற்று எவரையும் நோக்க

மாட்டோம்' என்று திண்ணிதாக ஸங்கல்பஞ் செய்துகொண்டு சிவந்த கச்சிறைல் கண்ணை மறைத்துக்கொண்டு க்ஷுத்ர மநுஷ்யர்களைக் கண்டால் நாணிக்கிடக்கின்ற இம்முலைகளைக்கொண்டு நான் எங்ஙனே ஆற்றுவேன்? கோவிந்தனுடைய வீட்டுவாசலிலே புகுந்தாலன்றித் தரிக்கமுடியாத இவற்றுக்கு; "விழிக்குங் கண்ணிலேன் நின்கண் மற்றல்லால் வேறொருவரோடு என்மனம் பற்றாது" என்றும் "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்றும் ஸங்கல்பித்துக்கொண்டிருக்கிற இவற்றுக்கு நான் என்ன ஸமாதாநம் கூறுவேன்? ஆகையாலே இங்கு நின்றும் என்னைக்கொண்டுபோய் யமுனைக்கரையிலே எறியுங்களென்கிறாள். *தாயபெருநீர் யமுனைத்துறைவனோடே ஜலக்ரீடை பண்ணி விளையாட மநோரதிக்கிறாளாய்த்து.

"கோவிந்தனுக்கல்லால் வாயில்போகா" என்றவிடத்திற்கு வியாக்யானம்:— "பசுக்களின்பின்னேபோய்த் தீம்பிலே கைவளரும் க்ருஷ்ணனுக்கல்லது, வழியேபோய் வழிவந்து ஏகதாரவ்ரதனாயிருக்கும் சக்ரவர்த்தி திருமகனுக்கு வழிபோகாது." என்று.

ஆர்க்குமென்னோயிதறியலாகாது அம்மனைமீர்துழதிப்படாதே*
கார்க்கடல்வண்ணனென்பானொருவன் கைகண்டயோகம்தடவத்தீரும்*
நீர்க்கரைநின்றகடம்பையேறிக்-காளியனுச்சியில்நட்டம்பாய்ந்து*
போர்க்களமாகநிருத்தஞ்செய்த பொய்கைக்கரைக்கென்னையுய்த்திடுமின்.

| | |
|---|---|
| அம்மனைமீர் | தாய்மார்களே! |
| என் | என்னுடைய |
| இது நோய் | இந்த வியாதியானது |
| ஆர்க்கும் | எப்படிப்பட்ட ஞானிகளுக்கும் |
| அறியல் ஆகாது | அறிய முடியாதது; (ஆனால்) |
| துழதிப் படாதே | (இது அப்படிப்பட்ட நோயா! என்று) நீங்கள் திக்கப்படாமல்,— |
| நீர் கரை நின்ற | காளிங்க மடுவின் கரையிலிருந்த |
| கடம்பை ஏறி | கடம்ப மரத்தின் மேல் ஏறி (அங்கிருந்து) |
| காளியன் உச்சியில் | காளியநாகத்தின் படத்தின்மேலே |
| நட்டம்பாய்ந்து | ஒரு நர்த்தன வகையாகப் பாய்ந்து |

| | |
|---|---|
| போர் களம் ஆக | அப்பொய்கை தானே யுத்தக்களமாம்படியாக |
| நிருத்தம்செய்த | நர்த்தனம் செய்யப் பெற்ற |
| பொய்கை கரைக்கு | மடுவின் கரையிலே |
| என்னை உய்த்திடுமின் | என்னைக் கொண்டு போய்ப் போடுங்கள். |
| கார் கடல் வண்ணன் என்பான் ஒருவன் | நீலக்கடல்போன்ற திரு நிறத்தனை கண்ணபிரான் |
| தடவ | (தனது திருக்கைகளால் என்னைத்) தடவுவானாகில் |
| தீரும் | (இந்த நோய்) தீர்ந்து விடும்; |
| கை கண்ட யோகம் | (இது நான்) கைமேலே பலிக்கக்கூடிய உபாயம். |

'நோவு இன்ன தென்றறிந்து அதுக்குத் தகுதியாகவன்றோ பரிஹாரம் பண்ணவேணும்; யமுனைக்கரையிலே கொண்டு போட்டுவிட்டால்

என்னபரிஹாரம் செய்யப்பட்டதாகும்? இவளோ பித்தம் பிடித்தவள் போல வாய் வந்தபடி சொல்லுகிறாளே; இவளுடைய உண்மையானநோய் இன்னதென்று நமக்கு விளங்கவில்லையே!" என்று வருத்தப்படத்தொடங்கின தாய்மார்களை நோக்கிக் கூறுகின்றாள் :—அம்மனைமீர்! நீங்கள் என்னுடைய நோயை அறிந்து பரிஹரிக்கவா பார்க்கிறீர்கள்?; என்நோய் உங்களால் அறியக்கூடியதன்று; இந்நோயை விளைத்தவனுக்கும் இது இவ்வளவென்று பரிச்சேதிக்கமுடியாது; ஆதலால் இந்தநோய்க்காக நீங்கள் துக்கப்படவேண்டா; நான் சொல்லுகிறபடியே பரிஹரிக்கப்பார்ப்பதே உங்களுக்கு நன்றாம்; நான் சொல்லுமுபாயம் வ்யபிசரித்துப்போகக்கூடியதன்று; கைகண்டவுபாயமாய்த்து நான் சொல்லுவது; அஃது என்னவுபாயமென்றால்; கடல் வண்ணனான கண்ணபிரான் தனது திருக்கையாலே என்னைத்தடவிக்கொடுக்கு மத்தனையே வேண்டுவது; அவ்வளவிலே எனது நோய் தீர்ந்துவிடுங்காண்மின்: ஆகையாலே என்னை இங்கு நின்றுங்கொண்டுபோய், அக்கண்ணபிரான் காளியனுச்சியிலே நடனஞ் செய்யப்பெற்ற இடமாகிய பொய்கையின் கரையிலே என்னைச் சேர்த்துவிடுங்களென்றாள். காளியனுச்சியிலே கூத்தாடின இளைப்பு ஆறும்படி அவனை முலைத் தடங்களாலே அணைந்து விடாயாற்றவேணுமென்று மநோரதிக்கிறாள்போலும்.

துழதிப்படுதல்—துக்கப்படுதல். "கார்க்கடல்வண்ணனென்பானொருவன் தடவத்தீரும்; (இது) கைகண்டயோகம்" என்று அந்வயம்: யோகமாவது உபாயம். நட்டம்='நாட்யம்' என்றவடசொல் நட்டமெனத்திரிந்தது; 'ந்ருத்தம்' என்றவடசொல்லின் திரிபாகவுமாம். ந்ருத்தமென்பது நிருத்தமென்றும் நட்டமென்றும் திரியக்கூடும். பொய்கை—யமுனையாற்றில் ஓர் பகுதி (௫)

கார்த்தண்முகிலும்கருவிளையும் காயாமலரும்கமலப்பூவும்*
ஈர்த்திடுகின்றனவென்னைவந்திட்டு இருடீகேசன்பக்கல்போகேயென்று*
வேர்த்துப்பசித்துவயிறசைந்து வேண்டடிசிலுண்ணும்போது*ஈதென்று
பார்த்திருந்துநெடுநோக்குக்கொள்ளும் பத்தவிலோசனத்துய்த்திடுமின். (௬)

| | |
|---|---|
| கார் | வர்ஷா காலத்தி லுண்டான |
| தண் | குளிர்ந்த |
| முகிலும் | மேகமும் |
| கருவிளையும் | கருவிளைப்பூவும் |
| காயா மலரும் | காயாம்பூவும் |
| கமலம் பூவும் | தாமரைப் பூவுமாகிற இவைகள் |
| வந்திட்டு | எதிரே வந்து நின்று |
| இருடீகேசன் பக்கல் போகு என்றுஎன்னை ஈர்த்திடுகின்றன | "கண்ணபிரான் பக்கலில் நீயும்போ" என்று என்னை வலிக்கின்றன; |
| | (ஆகையாலே) |

| | |
|---|---|
| வேர்த்து | "பசுமேய்க்கிற ச்ரமத்தாலே வேர்வையடைந்து |
| பசித்து | பசியினால் வருந்தி. |
| வயிறு அசைத்து | வயிறுதளர்ந்து |
| வேண்டு அடிசில் உண்ணும் போது ஈது என்று | வேண்டிய ப்ரஸாதம் உண்ணவேண்டிய காலம் இது என்று |
| பார்த்திருந்து | (ரிஷி பத்னிகளின் வரவை) எதிர்பார்த்திருந்து |
| நெடு நோக்குக் கொள்ளும் | நெடுங் காலம் கடாக்ஷித்துக்கொண்டிருக்குமிடமான |

பத்தவிலோசனத்து } பக்தவிலோசநமென்கிற ஸ்தானத்திலே | உய்த்திடுமின் } (என்னைக்) கொண்டுசேர்த்து விடுங்கள்.

கறுத்துக் குளிர்ந்த மேகங்களும் கருவிளைப்பூவும் காயாம் பூவும் கண்ண
பிரானுடைய திருமேனிக்குப் போலியாயிருக்கின்றமையாலும் தாமரைப்பூக்கள்
அப்பிரானுடைய திவ்யாவயவங்களுக்குப் போலியாயிருக்கின்றமையாலும் அந்த
மேகம் முதலியவற்றைக் காணும்போதே கண்ணபிரானுடையஸ்மரணம் அவர்ஜ
நீயமாகி அப்போதே அவனைச்சென்று சேரவேணுமென்கிற குதூஹலம்கிளர்
கின்றபடியை ஒரு சமத்காரமாகப் பேசுகிறாள் முன்னடிகளில். "ஒக்குமம்
மானுருவமென்று உள்ளம் குழைந்து நாணும், தொக்க மேகப் பல்குழாங்கள்
காணுந்தோறுந் தொலைவன் நான்" என்ற திருவாய்மொழியும், "பூவையுங்
காயாவும் நீலமும் பூக்கின்ற காவிமலரென்றுங்காண்டோறும்—பாவியேன்,
மெல்லாவி மெய்ம்மிகவே பூரிக்கும், அவ்வவைவெல்லாம் பிரானுருவேயென்று."
என்ற பெரியதிருவந்தாதியும் இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

பக்தவிலோசந மென்கிற புண்யதேசத்திலே தன்னைக்கொண்டுபோய்விட
வேணுமென்கிறாள் பின்னடிகளில். ஒருநாள் கண்ணபிரானும் பலராமனும் பசுக்க
ளுடனும் இடையர்களுடனும் யமுனையாற்றின் கரையிலேசென்று நெடும்போது
பசுக்களை மேய்த்துக் களைத்து ஆற்றங்கரையில் ஓரிடத்திலே உட்கார்ந்தவள
வில், இடைப்பிள்ளைகளெல்லாருங் க்ருஷ்ண பலராமர்களைநோக்கித் தங்களுடைய
பசியின் கொடுமையைக்கூறி 'இப்போதே நீங்கள் இப்பசியைப்போக்கியருள
வேணும்' என்று மிக்க ஆர்த்தியுடன் ப்ரார்த்திக்க, அவர்களுடைய பரிதா
பத்தையறிந்த கண்ணபிரான், 'ஓ பிள்ளைகளே! ஸமீபத்தில் சிலமஹர்ஷிகள்
ஆங்கிரஸ மென்னும் வேள்வியை அநுஷ்டித்துக்கொண்டிருக்கிறார்கள்; நீங்கள்
அவர்களிடம்போய் என்பெயரையும் என்தமையனார் பெயரையும் சொல்லி,
இன்னார் நாங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றோமென்று கூறி அன்னம் விரும்புங்
கள்; பசிதீரும்' என்று கட்டளையிட்டனுப்பினான்; அவர்களும் அங்ஙனமே
அவ்விடஞ்சென்று விநயத்துடன் இவ்வண்ணம் விண்ணப்பஞ்செய்து அடிசில்
வேண்ட, அவ்வந்தணர்கள் இவ்வாயர்களின் பேச்சைச் செவி கொடுத்துங்கேளா
தொழியவே ஆய்ப்பிள்ளைகள் க்ருஷ்ண பலராமர்களிடம்மீண்டுவந்து செய்தியைச்
சொல்ல, அதுகேட்ட கண்ணபிரான் புன்முறுவல் செய்து, 'பிள்ளைகாள்! அந்த
மஹர்ஷிகளுடைய தர்மபத்னிகள் இருக்கிறார்களே, அவர்களிடஞ்சென்று
நானும் பலராமனும் இங்கே இருப்பதாகச் சொல்லி ப்ரஸாதம்கேளுங்கள்; அப்
பெண்டிர் தவறாது தந்திடுவர்கள்' என்று சொல்லி அவர்களை ரிஷிபத்னிகளிட
மனுப்ப, உடனே அவர்கள் அவ்விடஞ்சென்று அந்தரிஷிபத்னிகளை நமஸ்
கரித்து, 'அம்மனைமீர்! இதோ ஸமீபத்தில் கண்ணபிரானும் நம்பி மூத்தபிரா
னும் பசுக்களைமேய்த்துக் களைத்திருக்கின்றனர்; அவர்களோடு அநுசரர்களாக
வந்த அஸ்மதாதிகளும் களைத்திருக்கின்றோம்; எல்லாரும் பசிதீர்ந்து மகிழும்படி

ப்ரஸாதம்தரவேணும் எனவேண்ட; அப்பெண்டிர்கள் ஸ்ரீக்ருஷ்ணநாமஶ்ரவண மாத்ரத்திலே பரமாநந்தமடைந்து உடம்புமயிர்க்கூச்செறிந்து உடனே பக்ஷ்யம், போஜ்யம், லேஹ்யம், சோஷ்யம்-என நான்கு வகைப்பட்ட அன்னவர்க்கங்களை யும் நல்ல நல்லபாத்திரங்களிலெடுத்துக்கொண்டு ஸ்ரீக்ருஷ்ண பலராமர்களிருக்கு மிடத்தை நோக்கிப் புறப்படுகையில், தந்தையர் தாய்மார் மக்கள் உடன்பிறந் தார் பர்த்தாக்கள் முதலானோர் எவ்வளவுதடுத்தும் அவர்களுடைய தடைக்கு உடன்படாதாராய் நிலைநின்ற பக்தி நிஷ்டையையுடையவர்களாய் விரைந்து வந்து யமுனையாற்றங்கரைச்சோலையிலே நம்பி மூத்தபிரானையும் கண்ணபிரானை யும் ஸேவித்து, கொணர்ந்த அந்நவர்க்கங்களை ஸமர்ப்பித்துவிட்டுப் பரமாநந்த பூரிதர்களாய் மீண்டுசென்றனர்; அவ்வடிசிலைக் கண்ணபிரான் அவ்வாயர் பிள்ளை களுக்குத்தந்து தானும் அமுதுசெய்தான்—என்றவரலாறு ஸ்ரீபாகவதத்தில் தஶமஸ்கந்தத்தில் இருபத்து மூன்றுமத்யாயத்தில் விரிவாகக் காணத்தக்கது.

ரிஷிபத்நிகள் இவ்வண்ணமாக அடிசில் கொணர்ந்துகொடுத்தது ஒருநாளே யல்ல; நாடோறும் கண்ணபிரான் யமுனையாற்றங்கரைச்சோலைகளிலே வந்து ஆநிரைமேய்த்துக் களைத்துப்போகிறானென்றுணர்ந்த அப்பெண்டிர் நெடுநாள் வரையில் நாடோறும் பகலில் உச்சிவேளையில் கொணர்ந்து கொடுத்துக்கொண்டி ருந்தார்களென்றும், ஒவ்வொருநாளும் அவர்கள் அடிசில் கொணரும் ஸமயத்துக் குச்சரியாகக் கண்ணபிரானும் களைப்புடன் அவ்வடிசிலை எதிர்பார்த்து அத்திக் கையே நோக்கியிருப்பனென்றும் இப்பாட்டின் ப்ரஸங்கத்திலே அழகிய மணவாளச்சீயர் உபந்யஸித்தருளும்படி.

" வேண்டடிசிலுண்ணும்போது ஈதென்று பார்த்திருந்து நெடுநோக்குக் கொள்ளும் பத்தவிலோசனம் " = 'நமக்கு ரிஷிபத்நிகள் ப்ரஸாதம் கொண்டு கொடுக்கும்வேளை அணுகிற்று' என்று அத்திசையைநோக்கி நெடிதாகக் கடாக்ஷித்திருக்குமென்றபடி. ஆசார்ய ஹ்ருதயத்தில் "ச்ரமணீவிதுர" இத்யாதி சூர்ணிகையின் வியாக்கியானம் காண்க.

பத்தவிலோசனம்= (भक्त) பக்தமென்ற வடசொல்லுக்கு அன்னமென் றுபொருள்; விலோசனமென்பதற்குப் பார்வையென்றுபொருள்; சோறு பார்த் திருக்குமிடமென்றதாயிற்று. .... .... .... (௬)

வண்ணந்திரிவும்மனங்குழைவும் மானமிலாமையும்வாய்வெளுப்பும்*
உண்ணலுறாமையுமுள்மெலிவும் ஓதநீர்வண்ணனென்பானொருவன்*
தண்ணந்துழாயென்னும்மாலைகொண்டு சூட்டத்தணியும்பிலம்பன்றன்னை *
பண்ணழியப்பலதேவன்வென்ற பாண்டிவடத்தென்னையுய்த்திடுமின். (எ)

| | | | |
|---|---|---|---|
| வண்ணம் திரிவும் | (என்னுடைய) மேனிநிறத்தின் மாறுபாடும் | மானம் இலாமையும் | மானங் கெட்டுப் போனபடியும் |
| மனம்குழைவும் | மனத்தளர்ச்சியும் | வாய் வெளுப்பும் | வாய் வெளுத்துப் போனபடியும் |

| | |
|---|---|
| உண்ணல் உறாமையும் | ஆஹாரம் வேண்டியிராமையும் |
| உள் மெலிவும் | அறிவுசுருங்கிப்போனதுமாகிய இவையெல்லாம் |
| (எப்போது தணியுமென்றால்) | |
| ஓதம் நீர் வண்ணன் என்பான் ஒருவன் | கடல் வண்ணனென்று ப்ரஸித்தனாய் விலக்ஷணனான கண்ணபிரானுடைய |
| தண் அம் துழாய் என்னும் மாலை கொண்டு சூட்ட | குளிர்ந்து அழகிய திருத்துழாய்மாலையைக் கொண்டுவந்து சூட்டுமளவில் |
| தணியும் | நீங்கும்; |
| (அத்திருத்துழாய் மாலை உங்களால் இங்கேகொண்டுவந்து கொடுக்க முடியாதாகில்) | |
| பலதேவன் | பலராமன் |
| பிலம்பன் தன்னை | ப்ரலம்பாஸுரனை |
| பண் அழிய | ஸந்தி பந்தங்கள் உருக்குலையும் படி |
| வென்ற | கொன்று முடித்த இடமாகிய |
| பாண்டி வடத்து | பாண்டீரமென்னும் ஆலமரத்தினருகில், |
| என்னை உய்த்திடுமின் | என்னைக்கொண்டுபோய்ச்சேர்த்திடுங்கள். |

புதிதாகவந்த சிலபெண்பிள்ளைகள் ஆண்டாளுடைய அதிமாத்ரமான வைவர்ணியம் முதலியவற்றை உற்றுநோக்கி 'அம்மா! உனக்கு இந்தவிகாரங்களெல்லாம் என்றைக்குத்தீரும்? என்னசெய்தால் தீரும்? பலவகைப்பட்டவிகாரங்களை அடைந்திட்டாயே; என்னசெய்தாலும் இந்தவிகாரங்கள் தீரமாட்டாதவை போலிருக்கின்றனவே! ; உனக்கேற்க ஏதாகிலுமுபாயம் தெரிந்தால் சொல்லிக்காண்' என்ன; 'கண்ணபிரானுடைய திருத்துழாய்மாலையைக் கொண்டுவந்து சூட்டினால் இவ்விகாரங்களெல்லாம் தணிந்துவிடும்' என்று இவள்சொல்ல; 'அவனுடைய திருத்துழாய்மாலை எங்கள்கையில் எளிதாகக்கிடைக்குமோ? அதனை நாங்கள் எங்ஙனே கொண்டு வரக்கடவோம்?' என்று அப்பெண்கள் திகைத்து நிற்க; 'அஃது அரிதாகில் என்னை அப்பெருமானது திருவடிவாரத்திலேகொண்டுபோய்ச் சேர்த்துவிடுங்கள்' என்கிறாள்.

பலராமனாற்செய்யப்பட்ட ப்ரலம்பாஸுரவதத்தைக் கண்ணபிரான்றானே செய்தருளியதாகக் கூறுதலுமுண்டு; "தேனுகன் பிலம்பன் காளியனென்னும் "கருளுடைய பொழில்மருதுங் கதக்களிறும் பிலம்பனையுங் கடியமாவும்" என்ற பெரியாழ்வார் திருமொழிகாண்க. உண்மையில் பலராமன்செய்த இச்செய்தியைக் கண்ணபிரான் செய்ததாகக்கூறுதல் ஒற்றுமைநயம்பற்றியாம். ஸ்ரீராமாவதாரத்தில் இளையபெருமாள்செய்த சூர்ப்பணகாபங்கத்தை ஸ்ரீராமபிரான்தானேசெய்ததாக ஆழ்வார்கள் அநுஸந்திப்பதும் இங்ஙனமேயாம். "சூர்ப்பணகாவைச் செவியொடுமூக்கு அவளார்க்க வரிந்தானைப்பாடிப்பற அயோத்திக்கரசனைப்பாடிப்பற" இத்யாதிகள்காண்க.

"இளையபெருமாள் இந்த்ரஜித்வதம்பண்ண, அந்தவெற்றி பெருமாளுடையதானாப்போலேயாய்த்து இங்கும்; நம்பிமூத்தபிரானுடையவெற்றியும் க்ருஷ்ணனதாயிருந்ததிறே. அவன் வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் பண்ணிமாலையிடும்போது அவன்தனியேநில்லாமே நானும்ஒக்கநின்று மாலையிடும்படியாக என்னை

அங்கேகொடுபோய்ப் பொகடுங்கோள்'' என்றவியாக்கியான ஸ்ரீஸூக்தி நோக்கத் தக்கது. ப்ரலம்ப: என்றவடசொல் பிலம்பன் எனத்திரிந்தது. பாண்டீரவட மென்ற வடசொல் பாண்டிவடமெனத்திரிந்தது. யமுனையாற்றின் ஸமீபத்தில் பெரிய ஆலமரமொன்று உள்ளவிடத்திற்குப் பாண்டீரவடமென்று பெயர். ப்ரலம்பவதம் நடந்த இடமிது. .... .... .... (௭)

கற்றினம்மேய்க்கலும்மேய்க்கப்பெற்றான் காடுவாழ்சாதியுமாகப்பெற்றான் *
பற்றியுரலிடையாப்புமுண்டான் பாவிகாளுங்களுக்கேச்சுக்கொலோ *
கற்றனபேசிவசவுணாதே காலிகளுய்யமழைதடுத்து *
கொற்றக்குடையாகவேந்திநின்ற கோவர்த்தனத்தென்னையுய்த்திடுமின். (௮)

| | |
|---|---|
| (கண்ணபிரான்) | |
| கன்று இனம் | கன்றுகளின் திரள்களை |
| மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் | மேய்ப்பதையே தொழிலாகப் பெற்றவனுமானான்; |
| காடு வாழ் சாதியும் ஆக பெற்றான் | (வீட்டைவிட்டுக் கழிந்து) காட்டிலேயே தங்கிவாழும்படியான சாதியிலும் பிறக்கப் பெற்றான்; |
| பற்றி | வெண்ணெய் களவில் பிடிபட்டு |
| உரலிடை ஆப்பும் உண்டான் | உரலிலே கட்டுப்படவும் பெற்றான்; |
| (ஸௌலப்யகாஷ்டையான இச்செயல்கள்) | |
| பாவிகாள் | குணத்தையும் குற்றமாகக்கொள்ளும் பாவிகளே! |
| உங்களுக்கு | உங்களுக்கு |

| | |
|---|---|
| எச்சுக்கொலோ | தூஷணத்துக்கிடமாயிற்று? |
| (இதுவரையில் நீங்கள் இழிவாகச் சொன்னவை நிற்க இனியாகிலும்) | |
| கற்றன பேசி வசவு உணாதே | நீங்கள்கற்றகல்விகளைப்பேசி (என்னிடத்தில்) வசவுகேட்டுக்கொள்ளாமல், |
| காலிகள் உய்ய மழைதடுத்து | பசுக்கள் பிழைக்கும்படி பெருமழையைத் தடைசெய்து |
| கொற்றம் குடை ஆக | வெற்றிக்குடையாக |
| ஏந்தி நின்ற | (கண்ணபிரானால்) தரிக்கப்பட்ட |
| கோவர்த்தனத்து | கோவர்த்தனமலையினருகே |
| என்னை உய்த்திடுமின் | என்னைக்கொண்டு போய்ச் சேர்த்துவிடுங்கள். |

மற்றுஞ்சிலபெண்கள் ஆண்டாளைநோக்கி, 'அம்மா! நீ இராமபிரானை ஆசைப்பட்டாலுங் குற்றமில்லை; மாடுமேய்க்கப்பிறந்த கண்ணனைப்போய் நீ ஆசைப்படாநின்றாய்; அவனோ கன்றுகளை மேய்ப்பதற்காக அவற்றின்பின்னே திரிவானொருசிறுவன்; ஒரூரிலே தங்குவதுமில்லாமல் பசுக்களுக்கு நீரும்புல்லுமுள்ளவிடத்தே தங்குவானொருத்தன்; வெண்ணெயைக்களவாடுவதும் நெய்யைக் களவாடுவதுஞ்செய்து உரலிலேபிணிப்புண்டு இண்டாடுமவன்;' அன்னவனைப் பெறுகைக்கோ நீ இப்படிக்கிடந்து துடிக்கிறது? என்று ஏளனமாகச்சொல்ல; அவர்களைநோக்கிச் சொல்லுகிறாள். அவன் கன்றுகளை மேய்க்கப்பெற்றதும் காடுவாழ்சாதியாகப் பெற்றதும் உரலிடை ஆப்புண்டதும் குணமாகத்தோற்ற வேண்டியிருக்க, உங்களுக்கு இவையெல்லாம் குற்றமாகத் தோற்றுவதற்குக்

காரணம் உங்களுடைய பாவமேயாம்; சிறந்தகுணமே உங்களுக்குக் குற்றமாகத் தோற்ற நீங்கள் சிசுபாலன்பிறந்த முஹூர்த்தத்திலேயோ பிறந்தது? "எத்திற முரலினோடிணைந்திருந்தேங்கிய எளிவே!" என்று ஈடுபடவேண்டியவிஷயம் உங்களுக்கு த்வேஷாஸ்பதமாயிற்றே!. இனி நீங்கள் இப்படிப்பட்ட அஸந்தர்ப்பமான நீசவார்த்தைகளை என்காதில்விழச் சொல்லுவீர்களாகில், நான் வாயில்வந்தபடி உங்களை நிந்தித்துவிடுவேன்; அப்படி நிந்தனைகளுக்கு நீங்கள் ஆளாகாமல்: அன்றொருகால் இந்திரன் ஏழுநாள் விடாமழை பெய்வித்தபோது அந்த மழையைத் தடுத்து அனைவரையுங்காத்த கோவர்த்தனமலையினருகே என்னைக்கொண்டு போட்டுவிடுங்களென்கிறாள்.

.... .... .... (அ).

கூட்டிலிருந்துகிளியெப்போதும் கோவிந்தாகோவிந்தாவென்றழைக்கும்*
ஊட்டுக்கொடாதுசெறுப்பனாகில் உலகளந்தானென்றுயரக்கூவும் *
நாட்டிற்றலைப்பழியெய்தி உங்கள்நன்மையிழந்துதலையிடாதே *
சூட்டுயர்மாடங்கள்சூழ்ந்துதோன்றும் துவராபதிக்கென்னையுய்த்திடுமின். (கூ).

| | |
|---|---|
| கிளி | (நான் வளர்த்த) கிளியானது |
| கூட்டில் இருந்து | கூட்டில் இருந்துகொண்டு |
| எப்போதும் | ஸதாகாலமும் |
| கோவிந்தாகோவிந்தா என்று அழைக்கும் | கோவிந்தா கோவிந்தாவென்று கூவாநின்றது; |
| ஊட்டு கொடாது | உணவுகொடாமல் [பட்டினிகிடக்கும்படி] |
| செறுப்பன் ஆகில் | துன்பப்படுத்தினேனாகில் |
| உலகு அளந்தான் என்று | உலகளந்தபெருமானே! என்று |
| உயர கூவும் | உரக்கக்கூவாநின்றது! இந்தத் திருநாமங்கள் என்காதில் விழும்போதே என்சரீரம் புறப்படக்கிளம்புகின்றது ஆகையால்,) |
| நாட்டில் | இவ்வுலகில் |
| தலை பழி எய்தி | பெருத்த அபவாதத்தை ஸம்பாதித்து |
| உங்கள் நன்மை இழந்து | உங்களுடைய நல்லபேரைக்கெடுத்துக்கொண்டு |
| தலை இடாதே | (பிறகு ஒருவரையும் முகம் நோக்கமாட்டாமல்). தலைகவிழ்ந்து நிற்க வேண்டாதபடி, |
| சூடு உயர்மாடங்கள் சூழ்ந்து தோன்றும் | தலையுயர்ந்த மாடங்களால் சூழப்பட்டு விளங்குகின்ற |
| துவராபதிக்கு | த்வாரகையிலே |
| என்னை உய்த்திடுமின் | என்னைக் கொண்டுபோய்ச்சேர்த்துவிடுங்கள். |

இவள் விரஹத்தாலே நோவுபட்டிருக்கிற இச்சமயத்தில் இவள்வளர்க்குங்கிளிப்பிள்ளையொன்று இவள் முன்பு கற்பித்துவைத்த திருநாமத்தைச் சொல்லிக்கொண்டு இங்குமங்கும் திரியத்தொடங்கிற்று; 'இதை நாம்யதேச்சமாய்த்திரியும்படியாக விட்டேயன்றோ இது கண்ணன்நாமமேகூறிக் கொல்லுகின்றது; இதைப்பிடித்து அடைத்திடுவோம்' என்று பார்த்துக்கூட்டிலே யடைத்தாள்; அது அங்கேயிருந்து "கோவிந்தா! கோவிந்தா!!" என்று கூவத்தொடங்கிற்று; அதைக்கேட்ட ஆண்டாள் 'இது சோற்றுச்செருக்காலேயன்றோ இப்படி சொல்லுகிறது, சோற்றைக்குறைத்தோமாகில் தன்னடையே தவிருகிறது' என்று நினைத்துப் பட்டினியாகவிட்டுவைத்தாள்; 'வணங்க வீணடங்கும்'

என்று இவளுடைய நினைவுபோலும். ஆனால் அந்தப்பட்டினியானது இவளுக்கு விபரீதபலப்ரதமாயிற்று; அரையர்கள் மிடற்றுக்கு எண்ணெயிட்டுப் பட்டினி கிடந்து மிடற்றில்கனத்தை ஆற்றிப்பாடுவதுபோல இக்கிளியும் பட்டினிவிட்டதே காரணமாக உயரப்பாடத்தொடங்கிற்று; "உலகளந்தான்!" என்று அதுகூவும் போதை த்வநியைக்கேட்டால் அவன் அன்றிவ்வுலகமளக்கத் திருவடிகளைப் பரப் பினவிடமெங்கும் இதுவும் தன்மிடேற்றோசையைப் பரவவிடாநின்றதுபோலும்; அந்தக்கூவுதலைக் கேட்டவாறே நாமே பதறிஓடியாகிலும் அவனைச்சென்று கிட்டுவோமென்கிறகாதல் கிளர்கின்றது; அப்படி நான் பதறிஓடுவது நமது குடிக்குப் பெருத்தபழியாய்முடியும்; தடிதடியாகத் தாய்மார்களிருந்தும் ஒரு பெண்பிள்ளைக்கு நன்மைசெய்யாமல் தெருவிலேபுறப்படப் பார்த்திருந்தார்களே!' என்று நாளைக்கே நாடெங்கும் பழிபரவும்; அப்போது நீங்கள் தலைகவிழ்ந்து தரையைக்கீறி நிற்கத்தான் நேரிடும்; அப்படிப்பட்ட பரிபவத்துக்கு நீங்கள் ஆளாகாமல் இப்போதே என்னைநீங்களாகவே த்வாரகையிலே கொண்டுசேர்த்து விடுங்களென்கிறாள்.

"உலகளந்தானென்றுயரக்கூவும்" என்றவிடத்து வியாக்கியானஸ்ரீஸூக்தி:— "க்ருஷ்ணாவதாரத்தைவிட்டு அவ்வருகே போந்ததாகில் அத்தோடுபோலியான ஸ்ரீவாமநாவதாரத்தைச் சொல்லியாய்த்து நலிவது."

கிளியானது கோவிந்தாகோவிந்தாவென்றும் உலகளந்தானென்றும் கூவினால் அந்தநாமச்ரவணமே தாரகமாக இருக்கலாகாதா? அது திருநாமத்தைச் சொல்லக்கூடாதென்று இவள் தடைசெய்வதற்குக் காரணமென்? எனில் "உயிர்க்கதுகாலனென்றும்மை யானிரந்தேற்கு, நீர் குயிற்பைதல்கள்! கண்ணன் நாமமே குழறிக்கொன்றீர், தயிர்ப்பழஞ்சோற்றொடு பாலடிசிலுந்தந்து சொல், பயிற்றியநல்வளமூட்டினீர் பண்புடையீரே" என்றதிருவாய்மொழியை நோக்குக. ஸம்ச்லேஷகாலத்தில் போகமாயிருப்பவை விச்லேஷகாலத்தில் வெறுக்கக் கூடியவையாமென்க.—ஸ்ரீவசநபூஷணத்தில்— "இந்த ஸ்வபாவ விசேஷங்கள் கல்யாணகுணங்களிலும் திருச்சரங்களிலும் திருநாமங்களிலும் திருக்குழலோசையிலும் காணலாம்," [க-கஈ] என்ற ஸூத்ரத்தின் வியாக்கியானத்தையும் ஸேவிக்க.

துவராபதியின்வரலாறு.—'காலயவநன்' என்பானொருவன் செருக்கித் திரிந்து கொண்டிருக்கையில் ஒருகால் நாரதரைப்பார்த்து 'இவ்வுலகில் யாராவது சூரர்களுண்டா?' என்றுகேட்க, அதற்கு நாரதர் 'மதுரையில் யாதவர்களிருக்கிறார்கள்; அவர்கள் மிக்கபராக்ரமசாலிகள்' என்றார்; அக்காலயவநன் அதைக் கேட்டவுடனே அங்கிருந்து புறப்பட்டு மதுரைக்குவந்து யாதவர்களுடன் போர் செய்யத்தொடங்கினான்; அப்பொழுது கண்ணபிரான் இதையறிந்து மேற்கடலுக் குச்சென்று அங்கு ஸமுத்ர ராஜனையாசித்துப் பன்னிரண்டுயோஜனைவிஸ்தீர்ண

முள்ள இடத்தைவாங்கி அங்கு த்வாரகை என்றொரு பட்டணம் அமைத்து மதுரையிலுள்ளயாதவர்களை அங்கு அழைத்துக்கொண்டு போய்ச்சேர்த்து அச்சங்கெடுத்தான். [பிறகு தான்மதுரைக்குவந்து காலயவனனையும் முடித்தான்.]

மன்னுமதுரைதோடக்கமாக வண்துவராபதிதன்னளவும் *
தன்னைத்தமருய்த்துப்பெய்யவேண்டித் தாழ்குழலாள்துணிந்ததுணிவை *
போன்னியல்மாடம்பொலிந்துதோன்றும் புதுவையர்கோன்விட்டுசித்தன்கோதை *
இன்னிசையாற்சொன்னசெஞ்சொல்மாலை யேத்தவல்லார்க்கிடம்வைகுந்தமே.

| | | | |
|---|---|---|---|
| தாழ் குழலாள் | தாழ்ந்த கூந்தலையுடையளாய் | தமர் | தன் உறவினர் |
| பொன் இயல் மாடம் பொலிந்து தோன்றும் புதுவையர் கோன் விட்டு சித்தன் கோதை | பொன் மயமான மாடங்களினால் விளங்கித் தோன்றுகின்ற ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்குத் தலைவராகிய பெரியாழ்வாருடைய (திருமகளான) ஆண்டாள் | உய்த்து பெய்ய வேண்டி | கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டி |
| | | துணிந்த துணிவை | கொண்ட அத்யவஸாயம் விஷயமாக, |
| | | இன் இசையால் சொன்ன | இனிய இசையுடன் அருளிச்செய்த |
| | | செம் சொல் மாலை | அழகிய சொல்மாலையாகிய இத்திருமொழியை |
| மன்னு மதுரை தொடக்கம் ஆக வண் துவராபதி தன் அளவும் | ஸ்ரீமதுரைமுதற்கொண்டு ஸ்ரீத்வாரகை வரைக்கும் (சொல்லப்பட்ட சில திவ்யதேசங்களில் | ஏத்தவல்லார்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| | | இடம் | வாழுமிடம் |
| | | வைகுந்தம். | பரமபதமேயாம். |
| தன்னை | தன்னை [ஆண்டாளை] | | |

இத்திருமொழிகற்றார்க்குப் பலங்கூறித் தலைக்கட்டுகிறாள். வடமதுரை தொடங்கி த்வாரகாபுரியளவாகப் பத்தெட்டுஸ்தானங்களைச்சொல்லி அவ்விடங்களிலே தன்னைக்கொண்டுபோய்ச்சேர்க்கவேணுமென்பதாகத் தனது பந்துவர்க்கத்திலுள்ளாரைநோக்கி ஆண்டாளருளிச்செய்த இத்திருமொழியை ஓதவல்லவர்கள் ஸ்ரீவைகுண்டத்திலேபோய் நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள் என்றதாயிற்று. ... .... ... .... ....

அடிவரவு:—மற்று நாணி தந்தை அங்கை ஆர்க்கும் கார்த்தண் வண்ணம் கற்றினம் கூட்டில் மன்னு கண்ணன். ... ... ...

பன்னிரண்டாந் திருமோழி உரை முற்றிற்று.

---

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# பதின்மூன்றாந்திருமொழி—கண்ணனென்னும்.

உரையவதாரிகை:—கீழ்த்திருமொழியிலே என்னை இப்போதே கண்ணபிரானுள்ள ஏதாவதோரிடத்திலே கொண்டுபோய்ச் சேர்த்துவிடுங்களென்று உறவினரை வேண்டினாள்; இவள்படுகிற அவஸ்தையைக் கண்ணுற்கண்டவர்களும் கால்நடந்து போகக்கூடியவர்களோ? அவர்கள் போகமாட்டாதபடி தளர்ந்திருந்தார்கள்; தவிரவும், 'அம்மா! நீ இப்படிப் பதற்றமாகச் சொல்லலாகாது; பெண்பிறந்தார்க்கு இத்தனைபதற்றம் தகாது' என்றாற்போலே பழம்பாட்டுக்களையும் பாடிக்கொண்டிருந்தார்கள். அவர்களை நோக்கிச் சொல்லுகிறாள்—நீங்கள் என்னுடைய நிலைக்குத்தகாதபடி ப்ரயோஜநமற்ற வார்த்தைகளைச்சொல்ல வேண்டா; என்னை அவன்பக்கல்கொண்டு போகமாட்டீர்களாகில் அவனிடமிருந்தாவது ஏதாகிலுமொரு ப்ரஸாதத்தைக் கொணர்ந்து எனக்குத்தந்து அவ்வழியாலேஎன்னை வாழ்விக்கப்பாருங்கள்-என்கிறாள்-இத்திருமொழியில்.

கண்ணனென்னுங்கருந்தெய்வம் காட்சிப்பழகிக்கிடப்பேனை *
புண்ணிற்புளிப்பெய்தாற்போலப் புறநின்றழகுபேசாதே *
பெண்ணின்வருத்தமறியாத பெருமானரையிற்பீதக
வண்ணவாடைகொண்டு* என்னைவாட்டம்தணியவீசீரே. (க)

கண்ணன் என்னும் } ஸ்ரீ க்ருஷ்ணனென்கிற
கரு தெய்வம் } கரியதொரு பரதேவதையினுடைய
காட்சி — காட்சியிலே
பழகி கிடப்பேனை } பழகிக்கிடக்கிற என்னைக் குறித்து
(ஓ! தாய்மார்களே! நீங்கள்)
புறம்நின்று — அசலாகஇருந்துகொண்டு
புண்ணில் புளி பெய்தால் போல } புண்ணிலே புளி ரஸத்தைச் சொரிந்தாற் போல்
அழகு பேசாதே } பணிக்கை சொல்வதைத் தவிர்ந்து,
பெண்ணின் வருத்தம் அறியாத பெருமான் அரையில் } பெண் பிறந்தாருடைய வருத்தத்தை அறியாதவனான கண்ணபெருமானுடைய திருவரையில் சாத்திய
பீதக வண்ணம் ஆடைகொண்டு } பீதாம்பரத்தைக் கொண்டுவந்து
வாட்டம் தணிய } (என்னுடைய) விரஹ தாபம் தீரும்படி
என்னை வீசீர் — என்மேல் வீசுங்கள்.

கண்ணபிரானுடைய காட்சியிலேயே பழகிக்கிடக்கிற என்னைநோக்கி நீங்கள் ஹிதோபதேசம் செய்வதானது புண்ணிலே புளிரஸத்தைச் சொரியுமா போலேயிராநின்றது; 'பெண்ணே! நீ அப்படியிருந்தால் அழகாயிருக்கும், இப்

படியிருந்தால் அழகாயிருக்கும்' என்று நீங்கள் எனக்குச் சொல்லுகிறவார்த்தைகள் போதும்; எனக்குநீங்கள் ஒன்றும் அழகுபேசவேண்டா; உண்மையாக எனக்கு ஏதாவது நன்மைபெறுவிக்கவேணுமென்றகருத்து உங்களுக்குண்டாகில், பெண்பிறந்தார்படும்பாட்டை அறியாதவனான கண்ணபிரானுடைய திருவரையிற் பீதாம்பரத்தைக் கொண்டுவந்து அதனாலேவீசி என்னுடையதாபத்தைத் தணிக்கப்பாருங்கள் என்கிறாள்.

கண்ணனென்றால் எல்லார்க்கும் மிகவும் எளியவன் என்று ப்ரஸித்தமாயிருந்தது; அந்தப்ரஸித்திபோனது இப்போது மாறிப்போய் அவன் பரதேவதையாய்விட்டான்—ஸௌலப்யம்மாறிப் பரத்வம்பொலியநின்றுனென்னும் கருத்துத் தோன்றக் கண்ணனென்னுங்கருந்தெய்வம் என்கிறாள். காட்சி = தர்சனம்; அது பழகிக்கிடக்கையாவது—இப்போது அவன் ஸேவைஸாதிக்காவிட்டாலும் முன்புஸேவைஸாதித்தபடியை ஸ்மரித்துக்கொண்டாகிலும் தரித்திருப்போமென்றால், அதுவும் முடியாதபடி முன்புகண்டகாட்சி நினைவுக்குவாராமல் அவ்வழி புல்மூடிப்போகை. அவனைஸேவித்து நெடுநாளாயிற்றுப்போலும் ஒரு பகலிரிமுழிபாய்த் தோற்றுமிறே. இனி, "கண்ணனென்னுங்கருந்தெய்வம் காட்சிப்பழகிக்கிடப்பேனை" என்பதற்கு 'கண்ணபிரானைக்காணவேணுமென்பதையே அநவரதம் உருப்போட்டுக்கொண்டிருக்கிற என்னைக்குறித்து' என்றும் பொருள்கொள்ளலாம்; பழகுதலாவது=அப்யாஸம்பண்ணுதல்; ஒன்றையே பலகால் ஆவ்ருத்திபண்ணுதல். புண்ணில் புளிப்பெய்தாற்போல= [க்ஷதேக்ஷாரமிவ] என்பர் வடநூலார். "புண்ணில் புளிப்பெய்தாலொக்கும் தீமை" என்றார் பெரியாழ்வாரும். புண்ணிலே புளிரஸத்தைச் சொரிந்தால் பாதை பொறுக்கமுடியாது. புறநின்று=எனக்கு நீங்கள் அந்தரங்கர்களாக இருந்து வார்த்தைசொல்லவேண்டியதுதவிர்ந்து அசலாகநின்று வார்த்தை சொல்லுவது என்னே! என்கிறாள். புறம் நிற்கையாவது—அசலாரென்று தோற்றும்படியாக நிற்கை. அழகுபேசுகையாவது—பணிக்கைசொல்லுகை. எனக்கு நீங்கள் பணிக்கை சொல்லவேண்டாமென்றாள்.

"பெண்ணின்வருத்தமறியாத பெருமான்" என்றவிடத்திலே வியாக்கியானஸ்ரீஸூக்தி:—"முலையெழுந்தார்படி மோவாயெழுந்தார்க்குத் தெரியாதிறேஎன்று பட்டரருளிச்செய்தாராக ப்ரஸித்தமிறே"—[மோவாயெழுகையாவது-மீசைமுளைக்கை.]

"அரையில் பீதகவண்ணவாடைகொண்டு-என்கிறாளே; திருவரையில் சாத்தின பீதாம்பரமாகவேயிருக்கவேணுமென்று என்னநிர்ப்பந்தம்? மேலிட்ட உத்தரீயமாணலாகாதோ?" என்று நஞ்சீயர் பட்டரைக்கேட்க, "ஆண்டாள் கண்ணபிரானுடைய ஸ்வேதபரிமளத்திலே மிகவும் ஆசை கொண்டவள் காணும்; மேலிட்ட உத்தரீயத்தில் அது விசேஷமாகக்கிடைக்காது; திருவரையிற் பீதாம்பரத்தில்தான் அது ஆசைதீரக்கிடைக்குமென்று 'அரையிற் பீதகவண்ணவாடைகொண்டு' என்கிறாள்" என்றருளிச்செய்தாராம்.

பீதகவண்ணவாடை=பீதமென்ற வடசொல் கப்ரத்யயமேற்றுப் பீதகமென்றாயிற்று; பீதகவண்ணம்-பொன்வர்ணமான, ஆடை—அதாவது பீதாம்பரம். ஆண்டாளுடைய தாபத்தின்மிகுதியைக் கண்ட தாய்மார்கள் விசிறியைக் கொணர்ந்து அதனால் விசிறத்தொடங்க; நீங்கள் இதனால் என்னுடைய தாபத்தைத்தணிக்கமுடியாது; அவனுடைய பீதாம்பரத்தைக்கொணர்ந்து அத்தால் விசிறினால்தான் வாட்டந்தணியுமென்கிறாள்—என்று ஒருகால் அழகிய மணவாளச்சீயர் உபந்யஸித்தருளினபடி. ... ... .... ... (க)

பாலாலிலையில்துயில்கொண்ட பரமன்வலைப்பட்டிருந்தேனை *
வேலால்துன்னம்பெய்தாற்போல் வேண்டிற்றெல்லாம்பேசாதே *
கோலால்நிரைமேய்த்தாயனாய்க் குடந்தைக்கிடந்தகுடமாடி *
நீலார்தண்ணந்துழாய்கொண்டு என்நெறிமென்குழல்மேல்சூட்டீரே. (உ)

| | |
|---|---|
| பால் ஆலிலையில் | பால் பாயும் பருவத்தை யுடைய ஆலந்தளிரிலே |
| துயில் கொண்ட | கண்வளர்ந்தருளின |
| பரமன் | பெருமானுடைய |
| வலை | வலையிலே |
| பட்டிருந்தேனை | அகப்பட்டுக் கொண்டிருக்கிற என்னைக் குறித்து, |
| வேலால் துன்னம் பெய்தால் போல் | வேலாயுதத்தை யிட்டுத் துளைத்தாற்போல் [கொடுமையாக] |
| வேண்டிற்று எல்லாம் பேசாதே | உங்களுக்குத்தோன்றின படியெல்லாம் சொல்வதைத் தவிர்ந்து |
| ஆயன் ஆய் | இடைப்பிள்ளையாய் |

| | |
|---|---|
| கோலால் | (இடைச்சாதிக்கு உரிய) கோலைக்கொண்டு |
| நிரை மேய்த்து | பசுக்கூட்டங்களை மேய்த்தவனாய் |
| குடந்தை கிடந்த | திருக்குடந்தையில் திருக்கண்வளர்ந்தருளுமவனாய் |
| குடம் ஆடி | குடக்கூத்தாடினவனுமான கண்ணபிரானுடைய |
| நீல் ஆர் தண் அம் துழாய் கொண்டு | பசுமைபொருந்திக் குளிர்ந்து அழகிய திருத்துழாயைக் கொண்டு வந்து |
| நெறி மென் | நெறிப்புக்கொண்டதாயும் மிருதுவாயுமிருந்துள்ள |
| என் குழல்மேல் | என்கூந்தலிலே |
| சூட்டீர் | சூட்டுங்கள். |

தாய்மார்களே! நீங்கள் எனக்கு ஹிதஞ் சொல்வதாக நினைத்துப் பல பேச்சுக்களைப் பேசுகிறீர்கள்; எப்படியாவது என்நெஞ்சைக் கண்ணபிரானிடத்தில் நின்றும் மீட்கவேணுமென்று பார்க்கிறீர்கள்; நான் அவ்விஷயத்திலே அவகாஹிப்பதற்குமுன்பு நீங்கள் ஹிதஞ்சொல்லியிருந்தால் ஒருகால் ப்ரயோஜநப்பட்டிருக்கலாம்; வெள்ளம் கடந்தபின்பு அணைகட்டுவாரைப்போலே, அவ்விஷயத்திலே நான் அற்றுத்தீர்ந்தபின்பு என்னை நீங்கள் மீட்கப்பார்த்துப்பயனென்? நானோ, "பாலகனென்று பரிபவஞ்செய்யேல் பண்டொருநாள், ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன்" என்னும் படியான கண்ணபிரானுகிற வலையிலேசிக்கிக்கொண்டேன்; அதில் தப்பிநீங்க என்னாலும்முடியாது, உங்களாலும் தப்புவிக்கமுடியாது; இப்படிப்பட்ட நிலைமையில் நீங்கள் எனக்கு ஹிதஞ்சொல்வதுபோல நினைத்து வாயில்வந்தபடியெல்லாம் சொல்வதானது வெறும் பேச்சாயில்லை; வேலாயுதத்தையிட்டுத் துளைக்கிறாப்போல் அத்தனைபாதகமாயிராநின்றது. இப்போது எனக்கு நீங்கள் உண்மையாக ஏதாவது நன்மைசெய்ய

விரும்புதிரேல்; ஸௌசீல்ய ஸௌலப்யாதி குணங்கள் விளங்குகின்ற அக்கண்ண பிரானுடைய ஸம்பந்தம் பெற்றதொரு திருத்துழாய்மலரைக் கொணர்ந்து என் குழலிலே சூட்டுங்கள் அதுவே எனக்குற்ற நன்மையாகும் என்கிறாள்.

பாலாலிலை என்றது பால்பாயும் பருவமான ஆலிலை என்றபடியாய் மிகவும் இளசானஇலையைச் சொன்னபடி. கல்பத்தின் முடிவில் உலகங்களை யெல்லாம் எம்பெருமான் தன்திருவயிற்றில்வைத்து ஓர் ஆலந்தளிரிலே கண் வளர்ந்தருள்வதாக நூற்கொள்கை.

"வலைப்பட்டிருந்தேனை" என்றவிடத்து வியாக்கியான ஸ்ரீஸூக்தி:— "பெரியாழ்வார்மகளிறே; பரிவரில்லாதவிடத்திலே சாய்ந்தானென்று அதிலே நெஞ்சை வைத்திருக்கையாலே கால்வாங்கிப் போகமாட்டாதே சிறைப்பட்டிருந் தாள்காணும்"

(உ).

கஞ்சைக்காய்ந்தகருவில்லி கடைக்கணென்னும்சிறைக்கோலால் *
நெஞ்சூடுருவவேவுண்டு நிலையும்தளர்ந்துநைவேனை *
அஞ்சேலென்னனவனொருவன் அவன்மார்வணிந்தவனமாலை *
வஞ்சியாதேதருமாகில் மார்விற்கொணர்ந்துபுரட்டீரே.

(ரு).

| | |
|---|---|
| கஞ்சை | கம்ஸனை |
| காய்ந்த | தொலைத்தவனும் |
| கரு வில்லி | பெரியவில்போன்ற புருவத்தையுடையனுமிருக்கிறகண்ணபிரானுடைய |
| கடைக்கண் என்னும் | கடைக்கண்ணாகிற |
| சிறை கோலால் | சிறகையுடைய அம்பாலே |
| நெஞ்சூடுருவ | நெஞ்சுமுழுதும் |
| வேவுண்டு | வெந்து போம்படியாகப் பெற்று |
| நிலையும் தளர்ந்து | நிலைமைகுலைந்து |
| நைவேனை | வருந்துகின்ற என்னை நோக்கி |
| அஞ்சேல் என்னனவன் ஒருவன் | 'பயப்படாதே' என்றொருவார்த்தையும் சொல்லாதவனாய் விலக்ஷணனான |
| அவன் | அப்பெருமான் |
| மார்வு அணிந்த | (தனது) திருமார்பில் சாத்தியருளின |
| வனமாலை | வனமாலையை |
| வஞ்சியாதே | மோசம்பண்ணாமல் |
| தரும் ஆகில் | கொடுத்தருள்வானாகில் |
| கொணர்ந்து | (அம்மாலையைக்) கொண்டு வந்து |
| மார்வில் | (என்னுடைய) மார்பிலே |
| புரட்டீர் | (நெஞ்சினுள் வெப்பம் தீருமாறு) புரட்டுங்கள். |

கம்ஸனைக் கொன்றொழித்தவனும் சார்ங்கவில்போன்ற திருப்புருவங்களை யுடையனுமான கண்ணபிரானுடைய கடாக்ஷங்களிலே நான் மிகவும் ஈடுபட்டு ஆற்றமாட்டாமல் நிலைதளர்ந்துநைந்துபோக நின்றேன்; இப்படிப்பட்ட நிலைமை யில் வேறு உதவியொன்றுஞ் செய்யாமற்போனாலும் 'நானிருக்கிறேன், பயப் படாதே' என்றொருவாய்ச்சொல்லாவது சொல்லலாமே அவன்; அதுவும்சொல்லக் காணோம் நீங்களாவது அவனிடஞ்சென்று என்பரிதாபநிலைமையை விண்ணப்பஞ் செய்து அவனையே ஸாக்ஷாத்தாக இங்கு அழைத்துவரமுடியாமற் போனாலும்

அவன் திருமார்பிலேசாத்திய வனமாலையையாவது கொடுக்குமாறு கேளுங்கள்; அவனும் அதனைவஞ்சியாமல் கொடுத்தருளினனாகில் கொணர்ந்து *நெஞ்சூடுருவ வேவுண்ட எனது நெஞ்சில் தாபம் ஆறும்படி மார்பிலே புரட்டுங்கள் என்கிறாள்.

கஞ்சன் என்றசொல் இங்கே கஞ்சு எனச் சிதைந்து கிடக்கிறது; காய்ந்த=காய்தல்-கோபித்தலாய், அதன்காரியமான முடித்தலைச்சொல்லுகிறது; கம்ஸனைமுடித்த-என்றதாயிற்று. கருவில்லி = 'வில்போன்றபுருவத்தையுடையவன்' என்னவேண்டுமிடத்து உபமேயத்தைச்சொல்லாமல் உபமானமாத்திரத்தையே சொல்லியிருப்பது-முற்றுவமை. இதனை வடநூலார் அலங்கார ஶாஸ்த்ரத்தில் ரூபகாதிசயோக்தி என்பர்.

கடைக்கணென்னும் சிறைக்கோலால்—"ஏழையராவி யுண்ணும் இணைக்கூற்றங்கொலோவறியேன், ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள்கொலோ" என்றும், "பாவியேன்றன்னையடுகின்ற கமலக்கண்ணதோர்" என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானுடைய திருக்கண்ணோக்கம் விஶ்லேஷதஶையிலே, மிகவும் துன்பப்படுத்தவற்றுதல் பற்றிக் "கடைக்கணென்னுஞ் சிறைக்கோலால் நெஞ்சூடுருவவேவுண்டு" என்கிறாள். "ஆஶ்ரிதரோடு அநாஶ்ரிதரோடு வாசியற எல்லாரையும் கோலாலேகொல்லுவன் எம்பெருமான்" என்று அழகிய மணவாளச்சீயர் ரஸோக்தியாக அருளிச்செய்யும்படி: அதாவது—"கொல்லாமாக்கோல் கொலைசெய்து பாரதப்போர் எல்லாச்சேனையும் இருநிலத்தவித்தவெந்தாய்!"[திருவாய்மொழி. ௫-௨-௫.] என்கையாலே அநாஶ்ரிதரைக் கொல்லுகைக்கு ஒருகோல் பரிகரமாயிற்று; இங்கே "கடைக்கணென்னும் சிறைக்கோலால்" என்கையாலே ஆஶ்ரிதரைக்கொல்லுகைக்கும் ஒருகோல் பரிகரமாயிற்று என்க. சிறைக்கோல்=கோல் என்று அம்புக்குப் பெயர்; சிறைக்கோலென்றது—இறகுகளையுடைய அம்பு என்றபடி; அல்லது, சிறைச்சாலையில் உபயோகிக்கப்படும் அடிகோல் என்றும்பொருள்கொள்ளலாம் ஹிம்ஸிப்பதில் வல்லமைவாய்ந்தகோல் என்பது தேர்ந்தகருத்து. ஸாதாரணமான அம்புகளைப்போல் தோல்புறையே பட்டு நில்லாமல் நெஞ்சிலேபட்டு மர்மஸ்பர்ஶியாய்ப் பொறுக்கவொண்ணாத துன்பத்தைத் தருகின்றமைதோன்ற "நெஞ்சூடுருவவேவுண்டு" என்கிறாள். அம்புபட்டால் நாலடிநடந்துசென்று பிறகு தளர்த்தியுண்டாகும்; அவனுடைய நோக்காகிற அம்புபட்டால் அப்படி யல்ல; நின்றநிலையிலே அடித்துவிழும்படியாகுமென்பாள் "நிலையுந்தளர்ந்துநைவேனை" என்கிறாள். நைவேனை= ஸந்திபந்தங்கள் குலைந்து ஶைதில்யத்தையடைந்த என்னை என்றபடி.

வனமாலை—"[illegible]" [ஆபாதபத்மம் யாமாலா வநமாலேதி ஸா மதா] என்பர் வடநூலார்; வனம் என்பதற்குள்ள பல பொருள்களில் அழகு என்னும் பொருளையும், துளவி என்னும் பொருளையும் இங்கே விவக்ஷித்து, அழகியமாலை, அல்லது—திருத்துழாய்மாலை என்றுபொருள் கொள்வதும் நன்றே. வஞ்சியாதே தருமாகில்=நீங்கள் அப்பெருமானிடத்துச் சென்று 'ஆண்டாளுக்காக உன்மார்வலரிந்தவனமாலையைக்கொடுத்தருள்' என்று கேட்டால் அவன் * வஞ்சக்கள்வன் மாமாயனாகையாலே தன்னுடைய புன்முறு

வலைக்காட்டி கடாக்ஷவிக்ஷேபங்களின் சாதுரியத்தைக் காட்டியும் உங்களைமயக்கி நீங்கள் வித்தகாரியத்தைமறந்தொழியும்படிசெய்து மோசப்பண்ணிவிட்டாலும்விடுவன்; அப்படி வஞ்சனைபண்ணும்ல் திருமார்வுமாலையைத் தந்தருளினானாகில் அதனைக் கொணர்ந்து என் தலையில் சூட்டப்பாராமல், புண்பட்டவிடத்தில் பரிஹரிக்க வேண்டுமாதலால் மார்பிலேபுரட்டி *நெஞ்சூடுருவவேவுண்ட தாபமெல்லாம் தணியும்படி செய்யுங்கள் என்கிறாள். அவன்றன்னையே நேராக மார்பிலே அணையவேணுமென்று பட்டஆசை அந்தோ! மாலையிலேசென்று முடிந்தது. (௫).

ஆரேயுலகத்தாற்றுவார் ஆயர்பாடிகவர்ந்துண்ணும் *
காரேறுழக்கவுழக்குண்டு தளர்ந்தும்முறிந்தும்கிடப்பேனை *
ஆராவமுதமனையான்றன் அமுதவாயிலூறிய *
நீர்தான்கொணர்ந்துபுலராமே பருக்கியிளைப்பைநீக்கீரே.

| | |
|---|---|
| ஆயர் பாடி | திருவாய்ப்பாடி முழுவதையும். |
| கவர்ந்து உண்ணும் | கொள்ளை கொண்டு அநுபவிக்கிற |
| கார் ஏறு | ஒரு கறுத்தகாளைபோன்ற கண்ணன் |
| உழக்க | ஹிம்ஸிக்க |
| உழக்குண்டு | (அதனால்) துன்பப்பட்டு |
| தளர்ந்தும் முறிந்தும்கிடப்பேனை | பல்வகையான சைதில்யங்களையடைந்து ஸோர்ந்துகிடக்கிற என்னை |
| உலகத்து | இவ்வுலகத்திலே |
| ஆற்றுவார் | தேறுதல்சொல்லி ஆறச்செய்பவர் |
| ஆரே | ஆருண்டு? (யாருமில்லை;) ("நாங்களிருக்கிறோமே; அம்மா! உனக்கு என்னசெய்யவேணும்? என்று தாய்மார்கேட்க;) |
| ஆரா அமுதம் அனையான் தன் | எவ்வளவநுபவித்தாலும் த்ருப்தி பிறவாத அம்ருதம்போன்ற கண்ணபிரானுடைய |
| அமுதம் வாயில் | அம்ருதம்சுரக்கிறதிருவாயில |
| ஊறிய | ஊறிக்கிடக்கிற |
| நீர் தான் | ரஸத்தையாவது |
| புலராமே கொணர்ந்து | உலராமல் பசையோடே கொண்டுவந்து |
| பருக்கி | அதை நான் பருகும்படி பண்ணி |
| இளைப்பை நீக்கீர் | (எனது) ஆயாஸத்தைப் பரிஹரிக்கப்பாருங்கள் (என்கிறாள்.) |

இராமபிரானிடத்து ஆசைப்பட்டோமாகில், [illegible] [பஹவோ ந்ருப! கல்யாணகுணா: புத்ரஸ்ய ஸந்திதே] என்றபடி அவன் குணக்கடலாகையாலே அந்தகுணங்களை நம்பியநுஸந்தானஞ்செய்து கொண்டு ஒருவாறு தரித்திருக்கலாம்; [பிராட்டி தரித்திருந்தாற்போல.] க்ருஷ்ணவிஷயத்திலே புண்பட்டவர்கள் அப்படித்தரித்திருக்கமுடியுமோ? திருவாய்ப்பாடியிலுள்ள அஞ்சலக்ஷங்குடிப் பெண்களளவிலே செய்யவேண்டிய தீம்புகளையெல்லாம் அவன் ஒருமடைசெய்து என்னொருத்தியளவிலே செய்யாநின்றால்நான் எப்படி பிழைக்கமுடியும்? அம்புபட்ட புண்வாயை மருந்திட்டு ஆற்றலாம்; அவனது தீம்புகட்கு விஷயமாகித்தளர்ந்தும் முறிந்தும்கிடக்கின்ற என்னை இவ்வுலகத்தில் ஆற்றுவாருண்டோ? என்று சொல்லிக்கொண்டே, இளைத்துவீழ்ந்து நெடும்போது ஸம்ஜ்ஞையற்றுக்கிடந்தாள் ஆண்டாள்; அவ்வளவிலே நிதானமறிந்த,

சிலர், அம்ருதத்தையிட்டு இவளுடைய மயக்கத்தைத் தீர்க்கலாமென்றெண்ணி ஆராவமுது இத்யாதிகளான பகவந்நாமங்களைச் செவிப்படவுரைக்க அதுகேட்டவாறே தெளிந்தெழுந்து, பின்னடிகளருளிச் செய்கின்றாள்.

அமுதத்திலேயுண்டான ஆரமுதத்தைக்கொணர்ந்து, நான் சருகாய் உலர்ந்துபோவதற்குமுன்னே என்னைப் பானம் பண்ணுவித்து என்னுடைய இளைப்பை நீக்கப்பாருங்களென்கிறாள். .... ... .... .... (௪)

அழிலும்தொழிலுமுருக்காட்டான் அஞ்சேலென்னாவனொருவன் *
தழுவிமுழுசிப்புகுந்தென்னைச் சுற்றிச்சுழன்றுபோகானால் *
தழையின்பொழில்வாய்நிரைப்பின்னே நெடுமாலூதிவருகின்ற *
குழலின்துளைவாய்நீர்கொண்டு குளிரமுகத்துத்தடவீரே. (௫)

அழிலும் — அழுதாலும்
தொழிலும் — தொழுதாலும்
உரு காட்டான் — தன் வடிவைக் காட்டாதவனும்
அஞ்சேல் என்னாவன் — (உருவைக் காட்டாவிடினும் 'அஞ்சேல்' என்ற சொல்லும் சொல்லாதவனுமுள்ள
ஒருவன் — ஒருமற்றொருபாவன் [கண்ணன்]
புகுந்து — இங்கே வந்து
என்னை தழுவி முழுசி — என்னை நெருக்கி யணைத்து
சுற்றி சுழன்று — முன்னும் பின்னும் சூழ்ந்து கொண்டிருந்து
போகான் — போகாமலிருக்கிறான்;
ஆல்! — இது உண்மையான அநுபவமல்லாமல் மாநஸாநுபவமாத்ரமான உருவெளிப்பாடாகையாலே துக்கம்;

தழையின் பொழில் வாய் — பீலிக் குடைகளாகிற சோலையின்கீழே
நிரை பின்னே — பசுக்கூட்டங்களின் பின்புறத்திலே
நெடு மால் — வ்யாமுக்தனான கண்ணபிரான்
ஊதி வருகின்ற — ஊதிக்கொண்டு வரப்பெற்ற
குழலின் துளை வாய் — புல்லாங்குழலின் த்வாரங்களிலுண்டாகிற
நீர் கொண்டு — நீரைக் கொணர்ந்து
முகத்து — என்னுடைய முகத்திலே
குளிர தடவீர் — குளிர்த்தியாகத் தடவுங்கள்.

அப்பெருமானை ஸாக்ஷாத்கரிக்கவேணுமென்றும் அவன் சோதிவாயாலே அபயப்ரதாநம் அருளப்பெறவேணுமென்றும் ஆசை கரைபுரண்டு அதற்காகச் சிறுபயல்கள்செய்யும் உபாயத்தையுஞ் செய்வேன், மேலையார் செய்யுமுபாயத்தையும் செய்வேன்; (அதாவது:—கண்ணீரைப் பெருகவிட்டு அழுவேன்; ப்ரஹ்மாஸ்த்ரப்ரயோகம் பண்ணினாப்போலே தொழுவேன்.) எதுசெய்தாலும் அவன் நேரிலேவந்து திருவுருவைக்காட்டுவதுமில்லை; ஆகாச வாணிசொல்லுமாபோலே அசரீரியாகவாகிலும் நின்று 'அஞ்சேல்' [பயப்படாதே, நானிருக்கிறேன்] என்றொருவார்த்தைசொல்வதுமில்லை; இப்படி ஸர்வாத்மநா உபேக்ஷைபண்ணிக்

கிடக்கிற அவனை மறந்தாகிலும் ஒருவாறு ஆறியிருப்போமென்று பார்த்தாலோ, அப்படியுமிருக்கவொண்ணாதபடி உருவெளிப்பாட்டாலே ஹிம்ஸிக்கின்றனே!; [உருவெளிப்பாடாவது—மெய்யாகவந்து ஸம்ச்லேஷம்கொடாமல் மாநஸாநுபவ மாத்ரத்துக்கு விஷயமாம்படி தனது எல்லா அவயவங்களையும் அருகே உலாவச் செய்தல்: இத்தகைய அநுபவம் நம்மாழ்வாருடைய திருவாய்மொழியில், "எங்ஙனேயோ வன்னைமீர்காள்!"—"ஏழையராவியுண்ணும்" என்ற இரண்டு திருவாய்மொழிகளில் நிகழ்ந்தமை அறியத்தக்கது.]

இந்தஹிம்ஸைக்குப் பரிஹாரமுறைகூறுவன பின்னடிகள். பெரியாழ்வார்திருமொழியில் "தழைகளுந்தொங்கலுந் ததும்பியெங்கும் தண்ணுமை பெக்கம் மத்தளிதாழ்பீலிக், குழல்களுங்கீதமுமாகி யெங்கும் கோவிந்தன் வருகின்ற கூட்டங்கண்டு" என்றுதொடங்கிப் பத்துப்பாட்டாலும் விஸ்தாரமாக அருளிச்செய்தபடியே) பசுக்களின்பின்னே பரமபோக்யமாக எழுந்தருளாநின்ற கண்ணபிரான் குழலூதிக்கொண்டே வருவனே; அக்குழலின் துளைகளிலே அவனதுசோதிவாயின் அமுதப்புனல் நிரம்பிக்கிடக்குமே; அந்த நீரைக் கொண்டுவந்து, குளிர்த்தியுண்டாம்படி என்முகத்திலே தடவுங்களென்கிறாள். "குழலிருண்டு சுருண்டேறிய குஞ்சிக் கோவிந்தனுடைய கோமளவாயில், குழல் முழைஞ்சுகளினூடு குமிழ்த்துக் கொழித்திழிந்த வமுதப்புனல் தன்னை" வேய்ங்குழலை வாயில்வைத்து ஊதும்போது வாயைக் கொப்பளித்தலால், உமிழ்நீர் குழலின் துளைவழியாக வெளிவருமென்க.

அழிவுந்தொழிலும் என்றவிடத்து வியாக்கியானத்திலே—"பத்திப்ரபத்திகளிரண்டுக்கும் வாசியறுத்தான்" என்றருளிச்செய்வர் பெரியவாச்சான் பிள்ளை. அழுகையாவது காயக்லேசரூபமாகையாலே தத்ருசமான பக்தியைச் சொன்னபடி: தொழுகையென்று ப்ரபத்தியைச்சொன்னபடி. "[illegible]" [த்ரௌபத்யா ஸஹிதாஸ்ஸர்வே நமச்சக்ருர்ஜநார்த்தநம்] என்றவிடத்து நமஸ்காரமாவது ப்ரபத்தி-என்றதிறே.

அவனொருவன் என்கிறாள்-பேரையிட்டுச்சொல்லவும் வெறுப்புமிக்கது போலும் ஹிம்ஸையின்கொடுமை தோற்றும் இதனால். ... (ரு)

நடையொன்றில்லாவுலகத்து நந்தகோபன்மகனென்னும் *
கொடியகடியதிருமாலால் குளப்புக்கூறுகோளப்பட்டு *
புடையும்பெயரகில்லேன்நான் போட்கன்மிதித்தவடிப்பாட்டில் *
பொடித்தான்கொணர்ந்துபூசீர்கள் போகாவுயிரென்னுடம்பையே. (சு)

| | | | |
|---|---|---|---|
| நடை ஒன்று இல்லா உலகத்து | (ஏற்கனவே) மரியாதைகளெல்லாம் குலைந்து கிடக்கிற இவ்வுலகத்தில் | கொடிய | இரக்கமற்றவனாய் |
| | | கடிய | ஸ்வார்த்தபானுமா |
| நந்தகோபன் மகன் என்னும் | 'ஸ்ரீ நந்த கோபர் மகன்' என்று ப்ரஸித்தனாய் | திருமாலால் | ஸ்ரிய; பதியாலே [கண்ணனாலே |
| | | நான் | அபலையான நான் |

குளப்புக்கூறு கொளப்பட்டு — மிகவும் துன்பப்படுத்தப் பட்டு
புடை பெயரவும் இல்லேன் — அப்படி இப்படி அசைவதற்கும் அசக்தையாயிராநின்றேன்
(ஆனபின்பு,)
போட்கன் — சுணைகேடனான அக்கண்ணபிரான்
மிதித்த அடிப் பாட்டில் — திருவடி பட்டு மிதித்த இடத்திலுண்டான
பொடி தான் — ஸ்ரீபாததூளியையாவது
கொணர்ந்து — கொண்டுவந்து
போகா உயிர் என் உடம்பை — விட்டுப் பிரியாதவுயிரையுடைய என் உடம்பிலே
பூசீர்கள் — பூசுங்கள்.

ஏற்கனவே உலகத்தில் மரியாதையெல்லாம் சீர்குலைந்து கிடக்கின்றன; அதுக்குமேலே ஒன்றுபத்தாய்ச்சீர்குலையும்படி நந்தகோபன் மகனென்கிற ஒரு மஹாநுபாவன் வந்து தோன்றினான்; பரமஸாதுவான நந்தகோபனுக்கு இந்தக் கொடியவன் எங்ஙனே பிள்ளையாகப்பிறந்தானோ அறியேன்; அவனால் மிகவும் துன்பப்படுத்தப்பட்ட நான் புடைபெயரவும் ஒண்ணாதபடி துவண்டுபோனேன்; இந்தத்துவட்சி தீருவதற்கு மருந்துயாதெனில்; அந்தச் சுணைகேடன் நடந்து சென்ற நிலத்திலுள்ள பொடியைக்கொணர்ந்து என்னுடம்பிலே பூசப்பாருங்கள்; அதுவே உற்றமருந்தாகும் என்கிறாள்.

கொடியகடியதிருமால் = கொடுமையாவது பிறரை வருந்தச்செய்கையாகிற க்ரூரத்தனம்; கடுமையாவது தன் காரியத்தைமாத்திரம் விரைந்து முடித்துக் கொள்ளுகையாகிற ஸ்வகார்யபரத்வம்: ("கடியன் கொடியன் நெடியமால்" என்றார் நம்மாழ்வாரும்.) இப்போது திருமால் என்று பிராட்டி ஸம்பந்தத்தை அநுஸந்திப்பது - இக்கொடுமைகடுமையெல்லாம் இவனால் அவளிடத்திலிருந்துதான் கற்றுக்கொள்ளப்பட்டனவென்று அவளையும் சேர்த்து வெறுக்கின்றமையைக் காட்டுமென்ப. "இழவேயாய்ப்போருகிற ப்ரகரண மாகையாலே பேற்றுக்குப் பரிகாரமாகச் சொல்லலாமவற்றையெல்லாம் இழவுக்குப்பரிகாரமாகச் சொல்லுகிறாள்" என்ற பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகாண்க.

குளப்புக்கூறுகொளப்பட்டு = அடிபட்ட இடத்திலேயே மேன்மேலும் அடிபடுதல் குளப்புக்கூறுகொள்ளுதலாம்; [குளம்புகூறு, குளப்புக்கூறு.] கால்நடைகளின் குளம்புகள் எப்போதும் அடிபட்டுக்கொண்டேயிருத்தலால் அதுபோல மேன்மேலும் அடிபட்டுக்கொண்டேயிருத்தலைக் குளப்புக்கூறு கொள்ளுதலாகக் கூறுவர்; கூறு என்னுஞ்சொல்லுக்குள்ள பலபொருள்களில் 'தன்மை' என்ற பொருள் இங்கே கொள்ளத்தக்கது; 'குளம்பின் தன்மையை உடையேனானேன்' என்று பதார்த்தமாய், 'துகையுண்டவிடத்திலேயே மேன்மேலும் துகையுண்டு' என்று தாத்பர்யார்த்தமாகக்கடவது.

புடைபெயர்தல்—பக்கங்களில் அசைதல்; நோவின்கனத்தினால் அசையவும் மாட்டாதிருக்கின்றேனென்கிறாள் "புடையும்பெயரகில்லேன்" என்று.

அடிப்பாட்டில்பொடி-திருவடிபட்டவிடத்திலுண்டான தூள்கள் என்றபடி. அடிப்பாடென்று வழிக்குப்பெயர். 'அவனுடையதிருமேனியில் ஸாக்ஷாத்

ஸம்பந்தம்பெற்ற வஸ்துவே வேணுமென்கிறதிர்ப்பர்தமில்லை; பரம்பராஸம்பந்தம் பெற்ற வஸ்துவாயிருந்தாலும் உத்தேஶ்யமேயாமென்று இதனால் தெரிவித்தவாறு.

போகாவுயிரென்னுடம்பு=எத்தனை விஷங்களை வாங்கித்தின்றாலும், எத்தனை கத்திகளையெடுத்துக் குத்திக்கொண்டாலும் இந்தப்பாழும் உயிர் என் உடம்பைவிட்டுப் போகமாட்டேனென்கிறதேயென்று மிக்கவருத்தந்தோற்றக் கூறுகின்றபடி பாரீர். போகாவுயிர்—போகாதவுயிரையுடைய, என்று பொருள். படுதலால் அன்மொழித்தொகை; வடமொழிநடை. (சு)

வெற்றிக்கருளக்கொடியான்தன் மீமீதாடாவுலகத்து *
வெற்றவெறிதேபெற்றதாய் வேம்பேயாகவளர்த்தாளே *
குற்றமற்றமுலைதன்னைக் குமரன்கோலப்பணைத்தோளோடு *
அற்றகுற்றமவைதீர அணையவமுக்கிக்கட்டீரே. (எ)

| | |
|---|---|
| கருளன் வெற்றி கொடியான் தன் மீமீது ஆடா உலகத்து — பெரிய திருவடியை வெற்றிக்கொடியாக வுடைய எம்பெருமானுடைய ஆணையை மீறிச்செல்லக் கடவதல்லாத இவ்வுலகத்தில் [எம்பெருமானுடைய ஆணைக்கு உட்பட்டதான இவ்வுலகத்தில்] | குற்றம் அற்ற — (அவனைத் தவிர[illegible] வேறொருவன் விரும்புகையாகிற) குற்றம் இல்லாத |
| பெற்ற தாய் — அவனைப்பெற்றதாயாகிய யசோதையானவள் (தனது புத்திரனை) | முலை தன்னை — (என்னுடைய) ஸ்தன[illegible]களை |
| வெற்ற வெறிதே — ஒருவர்க்கும் பயனின்றியே, (பயனில்லையென்கிற மாத்திரமேயோ ?) | குமரன் — யௌவனத்தோடு தோள் நீண்டியான அப்பெருமானுடைய |
| வேம்பு ஆகவே — வேப்பங்காய்போல் கைக்கும் படியாகவே | கோலம் பணை தோளோடு — அழகியதாயும் கற்பகக் கிளைபோன்றதாயுமுள்ள திருத்தோள்களோடே, |
| வளர்த்தாள் — வளர்த்து வாராநின்றாள்; | அற்ற குற்றம் அவை தீர — (என்னைக்கைவிட்[illegible]டு) அவற்றுக்கே அற்றுத்தீர்ந்த குற்றம் தீரும்படி |
| | அணைய அமுக்கி கட்டீர் — அமுக்கி யணைத்துக்கட்டி விடுங்கள். |

கீழ்ப்பாட்டில், "நந்தகோபன்மகனென்னுங் கொடியகடிய திருமாலால்". என்று—பெற்றதகப்பனை வெறுத்துக்கூறினாள்; இப்பாட்டில்; பெற்றதாயை வெறுத்துக்கூறுகின்றாள். கண்ணபிரான் இவ்வளவு தீம்பனாயிருப்பதற்குக் காரணம்—யசோதை அவனைவளர்த்தபொல்லாங்கு என்றிருக்கிறாள். அவள் செவ்வையாகநியமித்து பயபக்திகளுண்டாம்படி ஶிக்ஷித்து வளர்த்திருப்பாளாகில் இவன் இப்படித் தீம்பனாயிருக்கமாட்டான்; "அஞ்சவுரப்பாளசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும்" என்னவேண்டும்படி அவள் இவனைத்தான் தோன்றியாக விட்டு வேடிக்கைபார்த்துக்கொண்டிருந்ததனால் இவன் தலைவிரித்தாடும் தீம்பனாகப் பெற்றான் என்றிருக்கிறாள். "பெற்றதாய் வெற்றவெறிதேவேம்பேயாக

வளர்த்தாள் என்று அந்வயக்ரமம்: ஒரு பலனைவிரும்பிப் பிறர்க்கு அநர்த்தத்தை விளைப்பாருமுண்டு; அப்படியன்றியே யசோதை நிஷ்ப்ரயோஜநமாகவே பராநர்த்தத்தை விளைக்க இவனைவளர்த்தாளே! என்கிறாள். வேம்பேயாக என்றவிடத்திலே வியாக்கியான ஸ்ரீஸூக்தி:—"வேம்பும் கரும்புமாக வளர்க்கையன்றிக்கே வெறும்வேம்பேயாக வளர்த்தாள்; அவன்வேம்பானது வளர்த்தபொல்லாங்கு என்றிருக்கிறாள்." என்பதாம். வெற்றவேறிதே=சிறிதும் பலனில்லாதபடி என்கை: ஒருவகைக் குறிப்பிடைச்சொல். 'செக்கஞ்செகவென்று' 'கன்னங்கரேலென்று' என்னுமாபோலே வெற்றவேறிதே என்பதும் ஒருவகை வழக்கச்சொல். "வேப்புபோலே வளர்த்தாள்" என்னாமல், "வேம்பேயாக வளர்த்தாள்" என்றது—தீம்பின்மிகுதியாலேயுண்டான வைரஸ்யாதிசயத்தைக்காட்டும்.

அவன் அப்படி வேம்பாயிருந்தாலும் "வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாது" என்னுங்கணக்கிலே என்முலைகளானவை அந்தவேம்பிலே பணைத்த இலைகளோடே அணையத்தான் ஆசைப்படாநின்றன; ஆசையாலே அவன் தோளையும் என்முலையையும் ஒன்றுசேர்த்து விலங்கிட்டு வையுங்களென்கிறாள் பின்னடிகளில்.

அவன் இத்தனை தீம்பனாய் உபேக்ஷித்திருக்கச்செய்தேயும் "அவரைப் பிராயந்தொடங்கி யென்றுமாதரித் தெழுந்தவென் தடமுலைகள், துவரைப் பிரானுக்கே சங்கற்பித்து" என்றும் "கொங்கைத்தலமிவை நோக்கிக்காணீர் கோவிந்தனுக்கல்லால் வாயில்போகா" என்றும் அவனையொழிய வேறொரு முகம்நோக்காதிருக்கும்முலைகளைக் "குற்றமற்றமுலை" என்கிறாள்.

அற்றகுற்றமவைதீர என்பதற்கு-இம்முலைகள் இதுவரையில் அவனைப் பிரிந்திருந்தகுறைதீரும்படி என்று சிலர் பொருள்கூறுவரேனும், அது வியாக்கியான ஸ்ரீஸூக்தியோடு பொருந்தாது. "அத்தோளோடே அற்றதாய்த்து இம்முலைகள்; இங்கேகுடியிருப்பாய் அங்கே க்ருதஸங்கேதமாயாய்த் திருக்கிறதுஇவை. என்னைக்கூடாதே அங்கே அற்றகுறைதீரும்படி." என்றிறே பெரியவாச்சான்பிள்ளையருளிச்செய்துள்ளது.

"இவ்வுலகத்து வெற்றவெறிதேபெற்றதாய் வேம்பேயாகவளர்த்தாள்" என்று இவ்வளவே சொல்லப் போதுமாயிருக்க, "வெற்றிக் கருளக்கொடியான் றன் மீமீதாடா வுலகத்து" என்று கருளக்கொடியுடையனான பகவானுடைய ஆணையைமீறிச் செல்லக்கூடாததல்லாத இவ்வுலகத்திலே என்று சொல்லுகைக்குக் கருத்தென் என்னில்; எம்பெருமான் தன் ஆஜ்ஞையாலே எல்லாரையும் கீழ்ப்படுத்தி ஏதுவும் எல்லைகடந்து நடவாமல் ஒரு மரியாதையாய் நடந்துவரும்படி விஜயத்வஜமெடுத்துச் செங்கோல் செலுத்தா நின்றவுலகத்திலே எல்லா மரியாதைகளுங்கெட்டு மனம்போனபோக்கே செய்யுமவனை ஒருபிள்ளையைப் பெற்றாள் யசோதை—என்கிறாளெனக்கொள்க. (எ)

உள்ளேயுருகிநைவேனை உளனோவிலனோவென்னுத *
கொள்ளைகொள்ளிக்குறும்பனைக் கோவர்த்தநனைக்கண்டக்கால் *
கொள்ளும்பயனென்றில்லாத கொங்கைதன்னைக்கிழங்கோடும் *
அள்ளிப்பறித்திட்டவன்மார்விலெறிந்து என்னழலைத்தீர்வேனே. (௮)

| | | | |
|---|---|---|---|
| உள்ளே உருகி நைவேனை | உள்ளுக்குள்ளேயே கரைந்து நைந்து போகிற என்னைப்பற்றி | கண்டக்கால் | (ஒருகால்) நான் காணப் பெற்றேனுகில்,— |
| உளனோ இல னோ என்னுத | 'இருக்கிருளா? செத்தாளா?' என்றும் கேளாதவனாய் | கொள்ளும் பயன் ஒன்று இல்லாத | (ஆட்டுக்கழுத்தில் முலை போலே) உபயோகமற்றதான |
| கொள்ளை கொள்ளி | என் ஸர்வஸ்வத்தையும் அபஹரித்துக்கொண்டவனாய் | கொங்கை தன்னை | (என்னுடைய இந்த) முலையை |
| குறும்பனை | (பெண்கள் திறத்திலே) பொல்லாங்கு செய்யுமவனான | கிழங்கோடும் அள்ளி பறித்திட்டு | வேர்முதலோடே பற்றிப் பிடுங்கி |
| கோவர்த்தனனை | கண்ணபிரானை | அவன் மார்வில் எறிந்து | அந்த க்ருஷ்ணனுடைய மார்பிலே, எறிந்து விட்டு |
| | | என் அழலை | என் துக்கத்தை |
| | | தீர்வேன் | போக்கிக்கொள்ளப் பெறுவேன். |

உள்ளுக்குள்ளே உருகி நைந்துகொண்டிராநின்ற என்விஷயத்திலே சிறிது ஆராய்ச்சியுமில்லாதவனும், என்னைவெறுந்தரையாக்கினவனும், குறும்பு செய்வதற்கென்றே பிறந்தவனுமான கோபாலக்ருஷ்ணனை ஒருகால் நான்காணப் பெற்றேனுகில், ஆட்டின்கழுத்தில் முலைபோலே என் மார்பில் வ்யர்த்தமாக முளைத்துக்கிடக்கிற இப்பாழும் முலைகளை வேர்பறியாகப் பறித்து அவனுடைய மார்விலே விட்டெறிந்து என் துக்கம் தீரப்பெறுவேனென்கிருள்.

உளனோ இலனோ என்னுத = இங்கேற வந்து முகங்காட்டாவிட்டாலும் 'அவள்பிழைத்திருக்கிருளா ஒழிந்தாளா?' என்று ஸாமாந்யமாகப் பிறரை விசாரிக்கலாமே; என்னைப்பற்றி அவனுக்கு எள்ளளவாவது கவலை யிருந்தாலன்றோ விசாரிக்கப்போகிருன்; தன்பெருமையும் தன்போகமுமே தனக்குப் பெருஞ் செல்வமாயிருப்பதால் நானொருசரக்கு இருப்பதாகவும் அவனுக்கு எண்ணமில்லை என்றவாறு. கொள்ளை கொள்ளி = கொள்ளை கொள்பவன்; ஸர்வஸ்வாபஹாரம்செய்பவன். இ=பெயர்விகுதி. "கோவர்த்தனனை" என்றவிடத்து, "பெண்களை வெறுந்தரையாக்கும்; பசுக்களை ஒன்று நூறாயிரமாக்கும்." என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியின் அழகு காண்க. "[illegible]" [காஃ-வர்த்தயதீதி கோவர்த்தநஃ] என்ற வ்யுத்பத்தியில் நோக்கு. "கண்டக் கால்" என்றசொல்லாற்றலால், அவன் பசுக்களின்பின்னே போமவனுகையாலே அவனைக்காண்பது அருமை என்பது விளங்கும்: வருந்தி ஒருகால் காணப் பெற்றேனுகில் என்க.

"கொள்ளும்பயனென்றில்லாத" என்றவிடத்து,—"கன்னவிலுங் காட்டகத்தோர்வல்லிக்கடிமலரின், நன்னறுவாசம் மற்றாருமெய்தாமே, மன்னும்

வறுநிலத்துவாளாங்கு உகுத்ததுபோல், என்னுடைய பெண்மையும் என்னலனு மென்முலையும், மன்னுமலர்மங்கை மைந்தன்-கணபுரத்துப் பொன்மலைபோல் நின்றவன்றன் பொன்னகலம் தோயாவேல், என்னிவைதான் வாளா எனக்கே பொறையாகி, முன்னிருந்து மூக்கின்று மூவாமைக்காப்பதோர், மன்னுமருந் தறிவீரில்லையே" என்ற பெரியதிருமடல் அநுஸந்திக்கத்தக்கது. எம்பெருமானை அணைந்துகொள்வதற்கு உறுப்பல்லாத-என்றபடி. "கிழங்கோடும் அள்ளிப்பறித்திட்டு" என்றதனால் அளவிறந்த ஆற்றாமை புலப்படும். சத்ருவைநோக்கி "உன்னை வேரோடுகளைந்து ஒழித்துவிடுகிறேன்கிடாய்' என்பாரைப்போலே உள்ளுள்ள கோபமும் துக்கமும் தோன்றச் சொல்லுகிறபடி. இங்குக் கிழங்கு என்றது ஆத்மவஸ்துவை" என்றருளிச்செய்வர். "தடம்புனலசடைமுடியன் தனியொருகூறமர்ந்துறையும் உடம்புடையான் கவராத உயிரினால் குறைவிலமே." என்றபடி பகவத்நுபவத்துக்கு உபயுக்தமாகாத ஆத்மாத்மீயங்களெல்லாம் உபேக்ஷிக்கப்படுமிறே ஆழ்ந்த பக்தியையுடையவர்களுக்கு. "[illegible]" [நதேஹம் நப்ராணாந்நசஸுகமசேஷாபிலஷிதம் நாசாத்மாநம் நாந்யத் கிமபி தவ சேஷத்வ விபவாத்-பஹிர்பூதம் நாத! க்ஷணமபி ஸஹே யாதுசததா விநாசம்தத், ஸத்யம் மதுமதந! விஜ்ஞாபநமிதம்.] என்ற ஆளவந்தார் ஸ்ரீஸூக்தி அறியத்தக்கது.

"கொங்கைதன்னைக்கிழங்கோடும் அள்ளிப்பறித்திட்டு எறிந்து என்னழலைத்தீர்வேனே" என்றால் போராதோ? 'அவன்மார்வில் எறிந்து' என்பானேன்? என்னில், இம்முலைகளால் நான்படும்பாட்டை, * பெண்ணின்வருத்தமறியாத பெருமானான அவனும் படவேணுமென்ற கருத்தினாலென்க. இம்முலைகள் அவன்மார்வில் எறி அவனைக் குமிக்குமைக்கவேணுமென்று நினைக்கிறாளாய்த்து. இக்கஷ்டத்தை அவனும் பட்டானாகில் அதுவே இவள் அழல்தீர்ந்தபடிபோலே. அழல்-தாபம். (௮)

கொம்மைமுலைகளிடர்தீரக் கோவிந்தற்கோர்குற்றேவல் *
இம்மைப்பிறவிசெய்யாதே யினிப்போய்ச்செய்யுந்தவந்தானென் *
செம்மையுடையதிருமார்வில் சேர்த்தானேலுமொருநான்று *
மெய்ம்மைசொல்லிமுகம்நோக்கி விடைதான்தருமேல்மிகநன்றே. (௯)

| | | | |
|---|---|---|---|
| கொம்மை முலைகள் | (எனது) கிளர்ந்தபருத்த முலைகளினுடைய | இம்மைப்பிறவி செய்யாதே | இந்த ஜன்மத்திலே செய்யப்பெறாமல் |
| இடர் தீர | குமைச்சல் தீரும்படி | இனி போய் | இந்தப்பிறவிகழிந்த பின்பு வேறொரு தேசவிசேஷத்திலே போய் |
| கோவிந்தற்கு | கண்ணபிரானுக்கு | செய்யும் | செய்யக்கூடியதான |
| ஓர் குற்றவேல் | அந்தரங்கமான கைங்கரியத்தை | தவந்தான் என்? | தபஸ்ஸு எதுக்கு? |

| | | | |
|---|---|---|---|
| செம்மை உடைய திருமார்வில் | (அன்பர்கள் அணைவதற்கென்றே ஏற்பட்டிருக்கையாகிற) செவ்வையை யுடைத்தான (தனது) திருமார்பிலே | முகம் நோக்கி | என் முகத்தைப்பார்த்து |
| சேர்த்தானேலும் | (என்னை அவன்) சேர்த்துக் கொண்டானாகில் | மெய்ம்மை சொல்லி | மெய்யே சொல்லி |
| நன்று | (நல்லது;) | விடை தான் தரும் ஏல் | "நீ எனக்கு வேண்டாம், போ" என்று தள்ளிவிட்டமைதோன்ற விடை கொடுப்பானாகில் |
| ஒரு நான்று | ஒருநாள் | மிக நன்று | அது உத்தமோத்தமம். |

* கொங்கைதன்னைக்கிழங்கோடு மள்ளிப்பறித்திடுவானேன்? கிழங்கு என்கிற ஆத்மவஸ்துவுண்டாகில் அவ்வாத்மவஸ்துதான் நித்யமாகையாலே ஒரு காலவிசேஷத்திலே ஒருதேசவிசேஷத்திலேபோய் நித்யாநுபவம் பண்ணப்பெறலாமே; அவ்வநுபவத்தைப் பெறுவதற்குப் பாரித்துக்கொண்டு இங்கே ஒருவாறு ஆறியிருக்கலாமே' என்று சிலர்சொல்ல; பெற்ற இவ்வுடம்போடே இங்கே அநுபவிக்க ஆவல் கொண்டிராநின்றநான் தேஹாந்தரத்திலும் தேசாந்தரத்திலும் நேருவதொரு பேற்றைத் துப்புவேனோ வென்கிறாள்.

க்ஷாமகாலத்திலே சோறு சோறு என்று கதறும் ப்ரஜைகளைப்போலே "எமக்குவகுத்த விஷயத்தைக்காட்டு, எமக்குவகுத்தவிஷயத்தைக் காட்டு" என்று நெருக்குகின்ற இம்முலைகளின் பசிதீரும்படி இந்தப்பிறவியிலே இந்தஶரீரத்தோடே கோபாலக்ருஷ்ணனுக்குக் கைங்கர்யம்பண்ணாமல் இனி வேறொருதேசத்திலேபோய் வேறொரு தேஹத்தைப்பரிக்ரஹித்து வேறொரு பரபுருஷனுக்குப் பண்ணுவதொரு கைங்கரியமுண்டோ? என்கிறாள் முன்னடிகளில்.

'அம்மா! இப்படியுஞ் சொல்லலாமோ? கண்ணபிரானுடைய அநுபவம் உனக்கு எளிதாயிருந்ததோ? அவன்தான் மிறுக்குப்பண்ணுகிறானே; துர்லபத்தில் ஆசைவைத்துத் தளர்வதனால் பயனென்?' என்று உற்றார்சொல்ல; அதன்மேல் தன்னுடைய அத்யவஸாயத்தின் உறுதியை உரைக்கின்றாள் பின்னடிகளில். கண்ணபிரான் தனது திருமார்பிலே எனதுகொங்கைகளை அணைத்துக்கொள்ள வேணுமென்று விரும்பியிருக்கிற என்விருப்பத்தின்படி அவன் அணைத்துக் கொள்வனேல் நன்று; அப்படி அணைத்துக் கொள்ளத்திருவுள்ளமில்லையாகில் என்முகத்தை நேராகப்பார்த்து "எனக்கு உன்மேல் அன்பு எள்ளளவுமில்லை; உன்னைக்கைவிட்டேன்; நீ போ" என்றுவாய்திறந்தொன்று சொல்லிவிடட்டும்; அஃது எனக்குமிகவும் ப்ரியம்-என்கிறாள். அவனுடைய ஸம்ஶ்லேஷத்தையே அல்லும்பகலும் வாய் வெருவிக்கொண்டு கிடக்கின்றவிவள் "விடைதான் தருமேல்மிகநன்றே" என்று சொல்லுகைக்குக் கருத்துயாதெனில்; உன்னைக்கைவிட்டேனென்று சொல்லுகிறவார்த்தையாவது அவன், முகம்நோக்கிச் சொல்லுவனாகில், அப்போதையஸேவையாவது கிடைக்குமே என்றும், கண்ணிலே தென்பட்டானாகில் பிறகு அவனை உபாயங்களால் கவர்ந்துகொள்ளலாமென்று

நினைந்துச்சொல்லுகிறபடி. "பாவியேனென்றுன்று சொல்லாய் பாவியேன் காணவந்தே" (திருவாய்மொழி. ௮.எ-௬) என்றதோடு ஒக்குமிது. எம்பெருமான் சொல்லுகிறவார்த்தை எதுவாயிருந்தாலும் அதில் நிர்ப்பந்தமில்லை; கண்முன்னே வந்து தோற்றிச் சொல்லவேணு மென்பதொன்றிலேயாய்த்து நிர்ப்பந்தமுள்ளது: ஆழ்வார், "பாவியேன் காணவந்தே—சொல்லாய்" என்றார்; இவளும் "முகம்நோக்கி" என்கிறாள்.

இப்பாட்டில், சேர்த்தானேலும் என்ற பதத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானமருளிச்செய்யுமிடத்து, சேர்த்தானேலும் — அம்மார்வோடேசேர்த்து அணைக்கையாய்த்துப் பேறுவது; அதுசெய்திலனேயாகிலும்" என்றருளிச்செய்திருப்பதுகொண்டு சிலர் "சேர்க்கானேலும்" என்று திருத்துவர்கள்; வியாக்கியானத்தில் எதிர்மறைப்பொருள் கூறப்பட்டிருத்தலால் அது சேர்த்தானேலும் என்ற பாடத்திற்குப் பொருந்தாதென்று அவர்களுடைய கருத்துப்போலும். அத்திருத்தம் பொருத்தமுடைத்தன்று; வியாக்கியான விரோதம் யாதுமில்லை; காண்மின்;—"அம்மார்வோடே சேர்த்தணைக்கையாய்த்துப் பேறுவது" என்றவளவே சேர்த்தானேலு மென்பதற்கான தாத்பர்யார்த்தம். "அதுசெய்திலனேயாகிலும்" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி மேலுக்கு அவதாரிகை போன்றதேயாம். இப்பாட்டில் பின்னடிகள் ஒரேவாக்யார்த்தம்போல் தோற்றுமாறு இருந்தாலும் இரண்டு வாக்யார்த்தமாகப் பிரித்து வ்யக்தமாக வ்யாக்யானித்தருளியிருக்கிறார் பெரியவாச்சான்பிள்ளை; "சேர்த்தானேல் நன்று, விடைதான் தருமேல் மிகநன்று" என்று யோஜனையைக் காட்டி "தன் மார்வோடே அணையும்படி ஸம்ச்லேஷிப்பித்தானாகில் அழகிது; நீ வேண்டாவென்று முகத்தைப்பார்த்து அநுமதிபண்ணிவிடுமாகில் மிகவும் நன்று." என்று பொருளையும் விளங்கக்காட்டியருளினர்.

மெய்ம்மை சொல்லி விடை தருகையாவது—இவளுடைய பாலபந்தத்தைப் பரீக்ஷிப்பதற்காக வெறுமன் விடைதருகையன்றிக்கே, ஸத்யமாகவே இவளைக் கைவிடவேணுமென்று நெஞ்சார நிஷ்கர்ஷித்துக் கைவிடுதலாம். (முன்னடியில்) "முலைகளிடர்தீர" என்றதனால் இவள் சிற்றின்பத்தை விரும்பினாளல்லள் என்பது குற்றேவல் என்ற சொல்நலத்தால் விளங்கும். ஸ்வாபதேசத்தில் முலை என்பது பக்தியையிறே. தவம்—தபஸ். .... (௯)

அல்லல்விளைத்தபெருமானை ஆயர்பாடிக்கணிவிளக்கை *
வில்லிபுதுவைநகர்நம்பி விட்டுசித்தன்வியன்கோதை *
வில்லைத்துலைத்தபுருவத்தாள் வேட்கையுற்றுமிகவிரும்பும் *
சொல்லைத்துதிக்கவல்லார்கள் துன்பக்கடலுள்துவளாரே. (ய)

| | |
|---|---|
| வில்லேத் துலேத்த புருவத்தாள் | வில்லேத்தோற்கடித்த புருவங்களை யுடையளாய் |
| வில்லி புதுவை நகர் நம்பி விட்டு சித்தன் வியன் கோதை | ஸ்ரீ வில்லி புத்தூர்க்குத் தலைவரான பெரியாழ்வாருடைய மகளாய் ஆச்சர்ய குணசாலினியான ஆண்டாள், |
| அல்லல் விளைத்த பெருமானை | (திருவாய்ப் பாடி முழுதும்) தீங்குவிளைத்து அதனால் பெருமைபெற்றவனும் |
| ஆயர்பாடிக்கு அணி விளக்கை | திருவாய்ப் பாடிக்கு மங்களதீபம்போன்றுப்ரகாசகனுமான கண்ணபிரானை |
| வேட்கை உற்று | ஆசைப்பட்டு |
| மிக விரும்பும் சொல்லை | மிக்க அபிநிவேசம்தோற்ற அருளிச்செய்த இப்பாசுரங்களை |
| துதிக்க வல்லார்கள் | புகழ்ந்து ஓதவல்லவர்கள் |
| துன்பம்கடலுள் | ஸம்ஸாரஸமுத்ரத்தில் |
| துவளார் | துவண்டு நோவு படமாட்டார்கள். |

இத்திருவாய்மொழிகற்றார்க்குப் பலன் சொல்லி முடிக்கிறாள் இதில். * நிச்சலும் தீமைகள் செய்யும் பெருமானாகிய கண்ணபிரான் விஷயமாகப் பெரியாழ்வார் திருமகளார் அருளிச்செய்த இச்சொன்மாலைகளைப் புகழ்ந்து பாட வல்லவர்கள் ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபடமாட்டார்கள் என்கிறாள். ஃஹஃவொநூவகஃஷ்ரணஃகணாவொஃரூஃவஸிஃதெ—[பஹவோ ந்ருப! கல்யாணகுணா: புத்ரஸ்யஸந்தி தே] என்னும்படியாக 'குணசாலி' என்று இராமபிரான் புகழ்பெற்றாற்போலக் கண்ணபிரான் "அல்லல்விளைத்தபெருமான்" என்று புகழ்பெற்றிருப்பனாய்த்து. 'இவன்செய்யும் தீம்புகள் திருவாய்ப்பாடிக்கு விளக்கிட்டாற்போலிருக்கு.மென்பது தோன்ற "அல்லல்விளைத்த பெருமானை ஆயர்பாடிக்கணிவிளக்கை" என்கிறாள். "இவன்தீம்புக்கு இலக்காகாதபோது ஊராக இருண்டு கிடக்குமாய்த்து" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்திகாணக.

வில்லேத் துலேத்த புருவத்தாள் = 'துலேத்த' என்னுஞ்சொல் 'துலா' என்ற வடசொல்லடியாகப்பிறந்ததென்று கொண்டால், வில்லை ஒத்திருக்கின்ற புருவத்தையுடையவள் என்று பொருளாகும். (துலா-ஒப்பு.) பெரியவாச்சான் பிள்ளை இவ்வர்த்தத்தைத் திருவுள்ளம்பற்றவில்லை. "தன்னோடு ஸாம்யங்கொண்டாடியிருக்குமவற்றையெல்லாம் அழிக்கும்படியாயாய்த்து அவயவ ஶோபையிருக்கும்படி. வில்தான் ஒப்பாகப் போராதபடியான புருவத்தை யுடையவள்." என்றிறே வியாக்கியான ஸ்ரீஸூக்தி. ஆகவே துலேத்த என்பதற்கு, 'திரஸ்கரித்த' என்று பொருள் கொள்ளத்தகும்.

தோலேத்த என்றபாடம் ஏற்கும். .... .... .... (௧௦)

அடிவரவு:— கண்ணன் பால் தந்தை ஆரே அழில் நடை வெற்றி உள்ளே கொம்மை அல்லல் பட்டி. ... .... ... .... ...

பதின்மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆண்டாள் திருவடிகளே சரணம்

ஜீயர் திருவடிகளே சரணம்.

---



ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

# பதினான்காந்திருமொழி—பட்டிமேய்ந்தோர்.

உரையவதாரிகை:—"தையொருதிங்களும்" என்று தொடங்கிக் கீழ்த் திருமொழியளவும் ஆண்டாள் பட்ட க்லேசமெல்லாம் தீரும்படி கண்ணபிரான் வந்து ஸேவைதந்தருளினபடியைக் கூறுவதாய்த்து—இத்திருமொழி. திருவாய்மொழியில் நம்மாழ்வார் "என் அவாவறச் சூழ்ந்தாயே" என்னும்படியாகப் பெற்றபேற்றை ஆண்டாளும் பெற்றாளாய் அப்பேற்றை நேராகப் பேசாதே, "கண்ணபிரானைக்கண்டதுண்டோ" என்று கேட்பாரும், "ஓம்! நன்றாகக்கண்டதுண்டு" என்று விடையளிப்பாருமாக இத்தகைய அந்யாபதேசப்ரக்ரியையிலே அமைத்து அருளிச்செய்கிறாள்.

இத்திருமொழியில் ஈற்றுப்பாட்டொழிந்த ஒன்பது பாட்டிலும் முன்னடிகள் "கண்டீரே" என்ற முடிவினால் வந்த வினாவாகவும், பின்னடிகள் "விருந்தாவனத்தே கண்டோமே" என்ற முடிவினால் வந்த விடையாகவும் நிகழும். ஒரு வ்யக்தியாகிய ஆண்டாள்தானே அநேகவ்யக்திகளின் அவஸ்தைகளை ஏககாலத்தில் அடையுமாறு பொருந்துமோ எனின்; எம்பெருமானது அருளின் மிகுதியால் ஞானத்தில் தடையற்றால் பொருந்தாதது ஒன்றுமில்லை. இவளுடைய திருத்தந்தையான பெரியாழ்வார் தமது திவ்ய ப்ரபந்தத்தில் "என்னாதன் தேவிக்கு" என்ற திருமொழியில் இரண்டு ஆயர் மங்கைகளின் அவஸ்தையை அடைந்து ஒருத்தி க்ருஷ்ணாவதார வ்ருத்தாந்தத்தைப் பாடுவதாகவும் ஒருத்தி ராமாவதார வ்ருத்தாந்தத்தைப் பாடுவதாகவுங் கொண்டு பரஸ்பரம் எதிரியாய் நின்றுசொல்லி உந்திபறந்த பாசுரத்தாலே உபயாவதாரகுண சேஷ்டிதங்களையும் பேசி அநுபவித்தாற்போலவும்; திருமங்கையாழ்வார் பெரிய திருமொழியில் "மானமரு மென்னோக்கி" என்ற திருமொழியில் இரண்டு பிராட்டிமார் தசையை ஏககாலத்திலே பெற்றுப் பேசினாற்போலவும் இவளும் பேசுகின்றாளென்க. பரமபதத்தில் நித்யமுக்தர்கள் ஏககாலத்தில் பல சரீரங்களைப் பரிக்ரஹிப்பதாக உபநிஷத்துக்கள் கூறுகின்றன; அது பொருந்துவது எம்பெருமானருளாலிறே; அப்படியே இங்குங் கொள்ளலாமென்று பட்டர் அருளிச்செய்யும்படி. .... ... ... ....

பட்டிமேய்ந்தோர்காரேறு பலதேவற்கோர்கீழ்க்கன்றாய்*
இட்டீறிட்டு விளையாடி இங்கேபோதக்கண்டீரே*
இட்டமானபசுக்களை யினிதுமறித்துநீரூட்டி*
விட்டுக்கொண்டுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (க)

| | |
|---|---|
| ஓர் கார் ஏறு | (கண்ணபிரானென்கிற) கறுத்த காளையொன்று |
| பட்டி மேய்ந்து | காவலில்லாமல் யதேச்சமாய்த்திரிந்துகொண்டும் |
| பலதேவற்கு | பலராமனுக்கு |
| ஓர் கீழ் கன்று ஆய் | ஒப்பற்ற தம்பியாய் |
| இட்டீறிட்டு | ஸந்தோஷத்துக்குப்போக்குவீடாகப் பலவகையான கோலாஹலங்களைப்பண்ணி |
| விளையாடி | விளையாடிக்கொண்டும் |
| இங்கே போத | இப்படிவர |
| கண்டீரே | பார்த்தீர்களோ? |
| இட்டம் ஆன | (தனக்கு) இஷ்டமான |
| பசுக்களை | பசுக்களை |
| இனிது | த்ருப்தியாக |
| மறித்து | மடக்கிமேய்த்து |
| நீர் ஊட்டி | தண்ணீர் குடிப்பித்து |
| விட்டுக் கொண்டு | (இப்படியாக) அவற்றை மேயவிட்டுக் கொண்டு |
| விளையாட | (அப்பெருமான்) விளையாடாநிற்க |
| விருந்தாவனத்தே | ப்ருந்தாவனத்திலே |
| கண்டோம் | ஸேவித்தோம். |

சிறைக்கூடத்தில் கட்டுண்டு கிடப்பாரைப்போலே பரமபதத்தில் திருவனந்தாழ்வான் மடியிலும் ஸேனை முதலியார் பிரம்பின் கீழிலும் பெரிய திருவடி சிறகின் கீழிலும் ஒடுங்கி வர்த்தித்தபெருமான் இந்நிலத்தே போந்து யதேச்சமாகத்திரிந்து விளையாடாநிற்கக் கண்டதுண்டோ? என்று கேட்பவர்களின் பாசுரம் முன்னடிகள். தனக்கு மிகவும் ப்ரீதி பாத்ரமான பசுக்களைப் புல்லும் தண்ணீருமுள்ள விடங்களிலே கொண்டுபோய் மேய்த்துப் பரமானந்தத்துடனே விளையாடாநிற்குங்கால் ஸ்ரீப்ருந்தாவனத்திலே காணப்பெற்றோம் என்று விடையளிப்பார் பாசுரம் பின்னடிகள்.

பட்டிமேய்கையாவது—தடைசெய்வாரில்லாதபடி கண்டவிடங்களிலும் சுற்றிச்சுழன்று மேய்கை. இப்படி ஸ்வச்சந்தவிஹாரம் செய்வதற்காகவேயிறே எம்பெருமான் திருநாட்டைவிட்டுத் திருவாய்ப்பாடியில் பிறந்தது. திருநாட்டிலே இவனுக்குப் பட்டிமேய வொண்ணாதே. * வானிளவரசாயிருக்க வேணுமே. அந்தச் சிறையிருப்புக் குறைதீர இங்கே வந்து பட்டிமேய்கிறபடி.

"ஆனை கருப்பந்தோட்டத்தே புக்கால் திரியுமாப்போலேயாய்த்து இவனும் ஊரை மூலையடியே திரியும்படி. பரமபதத்தில் நால்பிடித்துப் பரிமாறு மதுபோலன்றிக்கே 'வெண்ணெய் களவுபோய்த்து; பெண்கள் களவு போய்த்து' என்னும்படியாக வாய்த்து மர்யாதைகளை யழித்துக்கொண்டு திரியும்படி" என்ற வியாக்யான ஸ்ரீஸூக்திகள் இங்கே அநுஸந்திக்கத் தக்கன.

இவ்விடத்தில் காரேறு என்கையாலே, பரமபதத்திலே உடம்பு வெளுத்திருக்கும் போலும். இஷ்டப்படி பரிமாறலாம்படியான இடத்திலிறே உடம்பு தன்னிறம் பெற்றிருக்கும். அது உள்ளது இங்கே யாய்த்து.

பலதேவற்கு ஓர் கீழ்க்கன்றாய் = பட்டிமேயும் கண்ணபிரான் பலராமனுக்கோர் கீழ்க்கன்றாய் இருப்பனேவென்னில்; பெண்கள் திறத்திலே தீச்சனும்

ரீடைகள் செய்து திரியுமவன் பலராமனளவிலே பவ்யனாயிருப்பனும், அபிமத விஷயங்களிலே தன்னைச் சேரவிடுகைக்கு அவன் துணைவனாகையாலே அவன் நினைவின்படியே அவனளவில் அடங்கி வர்த்திப்பனென்க.

இட்டீறிட்டு என்பதற்கு த்ருப்திகரமான பொருள் விளங்கவில்லை. பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் உள்ளதாவது—"இட்டீறிட்டு= இச்சேதனன் முக்தனானால் பகவதநுபவத்தால் வந்த ஹர்ஷத்துக்குப் போக்கு விட்டு *ஏதத்ஸாமகாயந்நாஸ்தே* [ஏதத் ஸாம காயந்நாஸ்தே] என்று ஸாம-கானம் பண்ணுமாபோலே அவன்றான் இங்கேவந்து அவதரித்து இப்பரிமாற்றத்தைப் பெறுகையாலே வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டுப் பண்ணும் வியாபாரமிருக்கிறபடி." என்றிவ்வளவே உள்ளது. இவ்விடத்திற்கு அரும்பதவுரையிட்டாரொருவர்—"இட்டீறு - செருக்கால் வந்த வியாபாரம்" என்றெழுதிவைத்து, "இட்டீறிடுகை—மாபதமிடுகை" என்றும் எழுதியுள்ளார். இனி, தெளிவுடையார் பக்கல் தினவடங்கக் கேட்டறிக.

விருந்தாவனம் என்பது—கண்ணன் அவதரித்த வடமதுரைக்குச் சிறிது தூரத்தில் யமுநா நதிக்கரையிலுள்ள இடம். கண்ணன் வளர்ந்த இடமான கோகுலமெனப்படுகிற திருவாய்ப்பாடியிலுள்ள நந்தகோபர் முதலான ஆயர்கள் அங்குப் பூதனை வந்து இறந்தது, சகடமாறி வீழ்ந்தது, இரட்டை மருதமரம் முறிந்தது முதலியவற்றை உற்பாதங்களெனக்கொண்டு அஞ்சி மஹாவனமெனப் படுகிற அவ்விடத்தைவிட்டு, கன்றுகாலி முதலிய எல்லாப்பொருள்களோடும் ப்ருந்தாவனத்திற்சென்று குடியேறினர். நெருஞ்சிக் காடாய்க்கிடந்த அந்த ப்ருந்தாவனம் க்ருஷ்ணபகவான் குளிர்ந்த திருவுள்ளத்தோடு அநுக்ரஹித்ததனால், பசுக்கள் முதலானவை வ்ருத்தியடைதற்கு ஏற்ப மிகச்செழிப்புற்றது. பின்பு அங்கு நெடுநாள் கண்ணன் கன்றுகளையும் பசுக்களையும் மேய்த்துக் கொண்டு பல திருவிளையாடல்கள் செய்துகொண்டு வளர்ந்தருளினன். ப்ருந்தாவனம் என்ற வடசொல் விருந்தாவனமென விகாரப்பட்டது. நெருஞ்சிக் காடென்பது பொருள். .... .... .... (க)

அனுங்கவென்னைப்பிரிவுசெய்து ஆயர்பாடிகவர்ந்துண்ணும்*
குணுங்குநாறிக்குட்டேற்றைக் கோவர்த்தனனைக்கண்டீரே*
கணங்களோடுமின்மேகம் கலந்தாற்போல்வனமாலை*
மினுங்கநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (உ)

| | | | |
|---|---|---|---|
| அனுங்க | நான் வருந்தும்படியாக | குணுங்கு நாறி | வெண்ணெய் மொச்சை நாற்றம் நாறுமவனாய் |
| என்னை பிரிவு செய்து | என்னைப் பிரியவிட்டுப் போய் | குட்டேற்றை | இளைய ரிஷபம்போன்றவனான |
| ஆயர் பாடி | திருவாய்ப்பாடியை | கோவர்த்தனனை | கண்ணபிரானை |
| கவர்ந்து | ஆக்ரமித்து | கண்டீரே?—; | |
| உண்ணும் | அநுபவிக்கின்றவனாய் | | |

| | |
|---|---|
| மின் மேகம் | மின்னலும் மேகமும் |
| கலந்தால்போல் | ஒன்றோடொன்று சேர்ந்தாற்போலே |
| வனமாலை மின்னுக்க நின்று | (கறுத்த திருமேனியிலே மின்னல் போன்ற) வனமாலை திகழப்பெற்று |
| கணங்களோடு | (தோழன்மாருடைய) கூட்டங்களோடு கூட |
| விளையாட | விளையாடாநிற்க |

விருந்தாவனத்தே கண்டோம்—.

நான் மிகவும் தளர்ச்சியடையும்படி என்னைப் பிரிந்துபோய்த் திருவாய்ப்பாடி முழுதையுங் கொள்ளைகொண்டு திரியுமவனாய், * வெண்ணெயளைந்த குணுங்கு நாற்றம் கமழுமவனை கோபாலகிருஷ்ணனைக் கண்டதுண்டோ? என்று கேட்பார் பாசுரம்—முன்னடிகள். மின்னலும் மேகமும் சேர்ந்தாற்போலே, ஶ்யாமமான திருமேனிக்குப் பாபாகமாய் உஜ்ஜ்வலமான வனமாலை அசைய அசையத் *தன்னேராயிரம் பிள்ளைகளோடு விளையாடா நிற்க விருந்தாவனத்தே கண்டோமென்று விடையளிப்பார் பாசுரம் பின்னடிகள்.

ஆயர்பாடி கவர்ந்துண்ணும்= ஆயர்பாடி யென்றது இடவாகு பெயராய், திருவாய்ப்பாடியிலுள்ள பெண்களையும் தயிர் நெய் பால் முதலிய போக்ய பதார்த்தங்களையும் குறிக்கும். குணுங்கு நாற்றமாவது—மொச்சை நாற்றம். இடைச்சாதியர்க்கு இயல்வான நாற்றம். குட்டேறு= இளையவ்ருஷபம். கோவர்த்தனன்= பசுக்களை ஒன்று நூறாக வளர்க்குமவன்.

கணங்களோடே= (மண:) (கண:) என்னும் வடசொல்—கூட்டமென்று பொருள்படும். இங்கே, தோழன்மார் கூட்டமெனக் கொள்க. * தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர் நடையிட்டு வருவானிறே கண்ணபிரான். மின் மேகம்= உம்மைத்தொகை; மின்னலும் மேகமும் என்றவாறு. .... .... (2).

மாலாய்ப்பிறந்தநம்பியை மாலேசெய்யும்மணாளனை*
ஏலாப்பொய்களுரைப்பானை யிங்கேபோதக்கண்டீரே*
மேலால்பரந்தவெயில்காப்பான் வினதைசிறுவன்சிறகென்னும்*
மேலாப்பின்கீழ்வருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (ங)

| | |
|---|---|
| மால் ஆய் பிறந்த நம்பியை | (பெண்கள் பக்கலுண்டான) வ்யாமோஹமே ஒரு வடிவாய்க்கொண்டு பிறந்த தென்னலாம்படியான பெருமானாய் |
| மாலே செய்யும் மணாளனை | வ்யாமோஹத்தையே செய்கிற மணவாளப் பிள்ளையாய் |
| ஏலா பொய்கள் உரைப்பானை | பொருந்ாதபொய்களைச் சொல்லுமவனை கண்ணபிரானை |

இங்கே போதக் கண்டீரே?—;

| | |
|---|---|
| மேலால் | மேலே |
| பரந்த | பரவின |
| வெயில் | வெய்யிலை |
| காப்பான் | (திருமேனியில் படாமல்) தடுப்பதற்காக |
| வினதை சிறுவன் சிறகு என்னும் மேலாப்பின்கீழ் வருவானை | கருடனுடைய சிறகாகிற விதானத்தின்கீழ் எழுந்தருளாநின்ற அப்பெருமானை |

விருந்தாவனத்தே கண்டோம்—.

பெண்கள் திறத்திலேயுள்ள வ்யாமோஹமே ஒரு வடிவுகொண்டதென்னலாம்படி வ்யாமோஹமேயுண்டாயிருப்பவனும், ஸகலகுணங்களாலும் பரிபூர்ணனும், எல்லார்க்கும் ஆசைப்படத் தகுந்தவனும், அஸம்பத்தங்களான பொய்களைக் கூசாது கூறுமவனுமான கண்ணபிரான் இங்கே எழுந்தருளக் கண்டதுண்டோ? என்று கேட்பார் பாசுரம்—முன்னடிகள். மேலே வெய்யில்படாதபடி பெரிய திருவடி தன் சிறகைவிரித்து நிழல்செய்ய, அதாகிற மேற்கட்டியின் கீழ் விருந்தாவனத்திலே எழுந்தருளக் கண்டோமென்று விடையளிப்பார் பாசுரம்—பின்னடிகள்.

ஏலாப் பொய்களுரைப்பானை="ஒற்று மஞ்சளும் மாளிகைச் சாந்துமாய் வந்தால் 'இதெல்லாம் எங்கு நின்றும் பெற்றாய்?' என்று கேட்டால் மற்றொன்றுண்டோ? நான் புறம்பு அறிவேனோ? என்னும்." என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியின் அழகை நோக்குமின். "கஸ்த்வம் பால பலாநுஜ:, கிமிஹ தே? மந்மந்திராசங்கயா, யுக்தம் தந் நவநீதபாண்டவிவரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யஸ்யஸி? மாத: கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும் மாகா விஷாதம் க்ஷணாதித்யேவம் வநவல்லவீ ப்ரதிவச: க்ருஷ்ணஸ்ய புஷ்ணாது ந:." [கஸ் த்வம் பால! பலாநுஜ: கிமிஹ தே மந்மந்திராசங்கயா, யுக்தம் தத் நவநீதபாண்டவிவரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யஸ்ய:? மாத: கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும், மாகா விஷாதம் க்ஷணாதித்யேவம் வநவல்லவீப்ரதிவச: க்ருஷ்ணஸ்ய புஷ்ணாது ந:] என்கிற ச்லோகத்தை இங்கே பரக்க உபந்யஸித்தருள்வர் அழகிய மணவாளசீயர்.

இதன் கருத்து:—ஒருநாள் கண்ணபிரான் பிறர்மனையில் புகுந்து வெண்ணெய்த்தாழியில் கையிட்டவளவில் அம்மனையுடையாள் சடக்கெனவந்து பிடித்துக்கொண்டு, 'பயலே! நீ ஆர்?' என்ன; 'நான் பலராமன் தம்பி' என்ன; 'இங்கு ஏதுக்கு வந்தாய்'? என்ன; 'என் அகம் என்று மயங்கிவந்துவிட்டேன்' என்ன; 'அது சரிதான்; வெண்ணெய்த்தாழியில் கையிட்டாயே அஃது என்?' என்ன; 'அம்மா! ஒரு கன்றுக்குட்டி கைகழிந்துபோயிற்று; அதைத் தேடுவதற்காக வெண்ணெய்க்குடத்திற் கையிட்டுத் துழாவிப் பார்த்தேன்' என்ன; இதுகேட்ட அவ்விடைச்சி 'தென்னைமரத்தில் புல் பிடுங்க ஏறினேன்' என்பாரைப்போல இவன் உத்தரமுரைக்கும் ஸாஹஸமென்னென்று சினந்து தாம்பால்கட்டி அடிக்கப்புக, கண்ணபிரான் அழத்தொடங்க, அதுகண்ட அவ்விடைச்சி "இச்செய்தி யசோதையின் காதில் எட்டுமாகில் "என்றுமென்பிள்ளைக்குத் தீமைகள் செய்வார் அங்ஙனமாவர்களோ" என்று சபிப்பளே' என்றஞ்சி, 'கண்ணா! அழேல் அழேல்' என்று ஸமாதானப்படுத்திப் போகவிட்டாளென்க. இப்படிப்பட்ட ஏலாப் பொய்களுரைத்தல் பல்லாயிரம்.

மேலால் என்றது—மேலே என்றபடி. கண்ணபிரான் வீதியிலே எழுந்தருளும்போது மேலே வெய்யில்படாமைக்காகப் பெரியதிருவடி தன் சிறகைக் குடையாக விரித்து நிழல்செய்வன்; அது கண்ணபிரானுக்கு மேற்கட்டி பிடித்

தாற்போலிருக்கும்; அதன்கீழே அழகாக எழுந்தருள்வனென்க. கருடனுடைய தாய்க்கு விநதா என்று பெயர்.

மேலாப்பு—மேற்கட்டி; விதானம். ... ... .... (ங)

கார்த்தண்கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறுபடுத்து*என்னை
ஈர்த்துக்கொண்டுவிளையாடும் ஈசன்றன்னைக்கண்டீரே*
போர்த்தமுத்தின்குப்பாயப் புகர்மால்யானைக்கன்றேபோல்*
வேர்த்துநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (ச)

| | |
|---|---|
| கார் | காளமேகத்திலே |
| தண் | குளிர்ந்த |
| கமலம் | தாமரை பூத்தாற்போன்றுள்ள |
| கண் என்னும் | திருக்கண்கள் என்கிற |
| நெடு கயிறு | பெரிய பாசத்திலே |
| என்னை படுத்து | என்னை அகப்படுத்தி |
| ஈர்த்துக் கொண்டு | (தான்போமிடமெங்கும் என்னெஞ்சையும் கூடவே) இழுத்துக்கொண்டு போய் |
| விளையாடும் ஈசன் தன்னைக் கண்டீரே ?—; | |
| போர்த்த முத்தின் குப்பாயம | போர்வையாகப் போர்த்த முத்துச்சட்டையையுடையதாய் |
| புகர் | தேஜஸ்ஸையுடையதாய் |
| மால் | பெரிதான |
| யானை கன்று போல் | யானைக்குட்டிபோலே |
| வேர்த்து நின்று விளையாட | வேர்வையுற்று நின்று விளையாட |
| விருந்தாவனத்தே கண்டோம்—. | |

'மேகத்திலே அழகிய இரண்டு தாமரைப்பூக்கள் பூத்தனவோ?' என்னும்படி யமைந்த திருக்கண்களாகிற வலையிலே என்னை அகப்படுத்தித் தான் போகுமிடமெங்கும் என்னையும் [அதாவது—என் நெஞ்சையும்] இழுத்துக்கொண்டு திரியுமவனான பெருமானைக் கண்டதுண்டோ? என்று கேட்பார் பாசுரம்—முன்னடிகள். முத்துச்சட்டையிட்டாற்போலே குருவெயர்ப்பு அரும்பிப் புகரையுடைத்தான யானைக்கன்றுபோலே வேர்த்து நின்று விளையாடும்போது விருந்தாவனத்திலே கண்டோமென்பார் பாசுரம்—பின்னடிகள்.

கார் — மேகம்போலே, தண் — குளிர்ந்த, என்றும் உரைக்கலாம். "குப்பாயமென நின்று காட்சிதருங் கோவர்த்தனமென்னுங் கொற்றக்குடையே" என்றார் பெரியாழ்வாரும். "மெய்ப் பை கஞ்சுளி கஞ்சுகம் வாரணம் குப்பாயமங்கி சட்டையாகும்" என்பது திவாகரம். கண்ணபிரான் யானைக்குட்டிபோலவும், அவன் வேர்வையரும்புகளை அணிந்து நிற்கும் நிலைமை முத்துச்சட்டையணிந்திருக்கை போலவும் உவமிக்கப்பட்டுள்ளமை காண்க. .... (ச)

மாதவனென்மணியினை வலையில்பிழைத்தபன்றிபோல்*
ஏதுமொன்றும்கொளத்தாரா ஈசன்றன்னைக்கண்டீரே*
பீதகவாடையுடைதாழப் பெருங்கார்மேகக்கன்றேபோல்*
வீதியாரவருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (ரு)

| | |
|---|---|
| மாதவன் | ஸ்ரீயப்பதியாய் |
| என் மணியினை | எனக்கு நீலமணிபோலே பரமபோக்யனாய் |
| வலையில் பிழைத்த பன்றி போல் | வலையில் நின்றும் தப்பிப் பிழைத்ததொரு பன்றி போலே (செருக்குற்று) |
| ஏதும் ஒன்றும் | (தன்பக்கலுள்ள) யாதொன்றையும் |
| கொளத் தாரா | பிறர்கொள்ளும்படி தாராதவனை (ஒருவர் கைக்கும் எட்டாதவனை) |

ஈசன் தன்னைக் கண்டீரே?—;

| | |
|---|---|
| பீதகம் ஆடை | திருப்பீதாம்பரமாகிற |
| உடை | திருப்பரிவட்டமானது |
| தாழ | தொங்கத் தொங்க விளங்க |
| பெருங்கார் மேகக் கன்று போல் | பெருத்துக்கறுத்ததொரு மேகக்குட்டிபோலே |
| வீதி ஆர வருவானை | திருவீதி நிறைய எழுந்தருளும் பெருமானை |

விருந்தாவனத்தே கண்டோம்—.

திருமகள் கொழுநனாய், எனக்கு நீலமணிபோலே அனுபாவ்யனாய், வலையிலே அகப்பட்டிருந்து தப்பின பன்றிபோல் செருக்கி ஒருவர் கைக்கும் பிடிகொடாதவனான பெருமானைக் கண்டதுண்டோ?...உண்டு; திருவரையில் பீதாம்பரத்தைத் தொங்கத் தொங்க அணிந்துகொண்டு காளமேகக்குட்டிபோல் திருவீதி நிறைய எழுந்தருளும்போது விருந்தாவனத்திலே கண்டோம்.

"மாதவனென் மணியினை" என்று ப்ரதீகமெடுத்து—"தன்னுடைய ரஸிகத்வம் எனக்கு முடிந்தாளலாம்படி பவ்யனாயிருக்கிறவனை" என்று தாத்பர்ய மருளிச்செய்த பெரியவாச்சான் பிள்ளையின் திருவுள்ளத்தின் ஆழத்தை என் சொல்வோம்! "சுவையன் திருவின்மணாளன்" என்ற திருவாய்மொழியை அடி பொற்றி மாதவனென்பதற்கு ரஸிகனென்றே பொருள்கொண்டார்; ஒரு சிறந்த மணியானது பெருவிலை யுடைத்தாயிருப்பினும் துணியின் தலைப்பில் முடிந்தாளலாம்படி கைச்சரக்காயிருக்குமென்பது திருவுள்ளம்பற்றி என்மணியினை என்பதற்கு 'எனக்கு முடிந்தாளலாம்படி பவ்யன்' எனப் பொருள் கொண்டார். இனி, ஸம்பிரதாயாநுஸார ஸித்தமான தாத்பர்ய விசேஷத்தைப் 'பரமபோக்யமாக அருளிச்செய்தார்.

வலையின்—ஐந்தாம் வேற்றுமை. என்றைக்கும் வலையில் அகப்படாத தொன்றை வருந்தி வலைப்படுத்தலாம்; வலைப்பட்டிருந்து தப்பினதை வருந்தியும் வலைப்படுத்தமுடியாது; அப்படித் தப்பின பின்பு அதற்குள்ள செருக்கும் வாசாமகோசரமாயிருக்கும். அப்படிப்பட்ட செருக்கு கண்ணபிரானுக்குள்ள தென்பதைக் காட்டுதற்பொருட்டு 'வலையிற் பிழைத்த பன்றிபோல்'' எனப்பட்ட தென்க. ஏதும் ஒன்றும்—அணுமாத்திரமும், கோள—பிறர் கொள்ளும்படி, தாரா=தன்னிடத்திலிருந்துகொடாத.—செருக்கு மிக மிக தார்லபத்வம் (கைக்கு எட்டாமை) மிகுகின்றதென்றபடி. கொள்ள என்பது கோள என்று தொக்கிக் கிடக்கிறது.

வீதியார வருவானை = மேகமானது ஆகாசப்பரப்படங்கலும் தனக்கு இடமாக்கிக்கொண்டு வருமாபோலே கண்ணபிரான் வீதிப்பரப்பையெல்லாம் தனக்கு இடமாக்கிக்கொண்டு எழுந்தருள்வனென்க.

"பஶ்சாத் கவாம் கோபஸுதைஃ பரீதோ வேணுஸ்வநாநந்தித விச்வசேதாஃ, ஸம்பூர்ய வீதீம் ஸவிலாஸமாயாந் கோபாலபாலஃ குலதைவதம் நஃ." என்று ப்ரதிவாதி பயங்கரம் அண்ணரப்பா அருளிச்செய்த ச்லோகம் இங்கே அநுஸந்திக்கத்தக்கது. .... .... ... (ரு)

தருமமறியாக்குறும்பனைத் தன்கைச்சார்ங்கமதுவேபோல்*
புருவவட்டமழகிய பொருத்தமிலியைக்கண்டீரே*
உருவுகரிதாய்முகம்செய்தாய் உதயபருப்பதத்தின்மேல்*
விரியுங்கதிரேபோல்வானை விருந்தாவனத்தேகண்டோமே. (சு)

| | |
|---|---|
| தருமம் அறியா | இரக்கமென்பது அறியாதவனாய் |
| குறும்பனை | குறும்புகளையே செய்யுமவனாய் |
| தன் கை சார்ங்கம் அதுவே போல் | தனது திருக்கையிலுள்ள சார்ங்க வில்லைப் போன்ற |
| புருவவட்டம் | திருப்புருவ வட்டங்களாலே |
| அழகிய | அழகுபெற்றவனாய் |
| பொருத்தம் இலியை | (அவ்வழகை அன்பர்கட்கு அநுபவிக்கக் கொடுத்து) பொருந்திவாழப் பெறாதவனான பெருமானை |

கண்டீரே?—;

| | |
|---|---|
| உருவு கரிது ஆய் | திருமேனியில் கருமை பெற்றும் |
| முகம் செய்து ஆய் | திருமுகத்தில் செம்மை பெற்றும் இருப்பதாலே |
| உதயம் பருப்பதத்தின் மேல் விரியும் கதிர் போல்வானை | உதய பர்வதத்தின் மேலே விரிகின்ற சூரியன் போல் விளங்கும் அப்பெருமானை |

விருந்தாவனத்தே கண்டோமே—.

* * * தயையென்கிற தர்மத்தை ஈஷத்தும் அறியாதவனாய், குறும்பு செய்வதையே தொழிலாகக்கொண்டவனாய், தன்கையிலுள்ள சார்ங்கவில்போன்று வட்டமாய் அழகியதான திருப்புருவங்களையுடையவனாய், உகந்தாரோடே பொருந்திவாழப்பெறாதவனான பெருமானைக் கண்டதுண்டோ? உண்டு;— கண்டாருடைய கண்களெல்லாம் குளிரும்படி இருண்டவடிவையுடையனாய், செந்தாமரைபோற் சிவந்த திருமுகமண்டலத்தையுடையவனாய், உதயபர்வதத்தின்மேலே ஆதித்யன் உதிக்கும்போதுள்ள ப்ரபாவிசேஷத்தையுடையனான கண்ணபிரானை விருந்தாவனத்திலே கண்டோம்.

தர்ம: (தர்மம்) என்னும் வடசொல் தருமமெனத்திரிந்தது. "ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம:" என்று பிறர் பக்கல் இரக்கமே பரம தர்மமாகச் சொல்லுகையாலே அப்படிப்பட்ட இரக்கமில்லாதவனென்று ஊடல் தலையெடுத்துச் சொல்லுகிறபடி.

[தன்கைச் சார்ங்கமித்யாதி.] கண்ணபிரானுடைய திருப்புருவங்களுக்கு வேறொன்றும் ஒப்பாகமாட்டாது; அவன் கையிலே வில்லைப்பார்த்தால் 'முகத்திலிருக்கவேண்டியது கையிலிருக்கிறதே! இஃது என்ன?' என்று வியக்கும்படி

யாகவும், முகத்திலே புருவத்தைக் கண்டால் 'கையிலேயன்றோ வில் இருக்க வேண்டுவது; இஃதென்ன முகத்திலிருக்கிறதே! முகத்திலேயும் வில் இருக்கக் கடவதோ?' என்று வியக்கும்படியாகவும் இருக்குமாம். இத்தால்—சார்ங்கத்துக்கும் புருவத்துக்கும் தாத்ரூப்யமல்ல, தாதாத்ம்யம் என்று சொன்னபடி: வேறொன்று ஒப்பில்லாதிருக்கும் உறைப்பைத் தெரிவித்தபடி. வட்டம்-வ்ருத்த (வ்ருத்தம்) என்ற வடசொல் விகாரம்.

[பொருத்தமிலிபை] "இவ்வழகுண்டானால் ப்ரயோஜனம் என்?; உதவார் பக்கல் நனைந்தொரிலும் தெரங்காய்" என்ற வியாக்யான ஸ்ரீஸூக்தியின் போக்யதையை அநுபவிக்க.

[உருவு கரிதாய் இத்யாதி] திருவுருவம் உதய பர்வதமாகவும், முகம் ஸூர்யமண்டலமாகவும் நிரூபிக்கப்பட்டது. பர்வதமென்னும் வடசொல் பருப்பதமென்று கிடக்கிறது. "பருப்பதத்துக் கயல் பொறித்த" என்றாரிறே பெரியாழ்வாரும். ... .... ... .... (கூ)

பொருத்தமுடையநம்பியைப் புறம்போலுள்ளும்கரியானை *
கருத்தைப்பிழைத்துநின்ற அக்கருமாமுகிலைக்கண்டீரே *
அருத்தித்தாராகணங்களால் ஆரப்பெருகுவானம்போல் *
விருத்தம்பெரிதாய்வருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (எ)

| | | | |
|---|---|---|---|
| பொருத்தம் உடைய நம்பியை | பொருத்தமுடைய ஸ்வாமியாய் | அருத்தி | விரும்பப்பெறுகின்ற |
| புறம் போல் உள்ளும் கரியானை | உடம்புபோலே உள்ளமும் கறுத்திராநின்றவனாய் | தாரா கணங்களால் | நக்ஷத்ரஸமூஹங்களாலே |
| கருத்தை பிழைத்து நின்ற | நான் எண்ணும் எண்ணத்தைத்தப்பி நிற்பவனாய் | ஆர பெருகு | மிகவும் நிறைந்திருந்துள்ள |
| அக் கரு மா முகிலை | கறுத்துப் பெருத்தமுகில் போன்றவனான அக் கண்ணபிரானை | வானம் போல் | ஆகாசம்போலே |
| கண்டீரே ?—; | | விருத்தம் பெரிது ஆய் | பெருங்கூட்டமாய் |
| | | வருவானை | எழுந்தருளாநின்ற அப் பெருமானை |
| | | விருந்தாவனத்தே கண்டோம். | |

கீழ்ப்பாட்டில் பொருத்தமிலியைக் கண்டீரே என்றுவைத்து இப்பாட்டில் "பொருத்தமுடைய நம்பியை" என்றது என்? என்னில்; பத்துடையடியவர்க்கு எளியவனான பெருமானையோ நாம் பொருத்தமிலி என்பது; அப்படிச் சொல்வது தகுதியல்ல; அவன் பொருத்தமுடையவனேயாவன் என்று திருவுள்ளம்பற்றிச்சொல்லுகிறாள் என்பர் சிலர். அங்ஙனன்றியே 'இந்தப்பிள்ளை பரம ஸாது' என்றால் அஃது எதிர் மறை இலக்கணையாய் துஷ்டன் என்று காட்டுமாபோலே இங்கும் பொருத்தமுடைய நம்பி யென்றது பொருத்தமில்லாமையே சொல்லிற்றாகக் கொள்க. இதுவே பெரியவாச்சான் பிள்ளை திருவுள்ளம்பற்றின

கருத்தாம். "பொருத்தமிலியென்பது நாட்டில் பொருந்தாராகில் ‡ நிற்குமன்றன்றோ." என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. — பொருத்தமில்லாதவர்கள் உலகிலும் பலபேருண்டு; அவர்களைப் பொருத்தமிலிகள் என்று சொல்லுகிறப்போலவே எம்பெருமானையும் பொருத்தமிலி என்று சொல்லிவிட்டால் நாட்டாருடைய பொருத்தமின்மைக்கும் எம்பெருமானுடைய பொருத்தமின்மைக்கும் வாசி ஏற்படாமற் போகுமென்று அதற்காக விலக்ஷணப்ரக்ரியையிலே சொல்லுகிறபடி. அதாவது விபரீதலக்ஷணை.

புறம் போலுள்ளும் கரியான்—திருமேனி கறுத்திருந்தாலும் திருவுள்ளம் சுத்தமாயிருக்கலாமே; அதுவும் அசுத்தமாகவேயிருக்கிறதென்று நர்மோக்தி. அதவா—இதுவும் விபரீதலக்ஷணை; உள்ளே ஒருவிதமாகவும் வெளியில் ஒருவிதமாகவும் இருப்பவனல்லன்; உள்ளும் புறமும் ஒத்திருப்பவன்; மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத்துராத்மநாம் என்கிற கோடியில் சேர்ந்தவனல்லன்; "மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம்" என்கிற கோடியிலே சேர்ந்தவன் என்று மேன்மைச் சொல்லுகிறபடியாய், விபரீதலக்ஷணையால், உள்ளேயொன்றும் வெளியே ஒன்றுமாயிருப்பவனென்று காட்டுகிறது.

கருத்தைப் பிழைத்து நின்ற—ஸம்ச்லேஷித்திருக்குங் காலத்திலே "மாதே! உன்னை நான் விட்டுப்பிரியேன்; பிரிந்தால் தரியேன்" என்று அவன் சொல்ல அதைமெய்தானென்று நம்பியிருக்கிற நம்பிக்கையைப் போக்கடித்தவன் என்றவாறு. இப்படிச் சொல்லுகிறவன் ஒருகாலும் நம்மைவிட்டுப் பிரியமாட்டான் என்று கொண்டகருத்தைத் தப்பி, பிரிந்திருப்பவனென்றபடி.

[அருத்தித்தாராகணங்களால் இத்யாதி.] அருத்தி என்று விருப்பத்திற்கும் விரும்பப்படும் பொருளுக்கும் பெயர். ரமணீயங்களான தாராகணங்களால் என்றபடி. இங்ஙனே தமிழர்கள் நிர்வஹிக்கும்படி. பூருவர்களின் வியாக்கியானரீதியோவென்னில், அர்த்தி என்னும் வடசொல் அருத்தியெனத்திரிந்து, 'ப்ரார்த்திக்கப்படுகின்ற' என்று பொருள் பெற்றுக்கிடக்கிறதாய், சேதநர் பிரயோஜநார்த்தமாக நக்ஷத்ரங்களையும் உபாஸனை பண்ணுகையாலே அதைப் பற்றி அருத்தி என்ற அடைமொழி கொடுக்கப்பட்டதாக.

விருத்தம்—வ்ருத்ர (ப்ருந்தம்) என்னும் வடசொல் விருத்தமெனத் திரிந்து கிடக்கிறது. ... .... .... .... ... (ஏ)

வெளியசங்கொன்றுடையானைப் பீதகவாடையுடையானை*
அளிநன்குடையதிருமாலை ஆழியானைக்கண்டீரே*
களிவண்டெங்கும்கலந்தாற்போல் கமழ்பூங்குழல்கள்தடந்தோள்மேல்*
மிளிரநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (அ)

‡ "நிற்குமென்றன்றோ" என்ற அச்சுப்புத்தகப்பாடம் அசுத்தமென்றொழிக்க. நிற்குமன்று—நிற்கும்போது; நிற்குமாகில் என்றபடி.

நாட்டைப்படையென்றயன்முதலாத்தந்த நளிர்மாமலருந்தி*
வீட்டைப்பண்ணிவிளையாடும் விமலன்தன்னைக்கண்டீரே*
காட்டைநாடித்தேனுகனும் களிறும்புள்ளுமுடன்மடிய*
வேட்டையாடிவருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (கூ)

| | | | |
|---|---|---|---|
| நாட்டைப் படை என்று | உலகங்களை ஸ்ருஷ்டி என்று | விமலன் தன்னை | பரமபாவனனான பெருமானை |
| அயன் முதலா | பிரமன் முதலானபிரஜாபதிகளை | | கண்டீரே?—; |
| தந்த | உண்டாக்கின | தேனுகனும் | தேநுகாஸுரனும் |
| நளிர் மா மலர் உந்தி வீட்டை பண்ணி | குளிர்ந்த பெரிய மலரையுடைத்தான திருநாபியாகிற வீட்டையுண்டாக்கி | களிறும் | குவலயாபீடயானையும் |
| | | புள்ளும் | பகாஸுரனும் |
| | | உடன் மடிய | உடனே மாளும்படியாக |
| விளையாடும் | இப்படியாக லீலாரஸமநுபவிக்கிற | காட்டை நாடி வேட்டை ஆடி வருவானை | காட்டிற்சென்றுவேட்டையாடிவரும் அப்பெருமானை |
| | | | விருந்தாவனத்தே கண்டோம். |

சிறிது இடத்தைத்தானே கைதொட்டு ஸ்ருஷ்டித்து மேலுள்ளதையெல்லாம் நீங்கள் ஸ்ருஷ்டியுங்களென்று சதுர்முகன் முதலான ப்ராஜாபதிகளையுண்டாக்கினவனும், அந்த நான்முகனுக்கிருப்பிடமாகத் திருநாபிக் கமலத்தையுண்டாக்கித் தந்து இதுவே லீலையாக இருப்பவனுமான பரமபுருஷனைக் கண்டதுண்டோ?—கம்ஸன் ஏவின அஸுராவேசம் பெற்ற ஜந்துக்களையெல்லாம் முடித்துக்கொண்டு வேட்டையாடிவந்த அப்பெருமானை விருந்தாவனத்திலே கண்டோம்.

“அயன் முதலானவர்களை” என்றதற்கிணங்க “நாட்டைப்படைமின்” என்று பன்மையாகவன்றோ இருக்கவேணும்; படை என்று ஒருமையாக இருத்தல் கூடுமோ? எனின்; அயன் முதலானவர்களைத் தனித்தனியே விளித்து “நாட்டைப்படை” என்று விதித்ததாகக்கொள்க. “அயன் முதலாத்தந்த” என்பதைவிட “அயன்றன்னைத்தந்த” என்று பாடமாகில் அழகாயிருக்குமென்று நம்பிள்ளை அருளிச்செய்வராம். அயன்—பிரமனை, முதலா—முதன்மையாக, தந்த—, என்றும் பொருள் கொள்ள இடமுண்டு. அயன்—அஜ: என்ற வடசொல் விகாரம்: அ-எம்பெருமான் பக்கலில், ஜ—தோன்றினவன். விமலன்—லீலாரஸந்தவிர வேறொரு பலனை விரும்பாமையாகிற தூய்மையுடையவன் என்க.

தேனுகனை மடித்தவரலாறு:—கண்ணபிரான் பலராமனோடும் ஆயர் சிறுவர்களோடும் மாடுமேய்த்துக்கொண்டு, பழங்கள் அழகாக மிகுதியாய்ப்பழுத்து வாஸனை வீசிக்கொண்டிருந்த ஒரு பனங்காட்டையடைந்து அப்பனம்பழங்களை விரும்பி உதிர்த்துக்கொண்டு வருகையில் அவ்விடத்துக்குத் தலைவனும் கம்ஸனது பரிவாரத்தில் ஒருவனுமாகிய கழுதைவடிவங்கொண்ட தேனுகாஸுரன் கோபங்கொண்டு ஓடிவந்து எதிர்த்துப் போர்செய்ய, உடனே கண்ணன் [illegible]

நாட்டைப்படையென்றயன்முதலாத்தந்த நளிர்மாமலருந்தி*
வீட்டைப்பண்ணிவிளையாடும் விமலன்தன்னைக்கண்டீரே*
காட்டைநாடித்தேனுகனும் களிறும்புள்ளுமுடன்மடிய*
வேட்டையாடிவருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (௬)

| | |
|---|---|
| நாட்டை படை என்று | உலகங்களை ஸ்ருஷ்டி என்று |
| அயன் முதலா | பிரமன் முதலானபிரஜாபதிகளை |
| தந்த | உண்டாக்கின |
| நளிர் மா மலர் உந்தி வீட்டை பண்ணி | குளிர்ந்த பெரிய மலரையுடைத்தான திருநாபியாகிற வீட்டையுண்டாக்கி |
| விளையாடும் | இப்படியாக லீலாரஸமநுபவிக்கிற |
| விமலன் தன்னை | பரமபாவனனான பெருமானை |
| கண்டீரே?—; | |
| தேனுகனும் | தேநுகாஸுரனும் |
| களிறும் | குவலயாபீடயானையும் |
| புள்ளும் | பகாஸுரனும் |
| உடன் மடிய | உடனே மாளும்படியாக |
| காட்டை நாடி வேட்டை ஆடி வருவானை | காட்டிற்சென்றுவேட்டையாடிவரும் அப்பெருமானை |
| விருந்தாவனத்தே கண்டோம். | |

சிறிது இடத்தைத்தானே கைதொட்டு ஸ்ருஷ்டித்து மேலுள்ளதையெல்லாம் நீங்கள் ஸ்ருஷ்டியுங்களென்று சதுர்முன் முதலான ப்ரஜாபதிகளையுண்டாக்கினவனும், அந்த நான்முகனுக்கிருப்பிடமாகத் திருநாபிக் கமலத்தையுண்டாக்கித் தந்து இதுவே லீலையாக இருப்பவனுமான பரமபுருஷனைக் கண்டதுண்டோ?—கம்ஸன் ஏவின அஸுராவேசம் பெற்ற ஜந்துக்களையெல்லாம் முடித்துக்கொண்டு வேட்டையாடிவந்த அப்பெருமானை விருந்தாவனத்திலே கண்டோம்.

"அயன் முதலானவர்களை" என்றதற்கிணங்க "நாட்டைப்படைமின்" என்று பன்மையாகவன்றோ இருக்கவேணும்; படை என்று ஒருமையாக இருத்தல் கூடுமோ? எனின்; அயன் முதலானவர்களைத் தனித்தனியே விளித்து "நீநாட்டைப்படை" என்று விதித்ததாகக்கொள்க. "அயன் முதலாத்தந்த" என்பதைவிட "அயன்றன்னைத்தந்த" என்று பாடமாகில் அழகாயிருக்குமென்று நம்பிள்ளை அருளிச்செய்வராம். அயன்—பிரமனை, முதலா—முதன்மையாக, தந்த—, என்றும் பொருள் கொள்ள இடமுண்டு. அயன்—அஜ: என்ற வடசொல் விகாரம்: அ-எம்பெருமான் பக்கலில், ஜ—தோன்றினவன். விமலன்—லீலாரஸந்தவிர வேறொரு பலனை விரும்பாமையாகிற தூய்மையுடையவன் என்கை.

தேனுகனை மடித்தவரலாறு:—கண்ணபிரான் பலராமனோடும் ஆயர் சிறுவர்களோடும் மாடுமேய்த்துக்கொண்டு, பழங்கள் அழகாக மிகுதியாய்ப்பழுத்து வாஸனை வீசிக்கொண்டிருந்த ஒரு பனங்காட்டையடைந்து அப்பனம்பழங்களை விரும்பி உதிர்த்துக்கொண்டு வருகையில் அவ்வாந்துக்குத் தலைவனும் கம்ஸன் பரிவாரத்தில் ஒருவனுமாகிய கழுதைவடிவங்கொண்ட தேனுகாஸுரன் கோபங்கொண்டு ஓடிவந்து எதிர்த்துப் போர்செய்ய, உடனே கண்ணன் அதிலாவிப்பற்றிப்

[illegible] அடங்கழுதைகளைச் சுழற்றி எறிந்திருக்கும்படி [illegible] நின்றவிடத்திலிருந்து அறிந்தவள் [illegible]. நேருமுகனைத் தொலைத்ததும் களிற்றைக் கொன்றதும் புள்ளின் வாய் கீண்டதும் வெவ்வேறு [illegible] களிலாகிலும் கண்ணபிரானுடைய ஏகாந்தயோகத்தாலேயே இவை மூன்றும் தொலைந்தன என்று ஆண்டாள் கருதுகின்றனள் போலும் — உடன்மடிய — [illegible] வன்மையாலே.

பருந்தாள்களிற்றுக்கருள்செய்த பரமன்றன்னைப்பாரின்மேல்*
விருந்தாவனத்தேகண்டமை விட்டுசித்தன் கோதைசொல்*
மருந்தாமென்றுதம்மனத்தே வைத்துக்கொண்டுவாழ்வார்கள்*
பெருந்தாளுடையபிரானடிக்கீழ்ப் பிரியாதென்றுமிருப்பாரே. (௰)

| | | | |
|---|---|---|---|
| பரு தாள் களிற்றுக்கு | பருத்த கால்களையுடைய கஜேந்திராழ்வானுக்கு | தம் மனத்தே | தங்கள் சிந்தையிலே |
| அருள் செய்த | க்ருபைபண்ணின | வைத்துக்கொண்டு வாழ்வார்கள் | அநுஸந்தித்துக்கொண்டு வாழுமவர்கள் |
| பரமன் தன்னை | திருமாலை | பெரு தாள் உடைய பிரான் அடி கீழ் | பெருமை பொருந்திய திருவடிகளையுடைய எம்பெருமானுடைய திருவடிகளின்கீழே |
| பாரின் மேல் | இந்நிலத்திலே | என்றும் | எந்நாளும் |
| விருந்தாவனத்தே கண்டமை | ஸ்ரீ ப்ருந்தாவனத்திலே ஸேவிக்கப்பெற்றமையைப்பற்றி | பிரியாது இருப்பார் | பிரியாமலிருந்து நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள். |
| விட்டுசித்தன் கோதை சொல் | பெரியாழ்வார் திருமகளான ஆண்டாளருளிச்செய்த இப்பாசுரங்களை | | |
| மருந்து ஆம் என்று | (பிறவிநோய்க்கு) மருந்தாகக்கொண்டு | | |

இத்திருமொழிகற்றார்க்குப் பலன் சொல்லித் தலைக்கட்டுகிறது இப்பாட்டு; ஸ்ரீகஜேந்திராழ்வான் முதலையின் வாயிலகப்பட்டு நெடுநாள் துடித்து, பிறகு பெருமானுடைய ஸேவையைப் பெற்றுத் துயர்தீர்ந்து பரமானந்தத்தை அடைந்ததுபோல ஆண்டாளும் நெடுநாள்பட்ட விச்லேஷவ்யஸநம் தீர்ந்து மகிழப்பெற்றுளௌன்னுமிடம் முதலடியில் விளங்குமாறு காண்க. [பாரின்மேல்] "கொம்மை முலைகளிடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல், இம்மைப் பிறவிசெய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?" என்று பரமபதாநுபவத்தை வெறுத்திருந்த இவளுக்கு இந்நிலத்திலேயே பேறு கைபுகுந்ததென்க; இப்படிப் பேறுபெற்ற ஆண்டாள் திருவாய் மலர்ந்தருளிய இப்பாசுரங்களை ஸம்ஸார பேஷஜமாகக்கொண்டு சிந்திக்குமவர்கள் * என்ஞான்றும் எம்பெருமானிணையடிக்கீழிணை பிரியாதிருப்பர்கள் என்று தலைக்கட்டிற்றாயிற்று.

மருந்துமாம் என்று—இன்னதற்கு மருந்து, இன்னார்க்கு மருந்து—என்று சொல்லிற்றிலளேயாகிலும், ஸம்ஸாரிகளான நமக்காகவே இத்திவ்யப்ரபந்தம் அருளிச்செய்யப்பட்டதாகையாலே, ஸம்ஸாரிகளுக்கு மருந்து, ஸம்ஸாரமாகிற நோய்க்கு மருந்து—என்று விளங்கக் குறையில்லை. "ஆர்மருந்தினியாகுவார்" என்றும், "மருந்தும் பொருளு மமுதமுந்தானே" என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமானன்றோ மருந்து என்னில்; அந்த மருந்துக்கும் கார்யகரத்வசக்தி அதிசயத்தை விளைக்கவல்ல மருந்து இது என்றுணர்க.

அடிவரவு:—பட்டி அனுங்க மழை கார்த்தண் மாதவன் தருமம் பொருத்தம் வெளிய நாட்டைப்பருந்தாள் இருள்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

---

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

நாச்சியார் திருமொழி முற்றிற்று.

பெருமாள் கோயில் பிரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி
அருளிச்செய்த திவ்யார்த்த தீபிகையில்
நாய்ச்சியார் திருமொழி உரை
முற்றுப்பெற்றது.

மருந்துமாம் என்று=இன்னதற்கு மருந்து, இன்னார்க்கு மருந்து—என்று சொல்லிற்றில்லையாகிலும், ஸம்ஸாரிகளான நமக்காகவே இத்திவ்யப்ரபந்தம் அருளிச்செய்யப்பட்டதாகையாலே, ஸம்ஸாரிகளுக்கு மருந்து, ஸம்ஸாரமாகிற நோய்க்கு மருந்து—என்று விளங்கக் குறையில்லை. "ஆர்மருந்தினியாகுவார்" என்றும், "மருந்தும் பொருளு மமுதமுந்தானே" என்றும் சொல்லுகிறபடியே எம்பெருமான் மருந்து என்னில்; அந்த மருந்துக்கும் கார்யகரத்வசக்தி யதிசயத்தை விளைக்கவல்ல மருந்து இது என்றவாறு. ... ... (௰)

அடிவரவு:—பட்டி அனுங்க மழை கார்த்தண் மாதவன் தருமம் பொருத்தம் வெளிய நாட்டைப்பருந்தாள் இருள்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

———

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

நாச்சியார் திருமொழி முற்றிற்று.

பெருமாள் கோயில் ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் ஸ்வாமி
அருளிச்செய்த திவ்யார்த்த தீபிகையில்
நாய்ச்சியார் திருமொழி உரை
முற்றுப்பெற்றது.